# தமிழ்ப் பழமொழிகள்

தொகுதி 1

தொகுத்தவர்
கி. வா. ஜகந்நாதன்



ஜெனரல் பப்ளிஷர்ஸ்

# முகவுரை

இந்தப் புத்தகத்தில் ஏறத்தாழ 25,000 பழமொழிகள் உள்ளன. இவை கடந்த நாற்பது ஆண்டுகளாக நான் சேகரித்தவை. சொற்பொழிவு செய்யும் பொருட்டு வெளியூர்களுக்குச் சென்ற காலங்களில் அங்கே உள்ள ஆடவர்களிடமும் பெண்மணிகளிடமும் கேட்டுப் பழமொழிகளை எழுதி வந்தேன். பெரும்பாலும் முதிய பெண்மணிகளே பல பழமொழிகளைச் சொன்னார்கள். பழமொழியை முதுமொழி என்றும் வசனம் என்றும் கூறுவர். பழமொழிகள் அடங்கிய பாடல்களைப் பெற்ற நூல்கள் பழமொழி நானூறு, கோவிந்தசதகம், தண்டலையார் சதகம், இரத்தின சபாபதி மாலை, அருணாசல கவி இராம நாடகக் கீர்த்தனை முதலியவை.

இந்தப் பழமொழிகளில் பல்வேறு சாதியினரைக் குறை கூறி உள்ளவை பல உண்டு. அவற்றைக் கண்டு அந்தச் சாதியைச் சேர்ந்த அன்பர்கள் சினம் கொள்ள மாட்டார்கள் என்று நம்பு கிறேன். இழித்துக் கூறுவதில் எந்தச் சாதியினரையும் விட்டு வைக்கவில்லை. பார்ப்பனர்களை இழித்துக் கூறும் பழமொழிகள் பல. அத்தகையவற்றை அப்படி அப்படியே காட்டியுள்ளேன். தமிழ் மக்களுடைய எண்ணம் எவ்வாறு படர்ந்தது என்பதை இவை காட்டுகின்றன.

நாடோடி இலக்கியத்தைச் சார்ந்தவை பழமொழிகள். அறிவு தெரிந்த சிறுவர் முதல் முதுமை உடையவர்கள் வரை யாவரும் தாம் பேசும் பொழுது பழமொழிகளை ஆளுவார்கள். அவரவர் களுடைய அனுபவத்துக்கு ஏற்ற வகையில் அவை இருக்கும். உபநிடதம், இலக்கிய இலக்கணங்கள் ஆகியவற்றைப் பற்றிய பழமொழிகளும் உண்டு. விலங்கினங்கள், பறவைகள், நீர்வாழ் பிராணிகள், ஊர்வன, புழுபூச்சிகள் முதலியவற்றைப் பற்றிய பழமொழிகள் பல. இவற்றை ஆராய்ந்து கட்டுரைகளை எழுதலாம். பல பெரியோர்களுடைய வரலாறுகள் சம்பந்தமான பழமொழிகளும்

உண்டு. கம்பன், ஒட்டக்கூத்தர் முதலிய புலவர்களைப் பற்றிய பழமொழிகள் சில உள்ளன.

சில சில ஊர்களைப் பற்றிய பழமொழிகளும் பல உண்டு. அந்த ஊர்களில் எழுந்தருளியிருக்கும் தெய்வங்களைப் பற்றிய பழமொழிகளும் உள்ளன.

இவ்வாறு பல பல துறைகளில் அமைந்த இந்தப் பழமொழிகள் அறிவைத் தூண்டுகின்றவை.

தமிழ் மக்கள் இந்தப் புத்தகத்தில் உள்ள பழமொழிகளைப் படித்து இன்புறுவார்கள் என்று நம்புகிறேன்.

**கி. வா. ஜகந்நாதன்**

'காந்தமலை'
சென்னை—28
4—5—88

உ

முருகன் துணை

# தமிழ்ப் பழமொழிகள்

அஃகமும் காசும் சிக்கெனத் தேடு.

(அஃகம்-தானியம்; சிக்கென -விரைவாக.)
(கொன்றை வேந்தனில் உள்ளது; பழமொழி போல வழங்குகிறது.)

அஃகம் சுருக்கேல்.

(ஆத்தி சூடியில் உள்ளது. பழமொழி போல் வழங்குகிறது.)

அக்கக்கா என்றால் ரங்க ரங்கா என்கிறது.

(கிளி பேசுவது.)

அக்கச்சி உடைமை அரிசி; தங்கச்சி உடைமை தவிடா?
அக்கப் போரும் சக்கிலியர் கூத்தும். 5
அக்கரைக்காரனுக்குப் புத்தி மட்டம்.
அக்கரைக்கு இக்கரை பச்சை.
அக்கரைப் பாகலுக்கு இக்கரைக் கொழுகொம்பு.
அக்கரை மாட்டுக்கு இக்கரை பச்சை.
அக்கரையானுக்கு ஆனது இக்கரையானுக்கும் ஆகட்டும். 10
அக்கரையில் இருக்கிற தாசப்பனைக் கூப்பிட்டு இக்கரையில் இருப்பவன் நாமத்தைப் பார் என்றானாம்.

அக்கரை வந்து முக்காரம் போடுது.

(முக்காரம் - முழக்கம்.)

அக்கறை தீர்ந்தால் அக்காள் புருஷன் என்ன கொக்கா?
அக்கறை தீர்ந்தால் அக்காள் மொகுடு குக்க.

(மொகுடு-கணவன், குக்க-நாய்.)

அக்கன்னா அரியன்னா, உனக்கு வந்த கேடு என்ன? 15
அக்காக்காயாகச் சுற்றுகிறான்.
அக்காடு வெட்டிப் பருத்தி விதைக்கிறேன் என்றால், அப்பா எனக்கு

ஒரு துப்பட்டி என்கிறான் பிள்ளை; அதற்கு அப்பன், கைகால் பட்டுக் கிழியப் போகிறது, மடித்துப் பெட்டியிலே வை என்கிறான்.

அக்காடு வெட்டிக் பருத்தி விதைத்தால், அப்பா முழுச் சிற்றாடை என்கிறாளாம் பெண்.

அக்காரம் கண்டு பருத்தி விளைந்தால் அம்மா எனக்கு ஒருதுப்பட்டி.

அக்காரம் சேர்ந்த மணல் தின்னலாமா? 20

அக்காள் அரிசி கொடுத்தால்தானே தங்கை தவிடு கொடுப்பாள்?

அக்காள் ஆனாலும் சக்களத்தி சக்களத்திதான்.

அக்காள் இருக்கிற வரையில் மச்சான் உறவு.

(பி-ம்.) இருந்தால்.

அக்காள் உண்டானால் மச்சான் உறவு உண்டு.

(பி-ம்.) இருந்தால், மச்சானும் உறவு.

அக்காள் உறவும் மச்சான் பகையுமா? 25

(பி-ம்.) பகையும் ஆகுமா?

அக்காள் செத்தாள்; மச்சான் உறவு அற்றுப் போச்சு.

அக்காள்தான் கூடப் பிறந்தாள்; மச்சானும் கூடப் பிறந்தானா?

அக்காள் போவதும் தங்கை வருவதும் அழகுதான்.

(அக்காள்-மூதேவி, தங்கை-சீதேவி.)

அக்காள் மகள் ஆனாலும் சும்மா வரக் கூடாது.

அக்காள் வந்தாள்; தங்கை போனாள். 30

(அக்காள்- மூதேவி. தங்கை - சீதேவி.)

அக்காள் வீட்டுக்குப் போனாலும் அரிசியும் பருப்பும் கொண்டு போக வேணும்.

அக்காள் வீட்டுக் கோழியை அடித்து மச்சானுக்கு விருந்து வைத்தாளாம்.

அக்காளைக் கொண்டவன் தங்கச்சிக்கு முறை கேட்பானா?

அக்காளைக் கொண்டால் தங்கையை முறை கேட்பானேன்?

அக்காளைப் பழித்துத் தங்கை மோசம் போனாள். 35

(பா-ம்.) தங்கை அவிசாரி ஆனாள். தனிவழி போனாளாம்.

அக்காளோடு போயிற்று, அத்தான் உறவு.

(பா-ம்.) மச்சான் உறவு.

அக்கியானம் தொலைந்தால் அவிழ்தம் பலிக்கும்.

அக்கிரகாரத்தில் ஆடு செத்தால் ஆளுக்கு ஒரு மயிர்.

அக்கிரகாரத்தில் பிறந்தாலும் நாய் வேதம் அறியுமா?

அக்கிரகாரத்து நாய் அபிமானத்துக்குச் செத்தது. 40

அக்கிரகாரத்து நாய்க்கு அகவிலை தெரியுமா?

(பா-ம்.) நாய்க்குக் கூட அகவிலை தெரியும்.

அக்கிரகாரத்து நாய் பிரதிஷ்டைக்கு அழுதது போல.

(பா-ம்.) அழுமா?

அக்கிரமக்காரன் முகத்தில் விழியாதே.

அக்கினிக்கும் சாகாத தங்கத்தைப் போல.

அக்கினி சாட்சி, அருந்ததி சாட்சி. 45

அக்கினி தேவனுக்கு அபிஷேகம் செய்ததுபோல் இருக்கிறான்.

(பா-ம்.) பகவானுக்கு, கருத்து: கறுப்பாய் இருக்கிறான்.

அக்கினிப் பந்தலிலே வெண்ணெய்ப் பதுமை ஆடுமா?

(பா-ம்.) வெண்ணெய்ப் பொம்மை.

அக்கினி மலையிலே கற்பூர பாணம் விட்டது போல்.

(பா-ம்.) பிரயோகித்தது போல்.

அக்கினியால் சுட்ட புண் ஆறிப் போகும்.

அக்கினியால் சுட்ட புண் விஷம் கக்குமா? 50

(பா-ம்.) விஷம் இருக்காது.

அக்கினியைக் குளிப்பாட்டி ஆனைமேல் வைத்தாற் போல.

(கருத்து: எல்லாம் கறுப்பு.)

அக்கினியைக் குளிப்பாட்டினாற் போல.

அக்கினியைத் தின்று சீரணிக்கிற பிள்ளை, அல்லித் தண்டைத் தின்றது அதிசயமா?

(பா-ம்.) கக்குகிற பிள்ளை.

அக்குணிப் பிள்ளைக்குத் துக்குணிப் பிச்சை.

அக்குத் தொக்கு இல்லாதவனுக்குத் துக்கம் என்ன வந்தது? 55

(அக்குத் தொக்கு-சம்பந்தம்.)

அக்குத் தொக்கு இல்லாதவன் ஆண்மையும், வெட்கம் சிக்கு இல்லாதவன் ரோஷமும் மிக்குத் துக்கப்படாதவன் வாழ்வும் நாய் கக்கி நக்கித் தின்றது ஒக்கும்.

அக்கு வேறு ஆணி வேறாகப் பிரிக்கிறான்.

அகங்காரத்தால் அழிந்தான் துரியோதனன்.

அகங்கை புறங்கை ஆனாற் போல.
அகங்கையில் போட்டுப் புறங்கையை நக்கலாமா? 60
அகட விகடமாய்ப் பேசுகிறான்.
அகத்தி ஆயிரம் காய்த்தாலும் புறத்தி புறத்தியே.

(அகத்தியை வீட்டில் வளர்க்கக் கூடாது என்பர்.)

அகத்திக் கீரைக்கு மஞ்சள் போட்டு ஆவது என்ன?
அகத்தியன் நற்றமிழுக்கும் குற்றம் கூறுவார்.
அகத்திலே ஆயிரம் காய்த்தாலும் புறத்திலே பேசலாமா? 65
அகத்திலே இருப்பவன் அடிமுண்டை என்றானாம்; பிச்சைக்கு வந்தவன் பிமுண்டை என்றானாம்.
அகத்திலே உண்டானால் அம்பி சமத்து.
அகத்துக்காரர் அத்து முண்டை என்றால், பிச்சைக்கு வந்தவன் பேய் முண்டை என்றானாம்.

(பா-ம்.) அகத்துக்காரப் பிராம்மணன் அடிமுண்டை என்றால்.

அகத்துக்காரர் இருந்த போது தலைநிறைய மயிர் வைத்துக் கொண்டிருந்தேன் என்றாளாம்.
அகத்துக்கு அழகு அகமுடையாள். 70
அகத்துக்குப் பெண் பிறந்தால் அத்தை அசல்.

(அசல்-அயல்.)

அகத்துக்கு முகம் கண்ணாடி.
அகத்துக்கு மூத்தது அசடு.
அகத்துப் பிராம்மணன் அவிசாரி என்றால் பிச்சைக்கு வந்தவன் பேய் முண்டை என்கிறான்.
அகத்துப் பிள்ளை ஊட்டுப் பிள்ளை; அடிக்கப் பிள்ளை அசல் வீட்டிலே. 75
அகதிக்கு ஆகாசமே துணை.
அகதிக்கு ஆண்டவன் துணை.

(பா-ம்.) தெய்வமே துணை.

அகதி சொல் அம்பலம் ஏறாது.
அகதி தலையில் பொழுது விடிந்தது.
அகதி பெறுவது பெண் பிள்ளை; அதுவும் வெள்ளி பூராடம். 80
அகதியை அடித்துக் கொல்லுகிறதா?

(பா-ம்) பிடித்து.

அகதியைப் பகுதி கேட்கிறதா?
அகப்பட்டதைச் சுருட்டடா ஆண்டியப்பா.

அகப்பட்ட நாயை அடிக்கும் போது, அதைக் கண்ட நாய் காதவழி ஓடும்.

அகப்பட்டுக் கொண்டவனுக்கு அஷ்டமத்துச் சனி;
ஓடிப் போனவனுக்கு ஒன்பதாம் இடத்தில் குரு. 85

(பா-ம்.) ஒன்பதாம் இடத்தில் ராஜா.

அகப்பட்டுக் கொண்டாரே விட்டல பட்டர்.

அகப்பட்டுக் கொண்டான் தண்டம்பட்டுக் கணவாயில்.

(தண்டம் பட்டுக் கணவாய் வடஆர்க்காட்டு மாவட்டத்தில் உள்ளது.)

அகப்பட்டுக் கொள்வேன் என்றோ கள்வன் களவு எடுக்கிறது?

(பா-ம்.) களவு செய்வான்.

அகப்பை அறுசுவை அறியுமா?

அகப்பைக்கு உருவம் கொடுத்தது ஆசாரி; சோறு அள்ளிப் போட்டுக் குழம்பு ஊற்றியது பூசாரி. 90

அகப்பைக்குக் கணை வாய்த்தது போல.

அகப்பைக்குத் தெரியுமா அடிசிற் சுவை?

அகப்பைக்குத் தெரியுமா சோற்று ருசி?

அகப்பைக்கு வால் முளைத்தது ஆராலே? ஆசாரியாலே.

அகப்பைக் கூழுக்குத் தோப்புக்கரணம் போடுகிறான். 95

அகப்பை குறைந்தால் கொழுப்பெல்லாம் அடங்கும்.

(பா-ம்.) குறையும்.

அகப்பை பிடித்தவன் தன்னவன் ஆனால், அடிப்பந்தியில் இருந்தால் என்ன? கடைப்பந்தியில் இருந்தால் என்ன?

அகம் ஏறச் சுகம் ஏறும்.

அகம் குளிர முகம் மலரும்.

(பா-ம்.) அகம் மலர.

அகம் குறைந்தால் அஞ்சும் குறையும் 100

அகம் மலிந்தால் அஞ்சும் மலியும்.

(பா-ம்.) எல்லாம் மலியும்.

அகமுடையாள் நூற்றது அரைஞாண் கயிற்றுக்கும் போதாது.

அகமுடையாளுக்குச் செய்தால் அபிமானம்;
அம்மாளுக்குச் செய்தால் அவமானம்.

அகமுடையான் அடித்த அடியும் அரிவாள் அறுத்த அறுப்பும் வீண் போகா.

அகமுடையான் அடித்ததற்கு அழவில்லை; சக்களத்தி சிரிப்பாள் என்று அழுகிறேன். 105

(பா-ம்.) அடுத்தகத்துக்காரி சிரிப்பாள்.

அகமுடையான் அடித்ததற்குக் கொழுநனைக் கோபித்துக் கொண்டாளாம்.
(பா-ம்.) மைத்துனனை.

அகமுடையான் அடைவானால் மாமியார் மயிர் மாத்திரம்.
அகமுடையான் இல்லாத புக்ககமும் அம்மா இல்லாத பிறந்தகமும்.

அகமுடையான் இல்லாத வெட்கம் அடுத்த வீட்டுக்காரனுக்கா?
அகமுடையான் அடித்தது உறைக்கவில்லை; அடுத்தகத்துக்காரன் சிரித்ததுதான் உறைக்கிறது. 110
அகமுடையான் அடித்தது பாரம் இல்லை; கொழுந்தன் சிரித்தது பாரம் ஆச்சு.

(பா-ம்) தப்பு. இல்லை.

அகமுடையான் அடித்தது பெரிது அல்ல; சக்களத்தி சிரிப்பாள் என்று அழுகிறேன்.
அகமுடையான் அடித்தாலும் அடித்தான்; கண் புளிச்சை விட்டது.
(பா-ம்) பீளைவிட்டது. அழுததனால் அப்படி ஆயிற்று.

அகமுடையான் கோப்பு இல்லாக் கூத்தும் குரு இல்லா ஞானமும் போல் இருக்கிறான்.
அகமுடையான் சாதம் ஆனைபோல் இருக்கும்; பிள்ளை சாதம் பூனை போல் இருக்கும். 115
அகமுடையான் செத்த போதே அல்லலுற்ற கஞ்சி.
அகமுடையான் செத்தவளுக்கு மருத்துவச்சி தயவு ஏன்?
அகமுடையான் செத்து அவதிப்படுகிறபோது அண்டை வீட்டுக் காரன் அக்குளைக் குத்தினானாம்.
அகமுடையான் திட்டியதைப் பற்றி அடுத்த வீட்டுத் தச்சனைக் கோணல் நிமிர்த்தச் சொன்னாளாம்.
அகமுடையான் திடம்கொண்டு குப்பை ஏறிச் சண்டை கொடுக்க வேணும். 120
அகமுடையான் பலமானால் குப்பை ஏறிச் சண்டை போடலாம்.

(பா-ம்.) பலம் உண்டானால்.

அகமுடையான் பெண்டாட்டியானாலும் அடுப்புக்கட்டி மூணு.
அகமுடையான் வட்டமாய் ஓடினாலும் வாசலால் வரவேண்டும்.
அகமுடையான் வேண்டும் என்ற ஆசையும் இருக்கிறது; அடிப்பானோ என்ற பயமும் இருக்கிறது.
அகமுடையான் வைததைப்பற்றி அசல் வீட்டுத் தச்சனைக் கோணல் நிமிர்த்தச் சொன்னாளாம். 125

அகமுடையானுக்கு அழுத குறை அந்தகன் வந்து வாய்த்தான்.

(பா-ம்.) அந்திக் கண்ணன்.

அகமுடையானுக்கு இல்லாத வெட்கம் அடுத்த வீட்டுக்காரனுக்கு என்ன?

அகமுடையானுக்குத் தக்க இறுமாப்பு.

அகமுடையானுக்குப் பெண்டாட்டிமேல் ஆசை; பெண்டாட்டிக்குப் புடைவைமேல் ஆசை.

அகமுடையானுக்குப் பொய் சொன்னாலும் அடுப்புக்குப் பொய் சொல்லி முடியுமா? 130

(பா-ம்.) சொல்லலாகாது.

அகமுடையானைக் கண்டபோது தாலியைத் தடவுவாளாம்.

அகமுடையானைக் கொன்ற அற நீலி.

அகமுடையானைக் கொன்ற பிறகு அறுதாலிக்குப் புத்திவந்தது.

அகமுடையானை நம்பி அவிசாரி ஆகலாமா?

(பா-ம்) ஆடலாமா, ஆட்டம்.

அகமுடையானை வைத்துக் கொண்டல்லவோ அவிசாரி ஆட வேண்டும்? 135

அகர நாக்காய்ப் பேசுகிறான்.

அகராதி படித்தவன்.

அகல் வட்டம் பகல் மழை.

அகல இருந்தால் நிகள உறவு; கிட்ட இருந்தால் முட்டப் பகை.

(பா-ம்.) நீண்ட உறவு.

அகல இருந்தால் பகையும் உறவாம். 140

அகல இருந்தால் புகல உறவு.

அகல இருந்து செடியைக் காக்கிறது.

அகல உழுவதை ஆழ உழு.

(பா-ம்.) அகல உழுவதை விட ஆழ உழுவது நல்லது; அதனையும் அடுக்கு உழு.

அகலக் கால் வைக்காதே. 145

அகல விதை; ஆழ உழு.

அகவிலை அறியாதவன் துக்கம் அறியான்.

அகவிலையையும் ஆயுசையும் ஆர் கண்டார்?

அகன்ற வட்டம் அன்றே மழை; குறுவட்டம் பின்னால் மழை.

அகன்ற வில் அடுத்து மழை; குறுகிய வில் தள்ளி மழை.

அகன்று இருந்தால் நீண்ட உறவு; கிட்ட இருந்தால் முட்டப் பகை. 150

அங்கடி இங்கடி தெங்கடி புளியடி என்று அலைகிறான்.

(நாஞ்சில் நாட்டு வழக்கு.)

அகழியில் விழுந்த முதலைக்கு அதுவே வைகுந்தம்.
அகா நாக்காய்ப் பேசுகிறான்.
அகாரியத்தில் பகீரதப் பிரயத்தனம் பண்ணுகிறது.
அகிருத்தியம் செய்கிறவன் முகத்தில் விழிக்கிறதா? 155
அகிலும் திகிலுமாக.
அகோர தபசி வபரீத சோரன்.

(பா-ம்.) நிபுணன்.

அங்கத்திலே குறைச்சல் இல்லை; ஆட்டடா பூசாரி.
அங்கத்தை ஆற்றில் அலைசொணாதா?
அங்கத்தைக் கட்டித் தங்கத்தைச் சேர்ப்பார். 160

(பா-ம்.) சேர்.

அங்கத்தைக் கொண்டு போய் ஆற்றில் அலைசினாலும் தோஷம் இல்லை.

(பா-ம்.) அலைசொணாதே. தோஷம் போகாது.

அங்கத்தைக் கொன்று ஆற்றில் சேர்க்க ஒண்ணாது.
அங்கம் குளிர்ந்தால் லிங்கம் குளிரும்.
அங்கம் நோவ உழைத்தால் பங்கம் ஒன்றும் வராது.
அங்கரங்க வைபவமாய் இருக்கிறான்; அரைக்காசுக்கு முதல் இல்லை. 165
அங்காடிக்காரியைச் சங்கீதம் பாடச் சொன்னால், வெங்காயம், கறி வேப்பிலை என்பாள்.

(பா-ம்.) கொத்துமல்லி என்பாள்.

அங்காடிக் கூடையை அதிர்ந்தடித்துப் பேசாதே.

(பா-ம்.) அங்காடி விலையை அதறப் பதற அடிக்காதே.

அங்காடிக் கூடையை அநியாய விலை கூறாதே.
அங்காடி நாய் போல அலைந்து திரியாதே.
அங்காடி மேயும் பழங்கன்று ஏறாதலும் உண்டு. 170
அங்காடியில் தோற்றதற்காக அம்மாவை அறைந்தானாம்.
அங்காளம்மைத் தெய்வம் அகப்பைக் கூடு வழியாய் வரும்.

(பா-ம்.)அகப்பைக் கூழ்.

அங்கிடு தொடுப்பி எங்கடி போனாய்? சின்னண்ணன் செத்த இழவுக்குப் போனேன்.
அங்கிடு தொடுப்பிக்கு இங்கு இரண்டுகுட்டு; அங்கு இரண்டுசொட்டு.

(பா-ம்.)அங்கிடு தொடுப்பி - கோள் கூறுபவள்.

அங்கு அங்குக் குறுணி அளந்து கொட்டியிருக்கிறது. 175

அங்கு ஏண்டி மகளே, கஞ்சிக்கு அழுகிறாய்? இங்கே வந்தால் காற்றாய்ப் பறக்கலாம்.

(பா-ம்.) இங்கே வாடி ஆலாய்ப் பறக்கலாம்.

அங்குசம் இல்லாத ஆனையும் கடிவாளம் இல்லாத குதிரையும் அடங்கா.

அங்கும் இருப்பான்; இங்கும் இருப்பாள்; ஆக்கின சோற்றுக்குப் பங்கும் இருப்பான்.

(பா-ம்.) இருப்பாள்.

அங்கும் குறுணி அளந்து போட்டிருக்கிறான்.

அங்கும் தப்பி இங்கும் தப்பி அகப்பட்டுக் கொண்டான் தும்மட்டிப்பட்டன். 180

(பா-ம்.) திம்மட்டிராயன்.

அங்கும் சோதி; அடியேனும் சோதி.

(சுவாதித்திருநாளிடம் ஒருவன் சொன்னது.)

அங்குஸ்தி இங்குஸ்தி.

அங்கே ஏன் பிள்ளே கஞ்சிக்கு அழுகிறாய்? இங்கே வாடி காற்றாய்ப் பறக்கலாம்.

அங்கே பார்த்தால் ஆடம்பரம்; இங்கே பார்த்தால் கஞ்சிக்குச் சாவு.

அங்கே போனால் அப்படி; இங்கே வந்தால் இப்படி; ஆகிறது எப்படி? 185

(பெண் கேட்கப் போனவன் கூறியது)

அங்கே போனேனோ செத்தேனோ?

அங்கேயும் தப்பி இங்கேயும் தப்பி அகப்பட்டான் தும்மட்டிக் காய்ப் பட்டன்.

அங்கை நெல்லிக்கனி.

(ப-ம்.) பழம்.

அச்சம் அற்றவன் அம்பலம் ஏறுவான்.

(ப-ம்.) இல்லாதவன்.

அச்சம் ஆண்மையைக் குறைக்கும். 190

(ப-ம்.) குலைக்கும்.

அச்சாணி அன்னதோர் சொல்.

(ப-ம்.) போன்றதோர்.

அச்சாணி இல்லாத தேர் முச்சாணும் ஓடாது.
அச்சி என்றால் உச்சி குளிருமா? அழுவணம் என்றால் கை சிவக்குமா?

(அழுவணம்-மருதோன்றி.)

அச்சிக்குப் போனாலும் அகப்பை அரைக்காசுதான்.

(அச்சி-ஓர் ஊர்; சுமத்ராவில் உள்ளது)

அச்சியிலும் உண்டு பிச்சைக்காரன். 195
அச்சில் அடித்தால் போல, அகமுடையானுக்கு ஒத்தாற்போல.
அச்சி வீடு தீப்பிடித்தால் பட்டர் முண்டு தோளில்.

(பாலக்காட்டு வழக்கு, அச்சி வீட்டில் சங்கடம் வந்தால் பிராமணன் புறப்பட வேண்டும்.)

அச்சு இல்லாத தேர் ஓடவும் அகமுடையான் இல்லாதவள் பிள்ளை பெறவும் கூடுமா?
அச்சு இல்லாமல் தேர் ஓட்டி அகமுடையான் இல்லாமல் பிள்ளை பிறக்குமா?

(ப-ம்.) தேர் ஓடுமா? பிள்ளை பிறக்குமா?

அச்சு இல்லாமல் தேர் ஓடாது. 200

(பா-ம்.) ஓடுமா.

அச்சு ஒன்றா வேறா?
அசடு வழிகிறது.
அசத்துக்கு வாழ்க்கைப்பட்டு ஆயிரம் வருஷம் வாழ்வதைவிடச் **சமர்த்தனுக்கு**.வாழ்க்கைப்பட்டுச் சட்டென்று சாவதே மேல்.
அசந்தால் வசந்தா.
அசந்து நடப்பவன் அடிமடியில் அக்காள்; கடுகி நடப்பவன் காலிலே தேவி. 205
அசல் அகத்து நெய்யே, என் பெண்டாட்டி கையே.
அசல் அகத்துப் பிராம்மணா பாம்பைப் பிடி, அல்லித் தண்டைப் போல் குளிர்ந்திருக்கும்.

(ப-ம்.) வீட்டுப் பிராம்மணா.

அசல் வாழ்ந்தால் அஞ்சு நாள் பட்டினி கிடப்பான்.
அசல் வாழ ஆறு மாசம் பட்டினி.
அசல் வீட்டு அகமுடையான் ஆபத்துக்கு உதவுவானா? 210
அசல் வீட்டுக்காரன் அழைத்த கதை.

அசல் வீட்டுப் பிள்ளை ஆபத்துக்கு உதவுவானா?
அசல் வீட்டுக்காரனுக்குப் பரிந்துகொண்டு அகமுடையானை அடித்தாளா?
அசல் வீட்டுக்குப் போகிற பாம்பைக் கையாலே பிடிக்கிறான்.
அசல் வீட்டுச் சண்டை கண்ணுக்குக் குளிர்ச்சி. 215
அசைப்புக்கு ஆயிரம் பொன் வாங்குகிறது.
அசை போட்டுத் தின்னுவது மாடு; அசையாமல் விழுங்குவது வீடு.
அசை போட ஏதாவது இருந்தால் அவனா நகருவான்?
அஞ்சலி பந்தனம் யாருக்கும் நன்மை.

(பா-ம்.) பந்தம்.

அஞ்சனக்காரன் முதுகிலே வஞ்சனைக்காரன் ஏறினான். 220
அஞ்சனம் குருட்டு விழிக்கு என்ன செய்யும்?
அஞ்சாத ஆனைக்குப் பஞ்சாங்கம் கோடரி.
அஞ்சா நெஞ்சு படைத்தால் ஆருக்கு ஆவான்?

(பா-ம்.) ஆவாய்.

அஞ்சாவது பெண் பிறந்தால் அரசனும் ஆண்டி ஆவான்.
அஞ்சாவது பெண்ணைக் கெஞ்சினாலும் தரமாட்டார்கள். 225
அஞ்சி அஞ்சிச் சாகிறான்.
அஞ்சி ஆண்மை செய்ய வேணும்.
அஞ்சி நடக்கிறவனுக்குக் காலம் இல்லை.
அஞ்சி மணியம் பண்ணாதே; மிஞ்சிப் பிச்சை கேட்காதே.
அஞ்சி மணியம் பார்த்தது கிடையாது; கெஞ்சிக் கடன் கேட்டது கிடையாது. 230
அஞ்சிய அரசன் தஞ்சம் ஆகான்.
அஞ்சில் ஒரு மழை; பிஞ்சில் ஒரு மழை.

(அஞ்சு-செடியில் ஐந்து இலைகள் இருக்கும் சமயம்.)

அஞ்சிலே அறியாதவன் அம்பதிலே அறிவானா?
அஞ்சிலே பிஞ்சிலே கொஞ்சாமல் அறுபதுக்குமேல் கொஞ்சினான்.

(பா-ம்.) அறுபதுக்குமேல் கொஞ்சினாலும்.

அஞ்சிலே வளையாதது அம்பதிலே வளையாது. 235
அஞ்சிலே வளையாதது ஐம்பதிலே வளையுமா?
அஞ்சினவன் கண்ணுக்கு ஆகாசம் எல்லாம் பேய்.
அஞ்சினவனுக்கு ஆனை; அஞ்சாதவனுக்குப் பூனை.

அஞ்சினவனைக் குஞ்சும் மிரட்டும்.
அஞ்சினவனைப் பேய் அடிக்கும். 240

(பா-ம்.) அஞ்சினாரை.

அஞ்சினாரைக் கெஞ்ச அடியாதே.
அஞ்சினாரைக் கெஞ்ச வைக்கும்; அடித்தாரை வாழ்விக்கும்.
அஞ்சு அடி அடித்த பாவனையும் அப்பனேதான்.
அஞ்சு அடி அடித்துப் போரிலே போட்டாச்சு.

(முதியவர்களைச் சொல்வது)

அஞ்சு அடித்தால் சோரும்; ஆறு அடித்தால் பாயும். 245
அஞ்சு பணம் கொடுத்தாலும் அத்தனை ஆத்திரம் ஆகாது.

(பா-ம்.) கோபம் ஆகாது.

அஞ்சு பணம் கொடுத்து அடிக்கச் சொன்னானாம்; பத்துப் பணம் கொடுத்து நிறுத்தச் சொன்னானாம்.
அஞ்சு பணம் கொடுத்துக் கஞ்சித் தண்ணீர் குடிப்பானேன்?
அஞ்சு பிள்ளைக்குமேல் அரசனும் ஆண்டி.
அஞ்சு பிள்ளை பெற்றவளுக்குத் தலைச்சன் பிள்ளைக்காரி மருத்துவம் சொன்னாளாம். 250

அஞ்சு பெண்டாட்டி கட்டியும் அறுக்கப் பெண்டாட்டி இல்லை; பத்துப் பெண்டாட்டி கட்டியும் படுக்கப் பெண்டாட்டி இல்லை.
அஞ்சு பெண் பெற்றால் அரசனும் ஆண்டி.
அஞ்சு பேரல்லோ பத்தினிமார்? அஞ்சிலே இரண்டு பழுதில்லை.
அஞ்சு பொன்னும் வாங்கார், அரைப்பணமே போது மென்பார்.
அஞ்சும் இரண்டும் அடைவானால் அறியாப் பெண்ணும் கறியாக்கும். 255

அஞ்சும் சரியாக இருந்தால் அறியாப் பெண்ணும் கறிசமைப்பாள்.
அஞ்சும் இருக்கிறது நெஞ்சுக்குள்ளே; அதுவும் இருக்கிறது புந்திக் குள்ளே.

அஞ்சும் பிஞ்சுமாக நிற்கிறது.
அஞ்சும் மூன்றும் உண்டானால் அறியாப் பெண்ணும் கறிசமைக்கும்

(பா-ம்.) அஞ்சும் மூன்றும் அடுக்காக இருந்தால் அறியாச் சிறுக்கியும்.

அஞ்சும் மூன்றும் எட்டு; அத்தை மகளைக் கட்டு. 260
அஞ்சு மாசம் வரைக்கும் தாய்க்கும் மறைக்கலாம், சூல்.
அஞ்சுரு ஆணி இல்லாத் தேர் அசைவது அரிது.

அஞ்சுருவுத் தாலி நெஞ்சுருகக் கட்டிக்கொண்டு வந்தாற்போல வலக்காரமாய்ப் பேசுகிறான்.
அஞ்சு வந்தாலும் அவசரம் ஆகாது; பத்து வந்தாலும் பதற்றம் ஆகாது.
அஞ்சு வயசில் அண்ணன் தம்பி; பத்து வயசில் பங்காளி. 265
அஞ்சு வயசில் அரசிலை செய்யப் போனவன் திரட்சியின்போது திரும்பி வந்தானாம்.
அஞ்சு வயசில் ஆதியை ஓது.
அஞ்சு வயசு ஆண் பிள்ளைக்கு அம்பது வயசுப் பெண் அடக்கம்.
அஞ்சு வயசுப் பிள்ளைக்கு அம்பது வயசுப் பெண் காலமுக்க வேணும்.
அஞ்சு விரலும் அஞ்சு கன்னக் கோல். 270
அஞ்சு விரலும் சமமாக இருக்குமா?

(பா-ம்.) ஒரு மாதிரி.

அஞ்சுவோரைக் கெஞ்சடிக்கப் பார்க்கிறான்.
அஞ்சூர்ச் சண்டை சிம்மாளம்; ஐங்கல அரிசி ஒரு கவளம்.
அஞ்சூரான் பஞ்சு போல.

(பா-ம்.) புஞ்சை போல.

அஞ்ஞானம் தீர்ந்தால் ஔடதம் பலிக்கும். 275
அட்சதைக்கு விதி இல்லை; லட்சம் பிராமணச் சாப்பாடாம்.
அட்டதரித்திரம் புக்ககத்திலே, அமராவதி போல வாழ்கிறேன்; நித்திய தரித்திரம் தகப்பனாரை நின்ற நிலையில் வரச்சொன்னாள்.
அட்ட நாயும் பொட்டைக் குஞ்சுமாய்ச் சம்சாரம்.

(பா-ம்.)பெட்டை.

அட்டமத்துச் சனி கிட்ட வந்தது போல.
அட்டமத்துச் சனி நட்டம் வரச் செய்யும். 280

(பா-ம்.) தொட்டதெல்லாம் நட்டம்.

அட்டமத்துச் சனி பிடித்துப் பிட்டத்துத் துணியும் உரிந்து கொண்டது.
அட்டமத்துச் சனியை வட்டிக்கு வாங்கினாற்போல.
அட்டாதுட்டிக் கொள்ளித் தேள்.
அட்டாரைத் தொடாக் காலம் இல்லை.

(பழமொழி நானூறு)

அட்டாலும் பால் சுவையில் குன்றாது. (வாக்குண்டாம்.) 285
அட்டில் ஒருவருக்கு, ஆதில் இருவருக்கு, திரி இட்டால் மூவருக்கு.

அட்டைக் கடியும் அரிய வழி நடையும் கட்டை இடறுதலும் காண லாம் கண்டியிலே.
அட்டைக்குத் தெரியுமா கட்டில் சுகம்?
அட்டைக்கும் திருப்தி இல்லை; அக்கினிக்கும் திருப்தி இல்லை.
அட்டை மாதிரி உறிஞ்சுகிறான். 290
அட்டை மாதிரி ஒட்டிக் கொள்கிறான்.
அட்டையை எடுத்துத் தொட்டிலில் கிடத்தினாலும் அது கிடக்கும் குட்டையிலே.
அட்டையை எடுத்துத் தொட்டிலில் விட்டாற்போல.
அட்டையை எடுத்து மெத்தையில் வைத்தாலும் செத்தையைச் செத்தையை நக்கும்.
அட்டையைக் கட்டிச் சட்டியிலே போட்டாலும் அது கிடக்குமாம் சாக்கடையில். 295
(பா-ம்.) சகதியிலே,
அட்டையைக் கழுவிக் கட்டையில் கிடத்தினாலும் அது கிடக்குமாம் சகதியிலே.
அட்டையைப் பிடித்து மெத்தையில் வைத்தது போல.
அடக்கத்துப் பெண்ணுக்கு அழகு ஏன்?
(பா-ம்.) அடக்கம் உள்ள.
அடக்கம் ஆயிரம் பொன் பெறும்.
அடக்கம் உடையார் அறிஞர்; அடங்காதார் கல்லார். 300
அடக்கம் உள்ளவன் பொருளுக்கு ஆபத்து இல்லை.
அடக்கமே பெண்ணுக்கு அழகு;
அடக்குவார் அற்ற கழுக்காணியும் கொட்டுவார் அற்ற மேளமும் போலத் திரிகிறான்.
அடங்காத பாம்புக்கு ராஜா மூங்கில் தடி.
அடங்காத பிடாரியைப் பெண்டு கொண்டது போல. 305
அடங்காத பிள்ளைக்கு ஒரு வணங்காத பெண்.
அடங்காத பெண்சாதியால் அத்தைக்கும் பொல்லாப்பு; நமக்கும் பொல்லாப்பு.
அடங்காப் பெண்டிரைக் கொண்டானும் கெட்டான்; அறுகங் காட்டை உழுதவனும் கெட்டான்.
அடங்காத மனைவியும் ஆங்காரப் புருஷனும்.
அடங்காத மாட்டுக்கு அரசன் மூங்கில் தடி. 310
அடங்கின பிடிபிடிக்க வேணுமே அல்லாமல் அடங்காத பிடி பிடிக் கலாகாது.
அடடா கருக்கே அரிவாள் மணை கருக்கே!

அடம்பங்கொடியும் திரண்டால் மிடுக்கு. [யாழ்ப்பாண வழக்கு]
அடம் பண்ணுகிற தேவடியாளுக்கு முத்தம் வேறே வேணுமா?
அடர்த்தியை அப்போதே பார்; புணக்கத்தைப் பின்னாலே பார். 315
அடர உழு; அகல விதை.
அடர விதைத்து ஆழ உழு.
அட ராவணா என்றானாம்.
அடா என்பவன் வெளியே புறப்பட்டான்.
அடாது செய்தவர் படாது படுவர். 320
அடாது மழை பெய்தாலும் விடாது நாடகம் நடக்கும்.
அடி அதிசயமே, சீமைச் சரக்கே!
அடி அதிரசம்; குத்துக் கொழுக்கட்டை.

(பி-ம்.) அடி அப்பம்.

அடி அற்ற பனைபோல் விழுந்தான்.
அடி அற்ற மரம்போல அலறி விழுகிறது 325

(பா-ம்.) பனமரம் போல.

அடி அற்றால் நுனி விழாமல் இருக்குமா?
அடி உதவுவது போல அண்ணன் தம்பி உதவமாட்டார்.
அடி என்கிற ராஜாவும் இல்லை; பிடி என்கிற மந்திரியும் இல்லை.

(பா-ம்.) மந்திரியும் இல்லை. பிடி என்கிற ராஜாவும்.

அடி என்பதற்கு அவளைக் காணோம்; பிள்ளை பிறந்தால் ராம கிருஷ்ணன் என்று பெயர் வைக்கவேண்டுமென்று ஆசைப் பட்டானாம்.
அடி என்பதற்குப் பெண்டாட்டி இல்லை; அஷ்ட புத்திரர்கள் எட்டுப் பேராம். 330

(பா-ம்.) புத்திரவெகு பாக்கியம் நமஸ்து.

அடி என்பதற்குப் பெண்டாட்டி இல்லை; பிள்ளை பெயர் அருணாசலமாம்.
அடி என்று அழைக்கப் பெண்டாட்டி இல்லை; பிள்ளை எத்தனை, பெண் எத்தனை என்றானாம்.
அடி என்று சொல்ல அகமுடையாளைக் காணோம்; பிள்ளைக்குப் பேர் என்ன வைக்கிறது என்றானாம்.
அடி ஒட்டி அல்லவா மேற்கரணம் போட வேண்டும்?
அடி ஓட்டையாய் இருந்தாலும் கொழுக்கட்டை வேக வேண்டியது தானே? 335
அடிக்க அடிக்க அம்மியும் நகரும்.

அடிக்க அடிக்கப் படுகிறவனும் முட்டாள்; படப்பட அடிக்கிறவனும் முட்டாள்.
அடிக்க அடிக்கப் பந்து விசை கொள்ளும்.

(பி-ம்.) எழும்பும்.

அடிக்க அடிக்கப் பிள்ளை வளரும்; முறுக்க முறுக்க மீசை வளரும்.
அடிக்கடி அரசன் பிரவேசித்த கிராமம் அதிருபத்தை அடையும். 340
அடிக்கிற காற்றுக்கும் காய்கிற வெயிலுக்கும் பயப்படு.
அடிக்கிற காற்று வெயிலுக்குப் பயப்படுமா?
அடிக்கிற கைதான் அணைக்கும்.
அடிக்கு ஆயிரம் பொன் கொடுக்க வேண்டும்.
அடிக்குப் பயந்து அடுப்பில் விழுந்தாளாம். 345
அடிக்கும் ஒரு கை; அணைக்கும் ஒரு கை.
(பா-ம்.) அடிப்பதும், அணைப்பதும்
அடிக்கும் காற்றிலே எடுத்துத் தூற்ற வேண்டும்.
அடிக்கும் சரி; பிடிக்கும் சரி.
அடிக்கும் பிடிக்கும் சரியாய்ப் போச்சு.
அடிக்குழம்பு ஆனைக்குட்டி போல. 350
அடிச்சட்டிக்குள்ளே கரணம் போடலாமா?
அடிச்சட்டியில் கரணம் போட்டுக் குண்டு சட்டியில் குதிரைச் சவாரி பண்ணினானாம்.
அடி சக்கை பொடி மட்டை
அடி சக்கை, லொட லொட்டை
அடி செய்கிறது அண்ணன் தம்பி செய்யார். 355
அடி செருப்பாலே, ஆற்றுக்கு அப்பாலே.
அடித்த இடம் கண்டுபிடித்து அழ ஆறு மாசம் ஆகும்.
அடித்த ஏருக்கும் குடித்த கூழுக்கும் சரி.

(பா-ம்.) அடித்த உழவுக்கும் வார்த்த கூழுக்கும்.

அடித்தது ஆட்டம், பிடித்தது பெண்டு.
அடித்தது ஆலங்காடு. 360
அடித்த நாய் உழன்றாற் போல.
அடித்த மாடு சண்டி.
அடித்தவன் பின்னால் போனாலும் போகலாம்; பிடித்தவன் பின்னால் போகக்கூடாது.
அறுபதுக்குமேல் கொஞ்சினாலும் அஞ்சிலே வளையாதது அம்பதிலே வளையாது.

அடித்தா பால் புகட்டுகிறது? 365
அடித்தால் அடி மறக்காது; அம்பு போட்டால் அம்பு பாயாது; சொன்னால் சொல் பிறக்காது;
அடித்தால் கூட அழத் தெரியாது.
அடித்தால் முதுகில் அடி; வயிற்றில் அடிக்காதே.
அடித்தாலும் புடைத்தாலும் என் அகமுடையான்; அடுப்புக் கொழுக்கட்டையைத் தொடாதே.
அடித்தாலும் புருஷன். அணைத்தாலும் புருஷன். 370
(பா-ம்) புடைத்தாலும் புருஷன்.
அடித்தாற் போல அடிக்கிறேன்; நீ அழுகிறது போல அழு.
அடித்தான் ஐயா பிரைஸ், காது அறுந்த ஊசி.
அடித்தான் பிடித்தான் வியாபாரம்.
அடித்து அழ விட்டால் அது ஒரு விளையாட்டா?
அடித்துப் பழுத்தது பழமா? 375
அடித்துப் பால் புகட்டுகிறதா?
அடித்துப் போட்ட நாய் மாதிரி கிடக்கிறான்.
அடித்து வளர்க்காத பிள்ளையும் இல்லை; முறித்து வளர்க்காத முருங்கையும் இல்லை.
அடித்து வளர்க்காத பிள்ளையும் ஊட்டி வளர்க்காத கன்றும்.
அடித்து வளர்க்காத பிள்ளையும் முறித்து வளர்க்காத
முருங்கையும். 380
(இல்லை.)
அடித்து வளர்க்காத பிள்ளையும் முறுக்கி வளர்க்காத மீசையும் வாய்க்கு முன் ஏய்க்கும்.
(செவ்வை ஆகா.)
அடித்து விட்டவன் பின்னே போனாலும் பிடித்து விட்டவன் பின்னே போகலாகாது.
அடி தெற்றினால் ஆனையும் சறுக்கும்;
அடி நாக்கில் நஞ்சு; நுனி நாக்கில் அமிழ்தம்.
அடி நொச்சி; நுனி ஆமணக்கா? 385
(அடி நா, நுனி நா.)
அடிப்பதும் ஒரு கை; அணைப்பதும் ஒரு கை.
அடிப்பானேன்? பிடிப்பானேன்? அடக்குகிற வழியிலே அடக்குவோம்.
அடிபட்ட நாய் போல.
அடிபட்ட நாயைப் போல் காலைத் தூக்கி நடவாதே.
அடிபட்டவன் அழுவான். 390
அடிபட்டாலும் ஆர்க்காட்டுச் சடாவால் அடிபட வேண்டும்.
அடி பெண்ணே சோறு ஆச்சா? நொடிக்குள்ளே சோறு ஆச்சு.

அடிபோன சட்டி ஆயா வீட்டில் இருந்தால் என்ன? மாமியார் வீட்டில் இருந்தால் என்ன?
அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகரும்.

(பா-ம்.) தேயும்.

அடிமை படைத்தால் ஆள்வது கடன். 395
அடியடா செருப்பாலே அறுநூறு; இந்தாடா நாயே திருநீறு.
அடியாத பிள்ளை படியாது.

(பணியாது.)

அடியாத மாடு படியாது.
அடியில் உள்ளது நடுவுக்கும் முடிவுக்கும் உண்டு.
அடியுண்ட வேங்கை போல. 400
அடியும் நுனியும் தறித்த கட்டை போல.
அடியும் பட்டுவிட்டுப் புளித்த மாங்காயா தின்னவேண்டும்?
அடியும் பிடியும் சரி.
அடியே என்பதற்கு அகமுடையான் இல்லை; பிள்ளை பேர் சந்தான கோபால கிருஷ்ணன்.
அடியைக் காத்து முடியை அடித்துக் கொண்டு போச்சு. 405
அடியைப் பிடியடா பாரத பட்டா!
அடியை விட ஆவலாதி பெரியது.
அடியோடு அடிக் கரணம்.
அடிவண்டிக் கிடாப் போலே.
அடிவயிற்றில் இடி விழுந்தாற் போல. 410
அடிவயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டது போல.
அடிவயிற்றில் புளியைக் கரைக்கிறது.
அடிவானம் கறுத்தால் ஆண்டை வீடு வலுக்கும்.
அடுக்கல் குத்தினால், நடுக்கல் குத்துவாள்.
அடுக்களை உறவு இல்லாமல் அம்பலத்து உறவா? 415
அடுக்களைக் கிணற்றிலே அமுதம் எழுந்தாற் போல்.
அடுக்களைக்கு ஒரு பெண்ணும் அம்பலத்துக்கு ஓர் ஆணும்.

(இருக்கிறது என்கிறான்.)

அடுக்களைக் குற்றம் சோறு குழைந்தது; அகமுடையான் குற்றம் பெண்ணாய்ப் பிறந்தது.

(துடுப்பால் குழைந்தது.)

அடுக்களைப் பூனைபோல் இடுக்கிலே ஒளிக்கிறது.
அடுக்களைப் பெண்ணுக்கு அழகு வேண்டுமா? 420

(எதற்கு?)

அடுக்குகிற அருமை உடைக்கிற நாய்க்குத் தெரியுமா?

(அடுக்குகிற வருத்தம், உடைக்கிற பூனைக்கு.)

அடுத்தகத்துக்காரிக்குப் பிள்ளை பிறந்ததென்று உலக்கையை எடுத்து இடித்துக்கொண்டாளாம்.
அடுத்தகத்துப் பிராம்மணா பாம்பைப் பிடி; அல்லித் தண்டுபோல் குளிர்ந்திருக்கும்.
அடுத்த கூரை வேகிறபோது தன் கூரைக்கும் மோசம்.
அடுத்ததன் தன்மை ஆன்மா ஆகும். 425
அடுத்தவரை அகல விடலாகாது.
அடுத்தவரைக் கெடுக்கலாகாது.
அடுத்தவளுக்கு அகமுடையான் வந்தது போல.
அடுத்தவன் தலையில் நரை என்பானேன்? அவன் அதைச் சிரை என்பானேன்?
அடுத்தவன் வாழப் பகலே குடி எடுப்பான். 430

(கெடுப்பான்.)

அடுத்தவனை ஒரு போதும் கெடுக்கலாகாது.
அடுத்தவனைக் கெடுக்கலாமா?
அடுத்த வீட்டில் மொச்சை வேகிறதென்று அடிவயிறு பிய்த்துக் கொண்டு போகிறது.
அடுத்த வீட்டுக்காரனுக்கு அதிகாரம் வந்தால் அண்டை வீட்டுக்கு இரைச்சல் லாபம்.
அடுதத வீட்டுக்காரனுக்கு அதியோகம் வந்தால் அண்டை வீடு குதிரைலாயம். 435

(உத்தியோகம் வந்தால்.)

அடுத்த வீட்டுக்காரனுக்கு மணியம் போகிறது; ஒன்றாகக் காது அறுத்துக் கொள்ளுங்கள்.
அடுத்த வீட்டுக்காரி பிள்ளை பெற்றாள் என்று அம்மிக்குழவி எடுத்துக் குத்திக் கொண்டாளாம்.

(இடித்துக் கொண்டாளாம்.)

அடுத்தாரைக் கெடுக்கிறதா?
அடுத்தாரைக் கெடுத்து அன்னம் இட்டார் வீட்டில் கன்னம் இடுகிறான்.
அடுத்தாரைக் கோபித்தால் கெடுத்தாலும் கெடுப்பார். 440
அடுத்து அடுத்துச் சொன்னால் தொடுத்த காரியம் முடியும்.

(எடுத்த காரியம், கொடுத்த உதவியும் முடியும்.)

அடுத்து அடுத்துப் போனால் அடுத்த வீடும் பகை.
அடுத்துக் கெடுப்பவர்.
அடுத்துக் கெடுப்பான் கபடன்; கொடுத்துக் கெடுப்பான் மார்வாடி; தொடுத்துக் கெடுப்பாள் மடந்தை.

(தொடர்ந்து கெடுப்பாள் வேசி.)

அடுத்துச் சொன்னால் எடுத்த காரியம் முடியும். 445
அடுத்து முயன்றாலும் ஆகும் நாள்தான் ஆகும்.

(வாக்குண்டாம்.)

அடுத்து வந்தவனுக்கு ஆதரவு சொல்கிறவன் குரு.
அடுப்பங் கரையே கைலாசம்; அகமுடையானே சொர்க்க லோகம்.
அடுப்பங் கரையே சொர்க்கம்; அகமுடையானே தெய்வம்.
அடுப்பங் கரையே திருப்பதி; அகமுடையானே கைலாசம். 450
அடுப்பு அடியில் பூனை தூங்க.
அடுப்பு அடியில் வெண்ணெய் வைத்த கதை.
அடுப்பு ஊதும் பெண்ணுக்குப் படிப்பு எதற்கு?
அடுப்பு எரிந்தால்தானே பொரி பொரியும்?
அடுப்பு எரிந்தால் பொரி பொரியும்; தாயார் செத்தால் வயிறு எரியும். 455
அடுப்பு எரியாத கோபத்தை அகமுடையான்மேல் காட்டினாளாம்.

(அம்மையார் மேல்.)

அடுப்புக் கட்டிக்கு அழகு வேணுமா?
அடுப்புக் கரகரப்பும் அகமுடையான் முணுமுணுப்பும்.
அடுப்புக்கு ஒரு துடுப்பா?
அடுப்புக்குத் தகுந்த உலை, அகமுடையானுக்குத் தகுந்த இறுமாப்பு. 460
அடுப்புக் குற்றம் சாதம் குழைந்தது; அகமுடையான் குற்றம் பெண் பிறந்தது.
அடுப்பு நெருப்பும் போய் **வாய்த் தவிடும்** போச்சு.

(வாய்த்த மனைவியும் போனாள்.)

அடுப்பும் நெருப்பும் பயப்படுமா?

(யாழ்ப்பாண வழக்கு.)

அடுப்பே திருப்பதி; அகமுடையானே குலதெய்வம்.
அடே அத்தான் அத்தான், அம்மான் பண்ணினாற் போல் இருக்க வில்லையடா. 465

(இடக்கர்.)

அடைக்கலாங் குருவிக்கு ஆயிரத் தெட்டுக் கண்டம்.
அடைத்தவன் காட்டைப் பார்; மேய்த்தவன் மாட்டைப் பார்.
அடை தட்டின வீடு தொடை தட்டும்.
அடைதட்டின வீடும் தொடை தட்டின வீடும் உருப்படா.
அடைந்தோரை ஆதரி. 470
அடைப்பான் குற்றம், துடைப்பான் குற்றம், அகமுடையான் குற்றம் பெண்ணாய்ப் பிறந்ததாம்.
அடைப்பைப் பிடுங்கினால் பாம்பு கடிக்கும்.
அடைபட்டுக் கிடக்கிறான் செட்டி; அவனை அழைத்து வா, பணம் பாக்கி என்கிறான் பட்டி.
அடை மழைக் காலத்தில் ஆற்றங் கரையில் தண்ணீர்ப் பந்தல் வைத்தானாம்.
அடை மழையில் ஆட்டுக்குட்டி செத்தது போல. 475
அடை மழையும் உழவு எருதும்.
அடை மழை விட்டும் செடி மழை விடவில்லை.

(கொடி மழை.)

அடையலரை அடுத்து வெல்.

(அடையலர்-பகைவர்.)

அடையா, அப்பமா, விண்டு காட்ட?
அடைவு அறிந்து காரியம் செய்தால் விரல் மடக்க நேரம் இராது. 480

(இல்லை.)

அண்டங் காக்காய் குழறுகிறது போல.
அண்டத்தில் இல்லாதது பிண்டத்தில் உண்டா?
அண்டத்தில் உள்ளது பிண்டத்திலே.

(அண்டத்துக்கு உள்ளது.)

அண்டத்துக்கு ஒத்தது பிண்டத்துக்கு.
அண்டத்தைக் கையில் வைத்து ஆட்டும் பிடாரிக்குச் சுண்டைக் காய் எடுப்பது பாரமா? 485
அண்டத்தைச் சுமக்கிறவனுக்குச் சுண்டைக்காய் பாரமா?
அண்ட நிழல் இல்லாமல் போனாலும் பேர் விருட்சம்.

(ஆலமரம்.)

அண்டமும் பிண்டமும் அந்தரங்கமும் வெளியரங்கமும்.
அண்டர் எப்படியோ, தொண்டரும் அப்படியே.
அண்டாத பிடாரி ஆருக்கு அடங்குவாள்? 490

அண்டை அயலைப் பார்த்துப் பேசு.
அண்டை நிலத்தையும் அயல் மனையையும் கை விடாதே.
அண்டை மேலுள்ள கோபத்தை ஆட்டுக்கிடாயின் மேல் காட்டியதைப் போல.

(ஆண்டை மேலுள்ள.)

அண்டையில் சமர்த்தன் இல்லாத ராஜாவுக்கு அபகீர்த்தி வரும்.
அண்டையில் வா என்றால் சண்டைக்கு வருகிறாயே! 495
அண்டை வீட்டு ஆட்டைப் பார்த்து நாய் குரைத்தது போல.
அண்டை வீட்டுக் கடனும் பிட்டத்துச் சிரங்கும் ஆகா.
அண்டை வீட்டுக் கல்யாணமே, ஏன் அழுகிறாய் கோவணமே?
அண்டை வீட்டுக்காரி பிள்ளை பெற்றாளென்று அயல் வீட்டுக்காரி அடி வயிற்றில் இடித்துக் கொண்டது போல.
அண்டை வீட்டுக்காரி பிள்ளை பெற்றாளென்று உலக்கை எடுத்து அடித்துக் கொண்டாளாம். 500
அண்டை வீட்டுச் சண்டை கண்ணுக்குக் குளிர்ச்சி.
அண்டை வீட்டுச் சுப்பிக்கும் எதிர்வீட்டுக் காமாட்சிக்குமா கவலை?

(அண்டைவீட்டு மீனாட்சிக்கும் அடுத்த வீட்டுக் காமாட்சிக்கும்.)

அண்டை வீட்டு நெய்யே, என் பெண்டாட்டி கையே.
அண்டை வீட்டுப் பார்ப்பான் சண்டை மூட்டித் திரிவான்.

(திரிப்பான்.)

அண்ணற ஆயிரம் பொன்னிலும் நிண்ணற ஒரு காசு பெரிது. 505

(அன்றறுகிற. நின்றறுகிறது.)

அண்ணன் உண்ணாதது எல்லாம் மதனிக்கு லாபம்.

(மைத்துனிக்கு.)

அண்ணன் எப்போது ஒழிவானோ? திண்ணை எப்போது காலி ஆகுமோ?

(எப்போது சாவான்.)

அண்ணன் கொம்பு பம்பள பளாச்சு.

(பணச்சு.)

அண்ணன் சம்பாதிக்கிறது தம்பி அரைஞாணுக்குக் கூடப் போதாது.

(அரைஞாண் கயிற்றுக்குச் சரி.)

அண்ணன் தங்கை அப்ஸர ஸ்திரீ. 510
அண்ணன் தம்பிதான் சென்மப் பகையாளி.
அண்ணன் தம்பி பின்பாட்டு; அக்கா தங்கைகள் அடிகிரவணம்.

அண்ணன் தம்பி வேண்டும், இன்னம் தம்பிரானே.
அண்ணன்தான் கூடப்பிறந்தான்; அண்ணியும் கூடப் பிறந்தாளோ?
அண்ணன்தான் சொந்தம்; அண்ணியுமா சொந்தம்? 515
அண்ணன் பிள்ளையை நம்புகிறதற்குத் தென்னம் பிள்ளையை நம்பலாம்.

(பிள்ளையை வளர்ப்பதை விட.)

அண்ணன் பிறந்து அடிமட்டம் ஆச்சு; தம்பி பிறந்து தரைமட்டம் ஆச்சு.
அண்ணன் பெண்டாட்டி அரைப் பெண்டாட்டி; தம்பி பெண்டாட்டி தன் பெண்டாட்டி.
அண்ணன் பெரியவன்; அப்பா அடுப்பூது.

(சிற்றப்பா.)

அண்ணன் பெரியவன்; அப்பா நெருப்பெடு என்கிற கதை. 520
அண்ணன் பெரியவன்; சிற்றப்பா, சுருட்டுக்கு நெருப்புக் கொண்டு வா.
அண்ணன் பேச்சைத் தட்டவும் மாட்டேன்; மேலைப் பங்கை விடவும் மாட்டேன்.
அண்ணன் பேரில் இருந்த கோபத்தை நாய்பேரில் ஆற்றினான்.
அண்ணன் வரும் வரையில் அமாவாசை நிற்குமா?
அண்ணனார் சேனையிலே அள்ளிப் போகிறான். 525

(போகிறாள்.)

அண்ணனிடத்தில் ஆறு மாசம் வாழ்ந்தாலும் அண்ணியிடத்தில் அரை நிமிஷம் வாழலாமா?

(அரை நாழிகை.)

அண்ணனுக்குத் தங்கை அபஸரஸ் ஸ்திரீ.
அண்ணனுக்குத் தம்பி அல்ல என்று போகுமா?
அண்ணனுக்குப் பெண் பிறந்தால் அத்தை அசல் நாட்டாள்.

(வீட்டாள்.)

அண்ணனை அகம் காக்க வைத்துவிட்டு மன்னி மல்லுக்குப் போனாளாம். 530

(மதனி.)

அண்ணனைக் கண்டாயோ என்று போய்விட்டான்.
அண்ணனைக் கொன்ற பழியைச் சந்தையிலே தீர்த்துக் கொள்கிறது போல.
அண்ணாக்கும் தொண்டையும் அதிர அடைத்தது போல.
அண்ணா சம்பாதிப்பது அம்பி அரைஞாண் கயிற்றுக்கும் பற்றாது.
அண்ணா செத்த பிறகு மன்னியிடம் உறவா? 535

அண்ணாண்டி வாரும்; சண்டையை ஒப்புக் கொள்ளும்.
அண்ணா நங்கை அப்ஸர ஸ்திரீ.
அண்ணாதூர் பாடை, ஆலம்பாக்கத்து ஓடை, சதண்டி வைக்கோற் போர்.

(அண்ணாதூரில் பிணத்தாழி கட்டித் தொங்க விட்டிருப்பார்களாம். சதண்டி: ஓரூர்.)

அண்ணாமலைக்கு அரோ ஹரா!
அண்ணாமலைச் சாமி மின்னினாற் போலே பயணம். 540
அண்ணாமலையார் அருள் இருந்தால் மன்னார் சாமி மயிர் பிடுங்குமா?

(மன்னார்சாமியைக் கேட்பானேன்? மன்னார்சாமி மருள் வந்து.)

அண்ணாமலையாருக்கு அறுபத்து நாலு பூசை; ஆண்டிகளுக்கு எழுபத்து நாலு பூசை.
அண்ணாமலையில் பிறந்தவனுக்கு அருணாசல புராணம் படிக்க வேண்டுமா?

(படிக்கத் தெரியாதா?)

அண்ணா மனசு வைத்தால் மதனிக்குப் பிள்ளை பிறக்கும்.
அண்ணா வரும் வரையில் அமாவாசை காத்திருக்காது. 545
அண்ணா வாரும்; சண்டையை ஒப்புக்கொள்ளும்.
அண்ணாவி கால் இடறினால் அதுவும் ஒரு நடைமுறை.

(அண்ணாவி-உபாத்தியாயர், அடைமுறை.)

அண்ணாவி தவறு செய்தால் அதுவும் நடைமுறை.
அண்ணாவி நின்று கொண்டே மோண்டால் பையன் ஓடிக் கொண்டே மோள்வான்.

(மோளுதல்-சிறுநீர் கழித்தல்.)

அண்ணாவி பிள்ளைக்குப் பணம் பஞ்சமா? அம்பட்டன் பிள்ளைக்கு மயிர் பஞ்சமா? 550
அண்ணாவுக்கும் மன்னிக்கும் அனவரதமும் பிணக்கு.
அண்ணாவுக்கு மனசு வரவேணும்; மதனி பிள்ளை பெற வேணும்.
அன்ாணி ஆண்டாளு, ஆறுமுகம் கூத்தியாரு.
அணி இலாக் கவிதை பணி இலா வனிதை.
அணி எல்லாம் ஆடையின்பின். 555

(பழமொழி நானூறு.)

அணி பூண்ட நாய் போல.
அணியத்திலே கிழிந்தாலும் கிழிந்தது; அமரத்திலே கிழிந் தாலும் கிழிந்தது.

அணில் ஏற விட்ட நாய் போல.
அணில் ஏறித் தென்னை அசையுமா?

(அசைத்து, ஆடி விடுமா?)

அணில் ஓட்டமும் ஆமை நடையும். 560

(அணில் ஊனும்.)

அணில் கொம்பிலே; ஆமை கிணற்றிலே,
அணில் நொட்டிப் பனை முறியுமா?
அணில் நொட்டியா தென்னை சாயும்?
அணில் நொட்டினதும் தென்னமரம் வீழ்ந்ததும்,
அணில் பிள்ளையின் தலை மீது அம்மிக் கல்லை வைத்தது போல. 565
அணில் வாயாற் கெட்டாற் போல.
அணிலைக் கொன்றால் ஆழாக்குப் பாவம்; ஓணானைக் கொன்றால் உழக்குப் புண்ணியம்.
அணிற் பிள்ளைக்கு நுங்கு அரிதோ? ஆண்டிச்சி பிள்ளைக்குச் சோறு அரிதோ?
அணு அளவு பிசகாது.
அணு மகா மேரு ஆகுமா? 570
அணு மலை ஆச்சு; மலை அணு ஆச்சு
அணுவுக்கு அணு, மகத்துக்கு மகத்து.
அணுவும் மகமேரு ஆகும்.
அணுவும் மலை ஆச்சு; மலையும் அணு ஆச்சு

(உருவகம்.)

அணை கடந்த வெள்ளத்தைத் தடுப்பவர் யார்? 575

(மறிப்பவர்.)

அணை கடந்த வெள்ளம் அழுதாலும் வருமா?

(வராது.)

அணை கடந்த வெள்ளம் அழைக்கத் திரும்புமா?
அத்தச் செவ்வானம் அடை மழைக்கு அடையாளம்.

(லட்சணம்.)

அத்தத்தின் மிகுதியல்லவா, அம்பட்டன் பெண் கேட்க வந்தது?
அத்தனைக்கு இத்தனை உயரம், ஐராவதம் போல் எங்கள் பசு. 580
அத்தனையும் சேர்த்தும் உப்பிட மறந்தது போல,
அத்தனையும்தான் செய்தாள்; உப்பிட மறந்தாள்,
அத்தான் அரை அகமுடையான்.

அத்தான் செத்தால் மயிர் ஆச்சு; கம்பளி மெத்தை நமக்கு ஆச்சு.
அத்தான் முட்டி, அம்மாஞ்சி உபாதானம், மேலகத்துப்
பிராம்மணன் யாசகமென்று கேட்டானாம். 585
அத்திக்காய் தெரியுமா? வட்டைக்காய் தெரியுமா?

(இடக்கர்.)

அத்திப் பழத்தைப் பிட்டால் அத்தனையும் சொத்தை.
அத்திப் பழத்தைப் பிட்டுப் பார்த்தால் அத்தனையும் புழு.

(அத்திக்காயை.)

அத்திப் பூவை ஆர் அறிவார்?
அத்திப் பூவைக் கண்டவர் உண்டா? ஆந்தைக் குஞ்சைப்
பார்த்தவர் உண்டா? 590
அத்தி பூத்தது ஆரும் அறியார்?
அத்தி பூத்தாற் போல்
அத்தி மரத்தில் தொத்திய கிளி போல,
(கனி போல.)
அத்தி முதல் எறும்பு வரை

(அத்தி-யானை.)

அத்தியும் பூத்தது; ஆனை குட்டியும் போட்டது. 595
அத்திரி மாக்கு, ஆறு தாண்டுகிறேனா, இல்லையா, பார்.
அத்து மீறிப் போனான், பித்துக்குளியானான்.
அத்து மீறினால் பித்து.
அத்தை இல்லாப் பெண்ணுக்கு அருமை இல்லை; சொத்தை
இல்லாப் பவழத்துக்கு மகிமை இல்லை.
அத்தை இல்லாப் பெண்டாட்டி வித்தாரி; மாமியில்லாப்
பெண்டாட்டி வயிறுதாரி. 600
அத்தை இல்லாப் பெண் வித்தாரி; மாமி இல்லாப் பெண்
மாசமர்த்தி.
அத்தை இல்லா வீடு சொத்தை.
அத்தை இறப்பாளா, மெத்தை காலி ஆகுமா என்று
காத்திருப்பது போல,
அத்தைக்கு ஒழியப் பித்தைக்கு இல்லை; ஔவையார் இட்ட
சாபத்தீடு.
அத்தைக்குத் தாடி முளைத்தால் சிற்றப்பா என்னலாமா? 605
அத்தைக்குப் பித்தம்; அவருக்குக் கிறுகிறுப்பு.
அத்தைக்கு மீசை முளைத்தால் சிற்றப்பா.
அத்தை கடன்காரி; அடி நாளைய சத்துரு,
அத்தைச் சொல்லடா சீமானே,

அத்தைத்தான் சொல்வானேன்? வாயைத்தான் வலிப்பானேன்? 610
அத்தை பகையும் இல்லை; அம்மாமி உறவும் இல்லை.
அத்தை மகன், அம்மான் மகள் சொந்தம் போல,
அத்தைமகள் ஆனாலும் சும்மா வருவாளா?

(கிடைப்பாளா?)

அத்தை மகளைச் கொள்ள முறை கேட்க வேண்டுமா?
அத்தையடி அத்தை, அங்காடி விற்குதடி; கண்மணியாளே நெல்லுமணி தருகிறேன். 615
அத்தையடி மாமி, கொத்துதடி கோழி.
அத்தையைக் கண்ட சகுனம் அத்தோடு போயிற்று.
அத்தை வீட்டு ரேழியில் கொண்டுவிட்டால்தான் கிழக்கு மேற்குத் தெரியும்.
அத்தோடு நின்றது அலைச்சல்; கொட்டோடே நின்றது குலைச்சல்.
அதமனுக்கு ஆயிரம் ஆயுசு. 620
அதர்மம் அழிந்திடும்.

(செயங்கொண்டார் சதகம்.)

அதற்கும் இருப்பாள், இதற்கும் இருப்பாள், ஆக்கின சோற்றுக்குப் பங்கிற்கும் இருப்பாள்.
அதற்கு வந்த அபராதம் இதற்கும் வரட்டும்.
அதற்கெல்லாம் குறைவில்லை, ஆட்டடா பூசாரி,
அதன் கையை எடுத்து அதன் கண்ணிலே குத்துகிறது. 625
அதிக்கிரமமான ஊரிலே கொதிக்கிற மீன் சிரிக்கிறதாம்.
அதிக ஆசை அதிக நஷ்டம்.
அதிக ஆசை மிகு தரித்திரம்.
அதிகக் கரிசனம் ஆனாலும் அகமுடையானை அப்பா என்று அழைக்கிறதா?
அதிகச் சிநேகிதம் ஆபத்துக்கு இடம். 630
அதிகம் விளைந்தால் எண்ணெய் காணாது.
அதிகமாகக் குலைக்கும் நாய்க்கு ஆள் கட்டை.
அதிகமான பழக்கம் அவமரியாதையைத் தரும்.
அதிகாரம் இல்லாத சேவகமும் சம்பளம் இல்லாத உத்தியோகமும் எதற்கு?
அதிகாரம் இல்லாவிட்டாலும் பரிவாரம் வேண்டும். 635
அதிகாரிக்கு அடுப்புப் பயப்படுமா?
அதிகாரிக்கு முன்னும் கழுதைக்குப் பின்னும் போகக்கூடாது.
அதிகாரி குசு விட்டால் அமிர்த வஸ்து; தலையாரி குசு விட்டால் தலையை வெட்டு.

அதிகாரியுடனே எதிர்வாதம் பண்ணலாமா?
அதிகாரியும் தலையாரியும் கூடி விடியுமட்டும் திருடலாம். 640

(ஒன்றானால்.)

அதிகாரி வந்தால் அடித்துக் காட்டு; கூத்தாடி வந்தால் கொட்டிக் காட்டு.
அதிகாரி வீட்டில் திருடித் தலையாரி வீட்டில் வைத்தது போல.
அதிகாரி வீட்டுக் கோழி முட்டை குடியானவன் வீட்டு அம்மிக் கல்லை உடைக்கும்.
அதிசயம் அடி அம்மங்காரே, அம்மி புரண்டு ஓடுகிறது.
அதிசயம் அடி ஆவடை, கொதிக்கிற கூழ் சிரிக்கிறது. 645
அதிசயம் அதிசயம் அத்தங்காரே கொதிக்கிற குழம்பு சிரிக்கிறது.

(வேங்கடம்மா. கொதிக்கிற கஞ்சி.)

அதிசயமாய் ஒருத்திக்குப் பிள்ளை பிறந்ததாம், கடப்பாரையை எடுத்துக் காலில் குத்திக் கொண்டாளாம்.
அதிசயமான ஊரிலே ஒரு பிள்ளை பிறந்ததாம்; அது தொப்புள் கொடி அறுப்பதற்குள் கப்பல் ஏறிப் போயிற்றாம்.
அதிசயமான ரம்பை; அரிசி கொட்டுகிற தொம்பை.
அதிர்ந்து அடிக்கிறவனுக்கு ஐயனாரும் இல்லை; பிடாரியும் இல்லை. 650

(அடித்தால்.)

அதிர்ந்து வராத புருஷனும் மிதந்து வராத அரிசியும் பிரயோசனம் இல்லை.
அதிர்ந்து வரும் புருஷனும் முதிர்ந்து வரும் சோறும்.
அதிர் வெடி கேட்ட குரங்கு.
அதிர்ஷ்டக்காரன் மண்ணைத் தொட்டாலும் பொன்னாகும்.
அதிர்ஷ்டம் ஆறாய்ப் பெருகுகிறது. 655
அதிர்ஷ்டம் இருந்தால் அரசு பண்ணலாம்.
அதிர்ஷ்டம் இல்லாதவனுக்குக் கலப்பால் இருந்தாலும் அதையும் பூனை குடிக்கும்.
அதிர்ஷ்டம் கெட்ட கழுக்காணி.
அதிர்ஷ்டம் கெட்டதுக்கு அறுபது நாழிகையும் தியாஜ்யம்

(கெட்டவனுக்கு.)

அதிர்ஷ்டம் வந்தால் தவிட்டுப் பானையிலும் தனம் இருக்கும். 660
அதிர்ஷ்டமும் ஐசுவரியமும் ஒருவர் பங்கல்ல.
அதிர்ஷ்டவான் மண்ணைத் தொட்டாலும் பொன் ஆகும்.
அதிர அடித்தாருக்கு ஐயனாரும் இல்லை; பிடாரியும் இல்லை.
(ஐயரும் இல்லை.)
அதிர அடித்தால் உதிர விளையும்.

அதில் எல்லாம் குறைச்சல் இல்லை; ஆட்டடா பூசாரி. 665
அதிலும் இது புதுமை; இதிலும் அது புதுமை.
அதிலே இது புதுமை, அவள் செத்து வைத்த அருமை.

(செத்தது வைத்த.)

அதிலே குறைச்சல் இல்லை; ஆட்டடா பூசாரி; மாவிலே வெல்லம் இல்லை; மாட்டிக்கொள்ளடா பூசாரி.
அதி விநயம் தூர்த்த லட்சணம்.
அதி விருஷ்டி, அல்லது அநாவிருஷ்டி. 670

(விருஷ்டி-மழை.)

அது அதற்கு ஒரு கவலை; ஐயாவுக்கு எட்டுக் கவலை.

(பத்துக் கவலை.)

அது எல்லாம் உண்டிட்டு வா என்பான்.
அது எல்லாம் ஐதர் காலம்.
அது எல்லாம் கிடக்கிறது ஆட்டடா பூசாரி.
அது ஏண்டி மாமியாரே, அம்மி புரண்டு ஓடுகிறது? 675
அதுக்கு இட்ட காசு தண்டம்.
அதுக்கு இட்ட காசு மினுக்கிட்டு வருவாள், அரிவாள் மணைக்குச் சுருக்கிட்டுத் தா.
அதுக்கும் இருப்பான், இதுக்கும் இருப்பான், ஆக்கின சோற்றுக்குப் பங்கும் இருப்பான்.

(இருப்பான்.)

அது கெட்டது போ, எனக்கா கல்யாணம் என்றானாம்.
அதுதான் ராயர் கட்டளையாய் இருக்கிறதே! 680
அதுவும் போதாதென்று அழலாமா இனி?

(அழுகிறதா?)

அதைக் கை கழுவ வேண்டியதுதான்.
அதைத்தான் சொல்வானேன்? வாய்தான் நோவானேன்?

(வலிப்பானேன்?)

அதை நான் செய்யாவிட்டால் என் பேரை மாற்றிக் கூப்பிடு.
அதை நான் செய்யாவிட்டால் என் மீசையைச் சிரைத்து விடுகிறேன். 685

(எடுத்துவிடுகிறேன்.)

அதைரியம் உள்ளவனை அஞ்சாத வீரன் என்றாற்போல.
அதை விட்டாலும் கதி இல்லை; அப்புறம் போனாலும் விதி இல்லை.

(அப்புறம் போனாலும் வழி இல்லை.)

அந்த ஊர் மண்ணை மிதிக்கவே தன்னை மறந்துவிட்டான்.
அந்தக் காலம் மலை ஏறிப் போச்சு.
அந்தகனுக்கு அரசனும் ஒன்று; ஆண்டியும் ஒன்று. 690

(அந்தகன்-யமன்.)

அந்தணர்க்குத் துணை வேதம்!
அந்தணர் மனையில் சந்தனம் மணக்கும்.
அந்தப் பருப்பு இங்கே வேகாது.
அந்தம் உள்ளவன் ஆட வேணும்; சந்தம் உள்ளவன் பாட வேணும்.
அந்தம் சிந்தி அழகு ஒழுகுகிறது. 695

(அழகு அழுகிறது.)

அந்தரத்தில் கோல் எறிந்த அந்தகனைப் போல,
அந்தரத்திலே விட்டு விட்டான்.
அந்நர வீச்சு வீசி நாயைப் போல் வாலைச் சுருட்டி விட்டான்.
அந்தலை கெட்டுச் சிந்தலை மாறிக் கிடக்கிறது.
அந்த வெட்கக்கேட்டை ஆரோடு சொல்கிறது? 700

(சொல்லி அழுகிறது.)

அந்தி ஈசல் அடை மழைக்கு அறிகுறி.
அந்தி ஈசல் பூத்தால் அடைமழை அதிகரிக்கும்.
அந்திக் கண்ணிக்கு அழுதாலும் வரானாம் அகமுடையான்.
அந்திச் சிவப்பு அடை மழைக்கு அடையாளம்.
அந்திச் செவ்வானம் அப்போதே மழை. 705
அந்திச் செவ்வானம் அழுதாலும் மழை இல்லை; விடியச் செவ்வானம் வேண மழை.
அந்திச் செவ்வானம் அறிந்து உண்ணடி மருமகளே; விடியச் செவ்வானம் வேண்டி உண்ணடி மகளே.
அந்திச் செவ்வானம் கிழக்கு; அதிகாலைச் செவ்வானம் மேற்கு.
அந்திச் சோறு உந்திக்கு ஒட்டாது,
அந்திப்பீ, சந்திப்பீ பேணாதான் வாழ்க்கை சாமப்பீ தட்டி எழுப்பும் 710
அந்தி பிடித்த மழையும் அம்மையாரைப் பிடித்த வியாதியும் விடா.

(பிடித்த பிசாசும் விடா.)

அந்தி மழையும் அந்தி விருந்தாளியும் விடமாட்டார்கள்.
அந்தி மழையும் ஔவையாரைப் பிடித்த பிணியும் விடா.
அந்தியில் அசுவத்தாமன் பட்டம் கட்டிக் கொண்டாற் போல.
அந்து ஊதும் நெல் ஆனேன். 715

(நெல்லைப் போல் ஆனேன், அந்து-ஒருவகைப் பூச்சி.)

அந்துக் கண்ணிக்கு அழுதாலும் வரான் அகமுடையான்.

(அந்திக் கண்ணிக்கு.)

அந்நாழி அரிசி, முந்நாழிப் பருப்பு, இருநாழி நெய்.

(கண்ணபுரம் முனையதரையன் பொங்கல்.)

அந்நிய மாதர் அவதிக்கு உதவார்.
அநாதைக்குத் தெய்வமே துணை.
அநாதைப் பெண்ணுக்குக் கல்யாணம்; ஆளுக்குக் கொஞ்சம் உதவுங்கள். 720
அநுபோகம் மிகும்போது ஒளஷதம் பலிக்கும்.
அநுமான் சீதையை இலங்கையில் தேடினது போல.
அப்துல் காதருக்கும் அமாவாசைக்கும் என்ன சம்பந்தம்?
அப்பச்சி குதம்பையைச் சூப்பப் பிள்ளை முற்றின தேங்காய்க்கு அழுகிறது போல.
அப்பச்சி கோவணத்தை எடுத்துக் கொண்டு ஓடுகிறது;
பிள்ளை வீரவாளிப் பட்டுக்கு அழுகிறது. 725
அப்படிச் சொல்லுங்கள் வழக்கை; அவன் கையில் கொடுங்கள் உழக்கை.

(அவள்.)

அப்படிச் சொல்லு ரங்கம்.
அப்பத்துக்கு மேல் நெய் மிஞ்சிப் போச்சு.
அப்பத்துக்கு மேலே நெய் மிதந்தால் அப்பம் தெப்பம் போடும்.
அப்பத்தை எப்படித்தான் சுட்டாளோ அதற்குள் தித்திப்பை எப்படித்தான் நுழைத்தாளோ? 730
அப்பத்தைத் திருடிய பூனைகளுக்கு நியாயம் வழங்கிற்றாம் குரங்கு.
அப்பம் என்றால் பிட்டுக் காட்ட வேண்டும்-
அப்பம் சுட்டது சட்டியில்; அவல் இடித்தது திட்டையில்-
அப்பம் சுட்டுக் கூழ் ஆச்சு; தொன்னை தைத்துக் கொள் பிராம்மணா.
அப்பம் தின்னச் சொன்னால் குழி எண்ணுவதா? 735
அப்பமும் தந்து பிட்டும் காட்டுவது போல.
அப்பர் அடைந்த ஆளும் நாள் கப்பரை எடுப்பார் சுவாமி.

(திருச்செங்காட்டங்குடி உற்சவத்தில்.)

அப்பன் அருமை அப்பன் மாண்டால் தெரியும்;
உப்பின் அருமை உப்பு இல்லா விட்டால் தெரியும்.
அப்பன் ஆனைச் சவாரி செய்தால் மகனுக்குத் தழும்பா?

அப்பன் இல்லாமல் பிள்ளை பிறக்குமா? அச்சு இல்லாமல் தேர் ஓடுமா? 740
அப்பன் சம்பாத்தியம் பிள்ளை அரைஞாணுக்கும் போதாது.
அப்பன் செத்தபின் தம்பிக்கு அழுகிறதா?

(செத்து.)

அப்பன் சோற்றுக்கு அழுகிறான்; பிள்ளை கும்பகோணத்தில் கோதானம் செய்கிறான்.
அப்பன் தர்மசாலி என்று பண்ணி விட்டான்.
அப்பன் பவிசு அறியாமல் அநேக நாள் தவிசேற மகன் கனாக் காண்கிறான். 745
அப்பன் பிண்டத்துக்கு அழுகிறான்; பிள்ளை பரமான்னத்துக்கு அழுகிறது.
அப்பன் பிறந்தது வெள்ளிமலை; ஆய் பிறந்தது பொன்மலை.
அப்பன் பெரியவன்; சிற்றப்பா சுருட்டுக்கு நெருப்புக் கொண்டு வா.
அப்பன் மகன்தான் ஆண் பிள்ளைச் சிங்கம்

(நாஞ்சில் நாட்டு வழக்கு.)

அப்பனுக்குப் பிள்ளை தப்பாமல் பிறந்திருக்கிறான். 750

(மகன்.)

அப்பனுக்கு மூத்த சுப்பன்.
அப்பா அடித்தால் அம்மா அணைப்பது போல.
அப்பா அப்பா என்றால், ரங்கா ரங்கா என்கிறான்.
அப்பா என்றால் உச்சி குளிருமா?
அப்பாச்சிக்கு அப்புறம் மரப்பாச்சி. 755
அப்பா சாமிக்குக் கல்யாணம்; அவரவர் வீட்டிலே சாப்பாடு.
அப்பா சாஸ்திரிக்குப் பெண்ணாய்ப் பிறந்து, குப்பா சாஸ்திரிக்கு வாழ்க்கைப்பட்டு, லவணம் என்றால் எருமைச் சாணி என்று தெரியாதா?
அப்பா வலக்கை; அம்மா இடக்கை.
அப்பாவி உப்பு இல்லை.
அப்பாவுக்கு இட்ட கப்பரை ஆரைச் சுவரில் கவிழ்த்திருக்கிறது. 760
அப்பாவுடன் சொல்லட்டுமா? அரக்குப் பேலாவைக் காட்டட்டுமா?
அப்பாவும் இல்லை; வெட்டுக் கத்தியும் இல்லை.
அப்பியாசம் குல விருது.
அப்பியாசம் கூசா வித்தை.
அப்பியாச வித்தைக்கு அழிவு இல்லை. 765
அப்பைக் கொண்டு உப்பைக் கட்டு; உப்பைக் கொண்டு ஒக்கக் கட்டு.
அப்போது விஜயநகரம்; இப்போது ஆனைக்குந்தி.
அப்போதைக்கு இப்போதே சொல்லிவைத்தேன்,

அபத்தப் பஞ்சாங்கத்தில் அறுபது நாழிகையும் தியாஜ்யம்.
அபரஞ்சிக் கொடி மாதிரி அகமுடையாள் இருக்கும் போது ஆதண்டங்காய்க் கொடியைக் கட்டிக் கொண்டானாம். 770
அபாயத்திற்கு உபாயம்.
அபிடேகம் இட்ட கைக்குச் சுழிக் குற்றம் உண்டா?
அம்பட்டக்குடிக் குப்பையைக் கிளறக் கிளற மயிர்தான்.
அம்பட்டக் குடியில் சிரைத்த மயிருக்குப் பஞ்சமா?
அம்பட்டக் குசும்பும் வண்ணார ஒயிலும் போகா. 775

(குறும்பும், அம்பட்டக் கிருதாவும், போகாது. அடடா சொல்லவா?)

அம்பட்ட வேலை அரை வேலை.
அம்பட்டன் குப்பையைக் கிளறினால் மயிர் மயிராக வரும்.

(அத்தனையும் மயிர்.)

அம்பட்டன் கைக் கண்ணாடி போல.
அம்பட்டன் செய்தியை அறிந்து குடுமியைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ள வேணும்.
அம்பட்டன் பல்லக்கு ஏறினது போல. 780
அம்பட்டன் பிள்ளைக்கு மயிர் அருமையா?
(பஞ்சமா?)
அம்பட்டன் மாப்பிள்ளைக்கு மீசை ஒதுக்கினது போல.
அம்பட்டன் வீட்டில் மயிருக்குப் பஞ்சமா?
அம்பட்டன் வெட்டு வெட்டு அல்ல; அரைப்படிப்பும் படிப்பு அல்ல.
அம்பட்டன் வேலை செய்ய வந்தால் சரியாய்ச் செய்ய வேணும். 785

(வந்தால் அடைப்பம் சரியாய் இருக்க வேணும்.)

அம்பட்டனுக்கு மயிர்ப் பஞ்சமா?
அம்பட்டனை மந்திரித்தனத்துக்கு வைத்துக் கொண்டது போல.
அம்பத்தூர் வேளாண்மை ஆறு கொண்டது பாதி; தூறு கொண்டது பாதி.

(அம்பத்தூர்-மதுரை மாவட்டத்தில் உள்ளதோர் ஊர்.)

அம்பலக் கழுதை அம்பரிலே கிடந்தால் என்ன? அடுத்த திருமாகாளத்திலே கிடந்தால் என்ன?

(அம்பர்-அம்பர் மாகாளம்.)

அம்பலக் கழுதை அம்பலத்தில் கிடந்தால் என்ன? அடுத்த திருமாளிகையில் கிடந்தால் என்ன? 790

(அரண்மனையில் இருந்தால் என்ன?)

அம்பலத்தில் அவல்பொரி போலே.
அம்பலத்தில் ஏறும் பேச்சை அடக்கம் பண்ணப் பார்க்கிறான்.

(அழுது அடக்கம் பண்ண.)

அம்பலத்தில் கட்டுச் சோறு அவிழ்த்தாற்போல.

(கட்டுப் பொதி.)

அம்பலத்தில் பொதி அவிழ்க்கலாகாது.

அம்பலம் தீப்பட்டது என்றால், அதைத்தான் சொல்வானேன்,
வாய்தான் நோவானேன் என்றானாம். 795

அம்பலம் வேகிறது.

அம்பாணி தைத்தது போலப் பேசுகிறான்.

(அமைத்தாற் போல.)

அம்பா பாக்கியம் சம்பா விளைந்தது; பாவி பாக்கியம்
பதராய் விளைந்தது.

அம்பி கொண்டு ஆறு கடப்போர் நம்பிக்கொண்டு
வால் கொள்வார்களா?

(நரி கொள்வார்களா?)

அம்பிட்டுக் கொண்டாரே, தும்பட்டிப்பட்டர். 800

அம்பு பட்ட புண் கையில் இழை கட்டினால் ஆறாது.

(குழை கட்டினால்.)

அம்பு விற்று அரிவாள்மணை விற்றுத் தும்பு விற்றுத்
துருவுபலகை விற்றுப் போட்டால் சொல்வாயா
சொல்வாயா என்றானாம்.

அம்மண தேசத்திலே கோவணம் கட்டினவன் பைத்தியக்காரன்.

அம்மணமும் இன்னலும் ஆயுசு பரியந்தமா?

அம்மன் காசு கூடப் பெறாது. 805

(அம்மன் காசு-புதுக்கோட்டையில் வழங்கிய சிறிய காசு.)

அம்மன் வரம் கொடுத்தாலும் பூசாரி வரம் கொடுக்க வேண்டாமா?

அம்மனுக்குப் பூஜை ஆகித்தான் சாமிக்குப் பூஜை ஆகவேணும்.

(மதுரையில்.)

அம்மா அடித்தால் வலிக்காது; அப்பா அடித்தால் வலிக்கும்.

அம்மா ஆரோ வந்திருக்கிறார். ஆனைமேலா, குதிரைமேலா?

அம்மா குதிர் போல; அய்யா கதிர் போல. 810

அம்மா கெட்ட கேட்டுக்கு முக்காடு ஒன்றா?

(வேறா? ஒரு கேடா?)

அம்மா கோதண்டராமன்.

அம்மா திரண்டு வருவதற்குள் ஐயா உருண்டுபோய் விடுவார்.

அம்மாப் பெண் சமைக்க அஸ்தமனம்; கிருஷ்ணையர்
பூஜை பண்ணக் கிழக்கு வெளுக்கும்.

அம்மாப் பெண்ணுக்குக் கல்யாணம்; அவரவர் வீட்டிலே சாப்பாடு; கொட்டு மேளம் கோயிலிலே; வெற்றிலை பாக்குக் கடையிலே. 815

அம்மா பாடு அம்மணமாம்; கும்பகோணத்தில் கோதானமாம்.

அம்மாமி வாயைக் கிண்டினால் அத்தனையும் பழமொழியாம்.

அம்மாயி நூற்ற நூலுக்கும் நொண்டி அரைநாண் கயிற்றுக்கும் சரியாய்ப் போச்சு.

அம்மாவுக்குப் பின் அகமுடையான்.

அம்மாள் கெட்ட கேட்டுக்கு முக்காடு ஒன்றா? 820

(கூடவா?)

அம்மாள் மிடுக்கோ, அரைப்பவள் மிடுக்கோ?

அம்மாளு அம்மாள் சமைக்க அஸ்தமனம் ஆகும்; கிருஷ்ண வாத்தியார் பூஜை செய்யக் கிழக்கு வெளுக்கும்.

அம்மாளுக்குத் தமிழ் தெரியாது; ஐயாவுக்குத் தெலுங்கு தெரியாது.

(வடுகு.)

அம்மான் சொத்துக்கு மருமான் கருத்தாளி.

அம்மான் மகளானாலும் சும்மா வருவாளோ? 825

(வரமாட்டாள்.)

அம்மான் மகளுக்கு முறையா?

அம்மான் வீட்டு வெள்ளாட்டியை அடிக்க அதிகாரியைக் கேட்க வேணுமா?

(வரிக்க.)

அம்மானும் மருமகனும் ஒரு வீட்டுக்கு ஆள் அடிமை.

அம்மி இருந்து அரணை அழிப்பான்.

(அம்மி-மறைந்து.)

அம்மிக்குழவி ஆலாய்ப் பறக்கும்போது எச்சில் இலையைக் கேட்பானேன்? 830

அம்மி மிடுக்கோ, அரைப்பவர் மிடுக்கோ?

அம்மி மிதித்து அருந்ததி பார்த்தவள்போல் பேசுகிறாள்.

அம்மியும் உரலும் ஆலாய்ப் பறக்கச்சே எச்சில் இலை என்கதி என்ன என்று கேட்டதாம்.

அம்மியும் குழவியும் ஆகாயத்தில் பறக்கும்போது எச்சில் இலை எனக்கு என்ன கதி என்றாற் போல்.

(இலவம் பஞ்சு எனக்கு என்ன கதி என்றாற் போல்.)

அம்மியே ஆகாயத்தில் பறக்கும்போது எச்சில் இலைக்கு வந்தது என்ன? 835

அம்முக்கள்ளி ஆடையைத் தின்றால் வெண்ணெய் உண்டா?
அம்மை இல்லாப் பிறந்தகமும் அகமுடையான் இல்லாப் புக்ககமும்.
அம்மைக்கு அமர்க்களம் ஆக்கிப் படை; எனக்கு அமர்க்களம், பொங்கிப் படை.
அம்மைக்கு அமர்க்களம் பொங்கிப் படையுங்கள்,

(பரணி நூலில்.)

அம்மை குத்தினாலும் பொம்மை குத்தினாலும் வேண்டியது அரிசி. 840
அம்மையார் இருக்கும் இடத்தில சேமக் கலம் கொட்டாதே.
அம்மையார் எப்போது சாவார்? கம்பளி எப்போது நமக்கு மிச்சம் ஆகும்?
அம்மையார் நூற்கிற நூலுக்கும் பேரன் அரைஞாண் கயிற்றுக்கும் சரி.
அம்மையார் பெறுவது அரைக்காசு, தலை சிரைப்பது முக்காற் காசு.

(முழுக்காசு.)

அம்மையார் வருகிற வரைக்கும் அமாவாசை காத்திருக்குமா? 845
அம்மையாருக்கு என்ன துக்கம்? கந்தைத் துக்கம்.

(கற்றைத் துக்கம்.)

அம்மையாரே வாரும்; கிழவனைக் கைக்கொள்ளும்.
அம்மை வீட்டுத் தெய்வம் நம்மை விட்டுப் போமா?
அமர்க்களப்படுகிறது.
அமர்த்தனுக்கும் காணி வேண்டாம்; சமர்த்தனுக்கும் காணி வேண்டாம். 850
அமரபட்சம் பூர்வபட்சம்; கிருஷ்ணபட்சம் சுக்கிலபட்சம்.
அமரிக்கை ஆயிரம் பொன் பெறும்.
அமாவாசை இருட்டிலே பெருச்சாளி போனதெல்லாம் வழி.

(கருக்கலிலே.)

அமாவாசை இருட்டு; சோற்றுப் பானையை உருட்டு.
அமாவசைக்கும் அப்துல் காதருக்கும் என்ன சம்பந்தம். 855
அமாவாசைச் சோறு என்றைக்கும் அகப்படுமா?

(சும்மா அகப்படுமா?)

அமாவாசைப் பணியாரம் அன்றாடம் கிடைக்குமா?
அமாவாசைப் பருப்புச் சோறு சும்மா சும்மா கிடைக்குமா?
அமாவாசைப் பானை என்று நாய்க்குத் தெரியுமா?
அமிஞ்சி உண்டோ கும்பு நாயக்கரே. 860

(அமிஞ்சி-கூலி இல்லா வேலை.)

அமிஞ்சிக்கு உழுதால் சரியாய் விளையுமா?
அமிஞ்சி வெட்டிக்கு ஆள் இருக்கிறது.
அமிஞ்சி வேலை.
அமுக்கினால் போல் இருந்து அரணை அழிப்பான்.
அமுத்தல் பேர் வழி. 865
அமுதம் உண்கிற வாயால் விஷம் உண்பார்களோ?
அமுதுபடி பூஜ்யம்; ஆடம்பரம் சிலாக்யம்.

(அதிகம்.)

அமைச்சன் இல்லாத அரசும் அகமுடையான் இல்லாத ஆயிழையும்.
அமைதி ஆயிரம் பெறும்.
அமைதி கெட்ட நெஞ்சம் ஆடி ஆடிக் கொஞ்சும். 870
அயல் ஊர் லாபமும் உள்ளூர் நஷ்டமும் ஒன்று.
அயல் வீட்டு ஆண்மகன் அவஸ்தைக்கு உதவான்.
அயல் வீட்டு நெய்யே, என் பெண்டாட்டி கையே.

(அயலான்.)

அயல் வீட்டுப் பிள்ளை ஆபத்துக்கு உதவுவானா?

(வீட்டான் பிள்ளை.)

அயல் வீட்டுப் பையா பாம்பைப் பிடி; அல்லித் தண்டு போல் குளிர்ந்திருக்கும். 875
அயல் வீடு வாழ்ந்தால் பரதேசம் போகிறது.
அயலார் உடைமைக்குப் பேயாய்ப் பறக்கிறான்.

(ஆந்தையாய்.)

அயலார் உடைமையில் அந்தகன் போல் இரு.
அயலார்க்குத் துரோகம் ஐந்தாறு நாள் பொறுக்கும்; ஆத்மத் துரோகம் அப்போதே கேட்கும்.
அயலார் வாழ்ந்தால் அஞ்சு நாள் பட்டினி கிடப்பான். 880
அயலார் வாழ்ந்தால் அடி வயிற்றில் நெருப்பு.
அயலான் வீட்டுப் பிள்ளை ஆபத்துக்கு உதவுமா?
அயலூர் நாணயக்காரனைவிட உள்ளூர் அயோக்கியன் மேல்.
அயன் அமைப்பை யாராலும் தள்ளக்கூடாது.

(சமைப்பை.)

அயன் இட்ட எழுத்தில் அணுவளவும் தப்பாது. 885

(எழுதின எழுத்தில்.)

அயன் இட்ட கணக்கு ஆருக்கும் தப்பாது.
அயிரையும் சற்றே அருக்குமாம் வீட்டுக்குள் போட்டுப் பிசகாமல்.

அயிலாலே போழ்ப அயில்.

(பழமொழி நானூறு.)

அயோக்கியர் அழகு அபரஞ்சிச் சிமிழில் நஞ்சு.
அர்ச்சுன சந்நியாசி. 890
அர்ச்சுனன்போல் அகமுடையான் இருக்க, அச்சான்யம்போல் திருமங்கல்யம் எதற்கு?
அர்ச்சுனன்போல் அகமுடையான் இருக்கையில் அஞ்ஞானம்போல் தாலி என்னத்துக்கு?
அர்ச்சுனன்போல் அகமுடையானும் அபிமன்யுபோல் பிள்ளையும்
அர்ச்சுனனுக்குக் கண் அரக்கு மாளிகையில்.
அர்ச்சுனனுக்குப் பகை அரக்கு மாளிகை. 895
அரக்கன் ஆண்டால் என்ன? மனிதன் ஆண்டால் என்ன?
அரக்குக் கூடு கட்டினால் வீட்டுப் பெண் தாய் ஆவாள்.
அரக்கு முத்தி தண்ணீர்க்குப் போனாள்; புண் பிடித்தவன் பின்னாலே போனான்.
அரகர சிவசிவ மகாதேவா, ஆறேழு சுண்டலுக்கு லவாலவா.
அரகரன் ஆண்டால் என்ன? மனிதன் ஆண்டால் என்ன? 900
அரகரா என்கிறது பெரிதோ? ஆண்டி கிடக்கிறது பெரிதோ?

(ஆண்டிக்கு இடுவது.)

அரகரா என்கிறவனுக்குத் தெரியுமா? அமுது படைக்கிறவனுக்குத் தெரியுமா?
அரகரா என்பது பாரமா? அமுது படைப்பது பாரமா?
அரங்கன் சொத்து அக்கரை ஏறாது.
அரங்கன் சொத்து அழகன் அங்கவடிக்குக் காணாது. 905
அரங்கனைப் பாடிய வாயால் குரங்கனைப் பாடுவேனோ?

(தொண்டரடிப் பொடியாழ்வார் சொன்னதாகக் கதை.)

அரங்கு இன்றி வட்டாடலும் அறிவின்றிப் பேசுதலும் ஒன்று.
அரங்கூடு குரங்கே, மரத்தை விட்டு இறங்கே.
அரசங்கட்டையும் ஆபத்துக்கு உதவும்.
அரசமரத்துப் பிள்ளையார் போல அகமுடையான் இருக்க அச்சான்யம் போலத் தாலி எதற்கு? 910
அரச மரத்தைப் பிடித்த சனியன் ஆலமரத்தைப் பிடித்ததாம்.
அரச மரத்தைப் பிடித்த பிசாசு அடியில் இருந்த பிள்ளையாரையும் பிடித்ததாம்.

(பிடித்த சனியன்.)

அரசன் அதிகாரம் அவன் நாட்டோடே.

அரசன் அருள் அற்றால் அனைவரும் அற்றார்.
அரசன் அளவிற்கு ஏறிற்று. 915
அரசன் அன்று அறுப்பான்; தெய்வம் நின்று அறுக்கும்.

(யாழ்ப்பாண வழக்கு. ஒறுப்பான்.)

அரசன் அன்று கொல்லும்; தெய்வம் நின்று கொல்லும்.

(கேட்கும்.)

அரசன் ஆட்சிக்கு ஆகாச வாணியே சாட்சி.
அரசன் ஆண்டால் என்ன? மனிதன் ஆண்டால் என்ன?
அரசன் ஆனைமேல் வருகிறான் என்று வீட்டுக் கூரைமேல் ஏறினானாம். 920
அரசன் இருக்கப் பட்டணம் அழியுமா?
அரசன் இல்லாத நாடு, புருஷன் இல்லாத வீடு.
அரசன் இல்லாப் படை அம்பலம்.
அரசன் இல்லாப் படை வெட்டுமா?
அரசன் இல்லாப் படை வெல்வது அரிது. 925
அரசன் உடைமைக்கு ஆகாச வாணி சாட்சி.
அரசன் எப்படியோ அப்படியே குடிகள்.
அரசன் எவ்வழி மக்கள் அவ்வழி.

(குடிகள்.)

அரசன் ஒன்றை இகழ்ந்தால் ஒக்க இகழ வேண்டும்; ஒன்றைப் புகழ்ந்தால் ஒக்கப் புகழ வேண்டும்.
அரசன் கல்லின்மேல் வழுதுணை காய்க்கும் என்றால் கொத்தில் ஆயிரம் குலையில் ஆயிரம் என்பார்கள். 930

(கத்தரிக்காய்.)

அரசன் குடுமியையும் பிடிக்கலாமென்று அம்பட்டன் வேலையை விரும்பினது போல.
அரசன் சீறின் ஆம் துணை இல்லை.
அரசன் நினைத்த அன்றே அழிவு.
அரசன் மெச்சியவள் ரம்பை.
அரசன் வரை எட்டியது. 935
அரசன் வழிப்பட்டதே அவனி.
அரசன் வழிப்படாதவன் இல்லை.
அரசன் வீட்டுக் கோழி முட்டை ஆண்டி வீட்டு அம்மியை உடைத்தது.
அரசனுக்கு அஞ்சி வலியார் எளியாருக்கு அநுகூலம் ஆகிறது.
அரசனுக்கு ஒரு சொல், அடிமைக்குத் தலைச் சுமை. 940

அரசனுக்கு ஓர் ஆனை இருந்தால் ஆண்டிக்கு ஒரு பானையாவது இராதா?
அரசனுக்குச் செங்கோல்; சம்சாரிக்கு உழவு கோல்.

(சம்சாரி-பயிரிடுகிறவன்.)

அரசனுக்குத் துணை வயவாள்.
அரசனுக்கு வலியார் அஞ்சுவது எளியாருக்கு அநுகூலம்.
அரசனும் சரி, அரவும் சரி. 945

(பாம்பும்.)

அரசனும் சரி அழலும் சரி.

(நெருப்பும்.)

அரசனும் ஆண்டி ஆவான்; ஆண்டியும் அரசன் ஆவான்.
அரசனும் நெருப்பும் பாம்பும் சரி.
அரசனே முட்டி எடுக்கிறான்; அவன் ஆனை கரும்புக்கு அழுகிறதாம்.

(முட்டி-பிச்சை.)

அரசனைக் கண்ட கண்ணுக்குப் புருஷனைக் கண்டால் கொசுப் போல இருக்கிறது. 950

(மயிர் மாத்திரமாக இருக்கிறது.)

அரசனைக் காட்டிக் கொடுப்பது அமைச்சனுக்குத் தர்மம் அல்ல.
அரசனை நம்பிப் புருஷனைக் கை விட்டது போல.
அரசனோடு எதிர்த்த குடிகள் கெட்டுப்போகும்.

(பகைத்த.)

அரசாங்கத்துக் கோழிமுட்டை அம்மிக் கல்லையும் உடைக்கும்.
அரசிலையும் மண்ணாங் கட்டியும் உறவு கொண்டாடினவாம். 955
அரசு அறிய வீற்றிருந்த வாழ்வு விழும்.
அரசு இல்லா நாடு அலைக்கழிந்தாற் போல.
அரசு இல்லாப் படை வெல்வது அரிது.
அரசு உடையானை ஆகாசம் காக்கும்.
அரசுக்கு இல்லை சிறுமையும் பெருமையும். 960

(வெற்றி வேற்கை.)

அரண்மனை ஆனைக்கு அம்பாரி வைத்தாலும் ஆலய ஆனைக்குக் கொட்டு மேளம் போதுமே.
அரண்மனை உறவைக் காட்டிலும் அடுக்களை உறவுதான் மேல்.
அரண்மனைக் காரியம் அறிந்தாலும் சொல்லாதே.
அரண்மனை காத்தவனுக்கும் அடுக்குள் காத்தவனுக்கும் குறைவு இல்லை.

(காத்தவனும் வீண் போகான்.)

அரண்மனை காத்தவனுக்கும் அடுப்பங்கரை காத்தவனுக்கும் குறைவு இல்லை. 965

அரண்மனை காத்தவனும் ஆலயம் காத்தவனும் வீணாகப் போக மாட்டார்கள்.

அரண்மனை ரகசியம் அங்காடிப் பரசியம்.

அரண்மனை லங்கா தகனம்; அரசனுக்கோ சங்கீத கவனம்.

அரண்மனை வாசல் காத்தவனும் பறிமடை வாசல் காத்தவனும் பறிபோகிறது இல்லை.

(பழுது போவது இல்லை.)

அரணை அலகு திறக்காது. 970

அரணை கடித்தால் உடனே மரணம்.

(அப்போதே.)

அரத்தை அரம் கொண்டும் வயிரத்தை வயிரம் கொண்டும் அறுக்க வேண்டும்.

அரபிக் குதிரையானாலும் ஆள் ஏறி நடத்த வேண்டும்.

அரபிக் குதிரையிலும் ஐயம்பேட்டைத் தட்டுவாணி மேல்.

(நல்லது.)

அரமும் அரமும் கூடினால் கின்னரம். 975

(தாக்கினால்.)

அரவணைச் சோறு வேண்டுமானால் அறைக்கீரைக்குப் பின்தான் கிடைக்கும்.

(சீரங்கத்தில் தாயாருக்கு அமுது செய்விப்பார்.)

அரவத்தைக் கண்டால் கீரி விடுமா?

அரவத்தோடு ஆடாதே; ஆற்றில் இறங்காதே.

அரவின் வாய்த் தேரைபோல.

அரவுக்கு இல்லை சிறுமையும் பெருமையும். 980

(வெற்றி வேற்கை.)

அரன் அருள் அல்லாது அணுவும் அசையாது.

(இல்லாமல்.)

அரன் அருள் அற்றால் அனைவரும் அற்றார்.

அரன் அருள் உற்றால் அனைவரும் உற்றார்.

அராமி கோபால் தெய்வத்துக்குப் பாடுகோ பாதிரி.

அரி அரி என்றால் ராமா ராமா என்கிறான். 985

அரி என்கிற அக்ஷரம் தெரிந்தால் அதிக்கிரமம் பண்ணலாமா?
(அதிகாரம் பண்ணலாமா?)
அரி என்றால் ஆண்டிக்குக் கோபம்; அரன் என்றால் தாதனுக்குக் கோபம்.
அரிக்கிற அரிசியை விட்டுச் சிரிக்கிற சின்னப் பையனைப் பார்த்தாளாம்.
அரிகரப் பிரம்மாதிகளாலும் முடியாத காரியம்.
அரிச்சந்திரன் அவன் வீட்டுக் கொல்லை வழியாகப் போனானாம். 990
அரிச்சந்திரன் வீட்டுக்கு அடுத்த வீடு.
(வீட்டுக்காரன் அவன்.)
அரிசி அள்ளின காக்கைபோல.
அரிசி ஆழாக்கு ஆனாலும் அடுப்புக்கட்டி மூன்று வேண்டும்.
(உழக்கு.)
அரிசி இருந்தால் பிட்டு ஆகுமா?
அரிசி இல்லாவிட்டால் பருப்பும் அரிசியுமாய்ப் பொங்கு. 995
அரிசி இறைத்தால் ஆயிரம் காக்கை.
அரிசி உழக்கு ஆனாலும் திருவந்திக் காப்புக்குக் குறைவு இல்லை.
அரிசி உண்டானால் வரிசை உண்டு. + அக்காள் உண்டானால் மச்சான் உண்டு.
(தண்டலையார் சதகம்.)
அரிசி என்று அள்ளிப் பார்ப்பாரும் இல்லை, உமி என்று ஊதிப் பார்ப்பாரும் இல்லை.
(அள்ளவும் முடியவில்லை. ஊதவும் முடியவில்லை.)
அரிசிக்குத் தக்க உலையும் அகமுடையானுக்குத் தக்க வீறாப்பும். 1000
அரிசிக்குத் தக்க கனவுலை.
அரிசிக் குற்றம் சாதம் குழைந்தது; அகமுடையான் குற்றம் பெண்ணாய்ப் பிறந்தது.
அரிசி கொடுத்து அக்காள் உறவு என்ன?
அரிசி கொடுத்து அக்காள் வீட்டில் சாப்பாடா?
(என்ன சாப்பாடு?)
அரிசி கொண்டு அக்காள் வீட்டுக்குப் போவானேன்? 1005
அரிசி சிந்தினால் அள்ளி விடலாம்; வார்த்தை சிந்தினால் வார முடியுமா?
அரிசிப் பகையும் அகமுடையாள் பகையும் கிடையாது.
(அகமுடையான்.)
அரிசிப் பல்காரி அவிசாரி; மாட்டுப் பல்காரி மகராஜி.

அரிசிப் பானையும் குறையக் கூடாது; ஆண்மகன் முகமும் வாடக் கூடாது.

அரிசிப் பிச்சை எடுத்து அறுகங் காட்டில் கொட்டினாற் போல. 1010

அரிசிப் பிச்சை வாங்கி அரிக்கும் சட்டியில் கொட்டினேனே!

அரிசிப் புழு சாப்பிடாதவர் இல்லை; அகமுடையானிடம் அடிபடாத வளும் இல்லை.

அரிசிப் பொதியுடன் திருவாரூர்.

(பொரியுடன். யாழ்ப்பாண வழக்கு.)

அரிசி பருப்பு இருந்தால் ஐப்பசி மாசம் கல்யாணம்; காய்கறி இருந்தால் கார்த்திகை மாசம் கல்யாணம்.

அரிசி மறந்த கூழுக்கு உப்பு ஒன்று குறைவா? 1015

(மறந்த உலைக்கு. உப்பு ஏன் குறைவா?)

அரிசியும் உமியும் போல.

அரிசியும் கறியும் உண்டானால் அக்காள் வீடு வேண்டும்.

அரிசியும் காய்கறியும் வாங்கிக் கொண்டு அக்காள் வீட்டுக்குச் சாப்பிடப் போன மாதிரி.

அரித்தவன் சொறிந்து கொள்வான்.

அரித்து எரிக்கிற சுப்பிக்கு ஆயம் தீர்வை உண்டோ? 1020

அரிதாரம் கொண்டு போகிற நாய்க்கு அங்கு இரண்டு அடி; இங்கு இரண்டு அடி.

அரிது அரிது, அஞ்செழுத்து உணர்த்தல்.

அரிது அரிது, மானிடர் ஆதல் அரிது.

அரிப்புக்காரச் சின்னிக்கு அடுப்பங்கரைச் சோறு; எரிப்புக்கார எசக்கி எத்திலே தின்பாள் சோறு.

அரியக்குடி நகரம் அத்தனையும் அத்தனையே. 1025

(அசம்பாவிதக் கவிராயர் பாடியது. ஜனத் தொகை ஒரே மாதி; இருக்குமாம்.)

அரிய சரீரம் அந்தரத்தில் எறிந்த கல்.

அரியது செய்து எளியதுக்கு ஏமாந்து நிற்கிறான்.

(திரிகிறான்.)

அரியும் சிவனும் ஒண்ணு; அறியாதவன் வாயில் மண்ணு.

(அல்ல என்கிறவன் வாயில் மண்ணு.)

அரிவாள் ஆடுமட்டும் குடுவையும் ஆடும்.

(யாழ்ப்பாண வழக்கு.)

அரிவாள் சுருக்கே, அரிவாள் மணை சுருக்கே. 1030

அரிவாள் சூட்டைப் போலக் காயச்சல் மாற்றவோ?
அரிவாள் பிடி பிடித்தால் கொடுவாள் பிடியில் நிற்கட்டுமே.
அரிவாள் வெட்டுகிற மரம் ஆனைக்குப் பல்லுக் குச்சி.
அரிவாளுக்கு வெட்டினால் கத்திப் பிடிக்காவது உதவும்.
அரிவாளும் அசைய வேண்டும்; ஆண்டை குடியும் கெடவேண்டும். 1035

(அசையும்; கெடும்.)

அரிவை மொழி கேட்டால் அறிஞனும் அவத்தன் ஆவான்.
அருக்காணி நாச்சியார் குரங்குப் பிள்ளையைப் பெற்றாளாம்.
அருக்காணி முத்து கரிக்கோலம் ஆனாள்.
அருக்காணி முருக்கப்பூப்போலச் சரக்குப் பிரியப் பண்ணுகிறது.
அருக்காமணி முருக்கம் பூ. 1040
அருக்கித் தேடிப் பெருக்கி அழிப்பதா?

(அழி.)

அருகாகப் பழுத்தாலும் விளாமரத்தில் வௌவால் சேராது.
அருங்கொம்பில் தேன் இருக்கப் புறங்கையை நக்கினால் வருமா?
அருங் கோடை தும்பு அற்றுப் போகிறது.

(அருங்கோடை போலும்.)

அருஞ்சுனை நீர் உண்டால் அப்பொழுதே ஜுரம். 1045

(ரோகம்.)

அருட்செல்வம் ஆருக்கும் உண்டு; பொருட் செல்வம் ஆருக்கும் இல்லை.
அருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்.

(ஆகாசமெல்லாம் பேய்.)

அருணாம்பரமே கருணாம்பரம்.
அருணோதயத்துக்கு அரிசி களைந்து வைத்தால் அஸ்தமிக்க வடிக்க மாட்டேனா?
அருத்தியைப் பிடுங்கித் துருத்தியிலே போட்டுத் துருத்தியைப் பிடுங்கி அருத்தியிலே போடுகிறது. 1050
அரும்பு ஏறினால் குறும்பு ஏறும்.
அரும்பு கோணினால் அதன் மணம் குன்றுமா?

(தரம்பு கோணினால் நாம் அதற்கென் செய்வோம்.)

அருமந்த பெண்ணுக்கு அடியெல்லாம் ஓட்டை.

அருமை அற்ற வீட்டில் எருமையும் குடி இராது.
(இல்லாத வீட்டில். எருமையும் சேராது.)
அருமை அறியாதவன் அற்றென்ன? உற்றென்ன? 1055
அருமை அறியாதவன் ஆண்டு என்ன? மாண்டு என்ன?
(இருந்தென்ன? இறந்தென்ன?)
அருமை அறியாதவனிடத்தில் போனால் பெருமை எல்லாம் குறைந்து போம்.
அருமை பெருமை அறிந்தவன் அறிவான்.
அருமை மருமகன் தலைபோனால் போகட்டும்; ஆதிகாலத்து உரல் போகலாகாது.
அருவருத்த சாப்பாட்டை விட மொரமொரத்த பட்டினி மேலானது. 1060
(விறுவிறுத்த பட்டினி.)
அருவருப்பான சோற்றைக்காட்டிலும் விறுவிறுப்பான பசி மேலானது.
அருவருப்புச் சோறும் அசங்கியக் கறியும்.
அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை; பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை.
அருள் வேணும்; பொருள் வேணும்; அடக்கம் வேணும்.
அருள் வேணும்; பொருள்வேணும்; ஆகாய வாணி துணையும் வேணும். 1065
அரே அரே என்பார் எல்லாம் அமுது படைப்பார்களா?
(அமுது படைப் பார்களா?)
அரை அடி ஏறினால் ஓரடி சறுக்குகிறது.
அரைக் கல்வி முழு மொட்டை.
(அறக்கல்வி.)
அரைக்கவும் மாயம்; இரைக்கவும் மாயம்.
அரைக்காசு என்றாலும் அரண்மனைச் சேவகம் நல்லது. 1070
அரைக் காசுக் கல்யாணத்துக்கு ஆனை விளையாட்டு வேறா?
அரைக் காசுக்கு அழிந்த கற்பு ஆயிரம் மரக்கால் பொன் கொடுத்தாலும் வருமா?
(கிடையாது.)
அரைக் காசுக்குக் கல்யாணம்; அதிலே கொஞ்சம் வாண வேடிக்கை.
அரைக் காசுக்குக் குதிரை வாங்கவும் வேண்டும்; ஆற்றைக் கடக்கப் பாயவும் வேண்டும்.
அரைக் காசுக்குப் போன மானம் ஆயிரம் கொடுத்தாலும் வராது. 1075
(போன வெட்கம் வருமா?)

அரைக் காசுக்கு மலம் தின்பவன்.
அரைக் காசுக்கு வந்த வெட்கம் ஆயிரம் பொன் கொடுத்தாலும் போகாது.

(ஆயிரம் மரக்கால் பொன்.)

அரைக் காசு கொடுத்து அழச்சொல்லி அஞ்சு காசு கொடுத்து நிறுத்தச் சொன்னாற் போல.
அரைக் காசு கொடுத்து ஆடச் சொல்லி, ஒரு காசு கொடுத்து ஓயச் சொன்னாளாம்.
அரைக் காசு சேர்த்து முடிப்பணம் ஆக்குவது போல. 1080
அரைக் காசு பெறாத பாட்டியம்மாவுக்கு மூன்று காசு கொடுத்து மொட்டை அடிக்க வேண்டும்.
அரைக் காசும் முதல் இல்லை; அங்கங்கே வைபோகம்.
அரைக் காசு வேலை ஆனாலும் அரசாங்க வேலை.
அரைக் காசை ஆயிரம் பொன் ஆக்குகிறவளும் பெண்சாதி; ஆயிரம் பொன்னை அரைக் காசு ஆக்குகிறவளும் பெண்சாதி.
அரைக்கிற அரிசியை விட்டுவிட்டுச் சிரிக்கிற சிற்றப்பனோடே போனாளாம். 1085
அரைக்கிறவன் ஒன்று நினைத்து அரைக்கிறான்; குடிக்கிறவன் ஒன்று நினைத்துக் குடிக்கிறான்.
அரைக்கீரை போட்டால் சிறுகீரை முளைக்கும்.

(பி-ம்) அறைக்கீரை.

அரைக்குடம் தளும்பும்; நிறைகுடம் தளும்பாது.
அரைகட்டி நாய்க்கு உரிகட்டித் திருநாளா?
அரை குழைத்தாலும் குழைத்தாள்; அரிசியாக வைத்தாலும் வைத்தாள். 1090

(கொழித்தால் கொழித்தேன். வைத்தேன்.)

அரை குறை வித்தையுடன் அம்பலத்தில் ஏறினால் குறையும் நிறைவாகிவிடும்.
அரை குறை வேலையை ஆசானுக்குக் காட்டாதே.
அரைச் சல்லியை வைத்து எருக்கு இலையைக் கடந்ததுபோல.
அரைச் சீலை கட்டக் கைக்கு உபசாரமா?

(உபகாரமா?)

அரைச் செட்டு முழு நஷ்டம். 1095
அரைச்சொல் கொண்டு அம்பலம் ஏறினால் அரைச்சொல் முழுச்சொல் ஆகுமா?

(ஆகும்.)

அரைச்சொல் வித்தை கொண்டு அம்பலம் ஏறலாமா?
அரைஞாண் கயிறும் தாய்ச்சீலையும் ஆய்விடுகிறவன் பெண்சாதி.

(ஆய் விடுகிறவளும்.)

அரைத்ததும் மீந்தது அம்மி; சிரைத்ததும் மீந்தது குடுமி.
அரைத்ததையே அரைப்பது போல. 1100
அரைத்தவளுக்கு ஆட்டுக்கல்; சுட்டவளுக்குத் தோசைக் கல்.
அரைத்தாலும் சந்தனம் அதன்மணம் மாறாது.
அரைத் துட்டிலே கல்யாணம்; அதிலே கொஞ்சம் வாண வேடிக்கை.
அரைத் துட்டுக்குப் பீத் தின்றவன்.
அரைத்துணியை அவிழ்த்து மேல்கட்டுக் கட்டியது போல. 1105
அரைத்து மீந்தது அம்மி; சிரைத்து மீந்தது குடுமி.

(மிஞ்சினது.)

அரைப்படி அரிசியில் அன்னதானம்; அதிலே கொஞ்சம் மேளதாளம்.
அரைப்படி அரிசியில் அன்னதானம்; விடியும் மட்டும் மேளதாளம்.

(விடிய விடிய.)

அரைப் படிப்பைக் கொண்டு அம்பலம் ஏறலாமா?
அரைப்பணச் சேவகம் ஆனாலும் அரண்மனைச் சேவகம் போல் ஆகுமா? 1110
அரைப் பணத்திலே கல்யாணம்; அதிலே கொஞ்சம் வாணவேடிக்கை.
அரைப் பணத்துக்கு வாய் அதிகம்; ஐந்தாறு அரிசிக்குக் கொதி அதிகம்.
அரைப் பணத்துக்கு மருத்துவம் பார்க்கப் போய் அஞ்சு பணத்து நெளி உள்ளே போய்விட்டது.
அரைப் பணம கொடுக்கப் பால் மாறி அம்பது பணம் கொடுத்து அரி சேவை செய்த கதை.
அரைப் பணம் கொடுககப் பால்மாறி ஐம்பது பணம் கொடுத்துச் சேவை செய்த கதை. 1115
அரைப் பணம் கொடுத்து அழச்சொல்லி, ஒரு பணம் கொடுத்து ஓயச் சொன்னானாம்.
அரைப் பணம் கொடுத்து ஆடச் சொன்னால், ஒருபணம் கொடுத்து ஓயச் சொல்ல வேணும்.
அரைப் பணம் சேவகம் ஆனாலும் அரண்மனைச் சேவகம் போல் ஆகுமா?
அரை பறக்கத் தலை பறக்கச் சீராட்டல்.
அரை மிளகுக்கு ஆற்றைறக் கட்டி இறைத்தான் செட்டி. 1120
அரையிலே புண்ணும் அண்டையிலே கடனும் ஆகா.
அரையும் குறையும்.

அரைவித்தை கொண்டு அம்பலம் ஏறினால் அரைவித்தை முழு வித்தை ஆகுமா?

(ஆகும்.)

அரை வேலையைச் சபையிலே கொண்டு வருகிறதா?

அரோகரா என்பவனுக்குப் பாரமா? அமுது படைப்பவனுக்குப் பாரமா? 1125

அல்லக் காட்டு நரி பல்லைக் காட்டுகிறது போல.

அல்லல் அற்ற படுக்கை அழகிலும் அழகு.

அல்லல் அற்ற படுக்கையே அமைதியைத் தரும்.

அல்லல் ஒரு காலம்; செல்வம் ஒரு காலம்.

(மல்லல் ஒரு காலம்.)

அல்லல் காட்டு நரி பல்லைக் காட்டிச் சிரித்ததாம். 1130

அல்லல் பட்டு அழுத கண்ணீர் செல்வத்தைக் குறைக்கும்.

அல்லவை தேய அருள் பெருகும்.

அல்லாத வழியில் பொருள் ஈட்டல், காமம் துய்த்தல் ஆகியவை ஆகா.

அல்லாதவன் வாயில் கள்ளை வார்.

அல்லார் அஞ்சலிக்கு நல்லார் உதை மேல். 1135

அல்லாவுக்குக் குல்லாப் போட்டவன் முல்லாவுக்குச் சல்லாப் போட்டானாம்.

அல்லாவை நம்பிக் குல்லாவைப் போட்டால் அல்லாவும் குல்லாவும் ஆற்றோடே போச்சு.

அல்லி பேரைக் கேட்டாலும் அழுத பிள்ளை வாய் மூடும்.

அல்லும் பகலும் கசடு அறக் கல்.

அல்லோல கல்லோலப் படுகிறது. 1140

அலுத்துச் சலித்து அக்காள் வீட்டுக்குப் போனாளாம்; அக்காள் இழுத்து மச்சானிடம் விட்டாளாம்.

(அத்திம்பேரைக் காட்டினாளாம்.)

அலுத்துக் கொழுத்து அக்காளண்டை போனாளாம்; அக்காள் இழுத்து மச்சானிடத்தில் விட்டாளாம்.

அலுத்துச் சலித்து அம்பட்டன் வீட்டுக்குப் போனதற்கு இழுத்துப் பிடித்துத் தலையைச் சிரைத்தானாம்.

அலுத்து வியர்த்து அக்காள் வீட்டுக்குப் போனால், அக்காள் இழுத்து மச்சானண்டை போட்டாளாம்.

அலுவல் அற்றவன் அக்கிரகாரத்துக்குப் போக வேணும். 1145

அலை அடங்கியபின் ஸ்நானம் செய்ய முடியுமா?

அலை எப்பொழுது ஓயும்? தலை எப்பொழுது முழுகுகிறது?

(ஒழியும்.)

அலை ஓய்ந்த பிறகு ஸ்நானம் செய்வது போல.

(அடங்கின பிறகு.)

அலை ஓய்ந்து கடல் ஆடுவது இல்லை.

(பழமொழி நானூறு.)

அலைகடலுக்கு அணை போடலாமா? 1150

அலை நிற்கப் போவதும் இல்லை; தம்பி தர்ப்பணம் செய்து வரப் போவதும் இல்லை.

அலை போல நாக்கும் மலைபோல மூக்கும் ஆகாசம் தொட்ட கையும் அரக்கனுக்கு.

அலை மோதும் போதே கடலாட வேண்டும்.

(தலை முழுகவேண்டும்.)

அலையில் அகப்பட்ட துரும்பு போல.

அலையும் நாய் பசியால் இறக்காது. 1155

அலைவாய்த் துரும்பு போல் அலைகிறது.

அவ்வளவு இருந்தால் அடுக்கி வைத்து வாழேனோ?

அவகடம் உடையவனே அருமை அறியான்.

அவகுணக்காரன் ஆகாசம் ஆவான்.

அவசம் அடைந்த அம்மங்காள் அரைப்புடைவை இல்லா விட்டால் சொல்ல லாகாதா? 1160

அவசரக்காரனுக்கு ஆக்கிலே பெட்டு; நாக்குச் சேத்திலே பெட்டு.

(தெலுங்கும் தமிழும் கலந்தது. ஆக்கு-இலை, நாக்கு-எனக்கு, சேத்திலே-கையிலே.)

அவசரக்காரனுக்குப் புத்தி மட்டு.

அவசரக் குடுக்கை.

அவசரக் கோலம் அள்ளித் தெளித்தாளாம்.

அவசரச் சுருக்கே, அரிவாள் மணைக் கருக்கே. 1165

அவசரத்தில் குண்டுச் சட்டியிலும் கை நுழையாது.

(அரிக்கும் சட்டியிலும்.)

அவசரத்தில் செத்த பிணத்துக்குப் பீச்சுத்தோடு மாரடிக்கிறான்.

அவசரத்திலும் உபசாரமா?

அவசரத்துக்கு அரிக்கும் சட்டியிலும் கை நுழையாது.

அவசரத்துக்குத் தோஷம் இல்லை. 1170

(பாவம் இல்லை.)

அவசரப்பட்ட மாமியார் மருமகனைக் கணவனென்று அழைத்தாளாம்.

(புணர அழைத்தாளாம்.)

அவசரப் படேல்,
அவசரம் ஆனால் அரிக்கும் சட்டியிலும் கை நுழையாது.

(அரிசிச் சாலிலும்.)

அவசரம் என்றால் அண்டாவிலும் கை நுழையாது.
அவத்தனுக்கும் காணி வேண்டாம்; சமர்த்தனுக்கும் காணி வேண்டாம். 1175
அவத்தனுக்கும் சமர்த்தனுக்கும் காணிக்கை இல்லை.
அவத்தனைக் கட்டி வாழ்வதை விடச் சமர்த்தனைக் கட்டி அறுத்துப் போடலாம்.
அவதந்திரம் தனக்கு அந்தரம்.
அவதிக் குடிக்குத் தெய்வமே துணை.
அவப் பொழுதிலும் தவப்பொழுது வாசி. 1180

(நல்லது.)

அவமானம் பண்ணி வெகுமானம் பேசுகிறான்.

(அவமானம் செய்து, பேசுகிறதா?)

அவர் அவர் அக்கறைக்கு அவர் அவர் படுவார்.
அவர் அவர் எண்ணத்தை ஆண்டவன் அறிவான்.
அவர் அவர் எண்ணத்தை ஆண்டவன் ஆக்கினாலும் ஆக்குவான்; அழித்தாலும் அழிப்பான்.
அவர் அவர் மனசே அவர் அவர்க்குச் சாட்சி. 1185
அவர்களுக்கு வாய்ச்சொல்; எங்களுக்குத் தலைச் சுமை.
அவருடைய இறகு முறிந்து போயிற்று.
அவரை எம்மாதம் போட்டாலும் தை மாதம் காய்க்கும்.
அவரை ஒரு கொடியும் வடமன் ஒரு குடியும்.

(வடமன்-பிராம்மணரில் ஒரு பிரிவினன்.)

அவரைக்கு ஒரு செடி; ஆதீனத்துக்கு ஒரு பிள்ளை. 1190

(ஆதிலிங்கத்துக்கு.)

அவரை நட்டால் துவரை முளைக்குமா?

(விதைத்தால். போட்டால் விளையுமா?)

அவல் பெருத்தது ஆர்க்காடு.
அவலக் குடித்தனத்தை அம்பலப்படுத்தாதே.
அவலட்சணம் உள்ள குதிரைக்குச் சுழி சுத்தம் பார்க்கிறது இல்லை.

(பார்க்க வேணுமா?)

அவலப் பிணத்துக்கு அத்தையைக் கொண்டது. 1195

(குணத்துக்கு.)

அவலமாய் வாழ்பவன் சபலமாய்ச் சாவான்.

(சுலபமாய்.)

அவலை நினைத்துக்கொண்டு உரலை இடிப்பது போல.

(அவலைச் சாக்கிட்டு.)

அவலை முக்கித் தின்னு; எள்ளை நக்கித் தின்னு.
அவள் அவள் என்பதைவிட அரி அரி என்பது நலம்.

(என்பது புண்ணியம்.)

அவள் அழகுக்குத் தாய் வீடு ஒரு கேடா? 1200
அவள் அழகுக்குப் பத்துப் பேர் வருவார்கள்; கண் சிமிட்டினால் ஆயிரம் பேர் மயங்கிப் போவார்கள்.

(ஆயிரம் பேர் வருவார்கள். லட்சம் பேர் மயங்கிப் போவார்கள்.)

அவள் அழகைப் பார்த்தால் கிள்ளித் தின்னலாம் என்று இருக்கிறது

(போலிருக்கிறது.)

அவள் ஆத்தாளையும் அவள் அக்காளையும் கூத்தாடிப் பையன் அழைக்கிறான்.
அவள் எமனைப் பலகாரம் பண்ணுவாள்.

(பண்ணி ஏழு வலம் வருவாள்.)

அவள் சம்பத்து அறியாமல் கவிழ்ந்தது. 1205
அவள் சமத்து, பானை சந்தியிலே கவிழ்ந்தது.
அவள் சாட்டிலே திரை சாட்டா?
அவள் சொல் உனக்குக் குரு வாக்கு.
அவள் பாடுவது குயில் கூவுவது போல.
அவள் பேர் கூந்தலழகி; அவள் தலை மொட்டை. 1210
அவள் பேர் தங்கமாம்; அவள் காதில் பிச்சோலையாம்.
அவள் மலத்தை மணிகொண்டு ஒளித்தது.
அவளிடத்தில் எல்லோரும் பிச்சை வாங்க வேண்டும்.
அவளுக்கு இவள் எழுந்திருந்து உண்பாள்.
அவளுக்கு எவள் ஈடு; அவளுக்கு அவளே சோடு. 1215
அவளுக்கு நிரம்பத் தளுக்குத் தெரியும்.
அவளைக் கண்ட கண்ணாலே இன்னொருத்தியைக் காணுகிறதா?
அவளைத் தொடுவானேன்? கவலைப் படுவானேன்?
அவன் அசையாமல் அணுவும் அசையாது.
அவன் அதிகாரம் கொடிகட்டிப் பறக்கிறது. 1220
அவன் அருள் அற்றார் அனைவரும் அற்றார்; அவன் அருள் உற்றார் அனைவரும் உற்றார்.

அவன் அவன் எண்ணத்தை ஆண்டவன் ஆக்கினாலும் ஆக்குவான்; அழித்தாலும் அழிப்பான்.
அவன் அவன் செய்த வினை அவன் அவனுக்கு.
அவன் அவன் மனசே அவன் அவனுக்குச் சாட்சி.
அவன் அவன் தலையெழுத்தின்படி நடக்கும். 1225
அவன் அவன் நிழல் அவன் அவன் பின்வரும்.
அவன் அன்றி ஓரணுவும் அசையாது.
அவன் ஆகாரத்தை வடுப்படாமல் கடிப்பேன் என்கிறான்.
அவன் இட்டதே சட்டம்.
அவன் இவன் என்பதைவிட அரி அரி என்பது நலம். 1230
அவன் உள் எல்லாம் புண்; உடம்பெல்லாம் கொப்புளம்.
அவன் உனக்குக் கிள்ளுக் கீரையா?
அவன் எங்கே இருந்தான்? நான் எங்கே இருந்தேன்?
அவன் எரி பொரி என்று விழுகிறான்.
அவன் என் தலைக்கு உலை வைக்கிறான். 1235
அவன் என்னை ஊதிப் பறக்கடிக்கப் பார்க்கிறான்.
அவன் எனக்கு அட்டமத்துச் சனி.
அவன் ஒரு குளிர்ந்த கொள்ளி.
அவன் ஓடிப் பாடி நாடியில் அடங்கினான்.
அவன் கணக்குப் புத்தகத்தில் ஒரு பத்திதான் எழுதியிருக்கிறது. 1240

(அவன் செட்டியார்.)

அவன் கல்வெட்டான ஆள்; அவன் பேச்சுக்கு மறு பேச்சு இல்லை.
அவன் கழுத்துக்குக் கத்தி தீட்டுகிறான்.
அவன் காலால் இட்ட வேலையைத் தலையால் செய்வான்.
அவன் காலால் கீறினதை நான் நாவால் அழிக்கிறேன்.
அவன் காலால் முடிந்ததைக் கையால் அவிழ்க்க முடியாது. 1245

(அழிக்க.)

அவன் கிடக்கிறான் குடிகாரன்; எனக்கு ஒரு திரான் போடு.

(மொந்தை போடு.)

அவன் கெட்டான் என் கொட்டிலின் பின்னே.
அவன் கெட்டான் குடியன்; எனக்கு இரண்டு திரான் வாரு.
அவன் கேப் மாறி; அவன் தம்பி முடிச்சு மாறி.
அவன் கை மெத்தக் கூர் ஆச்சே. 1250
அவன் கை மெத்த நீளம்.
அவன் கையைக் கொண்டே அவன் கண்ணில் குத்தினான்.
அவன் கொங்குப் பள்ளியா?

அவன் சாண் ஏறினால் முழம் சறுக்குகிறது.
அவன் சாதி அறிந்த புத்தி, குலம் அறிந்த ஆசாரம். 1255
அவன் சாதிக்கு எந்தப் புத்தியோ குலத்துக்கு எந்த ஆசாரமோ அதுதான் வரும்.
அவன் சாயம் வெளுத்துப் போய்விட்டது.
அவன் சிறகு ஒடிந்த பறவை.

(இல்லாத பறவை.)

அவன் செய்த வினை அவனைச் சாரும்.
அவன் சொன்னதே சட்டம்; இட்டதே பிச்சை. 1260
அவன் சோற்றுக்குத் தாளம் போடுகிறான்.
அவன் சோற்றை மறந்துவிட்டான்.
அவன் தம்பி அங்கதன்.

(மகன்.)

அவன் தம்பி நான்தான்; எனக்கு ஒன்றும் வராது.
அவன் தலையில் ஓட்டைக் கவிழ்ப்பான். 1265
அவன் தவிடு தின்று போவான்.
அவன் தன்னாலேதான் கெட்டால், அண்ணாவி என்ன செய்வான்?
அவன் தொட்டுக் கொடுத்தான்; நான் இட்டுக் கொடுத்தேன்.
அவன் தொத்தி உறவாடித் தோலுக்கு மன்றாடுகிறான்.
அவன் நடைக்குப் பத்துப்பேர் வருவார்கள்; கைவீச்சுக்குப் பத்துப் பேர் வருவார்கள். 1270
அவன் நா அசைந்தால் நாடு அசையும்.
அவன் நிரம்ப வைதிகமாய்ப் பேசுகிறான்.
அவன் நின்ற இடம் ஒரு சாண் வெந்து இருபது சாண் நீறாகும்.
அவன் பசியாமல் கஞ்சி குடிக்கிறான்,
அவன் பிடித்த முயலுக்கு மூன்றே கால். 1275
அவன் பின்புறத்தைத் தாங்குகிறான்.
அவன் பூராய மாயம் பேசுகிறான்.
அவன் பேச்சு விளக்கெண்ணெய்ச் சமாசாரம்.
அவன் பேச்சைத் தண்ணீரில்தான் எழுதி வைக்க வேணும்.
அவன் பேசுகிறது எல்லாம் தில்லுமுல்லு, திருவாதிரை. 1280
அவன் போட்டதே சட்டம்; இட்டதே பிச்சை.
அவன் மனசே அவனுக்குச் சாட்சி.
அவன் மிகித்த இடத்தில் புல்லும் முளையாது.
அவன் மிதித்த இடம் பற்றி எரிகிறது.
அவன் மூத்திரம் விளக்காய் எரிகிறது. 1285
அவன் மெத்த அத்து மிஞ்சின பேச்சுக்காரன்.

(மெத்தப் பேச்சுக்காரன்.)

அவன் ராஜ சமுகத்துக்கு எலுமிச்சம்பழம்.
அவன் வம்புக்கும் இவன் தும்புக்கும் சரி.
அவன் வல்லாள கண்டனை வாரிப் போர் இட்டவன்.
(வென்றவன்.)
அவன் வலத்தை மண் கொண்டு ஒளித்தது. 1290
அவனண்டை அந்தப் பருப்பு வேகாது.
அவனியில் இல்லை ஈடு; அவளுக்கு அவளே சோடு.
அவனுக்கு ஆகாசம் மூன்று விரற்கடை.
அவனுக்குக் கத்தியும் இல்லை; கபடாவும் இல்லை.
அவனுக்குக் கபடாவும் இல்லை; வெட்டுக்கத்தியும் இல்லை. 1295
அவனுக்குச் சாண் ஏறினால் முழம் சறுக்குகிறது.
அவனுக்குச் சுக்கிரதசை அடிக்கிறது.
அவனுக்குப் பொய்ச் சத்தியம் பாலும் சோறும்.
அவனுக்கும் அவளுக்கும் ஏழாம் பொருத்தம்.
அவனுக்கும் இவனுக்கும் அஜகஜாந்தரம். 1300
அவனுக்கும் இவனுக்கும் எருமைச் சங்காத்தம்.
அவனுக்குள்ளே அகப்பட்டிருக்கிறதா என் பிழைப்பு எல்லாம்?
அவனுக்கு ஜெயில் தாய் வீடு.
அவனுடைய பேச்சுக் காற் சொல்லும் அரைச் சொல்லும்.
அவனுடைய வாழ்வு நண்டுக்குடுவை உடைந்ததுபோல
இருக்கிறது. 1305
அவனே இவனே என்பதை விடச் சிவனே சிவனே என்பது நல்லது
அவனே வெட்டவும் விடவும் கர்த்தன்.
அவனை அவன் பேசிவிட்டுப் பேச்சு வாங்கி ஆமை மல்லாத்தினாற்
போல மல்லாத்திப் போட்டான்.
அவனை உரித்து வைத்தாற்போல் பிறந்திருக்கிறான்.
(இருக்கிறான்.)
அவனோடு இவனை ஏணிவைத்துப் பார்த்தாலும் காணாது. 1310
அவிக்கிற சட்டியை விட மூடுகிற சட்டி பெரிதாக இருக்கிறது.
அவிசல் கத்தரிக்காய் ஐயருக்கு.
அவிசாரி அகமுடையான் ஆபத்துக்கு உதவுவானா?
அவிசாரி ஆடினாலும் அதிர்ஷ்டம் வேண்டும்; திருடப்
போனாலும் திசை வேண்டும்.
அவிசாரி ஆனாலும் ஆனைமேல் போகலாம்;
திருடன் தெருவழியே கூடப் போக முடியாது. 1315
(பி-ம். திருடி)
அவிசாரி என்று ஆனைமேல் ஏறலாம்; திருடி என்று தெருவில்
வரலாமா?
அவிசாரி என்று பெயர் இல்லாமல் ஐந்து பிராயம் கழித்தாளாம்.

அவிசாரிக்கு ஆணை இல்லை; திருடிக்குத் தெய்வம் இல்லை.
அவிசாரிக்கும் ஆற்றில் விழுகிறவனுக்கும் காவல் போட முடியுமா?
அவிசாரிக்கு வாய் பெரிது; அஞ்சாறு அரிசிக்குக் கொதி பெரிது. 1320
அவிசாரி கையில் சாப்பிடாதவனும் அரிசிப் புழுத் தின்னாதவனும் இல்லை.
அவிசாரி பிள்ளை கோத்திரத்துக்குப் பிள்ளை.
அவிசாரி பிள்ளை சபைக்கு உறுதி.
அவிசாரி போக ஆசையாய் இருக்குது; அடிப்பானென்று பயமாய் இருக்குது.
அவிசாரி போனாலும் முகராசி வேணும்; அங்காடி போனாலும் கைராசி வேணும். 1325
அவிசாரியிலே வந்தது பெரு வாரியிலே போகிறது.
அவிசாரி வாயாடுகிறாற் போலே.
அவிட்டத்தில் பிறந்த தங்கச்சியை அந்நியத்தில் கொடுக்கக் கூடாது.
அவிட்டத்தில் பிறந்தால் தவிட்டுப் பானையிலும் பொன்.
அவிட்டத்துப் பெண் தொட்டதெல்லாம் பொன். 1330
அவித்த பயறு முளைக்குமா?
அவிர்ப் பாகத்தை நாய் மோந்த மாதிரி.
அவிவேகி உறவிலும் விவேகி பகையே நன்று.

(நலம்.)

அவிழ்த்துக் கொண்டதாம் கழுதை; எடுத்துக் கொண்டதாம் ஓட்டம்.

(பி. ம்.) நாய்.

அவிழ்த்து விட்ட காளை போல. 1335
அவிழ்த்து விட்டதாம் கழுதை; எடுத்து விட்டதாம் ஓட்டம்.
அவிழ்த்து விட்டால் பேரளம் போவான்.
அவிழ்தம் என்ன செய்யும்? அஞ்சு குணம் செய்யும்; பொருள் என்ன செய்யும்? பூவை வசம் செய்யும்.

(பி. ம்.) பணம்.

அவுங்க என்றான், இவுங்க என்றான்; அடிமடியிலே கையைப் போட்டான்.
அவையிலும் ஒருவன், சவையிலும் ஒருவன். 1340
அழ அழச் சொல்வார் தமர்; சிரிக்கச் சிரிக்கச் சொல்வார் பிறர்.

(பி. ம்.) தம் மனிதர்.

அழகர் கோயில் மாடு தலை ஆட்டினது போல.
அழகன் நடைக்கு அஞ்சான்; செல்வன் சொல்லுக்கு அஞ்சான்.
அழகால் கெட்டாள் சீதை; வாயால் கெட்டாள் திரௌபதி.

அழகிலே அர்ஜுனனாம்; ஆஸ்தியிலே குபேரனாம். 1345
அழகிலே பவளக் கொடி; அந்தத்திலே மொந்தை மூஞ்சி.
அழகிலே பிறந்த பவளக்கொடி, ஆற்றிலே மிதந்த சாணிக் கூடை
அழகிற்கு மூக்கை அழிப்பார் உண்டா?
அழகு இருந்து அழும்; அதிர்ஷ்டம் இருந்து உண்ணும்.
(பி-ம்.) அழகு இருந்து என்ன பண்ணும்?
அழகு இருந்து உண்ணுமா? அதிருஷ்டம் இருந்து உண்ணுமா? 1350
அழகு இருந்து என்ன? அதிருஷ்டம் இருக்க வேண்டும்.
அழகு இல்லாதவள் மஞ்சள் பூசினாள்; ஆக்கத் தெரியாதவள் புளியைக் கரைத்து ஊற்றினாள்.
அழகு ஒழுகுகிறது; நாய் வந்து நக்குகிறது: ஓட்டைப் பானை கொண்டு வா, பிடித்து வைக்க.
அழகு ஒழுகுகிறது, மடியில் கட்டடி கலயத்தை.
(கட்டடா.)
அழகுக்கா மூக்கை அறுப்பாள்? 2355
அழகுக்கு அணிந்த ஆபரணம் ஆபத்துக்கு உதவும்.
அழகுக்கு அழகு செய்வது போல.
அழகுக்கு இட்டால் ஆபத்துக்கு உதவும்.
அழகுக்குச் செய்தது ஆபத்துக்கு உதவும்.
அழகுக்கு மூக்கை அழித்து விட்டாள். 360
அழகு கிடந்து அழும்; அதிர்ஷ்டம் கிடந்து துள்ளும்.
அழகு கிடந்து புலம்புகிறது; அதிர்ஷ்டம் கண்டு அடிக்கிறது.
அழகு சொட்டுகிறது.
அழகு சோறு போடுமா? அதிர்ஷ்டம் சோறு போடுமா?
அழகுப் பெண்ணே காத்தாயி, உன்னை அழைக்கிறாண்டி கூத்தாடி. 1365
அழகு வடியுது; கிளி கொஞ்சுது.
அழச் சொல்கிறவன் பிழைக்கச் சொல்லுவான்; சிரிக்கச் சொல்கிறவன் கெடச் சொல்லுவான்.
அழப் பார்த்தான் கல்யாணம் போய்ப் பார்த்தால் தெரியும்.
அழலாம் என்று நினைப்பதற்குள் அகமுடையான் அடித்தானாம்.
அழிக்கப் படுவானைக் கடவுள் அறிவீனன் ஆக்குவார். 1370
அழித்தால் ஐந்து ஆள் பண்ணலாமே!
அழித்துக் கழித்துப் போட்டு வழித்து நக்கி என்று பெயர் இட்டானாம்!
அழிந்த கொல்லையில் ஆனை மேய்ந்தால் என்ன? குதிரை மேய்ந்தால் என்ன?

அழிந்த கொல்லையில் குதிரை மேய்ந்து என்ன? கழுதை மேய்ந்து என்ன?

(பி-ம்) அழிந்த நந்தவனத்தில்.

அழிந்தவன் ஆரோடு போனால் என்ன? 1375
அழிய உழுது அடர விதை.
அழியாச் செல்வம் விளைவே ஆகும்.
அழியாத செல்வத்துக்கு அசுவம் வாங்கிக் கட்டு.
அழி வழக்குச் சொன்னவன் பழி பொறுக்கும் மன்னவன்.
அழிவுக்கு முன்னால் அகந்தை. 1380
அழுக்குக்குள் இருக்கும் மாணிக்கம்.
அழுக்குச் சீலைக்குள் மாணிக்கம்.
அழுக்குத் துணியில் சாயம் தோய்ப்பது போல.
அழுக்கை அழுக்குக் கொல்லும்; இழுக்கை இழுக்குக் கொல்லும்.
அழுக்கைத் துடைத்து மடியிலே வைத்தாலும் புழுக்கைக் குணம் போகாது. 1385

(பி-ம்.) இழுக்குக் குணம்.

அழுகலுக்கு ஒரு புழுத்தல்.
அழு கள்ளன். தொழு கள்ளன். ஆசாரக் கள்ளன்.
அழுகிற ஆணையும் சிரிக்கிற பெண்ணையும் நம்பக் கூடாது.
அழுகிறதற்கு அரைப்பணம் கொடுத்து ஓய்கிறதற்கு ஒரு பணம் கொடு.

(பி-ம்.) கொடுத்த கதை போல.

அழுகிற பிள்ளைக்கு வாழைப்பழம். 1390

(பி-ம்.) காட்டுகிறது போல

அழுகிற பிள்ளையும் வாயை மூடிக் கொள்ளும்,
அழுகிற வீட்டில் இருந்தாலும் ஒழுகுகிற வீட்டில் இருக்கக் கூடாது.
அழுகிற வீட்டுக்குப் போனாலும் திருட்டுக் கை சும்மா இராது.
அழுகிற வேளை பார்த்து அக்குளில் பாய்ச்சுகிறான்.
அழுகின பழம் ஐயருக்கு. 1395
அழுகை ஆங்காரத்தின் மேலும். சிரிப்புக் கெலிப்பின் மேலுந்தான்.
அழுகைத் தூற்றல் அவ்வளவும் பூச்சி.
அழுகையும் ஆங்காரமும் சிரிப்புக் கெலிப்போடே.
அழுகையும் சிணுங்கலும் அம்மான் வீட்டில்; சிரிப்பும் களிப்பும் சிற்றப்பன் வீட்டில்.
அழுத்தந் திருத்தமாய் உழுத்தம் பருப்பு என்றான். 1400

அழுத்த நெஞ்சன் ஆருக்கும் உதவான்; இளகின நெஞ்சன் எவருக்கும் உதவுவான்.
அழுத கண்ணீரும் கடன்.
அழுத கண்ணும் சிந்திய மூக்கும்.
அழுத பிள்ளை உரம் பெறும்.
அழுத பிள்ளைக்கு வாழைப்பழம். 1405
அழுத பிள்ளை சிரித்ததாம்; கழுதைப் பாலைக் குடித்ததாம்.
அழுத பிள்ளை பசி ஆறும்.

(பி-ம்.) பிள்ளை பிழைக்கும்.

அழுத பிள்ளை பால் குடிக்கும்.
அழுத பிள்ளையும் வாய் மூடும் அதிகாரம்.
அழுத மூஞ்சி சிரிக்குமாம்; கழுதைப் பாலைக் குடிக்குமாம். 1410
அழுதவளுக்கு வெட்கம் இல்லை; துணிந்தவளுக்குத் துக்கம் இல்லை.
அழுதவனுக்கு ஆங்காரம் இல்லை.

(பி-ம்.) அகங்காரம்

அழுதால் துக்கம்; சொன்னால் வெட்கம்.
அழுதால் தெரியாதோ? ஆங்காரப் பெண் கொள்ளாதோ?
அழுதாலும் பிள்ளை அவளே பெற வேண்டும். 1415

(பி-ம்.) அழுதும் அழுதும்.

அழுது கொண்டு இருந்தாலும் உழுது கொண்டிரு.
அழுது முறையிட்டால் அம்பலத்தில் கேட்கும்.
அழுபிள்ளைத் தாய்ச்சிக்குப் பணம் கொடுத்தால் அநுபவிக்க ஒட்டுமா குழந்தை?

(பி-ம்,) பணயம்.

அழுவார் அழுவார் தம் தம் கரைச்சல்; திருவன் பெண்டிருக்கு அழுவார் இல்லை.

(யாழ்ப்பாண வழக்கு.)

அழுவார் அழுவார் எல்லாம் தன் கரைச்சல்; திருவன் பெண்டிருக்கு அழுவார் இல்லை. 1420
அழுவார் அழுவார் தம் துக்கம்; அசலார்க்கு அல்ல.
அழுவார் அற்ற பிணமும் சுடுவார் அற்ற சுடலையும்.

(பி-ம்.) ஆற்றுவார் அற்ற.

அழையாத வீட்டில் நாய்போல நுழையாதே.
அழையாத வீட்டில் நுழையாத விருந்து.

அழையாத வீட்டுக்கு விருந்துக்குப் போனால் மரியாதை நடக்காது. 1425
அழையாத வீட்டுக்குள் நுழையாத சம்பந்தி.
அழையா வீட்டுக்குள் நுழையாச் சம்பந்தி.

(பி-ம்.) விருந்தாளி.

அள்ளப் போனாலும் அதிர்ஷ்டம் வேண்டும்.
அள்ளிசி புள்ளிசி அவளானால் தருவாள்; அறியாச் சிறுக்கி இவள் என்ன தருவாள்?

அள்ளாது குறையாது; இல்லாது பிறவாது. 1430

(பி-ம்.) இல்லாது சொல்லாது.

அள்ளிக் குடிக்கத் தண்ணீர் இல்லை; அவள் பேர் கங்காதேவி.

(பி-ம்.) கங்கா பவானி.

அள்ளிக் கொடுத்தால் சும்மா; அளந்து கொடுத்தால் கடன்.

(பி-ம்.) இட்டால்.

அள்ளிக் கொண்டு போகச்சே கிள்ளிக்கொண்டு வருகிறான்.
அள்ளித் துள்ளி அரிவாள் மணையில் விழுந்தாளாம்.
அள்ளி நடுதல் கிள்ளி நடுதல். 1435
அள்ளிப்பால் வார்க்கையிலே கொள்ளிப்பால் வார்த்திருக்குது.
அள்ளிய காரும் கிள்ளிய சம்பாவும்.
அள்ளுகிறவன் இடத்தில் இருந்தாலும் கிள்ளுகிறவன் இடத்தில் இருக்கக் கூடாது.
அள்ளும்போதே கிள்ளுவது.
அள்ளுவது எல்லாம் நாய் தனக்கு என்று எண்ணுமாம். 1440
அளக்கிற நாழி அகவிலை அறியுமா?

(பி-ம்.) அளவு அறியுமா?

அளகாபுரி கொள்ளை ஆனாலும் அதிர்ஷ்ட ஈனனுக்கு ஒன்றும் இல்லை.
அளகாபுரியிலும் விறகு தலையன் உண்டு.
அளகேசன் ஆனாலும் அளவு அறிந்து செலவு செய்ய வேண்டும்.
அளந்த அளந்த நாழி ஒளிஞ்சு ஒளிஞ்சு வரும். 1445

(பி-ம்.) ஒழிந்து வழிந்து வழிந்து.

அளந்த நாழி கொண்டு அளப்பான்,
அளந்தால் ஒரு சாண் இல்லை; அரிந்தால் ஒரு சட்டி காணாது.
அளந்து ஆற்றிலே ஒழிக்க வேணும்.
அளவு அறிந்து அளித்து உண்.

(ஆத்தி சூடி.)

அளவு அறிந்து உண்போன் ஆயுள் நீளும். 1450

அளவு அறிந்து வேலை செய்தால் விரல் மடக்கப் பொழுது இல்லை.
அளவு இட்டவரைக் களவு இடலாமா?
அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் விஷம்.
அளிஞ்சு பழஞ் சோறாய்ப் போச்சுது.
அளுக்கு வீட்டு நாய் உளுக்கையிலே; ஐயா வீட்டு நாய் சவுக்கையிலே. 1455
அளுங்குப்பிடி பிடித்தாற் போல.
அற்ப ஆசை கோடி தவத்தைக் கெடுக்கும்.
அற்பக் கோபத்தினால் அறுந்த மூக்கு ஆயிரம் சந்தோஷம் வந்தாலும் வருமா?

(பி-ம்.) பொன் கொடுத்தாலும்.

அற்பச் சகவாசம் பிராண சங்கடம்.

(பி-ம்.) பிராண கண்டிதம்.

அற்ப சகவாசம் பிராண சங்கடம். 1460

(பி-ம்.) சிநேகிதம்.

அற்ப சந்தோஷம்.
அற்ப சுகம், கோடி துக்கம்.
அற்பத்திற்கு அரைக்காசு அகப்பட்டால் திருக்குளத்தில் போட்டுத் தேடி எடுக்குமாம்.

(பி-ம்.) கிடைத்தால்.

அற்பத்திற்கு அழகு குலைகிறதா?
அற்பத் துடைப்பம் ஆனாலும் அகத் தூசியை அடக்கும். 1465

(பி-ம்.) அறைத் தூசியைப் பெருக்கும்.

அற்பப் படிப்பு ஆபத்தை விளைவிக்கும்.
அற்பம் அற்பம் அன்று.
அற்பன் கை ஆயிரம் பொன்னிலும் சற்புத்திரன் கைத் தவிடு நன்று.
அற்பன் பணம் படைத்தால் அர்த்த ராத்திரியில் குடை பிடிப்பான்.
அற்பன் பணம் படைத்தால் வைக்க வகை அறியான். 1470

(பி-ம்.) பணம் வந்தால் இடம் அறியான்.

அற்பன் பவிஷு அரைக்காசு பெறாது.
அற்பனுக்குப் பவிஷு வந்தால் அர்த்த ராத்திரியில் குடை பிடிப்பான்.

(அடை மழையில் கோடைக்கானல் போவான்.)

அற்றதுக்கு உற்ற தாய்.
அற்றது கழுதை; எடுத்தது ஓட்டம்.
அற்றது பற்று எனில் உற்றது வீடு. 1475

(கொன்றை வேந்தன்.)

அறக்கப் பறக்கப் பாடுபட்டாலும் படுக்கப் பாய் இல்லை.
அறக் கல்வி முழு மொட்டை.
அறக்காத்தான் பெண்டு இழந்தான்; அறுகாத வழி சுமந்து அழுதான்.
அறக் காய்ந்தால் வித்துக்கு ஆகாது.
அறக் குழைத்தாலும் குழைப்பாள்; அரிசியாய் வைத்தாலும் வைப்பாள். 1480
அறக் கூர்மை முழு மொட்டை.
அறங்கையும் புறங்கையும் நக்குதே.

(பி-ம்.) அகங்கையும்.

அறச் செட்டு முழு நஷ்டம்.
அறத்துக்கும் பாடி, கூழுக்கும் பாடி.
அற நனைந்தவருக்குக் கூதல் என்ன? 1485

(பி-ம்.) குளிர் என்ன?

அறப்படித்த பூனை காடிப் பானையில் தலையை விடும்.
அறப்படித்த மூஞ்சூறு கழுநீர்ப் பானையில் விழுந்தாற் போல.

(இது தவறான பாடம்.)

அறப்படித்தவர் கூழ்ப் பானையில் விழுவாராம்.
அறப்படித்தவன் அங்காடி போனால் விற்கவும் மாட்டான்; வாங்கவும் மாட்டான்.

(பி-ம்.) கொள்ளவும்.

அறப்பத்தினி அகமுடையானை அப்பா என்று அழைத்தாளாம். 1490
அறப் பேசி உறவாட வேண்டும்.
அறம் இருக்க மறம் விலைக்குக் கொண்டவாறு.

(பழமொழி நானூறு.)

அறம் கெட்ட நெஞ்சு திறம் கெட்டு அழியும்.
அறம் செய்ய அல்லவை நீங்கி விடும்.
அறம் பெருக மறம் தகரும். 1495
அறம் பொருள் இன்பம் எல்லார்க்கும் இல்லை.
அறம் வெல்லும்; பாவம் தோற்கும்.
அற முறுக்கினால் அற்றுப் போகும்.

(பி-ம்.) முறுக்கு.

அற முறுக்கினால் கொடி முறுக்குப் படும்.
அற முறுக்குக் கொடும்புரி கொண்டு அற்று விடும். 1500
அறவடித்த சோறு கழுநீர்ப் பானையில் விழுந்தாற் போல்.

(பி-ம்.) காடிப் பானையில்

அறவிலை வாணிகம்.
அறவும் கொடுங்கோலரசன் கீழ்க் குடியிருப்பிலும் குறவன் கீழ்க் குடியிருப்பு மேல்.
அறவைக்கு வாய் பெரிது; அஞ்சாறு அரிசிக்குச் கொதி பெரிது.
அறிவுக்கு அழகு அகத்து உணர்ந்து அறிதல். 1505
அறிந்த ஆண்டை என்று கும்பிடப் போனால், உங்கள் அப்பன் பத்துப்பணம் கொடுக்கவேணும் கொடு என்றான்.
அறிந்த பார்ப்பான் சிநேகிதக்காரன், ஆறு காசுக்கு மூனு தோசை.

(பி-ம்.) அறிந்த பார்ப்பான் தோசைக்குப போனால்.

அறிந்தவன் அறிய வேண்டும், அரியாலைப் பனாட்டை.

(யாழ்ப்பாண வழக்கு. பனாட்டு-பன வெல்லத்தில் பண்ணும் தின்பண்டம். பினாட்டுத்தட்டை.)

அறிந்தவன் என்று கும்பிட அடிமை வழக்கு இட்டாற் போல.

(பி-ம்.) வழக்குப் பிடித்து இட்டாற் போல.

அறிந்து அறிந்து கெட்டவர் உண்டா? 1510
அறிந்து அறிந்து செய்கிற பாவத்தை அழுது அழுது தொலைக்க வேணும்.
அறிந்து அறிந்து பாவத்தைப் பண்ணி அழுது அழுது அனுபவித்தல்.
அறிந்தும் கெட்டேன்; அறியாமலும் கெட்டேன்; சொறிந்தும் புண்ணாச்சு.
அறிய அறியக் கெடுவார் உண்டா?

(பி-ம்.) கெட்டவர்.

அறியாக் குளியாம் கருமாறிப் பாய்ச்சல். 1515
அறியாத ஊருக்குப் புரியாத வழி காட்டினாற் போல்.
அறியாத நாள் எல்லாம் பிறவாத நாள்.
அறியாப் பாவம் பறியாய்ப் போச்சு.

(பி-ம்) பொறியாய்.

அறியாப் பிள்ளை ஆனாலும் ஆடுவான் மூப்பு.
அறியாப் பிள்ளை புத்தியைப் போல. 1520
அறியாமல் தாடி வளர்த்து அம்பட்டன் கையிற் கொடுக்கவா?
அறியா விட்டால் அசலைப் பார்; தெரியா விட்டால் தெருவைப் பார்.

அறிவார் அறிவார், ஆய்ந்தவர் அறிவார்.
அறிவிலே விளையுமா? எருவிலே விளையுமா?
அறிவினை ஊழே அடும். 1525

(பழமொழி நானூறு.)

அறிவீனர் தமக்கு ஆயிரம் உரைக்கினும் அவம்.
அறிவீனனிடத்தில் புத்தி கேளாதே.
அறிவு அற்றவனுக்கு ஆண்மை ஏது?
அறிவு அற்றவனுக்கு ஆர் சொன்னால் என்ன?
அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பான். 1530
அறிவு இருந்தென்ன? அதிருஷ்டம் வேண்டும்.
அறிவு இல்லாச் சயனம் அம்பரத்திலும் இல்லை.
அறிவு இல்லாதவன் பெண்களிடத்திலும் தாழ்வு படுவான்.
அறிவு இல்லாதவனுக்கு வேலை ஓயாது. 1535
அறிவு இல்லார் சிநேகம் அதிக உத்தமம்.
அறிவு இல்லார் தமக்கு ஆண்மையும் இல்லை.
அறிவு உடையார் ஆவது அறிவார்.
அறிவு உடையாரை அடுத்தால் போதும்.
அறிவு உடையாரை அரசனும் விரும்பும். 1540

(வெற்றி வேற்கை.)

அறிவு உள்ளவனுக்கு அறிவது ஒன்று இல்லை.
அறிவு கெட்ட நாய்க்கு அவலும் சர்க்கரையுமா?
அறிவு கெட்டவனுக்கு ஆர் சொல்லியும் என்ன?
அறிவுடன் ஞானம்; அன்புடன் ஒழுக்கம்.
அறிவு தரும் வாயும் அன்பு உரைக்கும் நாவும். 1545
அறிவு புறம் போய் ஆடினது போல.

(பி-ம்.) ஆண்டது போல.

அறிவு பெருத்தோன், அல்லல் பெருத்தோன்.
அறிவு மனத்தை அரிக்கும்.
அறிவு யார் அறிவார்? ஆய்ந்தவர் அறிவார்.
அறிவேன், அறிவேன், ஆல் இலை புளியிலை போல் இருக்கும் என்றானாம்.
அறுக்க ஊறும் பூம் பாளை; அணுக ஊறும் சிற்றின்பம். 1550

(பி-ம்)உதவும்.

அறுக்க ஒரு யந்திரம்; அடிக்க ஒரு யந்திரம்.
அறுக்கத் தாலி இல்லை; சிரைக்க மயிரும் இல்லை.

அறுக்கப் பிடித்த ஆடுபோல.
அறுக்க மாட்டாதவன் இடையில் அம்பத்தெட்டு அரிவாள்.
அறுக்கு முன்னே புறுக்கைத்தா; தீக்கு முன்னே தோலைத்தா என்ற கதை. 1555
அறுக்கையிலும் பட்டினி; பொறுக்கையிலும் பட்டினி; பொங்கல் அன்றைக்கு பொழுதன்றைக்கும் பட்டினி.
அறுகங் கட்டைபோல் அடிவேர் தளிர்க்கிறது.
அறுகங் கட்டையும் ஆபத்துக்கு உதவும்.
அறுகங் காட்டை உழுதவனும் கெட்டான்; அடங்காப் பெண்ணைக் கொண்டவனும் கெட்டான்.
அறுகங் காட்டை விட்டானும் கெட்டான்; ஆன மாட்டை விற்றவனும் கெட்டான். 1560
அறுகு போல் வேர் ஓடி.
அறுகு முளைத்த காடும் அரசை எதிர்த்த குடியும் கெடும்.
அறுத்த கைக்குச் சுண்ணாம்பு தர மாட்டான்.
அறுத்த கோழி துடிக்குமாப் போல.
அறுத்த தாலியை எடுத்துக் கட்டினாற் போல. 1565
அறுத்தவள் ஆண்பிள்ளை பெற்றது போல.
அறுத்தவளுக்கு அகமுடையான் வந்தாற் போல.
அறுத்தவளுக்கு அறுபது நாழிகையும் வேலை.
அறுத்தவளுக்குச் சாவு உண்டா?
அறுத்த விரலுக்குச் சுண்ணாம்பு தரமாட்டான். 1570

(ஆண்டி வந்தாலும் பிச்சை போட மாட்டான்.)

அறுத்துக் கொண்டதாம் கழுதை; எடுத்துக் கொண்டதாம் ஓட்டம்.

(பி-ம்) அறுத்து விட்டதாம்.

அறுத்தும் ஆண்டவன் பொன்னுருவி.

(பொன்னுருவி-கர்ணன் மனைவி.)

அறுதலி பெண் காலால் மாட்டிக் கிழிக்கும்.
அறுதலி மகனுக்கு வாழ்க்கைப்பட்டு விருதாவியா அறுத்தேன்.
அறுந்த மாங்கனி பொருந்திய செங்கம். 1575
அறுந்த விரலுக்குச் சுண்ணாம்பு கிடையாது.
அறு நான்கில் பெற்ற பிள்ளையும் ஆவணி ஐம்மூன்றில் நடுகையும் அநுகூலம்.
அறு நான்கில் பெற்ற புதல்வன்.
அறுப்புக் காலத்தில் எலிக்கு நாலு கூத்தியார்.

(ஐந்து பெண்சாதி.)

அறுபத்து நாலு அடிக்கம்பத்தில் ஏறி ஆடினாலும் அடியில் இறங்கித்தான் தியாகம் வாங்க வேண்டும். 1580

அறுபத் தெட்டுக்கு ஓர் அம்பலம்.
அறுபதாம் கலக்கம்.

(அறுபது-அறுபது பிராயம்.)

அறுபது அடிக் கம்பம் ஏறினாலும் கீழே வந்துதான் யாசகம் வாங்கவேண்டும்.

(பி-ம்.) அடியில் இறங்கித்தான் பிச்சை எடுக்க வேண்டும்.

அறுபதுக்கு அப்புறம் பொறுபொறுப்பு.
அறுபதுக்கு அறுபது சென்றால் வீட்டுக்கு நாய் வேண்டாம். 1585
(யாழ்ப்பாண வழக்கு.)
அறுபதுக்கு மேல் அடித்ததாம் யோகம்.
அறுபதுக்கு மேல் அறிவுக் கலக்கம்.

(பி-ம்.) கிறுகிறுப்பு.

அறுபது நாழிகையும் பாடுபட்டும் அரை வயிற்றுக்கு அன்னம் இல்லை.
அறுபது நாளைக்கு எழுபது கதை.

(பி-ம்.) இருபது கதை.

அறுபது வயது சென்றால் அவன் வீட்டுக்கு நாய் வேண்டாம். 1590
அறுவடைக் காலத்தில் எலிக்கும் ஐந்து பெண் சாதி.

(பி-ம்.) நான்கு.

அறுவாய்க்கு வாய்பெரிது; அரிசிக்குக் கொதி பெரிது.
அறைக் கீரைப் புழுத் தின்னாதவனும் அவிசாரி கையில் சோறு உண்ணாதவனும் இல்லை.

(பி-ம்.) விலைமாது கையில்.

அறைக்குள் நடந்தது அம்பலத்தில் வந்து விட்டது.

(பிள்ளை.)

அறை காத்தான் பெண்டு இழந்தான்; அங்கேயும் ஒரு கை தூக்கி விட்டான். 1595
அறை காத்தான் பெண்டு இழந்தான்; ஆறு காதம் சுமந்தும் செத்தான்.
அறையில் ஆடி அல்லவோ அம்பலத்தில் ஆடவேண்டும்?
அறையில் இருந்த பேர்களை அம்பலம் ஏற்றுகிற புரட்டன்.

(பி-ம்.) மிரட்டன்.

அறையில் சொன்னது அம்பலத்துக்கு வரும்.
அறையில் நடப்பது அம்பலத்துக்கு வரலாமா? 1600
அறைவீட்டுச் செய்தி அம்பலத்தில் வரும்.
அன்பான சிநேகிதனை ஆபத்தில் அறியலாம்.
அன்பின் பணியே இன்ப வாழ்வு.
அன்பு அற்ற மாமிக்குக் கும்பிடும் குற்றமே.
அன்பு அற்றார் பாதை பற்றிப் போகாதே. 1605
அன்பு இருக்கும் இடம் அரண்மனை.
அன்பு இருந்தால் ஆகாததும் ஆகும்.
அன்பு இல்லாக் கூழும் இன்பம் இல்லா உடன்பிறப்பும்.
அன்பு இல்லாத தாயும் அறிவு இல்லாத புத்திரனும் இன்பம் இல்லாத உடன்பிறப்பும் எதற்குப் பிரயோசனம்?
அன்பு இல்லாதவர்க்கு ஆதிக்கம் இல்லை. 1610
அன்பு இலாதார் பின்பு செல்லேல்.

(குறள், 1255) காளிங்கன் உரை.

அன்பு இலாள் இட்ட அமுது ஆகாது.
அன்பு உடையானைப் பறிகொடுத்து அலையறச்சே அசல் வீட்டுக் காரன் வந்து அழைத்தானாம்.
அன்பு உள்ள இடத்தில் ஆண்டவன் இருக்கிறான்.
அன்பு உள்ள குணம் அலை இல்லா நதி. 1615
அன்புக்குத் திறக்காத பூட்டே இல்லை.
அன்புடனே ஆண்டவனை வணங்கு.
அன்பே சிவம்.

(திருமந்திரம்.)

அன்பே பிரதானம்; அதுவே வெகுமானம்.

(பி-ம்.) வெகுதானம்.

அன்பே மூவுலகுக்கும் ராஜா. 1620
அன்றாடம் காய்ச்சி.
அன்றாடம் சோற்றுக்கு அல்லாடி நிற்கிறது.
அன்று அடிக்கிற காற்றுக்குப் படல் கட்டிச் சாத்தலாம்.
அன்று அற ஆயிரம் சொன்னாலும் நின்று அற ஒரு காசு பெரிது.
அன்று இல்லை, இன்று இல்லை; அழுகற் பலாக்காய் கல்யாண வாசலிலே கலந்துண்ண வந்தாயே. 1625
அன்று இறுக்கலாம்; நின்று இறுக்கலாகாது.
அன்று எழுதினவன் அழித்து எழுத மாட்டான்.

(பி-ம்.) அறைக்கு எழுதுவானா?

அன்று கட்டி அன்று அறுத்தாலும் ஆக்கமுள்ள ஆண் மகனுக்கு வாழ்க்கைப்பட வேண்டும்.

அன்று கண்டதை அடுப்பில் போட்டு ஆக்கின பானையைத் தோளில் போட்டுக் கொண்டு திரிகிறது போல.

அன்று கண்ட மேனிக்கு அழிவில்லை. 1630

அன்று கண்டனர் இன்று வந்தனர்.

(பி-ம்.) கண்டவர்.

அன்று கழி, ஆண்டு கழி.

அன்று கிடைக்கிற ஆயிரம் பொன்னிலும் இன்று கிடைக்கிற அரைக்காசு பெரிது.

அன்று குடிக்கத் தண்ணீர் இல்லை; ஆனை மேல் அம்பாரி வேணுமாம்.

அன்று கொள், நின்று கொள், என்றும் கொள்ளாதே. 1635

அன்று சாப்பிட்ட சாப்பாடு இன்னும் ஆறு மாசத்துக்குத் தாங்கும்.

அன்று தின்ற ஊண் ஆறு மாசத்துக்குப் பசியை அறுக்கும்.

அன்று தின்ற சோறு ஆறு மாசத்துக்கு ஆகுமா?

அன்று தின்னும் பலாக்காயினும் இன்று தின்னும் களாக்காய் மேல்.

(பி-ம்.) பழத்திலும். களாப்பழம்.

அன்று நடு; அல்லது கொன்று நடு;
+தப்பினால் கொன்று நடு. 1640

அன்று பார்த்ததற்கு அழிவில்லை.

அன்றும் இல்லை காற்று; இன்றும் இல்லை குளிர்.

அன்றும் இல்லை தையல்; இன்றும் இல்லை பொத்தல்.

அன்று விட்ட குறை ஆறு மாசம்.

அன்றே போச்சுது நொள்ளைமடையான்; அத்தோடே போச்சுது கற்றாழை நாற்றம். 1645

அன்றை ஆயிரம் பொன்னிலும் இன்றை ஒரு காசு பெரிது.

அன்றைக்கு அடித்த அடி ஆறு மாசம் தாங்கும்.

அன்றைக்கு அறுத்த கார் ஆறு மாசச் சம்பா.

அன்றைக்கு ஆடை; இன்றைக்குக் கோடை; என்றைக்கு விடியும் இடையில் தரித்திரம்.

(பி-ம்.) இன்றைக்குக் குடை. இடையன் தரித்திரம்.

அன்றைக்கு இட்டது பிள்ளைக்கு. 1650

(பி-ம்.) அன்னைக்கு.

அன்றைக்கு எழுதியதை அழித்து எழுதப் போகிறானா?
அஃறைக்குக் கிடைக்கிற ஆயிரம் பொன்னிலும் இன்றைக்குக் கிடைக்கிற அரைக்காசு பெரிது.

(பி-ம்.) ஆயிரம் ரூபாயை விட.

அன்றைக்குச் சொன்ன சொல் சென்மத்துக்கும் போதும்.

(பி-ம்.) உறைக்கும்.

அன்றைக்குத் தின்கிற பலாக்காயை விட இன்றைக்குத் தின்கிற களாக்காய் மேல்.

(பி-ம்.) பெரிது.

அன்றைப்பாடு ஆண்டுப் பாடாய் இருக்கிறது. 1655
அன்னக் கொட்டிக் கண்ணை மறைக்குது.

(யாழ்ப்பாண வழக்கு.)

அன்னச் சுரணை அதிகமானால் அட்சர சுரணை குறையும்.
அன்னத் துவேஷமும் பிரம்மத் துவேஷமும் கடைசிக் காலத்துக்கு.
அன்னதானத்துக்கு நிகர் என்ன தானம் இருக்கிறது?

(பி-ம்.) சரி.

அன்னதானம் எங்கு உண்டு; அரன் அங்கு உண்டு. 1660
அன்ன நடை நடக்கத் தன் நடையும் போச்சாம்.

(தண்டலையார் சதகர்.)

அன்ன நடை நடக்கப் போய்க் காகம் தன் நடையும் இழந்தாற் போல.
அன்னப் பாலுக்குச் சிங்கி அடித்தவன் ஆவின் பாலுக்குச் சர்க்கரை தேடுகிறான்.
அன்னப்பிடி வெல்லப் பிடி ஆச்சுது.
அன்னம் அதிகம் தின்பானும் ஆடை அழுக்கு ஆவானும் பதர். 1665
அன்னம் இட்டார் வீட்டில் கன்னம் இடலாமா?
அன்னம் இறங்குவது அபான வாயுவால்.
அன்னம் ஒடுங்கினால் அஞ்சும் ஒடுங்கும்.
அன்னம் பித்தம்; கஞ்சி காமாலை.
அன்னம் மிகக் கொள்வானும் ஆடை அழுக்கு ஆவானும் பதர். 1670
அன்னம் முட்டானால் எல்லாம் முட்டும்.
அன்னம் வில்வாதி லேகியம்.

அன்னமயம் இன்றிப் பின்னை மயம் இல்லை.
அன்னமயம் பிராண மயம்.
அன்னமும் தண்ணீரும் கேட்காமல் இருந்தால் பெற்ற பிள்ளைக்கு மேலே பத்துப் பங்காய் வளர்ப்பேன். 1675
அன்னமோ ராமசந்திரா.
அன்ன வலையில் அரன் வந்து சிக்குவான்.
அன்னிய சம்பத்தே அல்லாமல் அதிக சம்பத்து இல்லை என்றான்.
அன்னிய சம்பந்தமே அல்லாமல் அந்தை சம்பந்தம் இல்லை என்கிறான்.
அன்னிய மாதர் அவதிக்கு உதவார். 1680
(பி-ம்.) உதவுவாரா?
அன்னைக்கு உதவாதான் ஆருக்கும் உதவான்.
(பி-ம்.) ஆருக்கும் ஆகான்.
அன்னைக்குப் பின் பெற்ற அப்பன் சிற்றப்பன்.
அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.
(கொன்றை வேந்தன்.)
அனந்தங் காட்டிலே என்ன இருக்கப் போகிறது?
அனந்தத்துக்கு ஒன்றாக உறையிட்டாலும் அளவிடப் போகாது. 1685
அனல், குளிர், வெதுவெதுப்பு இம்மூன்று காலமும் ஆறு காலத்துக்குள் அடங்கும்.
அனலில் இட்ட மெழுகுபோல.
அனற்றை இல்லா ஊரிலே வண்ணார் இருந்து கெட்டார்கள்.
அனுபோகக்காரனுக்கு ஆளாய்க் காக்கிறான்.
அனுபோகம் தெளிகிற காலத்தில் ஔஷதம் பலிக்கும். 1690
(பி-ம்.) அனுபோகம் மிகும்போது.
அனுமந்தராயரே, அனுமந்தராயரே என்றானாம்; பேர் எப்படித் தெரிந்தது என்றானாம்; உன் மூஞ்சியைப் பார்த்தாலே தெரியாதா என்றானாம்.
அனுமந்தராயனுக்குத் தெப்பத் திருநாளாம்.
அனுமார் இலங்கையைத் தாண்டினாராம்; ஆனை எதைத் தாண்டும்?
அனுமார் தம்பி அங்கதன் போலே.
அனுமார் வால் நீண்டது போல. 1695
அஜகஜாந்தரம்.
அஜாகளஸ்தம் போல்.
அஷ்ட சஹஸ்ரத்துக்குப் பிரஷ்ட தோஷம் இல்லை.
அஷ்ட சஹஸ்ரப் பிலுக்கு.

அஷ்டதரித்திரம். 1700
அஷ்டதரித்திரம் ஆற்றோடு போ என்றால் நித்திய தரித்திரம் நேரே வருகிறது.
அஷ்ட தரித்திரம் தாய் வீடு; அதிலும் தரித்திரம் மாமியார் வீடு.

(பி-ம்.) ஆத்தாள் வீடு.

அஷ்டதரித்திரம் பிடித்தவன் அமராவதியில் வாழ்கிறான் என்று நித்திய தரித்திரம் பிடித்தவன் நின்ற நிலையிலே நட்டுக் கொண்டு வந்தான்.

(பி-ம்.) பிட்டுக்கொண்டு.

அஷ்டதரித்திரம் புக்ககத்திலே ஆறாவது போது வாடுகிறேன்.
அஷ்டதிக்குக் கஜம் மாதிரி குடித்தனத்தைத் தாங்குகிறான். 1705
அஷ்டப் பிரபந்தம் கற்றவன் அரைப் புலவன்.
அஷ்டமத்துச் சனி அழுதாலும் விடாது.
அஷ்டமத்துச் சனி போல.
அஷ்டமத்துச் சனியன் கிட்ட வந்தது போல.
அஷ்டமி இல்லை; நவமி இல்லை; துஷ்ட வயிற்றுக்குச் சுருக்க வேணும். 1710
அஷ்டமி நவமி ஆகாச பாதாளம்.
அஷ்டமி நவமி ஆசானுக்கு ஆகாது.
அஷ்டமி நவமியிலே தொட்டது துலங்காது.
அஷ்டமியிலே கிருஷ்ணன் பிறந்து வேஷ்டி வேஷ்டி என்று அழுகிறானாம்.
அஸ்தச் செவ்வானம் அடை மழைக்கு லட்சணம். 1715

(பி-ம்.) அஸ்தமனத்துச் செவ்வானம்.

அஸ்தி சகாந்தரம் என்றது போல் இருக்கிறது.
அஸ்தியிலே ஜுரம்.
அஸ்மின் கிராமே ஆச்சாள் பிரசித்தா.
அக்ஷர லக்ஷம் பெறும்.

ஆ

ஆ ஆ என்பவருக்கு என்ன? அன்னம் படைப்பவர்க்கல்லவா தெரியும். 1720

ஆ என்ற ஏப்பமும் அலறிய கொட்டாவியும் ஆகா.

ஆ என்று போனபிறகு அள்ளி இடுகிறதா?

(பி-ம்.) இடுவது யார்?

ஆக்க அறியாவிட்டால் புளியைக் கரை; அழகு இல்லாவிட்டால் மஞ்சளைப் பூசு.

(பி-ம்.) அறியாதவள் புளியைக் குத்தினாள், இல்லாதவள் மஞ்சளைப் பூசினாள்.

ஆக்கப் பிள்ளை நம் அகத்தில்; அடிக்கப் பிள்ளை அயல் வீட்டிலோ?

(பி-ம்.) நம் வீட்டில், அடிக்கிற பிள்ளை.

ஆக்கப் பொறுத்தவன் ஆறப் பொறுக்கல் ஆகாதா? 1725

(பி-ம்.) பொறுத்தவனுக்கு ஆறப் பொறாதோ? பொறுத்த உனக்கு.

ஆக்கம் கெட்ட அக்காள் மஞ்சள் அரைத்தாலும் கரி கரியாக வரும்.

ஆக்கம் கெட்ட அண்ணன் வேலைக்குப் போனால் வேலை கிடைக்காது; வேலை கிடைத்தாலும் கூலி கிடைக்காது.

ஆக்க மாட்டாத அழுகல் நாரிக்குத் தேட மாட்டாத திருட்டுச் சாவான்.

ஆக்க மாட்டேன் என்றால் அரிசியைப் போடு.

ஆக்கவில்லை, அரிக்கவில்லை; மூக்கெல்லாம் முழுக்கரியாக இருக்கிறதே! 1730

ஆக்க வேண்டாம், அரிக்க வேண்டாம் பெண்ணே;
என் அருகில் இருந்தால் போதுமடி பெண்ணே.

(பி-ம்.) கண்ணே.

ஆக்கி அரித்துப் போட்டவள் கெட்டவள்; வழி காட்டி அனுப்பினவள் நல்லவள்.

ஆக்கிக் குழைப்பேன்; அரிசியா இறக்குவேன்.

ஆக்கிப் பெருக்கி அரசாள வைத்தேன்; தேய்த்துப் பெருக்கித் திரிசமம் பண்ணாதே.

ஆக்கினவள் கள்ளி; உண்பவள் சமர்த்தள். 1735
ஆக்கினையும் செங்கோலும் அற்றன அரை நாழிகையிலே.
ஆக்குகிறவள் சலித்தால் அடுப்புப் பாழ்; குத்துகிறவள் சலித்தால் குந்தாணி பாழ்.

(பி-ம்.) அன்னம் பாழ்.

ஆக்குகிறவளும் பெண்; அழிக்கிறவளும் பெண்.
ஆகட்டும் போகட்டும், அவரைக் காய் காய்க்கட்டும்; தம்பி பிறக்கட்டும்; தம்பட்டங்காய் காய்க்கட்டும்; அவனுக்குக் கல்யாணம் ஆகட்டும்; உன்னைக் கூப்பிடுகிறேனா, இல்லயா பார் என்றானாம்.
ஆகடியக்காரன் போகடியாய்ப் போவான். 1740
ஆக வேணும் என்றால் காலைப் பிடி; ஆகா விட்டால் கழுத்தைப்பிடி.
ஆகாசக் கோட்டை கட்டியது போல.
ஆகாசத் தாமரை.
ஆகாசத்தில் எறிந்தால் அங்கேயே நிற்குமா?
ஆகாசத்தில் பறக்க உபதேசம் சொல்லுகிறேன்; என்னை ஆற்றுக்கப்பால் தூக்கிவிடு என்கிறார் குரு. 1745
ஆகாசத்திலிருந்து அறுந்து விட்டேன்; பூமி தேவி ஏற்றுக் கொண்டாள்.
ஆகாசத்துக்கு மையம் காட்டுகிறது போல்.
ஆகாசத்துக்கு வழி எங்கே என்றால் போகிறவன் தலைமேலே.
ஆகாசத்தைப் பருந்து எடுத்துக் கொண்டு போகிறதா?

(பி-ம்.) பருந்தா எடுத்துக் கொண்டு போகிறது?

ஆகாசத்தையும் வடிகட்டுவேன். 1750
(பி-ம்.) வடிகட்டுவான்.
ஆகாசத்தை வடுப்படாமல் கடிப்பேன் என்றான்.

(பி-ம்.) கடிக்சாலாமா?

ஆகாசம் பார்க்கப் போயும் இடுமுடுக்கா?
ஆகாசம் பூமி பாதாளம் சாட்சி.
ஆகாசம் பெற்றது, பூமி தாங்கினது
ஆகாசமே விழுந்தாற் போலப் பேசுகிறாயே! 1755
ஆகாச வர்த்தகன்.
ஆகாச வல்லிடி அதிர இடித்தது.
ஆகாத்தியக்காரனுக்கு ஐசுவரியம்; அஷ்ட தரித்திரனுக்குப் பெண்ணும் பிள்ளையும்.
ஆகாத்தியக்காரனுக்கு ஐசுவரியம் வந்தால் பிரம்மகத்திக்காரனுக்குப் பிள்ளை பிள்ளையாய்ப் பிறக்குது.

ஆகாத்தியக்காரனுக்குப் பிரம்மகத்திக்காரன் சாட்சி. 1760
ஆகாததும் வேகாததும் ஆண்டவனுக்கு; அதிலும் கெட்டது குருக்களுக்கு.
ஆகாத நாளில் பிள்ளை பிறந்தால் அண்டை வீட்டுக்காரனை என்ன செய்யும்?
ஆகாத பஞ்சாங்கத்துக்கு அறுபது நாழிகையும் தியாஜ்யம்.
ஆகாதவற்றை ஏற்றால் ஆராய்ந்து ஏற்றுக் கொள்.
ஆகாதவன் குடியை அடுத்துக் கெடுக்க வேண்டும். 1765
ஆகாத வேளையில் பிள்ளை பிறந்தால் அடுத்த வீட்டுக்காரனை என்ன செய்யும்?
ஆகாத வேளையில் பிள்ளை பிறந்தால் அண்டை வீட்டுக் காரனை என்ன செய்யும்?

ஆகாத வேளையில் பிள்ளை பிறந்தால் அப்பனையும் ஆத்தாளையும் கொல்லுமேயொழிய, பஞ்சாங்கம் சொன்ன பார்ப்பானை என்ன செய்யும்?
ஆகாதே உண்டது நீலம் பிறிது.

(பழமொழி நானூறு.)

ஆகாயத்தில் எறிந்த கல் அங்கேயே நிற்குமா? 1770
ஆகாயத்தில் கூட அரைக் குழிக்கு அவகாசம் இல்லை.
ஆகாயத்தில் போகிற சனியனை ஏணி வைத்து இறக்கின மாதிரி.
ஆகாயத்துக்கு மையம் காட்டுகிறது போல.
ஆகாயத்தைப் படல் கொண்டு மறைப்பது போல.
ஆகாயத்தை வில்லாக வளைப்பான்; மணலைக் கயிறாகத் திரிப்பான். 1775
ஆகாயப் புரட்டனுக்கு அந்தரப் புரட்டன் சாட்சி சொன்னானாம்.
ஆகாயம் பார்க்கப் போயும் இடுமுடுக்கா?
ஆகாயம் போட்டது; பூமி ஏந்திற்று.
ஆகாயம் மணல் கொழித்தால் அடுத்தாற் போல் மழை.

(பி-ம்.) மணல் கொண்டிருந்தால்.

ஆகாயம் விழுந்து விட்டது போல. 1780
ஆகாயம் மட்டும் அளக்கும் இருப்புத் தூணைச் செல் அரிக்குமா?
ஆகிற காலத்தில் அடியாளும் பெண் பெறுவாள்.
ஆகிற காலத்தில் அவிழ்தம் பலிக்கும்.
ஆகிற காலத்திலெல்லாம் அவிசாரி ஆடி, சாகிற காலத்தில் சங்கரா என்றாளாம்.

ஆகிறது அரைக் காசில் ஆகும்; ஆகாதது ஆயிரம்
பொன்னாலும் ஆகாது. 1785
ஆகிறவன் அரைக்காசிலும் ஆவான்; ஆகாதவனுக்கு ஆயிரம்
கொடுத்தாலும் ஆகான்.

(பி-ம்.) விடியாது.

ஆகும் காய் பிஞ்சிலே தெரியும்.
ஆகும் காலத்தில் அடியாளும் பெண் பெறுவாள்.
ஆகும் காலம் ஆகும்; போகும் காலம் போகும்.
ஆகும் காலம் எல்லாம் அவிசாரி போய் விட்டுச் சாகும்
காலத்தில் சங்கரா சங்கரா என்றாளாம். 1790

(பி-ம்.) அங்கும் இங்கும் ஆடி.

ஆகும் காலம் வந்தால் தேங்காய்க்கு இளநீர் போல் சேரும்.
ஆங்காரத்தாலே அழிந்தவர் அனந்தம் பேர்.
ஆங்காரிகளுக்கு அதிகாரி.
ஆங்காரியை அடக்குபவன் அதிகாரி.
ஆச்சாபுரம் காட்டிலே ஐம்பது புலி குத்தினவன் பறைச்சேரி
நாயோடே பங்கம் அழிகிறான். 1795
ஆச்சா விதைத்தால் ஆமணக்கு விளையுமா?
ஆச்சானுக்குப் பீச்சான்; மதனிக்கு உடன் பிறந்தான்.
ஆச்சானுக்குப் பீச்சான்; மதனிக்கு உடன் பிறந்தான்; நெல்லுக்
குத்துகிறவளுக்கு நேர் உடன் பிறந்தான்.

(பி-ம்.) நெல்லுக்குத்-ுக்காரிக்கு.

ஆச்சி, ஆச்சி, மெத்தப் படித்துப் பேசாதே.
ஆச்சி திரளவும் ஐயா உருளவும் சரியாக இருக்கும். 1800
ஆச்சி நூற்கிற நூல் ஐயர் பூணூலுக்குச் சரி.
ஆச்சி நூற்பது ஐயர் பூணூலுக்கும் காணாது.
ஆசந்திரார்க்கம்.

(-சந்திரர் சூரியர் உள்ளவரையில்.)

ஆசரித்த தெய்வமெல்லாம அடியோடே மாண்டது என்கிறான்.

(பி-ம்.) ஆசிரயித்த.

ஆசன கீதம் ஜீவன நாசம். 1805
ஆசாபாசம் அந்தத்தில் மோசம்.
ஆசாரக் கள்ளன்.

(தண்டலையார் சதகம்.)

ஆசாரத்துக்கு ஆசாரம்; சுகத்துக்குச் சுகம்.

ஆசாரப் பார்ப்பான் ஆற்றுக்குப் போனானாம்; பறையன் கோசம் தலையில் அடிபட்டதாம்.
ஆசாரப் பூசைப்பெட்டி; அதன்மேல் கவிச்சுச் சட்டி. 1810

(பா-ம்) தோசைப்பெட்டி.

ஆசாரம் இல்லா அசடருடன் கூடிப் பாசாங்கு பேசிப் பதி இழந்து போனேனே!
ஆசாரி குத்து.
ஆசாரி செத்தான் என்று அகத்திக் கழி கட்டி அழுகிறாற்போல்.

(செத்தான்-செதுக்கமாட்டான்.)

ஆசாரி பெண்ணுக்கு அழகா பார்க்கிறது?
ஆசாரியருக்கு வாங்கின நாமம் அம்பட்டனுக்கு வணங்காது. 1815

(தென் கலை வைணவ விதவைகள்.)

ஆசாரி வீட்டுக்கு அடுப்பு இரண்டு.
ஆசானுக்கும் அடைவு தப்பும்; ஆனைக்கும் அடி சறுக்கும்.
ஆசிரியர் சொல் அம்பலச் சொல்.
ஆசீர்வாதமும் சாபமும் அறவோர்க்கு இல்லை.
ஆசை அண்டாதானால் அழுகையும் அண்டாது. 1820
ஆசை அண்டினால் அழுகையும் அண்டும்.
ஆசை அதிகம் உள்ளவனுக்கு ரோசம் இருக்குமா?
ஆசை அவள் மேலே; ஆதரவு பாய் மேலே.
ஆசை அறுபது நாள்; மோகம் முப்பது நாள்; தொண்ணூறு நாளும் போனால் துடைப்பக் கட்டை அடி.
ஆசை இருக்கிறது ஆனை மேல் ஏற; அம்சம் இருக்கிறது கழுதை மேய்க்க. 1825
ஆசை இருக்கிறது தாசில் பண்ண; அதிருஷ்டம் இருக்கிறது மண் சுமக்க.

(பா-ம்.) ஆடு மேய்க்க. கழுதை மேய்க்க.

ஆசை உண்டானால் பூசை உண்டு.
ஆசை உள்ள இடத்தில் பூசை நடக்கும்.
ஆசை உள்ள இடத்தில் பூசையும் அன்பு உள்ள இடத்தில் தென்பும்.
ஆசை உள்ளளவும் அலைச்சலும் உண்டு. 1830
ஆசை உறவு ஆகுமா? ஆதரவு சோறு ஆகுமா?
ஆசை எல்லாம் தீர அடித்தான் முறத்தாலே.
ஆசைக்காரனுக்கு ரோசம் இல்லை.

ஆசைக்கு அளவு இல்லை.

(பா-ம்.) ஓர் அளவில்லை. தாயுமானவர் பாடல்.

ஆசைக்கு இல்லை அளவென்ற எல்லை. 1835

ஆசைக்கு ஒரு பெண்ணும் ஆஸ்திக்கு ஒரு பிள்ளையும்.

ஆசைக்கு ரோசம் இல்லை.

ஆசை கடுக்குது; மானம் தடுக்குது.

ஆசை காட்டி மோசம் செய்கிறதா?

ஆசை கொண்ட பேருக்கு ரோசம் இல்லை. 1840

ஆசை தீர்ந்தால் அல்லல் தீரும்.

ஆசை நோய்க்கு அவிழ்தம் ஏது?

(ஆசை நோய்க்கு மருந்தும் உண்டாங்கொலோ: கம்பராமாயணம்.)

ஆசைப்பட்டது கிடைக்கவில்லையென்றால் ஆண்பிள்ளை அடுத்த கண்ணும் பாரான்.

ஆசைப்பட்ட பண்டம் ஊசிப் போயிற்று.

(பி-ம்.) ஆசைப்பட்டது.

ஆசைப்பட்டு மோசம் போகாதே. 1845

ஆசைப்படுவது அவ்வளவும் துன்பம்.

ஆசை பெரிதோ? ஆனை பெரிதோ?

(பா-ம்.) மலை பெரிதோ?

ஆசை பெருக அலைச்சலும் பெருகும்.

ஆசை மருமகன் தலைபோனாலும் ஆதிகாலத்து உரல் போகக் கூடாது.

ஆசையினால் அல்லவோ பெண்களுக்கு மீசை முளைப்பதில்லை? 1850

ஆசையும் நாசமும் அடுத்து வரும்.

ஆசை ரோசம் அறியாது.

ஆசை வெட்கம் அறியுமா?

ஆசை வைத்தால் நாசந்தான்.

ஆட்காட்டி சொந்தக்காரனையும் திருடனையும் காட்டிக் கொடுக்கும். 1855

(பா-ம்.) பிடித்துக் கொடுக்கும்.

ஆட்காட்டி தெரியாமல் திருடப் போகிறவன் கெட்டிக்காரனோ? அவன் கால் அடிபிடித்துப் போகிறவன் கெட்டிக்காரனோ?

ஆட்சி புரிய அரண்மனை வாசலிலே பாரக் கழுக்காணி பண்ணிப் புதைத்திருக்கிறது.

ஆட்டத்துக்குத் தகுந்த மேளம்; மேளத்துக்குத் தகுந்த ஆட்டம்.
ஆட்டம் எல்லாம் ஆடி ஒய்ந்து நாட்டுப் புறத்துக்கு வந்தான்.
ஆட்டம் நாலு பந்தி; புறத்தாலே குதிரை.
ஆட்டம் போட்ட வீட்டுக்கு விட்டம் ஒரு கேடா? 1860
ஆட்டமும் கூத்தும் அடங்கின அத்தோடே.
ஆட்டாளுக்கு ஒரு மோட்டாள்; அடைப்பக் கட்டைக்கு ஒரு துடைப்பக் கட்டை.

(பா-ம்.) சீட்டாள். அடுப்புக் கட்டிக்கு, துடுப்புக் கட்டை.

ஆட்டி அலைத்துக் காசு வாங்கினேன்; செல்லுமோ செல்லாதோ? அதைக் கொண்டு எருமை வாங்கினேன்; ஈனுமோ, ஈனாதோ?
ஆட்டில் ஆயிரம், மாட்டில் ஆயிரம்; வீட்டிலே கரண்டிபால் இல்லை.
ஆட்டிலே பாதி ஓநாய். 1865
ஆட்டி விட்டால் ஆடுகிற தஞ்சாவூர்ப் பொம்மை.
ஆட்டின் கழுத்து உறுப்புப் போல.
ஆட்டு உரம் ஓராண்டு நிற்கும்; மாட்டு உரம் ஆறாண்டு நிற்கும்.
ஆட்டு உரம் பயிர் காட்டும்; ஆவாரை நெல் காட்டும்..
ஆட்டு எரு அந்த வருஷம்; மாட்டு எரு மறு வருஷம். 1870

(பா-ம்.) அந்தப் போகம். மறு போகம்.

ஆட்டு எரு அவனுக்கு; மாட்டு எரு மகனுக்கு.
ஆட்டுக்கடாச் சண்டையிலே நரி அகப்பட்டதுபோல.

(பா-ம்) ஆட்டுக்கிடா. நரி செத்தது போல.

ஆட்டுக்கடா பின் வாங்குவது பாய்ச்சலுக்கு அடையாளம்.
ஆட்டுக்கடா முறைத்தது போல முறைக்கிறான்.
ஆட்டுக் கறியும் நெல்லுச் சோறும் தம்மா கும்மா; அந்தக் கடன் கேட்கப் போனால் கிய்யா மிய்யா. 1875
ஆட்டுக்கிடையிலே ஓநாய் புகுந்ததுபோல.

(பா-ம்.) ஆட்டுக்கிடா புகுந்தது போல.

ஆட்டுக்கு அதர் உண்டு.
ஆட்டுக்கு ஒத்தது குட்டிக்கு.
ஆட்டுக்குச் சுகமானபின் ஆட்டுமயிரைக்கூட இடையன் சாமிக்குக் கொடுக்க மாட்டான்.

ஆட்டுக்குட்டி எவ்வளவு துள்ளினாலும் ஆனைஉயரம் வருமா? 1880
ஆட்டுக்குட்டிக்கு ஆனை காவு கொடுக்கிறதா?
ஆட்டுக்குட்டிமேல் ஆயிரம் பொன்னா?

ஆட்டுக்குட்டியைத் தோளிலே வைத்துக்கொண்டு ஊர் எங்கும் தேடினது போல.

(பா-ம்.) காடு எங்கும்.

ஆட்டுக்குத் தீர்ந்தபடி குட்டிக்கும் ஆகிறது.

ஆட்டுக்குத் தோற்குமா கிழப்புலி? 1885

(பா-ம்.) தோற்ற கிழப்புலியா?

ஆட்டுக்கும் மாட்டுக்கும் இரண்டு கொம்பு; அறிவு இல்லாதவனுக்கு மூன்று கொம்பு.

ஆட்டுக்கும் மாட்டுக்கும் இரண்டு கொம்பு; இந்த மதிகெட்ட மாட்டுக்கு மூன்று கொம்பு.

ஆட்டுக்கும் மாட்டுக்கும் இரண்டு கொம்பு; ஐயங்காருக்கு மூன்று கொம்பு.

ஆட்டுக்கும் மாட்டுக்கும் இரண்டு கொம்பு; ஐயம் பிடாரிக்கு மூன்று கொம்பு.

ஆட்டுக்கும் மாட்டுக்கும் முறையா? காட்டுக்கும் பாட்டுக்கும் வரையா? 1890

ஆட்டுக்கு வால் அளந்து வைத்திருக்கிறது; (+ மாட்டுக்கு வால் மட்டந்தட்டி வைத்திருக்கிறது.)

ஆட்டுக்கு வேகம் பள்ளத்திலே; ஆனைக்கு வேகம் மேட்டிலே.

(பா-ம்.) அலைகிறது போல.

ஆட்டுத்தலைக்கு ஒச்சன் பறக்கிறது போல.

ஆட்டுத் தலைக்கு வண்ணான் பறக்கிறதுபோல.

ஆட்டு மந்தையிலே கோனாய் புகுந்தாற் போல. 1895

ஆட்டுமந்தையைக் காக்கும் நாய் வீட்டுப் புழுக்கையைக் கூடத்தான் காக்க வேணும்.

ஆட்டு வாணிகர் ஆலிங்கனத்தைவிடக் கூட்டு வாணிகர் குட்டு நல்லது.

(கூட்டு-வாசனைத் திரவியம்.)

ஆட்டுவித்துப் பம்பை கொட்டுகிறான்.

ஆட்டு வெண்ணெய் ஆட்டு மூளைக்கும் காணாது.

ஆட்டைக் கடித்து மாட்டைக் கடித்து ஆளையே கடித்ததாம். 1900

(பா-ம்.) மனுஷனையே.

ஆட்டைக் கழுதையாக்கிய அரிட்டாப் பாடி.

(அரிட்டாப்பாடி-மேலூருக்கும் அழகர் கோவிலுக்கும் இடையே உள்ள சிற்றூர்.)

ஆட்டைக் காட்டி வேங்கை பிடிக்க வேண்டும்.

(பா-ம்.) பிடிக்கப் பார்க்கிறான்.

ஆட்டைக்கு ஒரு முறை காணக் கோட்டை இல்லையோ?
ஆட்டைத் தூக்கி மாட்டில் போட்டு மாட்டைத் தூக்கி மந்தையில் போடுகிறான்.
ஆட்டைத் தேடி அயலார் கையில் கொடுப்பதைவிட வீட்டைக் கட்டி நெருப்பு வைப்பது மேல். 1905
ஆட்டைத் தோளில் போட்டுக் கொண்டு காடெங்கும் தேடினது போல.
ஆட்டை வீட்டுச் சொண்டே, மாமியார் வீட்டேயும் வந்தையோ?
ஆடடா சோமாசி,பெண்டாட்டி பாடையில் போய்ப் படுத்தாளாம்.
ஆடத் தெரியாத தேவடியாள் கூடம் கோணல் என்றாளாம்.

(பா-ம்.) கோணம், காணாது, போதாது.

ஆடப் பாடத் தெரியாதவருக்கு இரண்டு பங்கு உண்டு (+ என்ற கதை.) 1910
ஆடப்போன கங்கை அண்டையில் வந்தாற் போல.
ஆடம்பரம் டம்பம், அபிஷேகம் சூன்யம்.
ஆடமாட்டாத தேவடியாள் பந்தல் கோணல் என்றாளாம்.
(பா-ம்.) கூடம்.
ஆட மாட்டேன், பாட மாட்டேன், குடம் எடுத்துத் தண்ணீர்க்குப் போவேன்.

(வம்புப்பிரியை என்பது கருத்து.)

ஆட லோகத்து அமுதத்தை ஈக்கள் மொய்த்துக் கொண்டது போல. 1915
ஆடவன் செத்த பின்பு அறுதலிக்கும் புத்தி வந்தது.
ஆடவிட்டு நாடகம் பார்ப்பது போல்.

(பா-ம்.) வேடிக்கை பார்க்கிறதா?

ஆடாச் சாதி ஊடாச் சாதியா?
ஆடாதது எல்லாம் ஆடி அவரைக்காயும் பறித்தாச்சு.

(பா-ம்.) அறுத்தாச்சு.

ஆடாததும் ஆடி ஐயனாருக்குக் காப்பும் அறுத்தாச்சு. 1920
ஆடாதே, ஆடாதே, கம்பங்கதிரே; அதற்கா பயந்தாய் சிட்டுக்குருவி?
ஆடி அடி அமுங்கினால் கார்த்திகை கமறடிக்கும்.

(-ஆடி மாதம் மழை பெய்து, ஈரமண்ணில் காலடி புதையுமானால் கார்த்திகையிலும் அதற்குப் பின்னும் மழை இல்லை.)

ஆடி அடி பெருகும்; புரட்டாசி பொன் உருகும்.
ஆடி அமர்ந்தது ஒரு நாழிகையில்.

ஆடி அமாவாசையில் மழை பெய்தால் அரிசி விற்ற விலை நெல் விற்கும். 1925
ஆடி அரை மழை.
ஆடி அவரை தேடிப் போடு.
ஆடி அழைக்கும்; தை தள்ளும்.

(பண்டிகைகளை.)

ஆடி அறவெட்டை, அகவிலை நெல் விலை.
ஆடி அறவெட்டை, போடி உன் ஆத்தாள் வீட்டுக்கு. 1930

(பா-ம்.) அரை வட்டை.

ஆடி ஆனை வால் ஒத்த கரும்பு; புரட்டாசி பதினைந்தில் விதைத்த வித்து.
ஆடி இருந்த இடமும் அகம்படியான் இருந்த இடமும் உருப்படா.
ஆடி ஒரு குழி அவரை போட்டால் கார்த்திகை ஒரு சட்டி கறி.
ஆடி ஓடி நாடியில் அடங்கிற்று.
ஆடி ஓடி நிலைக்கு வந்தது. 1935
ஆடி ஓய்ந்த பம்பரம் போல.
ஆடி ஓய்ந்தால் அங்காடிக்கு வர வேண்டும்.
ஆடிக்கரு.

(-கர்ப்போட்டம்.)

ஆடிக்கரு அழிந்தால் மழை குறைந்து போம்.
ஆடிக் கறக்கிற மாட்டை ஆடிக் கறக்க வேண்டும்; பாடிக் கறக்கிற மாட்டைப் பாடிக் கறக்க வேண்டும். 1940
ஆடிக் காற்றில் அம்மி ஆகாயத்தில் பறக்கும்.
ஆடிக் காற்றில் அம்மியும் குழவியும் ஆலாய்ப் பறக்கும் போது இலவம் பஞ்சு என்ன சேதி என்று கேட்டதாம்.

(பா-ம்.) அம்மியே மிதக்கும் போது.

ஆடிக் காற்றில் அம்மியும் நகரும்.
ஆடிக் காற்றில் ஆலாய்ப் பறத்தல்.
ஆடிக் காற்றில் ஆனையும் அசையும் போது கழுதைக்கு என்ன கதி? 1945
ஆடிக் காற்றில் இலவம் பஞ்சு பறந்தது போல.
ஆடிக் காற்றில் உதிரும் சருகு போல.
ஆடிக் காற்றில் எச்சில் இலைக்கு வழியா?

(பா-ம்.) எச்சிற் கல்லைக்கு.

ஆடிக் காற்றில் பூளைப்பூப் பறந்தாற்போல்.
ஆடிக் காற்று எச்சிற் கலைக்கு வழியா? 1950

ஆடிக் காற்று நாடு நடுக்கும்.

ஆடிக் கீழ்காற்றும் ஐப்பசி மேல்காற்றும் அடித்தால்
அவ்வாண்டும் இல்லை, மறு ஆண்டும் இல்லை மழை.

(பா-ம்.) காற்றும் ஆகாத நாளைக்கு.

ஆடிக்கு அடைபட்டவளே, அமாவாசைக்கு வெளிப்பட்டவளே!
ஆடிக்கு அழைக்காத மாப்பிள்ளையைத் தேடிச் செருப்பால் அடி.
ஆடிக்கு அழைக்காத மாமியாரைத் தேடிப் பிடித்து அடி. 1955
ஆடிக்கு அழைக்காத மாமியாரைத் தேடி மயிரைப் பிடித்துச் செருப்பால் அடி.

ஆடிக்கு ஒரு தடவை, ஆவணிக்கு ஒரு தடவை.
ஆடிக்கு ஒரு தரம், அமாவாசைக்கு ஒரு தரம்.
ஆடிக்கு ஒரு விதை போட்டால் கார்த்திகைக்கு ஒரு
காய் காய்க்கும்.

ஆடிக்குத் தை ஆறு மாசம். 1960
ஆடி கழிந்த எட்டாம் நாள் கோழி அடித்துக் கும்பிட்டானாம்.
ஆடி கழிந்த ஐந்தாம் நாள் கோழி அடித்துக் கும்பிட வந்தான்.
ஆடிச்சீர் தேடி வரும்.

ஆடிச் செவ்வாய் தேடிக் குளி; அரைத்த மஞ்சளைத்
தேய்த்துக் குளி.

ஆடிச் செவ்வாய் நாடிப் பிடித்தால் தேடிய கணவன்
ஓடியே வருவான். 1965

ஆடித் தவித்த குரங்கு மத்தளத்தில் ஏறி இருப்பது போல.
ஆடித் தென்றல் நாடு நடுங்கும்.

ஆடி நட்ட கரும்பு ஆனை வால் ஒத்தது.

ஆடிப் பட்டத்து மழை தேடிப் போனாலும் கிடைக்காது.
ஆடிப் பட்டம் அஞ்சு விதை; அக்கிரகாரம் நிறைய நெல். 1970
ஆடிப்பட்டம் தேடி விதை.
ஆடிப் பண்டிகை தேடி அழை.
ஆடிப் பருத்தியைத் தேடி விதை.
ஆடி பதினைந்தில் ஐம்மூன்று நாழிகையில் ஓடும் கதிரோன்
ஒளிகுறைந்தால் நாடு செழிக்கும்; நல்ல மழை பெய்யும்.
ஆடிப் பனங்காய் தேடிப் பொறுக்கு. 1975
ஆடிப் பிள்ளை தேடிப் புதை.

(பிள்ளை-தென்னம்பிள்ளை.)

ஆடிப் பிறை தேடிப் பார்.
(பா-ம்.) தேடிப் பிடி.

ஆடிப் பெருங் காற்று.
ஆடி பிறந்தால் ஆசாரியார்; தை பிறந்தால் தச்சப்பயல்.
ஆடி பிறந்தால் வெல்லப் பானையைத் திற; தை பிறந்தால் உப்புப் பானையைத் திற. 1980
ஆடி பிறந்து ஒரு குழி அவரை போட்டால் கார்த்திகை பிறந்தால் ஒரு சட்டி கறி ஆகும்.
ஆடி மாதத்தில் குத்தின குத்து ஆவணி மாதத்தில் உளைப்பு எடுத்ததாம்.

(பா-ம்.) வலி எடுத்ததாம்.

ஆடி மாதத்தில் நாய் போல.
ஆடி மாதத்தில் விதைத்த விதையும் ஐயைந்தில் பிறந்த பிள்ளையும் ஆபத்துக்கு உதவும்.
ஆடி மாதம் அடி வைக்கக் கூடாது. 1985
ஆடிமாதம் அவரை போட்டால் கார்ர்த்திகை மாதம் காய்காய்க்கும்.
ஆடி முதல் பத்து, ஆவணி நடுப்பத்து, புரட்டாசி கடைப்பத்து, ஐப்பசி முழுதும் நடலாகாது.
ஆடிய காலும் பாடிய நாவும் சும்மா இரா.

(பா-ம்.) மிடறும், வாயும்.

ஆடிய கூத்தும் பாடிய ராகமும்.
ஆடியில் ஆனை ஒத்த கடா,புரட்டாசியில் பூனைபோல ஆகும். 1990
ஆடியில் போடாத விதையும் அறுநான்கில் பிறக்காத பிள்ளையும் பிரயோசனம் இல்லை.
ஆடியில் விதை போட்டால் கார்த்திகையில் காய் காய்க்கும்.
ஆடி வரிசை தேடி வரும்.
ஆடி வாழை தேடி நடு.
ஆடி விதை தேடி நடு. 1995

(பா-ம்.) தேடிப்போடு; விதைக்க வேணும்.

ஆடி விதைப்பு, ஆவணி நடவு.

(பா-ம்.) ஆவணி முளைப்பு.

ஆடி வெப்பல் ஆட்டுக் கிடைக்குச் சமம்.
ஆடி வெள்ளம் ஓடி வர.
ஆடினது ஆலங்காடு; அமர்ந்தது தக்கோலம்; மணக்கோலம் பூண்டது மணவூர்.
ஆடு அடித்த வீட்டில்,நாய் காத்தாற் போல. 2000

ஆடு அடித்தால் அந்தப் பக்கம்; அகப்பை தட்டினால் இந்தப் பக்கம்.

ஆடு அடித்தாலும் அன்றைக்குக் காணாது; மாடு அடித்தாலும் மறு நாள் காணாது.

(பா-ம்.) மத்தியான்னம் காணாது.

ஆடு அப்பூ, ஆவாரை முப்பூ.

(பா-ம்.) ஆடி ஆப்பு, ஆவிரை மூப்பு.

ஆடு அறியுமோ அங்காடி வாணிபம்?

ஆடு அறுபது என்பானாம்; வெள்ளாட்டைக் கண்டால் விலுக்கு விலுக்கு என்பானாம். 2005

ஆடு இருக்க இடையனை விழுங்குமா?

ஆடு இருக்கப் புலி இடையனை எடாது.

ஆடு இருந்த இடத்தில் அதர் இல்லை; மாடு இருந்த இடத்தில் மயிர் இல்லை.

ஆடு இருந்த இடமும் அகம்படியான் இருந்த இடமும் உருப்படா.

ஆடு உதவுமா குருக்களே என்றால், கொம்பும் குளம்பும் தவிரச் சமூலமும் ஆகும் என்கிறான். 2010

ஆடு ஊடாடக் காடு விளையாது.

ஆடு எடுத்த கள்ளனைப் போல் விழிக்கிறான்.

(பா-ம்.) அகப்பட்டு விழித்த கதை.

ஆடு ஓடின காடும் அடி ஓடின வெளியும் விருத்தி ஆகா.

ஆடு ஓடின காடும் அரசன் போன வீதியும் அம்மா வீடு தேடிப் போன பெண்ணும் அடுத்த மாதம் குட்டிச் சுவராம்.

ஆடு கட்ட வீடு இல்லை; ஆனை வாங்கப் போனானாம். 2015

ஆடு கடிக்கிறதென்று அறையில் இருப்பாளாம்; அகமுடையான் சம்பாதிக்கப் பேயாய்ப் பறப்பாளாம்.

ஆடு கடிக்கிறதென்று இடையன் உறி ஏறிப் பதுங்கிடுவானாம்.

ஆடு கடிக்கிறதென்று தீயில் விழுந்தாற் போல் ஆச்சுது.

ஆடுகளின் சட்டியை நாய் உருட்டுவது போல.

ஆடு கறக்கவும் பூனை குடிக்கவும் சரியாக இருந்தது. 2020

ஆடு கால் பணம், கோசம் முக்கால் பணம்.

ஆடு கிடந்த இடத்தில் அதன் மயிரும் கிடவாமல் அழிந்து போவார்.

ஆடு கிடந்த இடத்திலே மயிர்தானும் கிடையாமற் போயிற்று.

ஆடு கிடந்த இடமும் அகம்படியான் இருந்த இடமும் உருப்படா.

ஆடு கெட்டவன் ஆடித் திரிவான்; கோழி கெட்டவன் கூவித் திரிவான். 2025

ஆடு கொடாத இடையன் ஆவைக் கொடுப்பானா?
ஆடு கொண்டவன் ஆடித் திரிவான்; கோழி கொண்டவன் கூவித் திரிவான்.
ஆடு கொண்டு உழுது ஆனை கொண்டு போர் அடித்தாற் போல் இருக்கிறது.
ஆடு கொழுக்கக் கொழுக்கக் கோனானுக்குச் சந்தோஷம்.
ஆடு கொழுக்கிறது எல்லாம் இடையனுக்கு லாபம். 2030

(பா-ம்.) இடையனுக்குத் தானே?

ஆடு கொழுத்தால் என்ன? ஆனை கட்டி வாழ்ந்தால் என்ன?
ஆடு கொழுத்தால் ரோமத்தில் தெரியும்.
ஆடு கோழி ஆகாது; மீன் கருவாடு ஆகும்.
ஆடு கோனான் இன்றித் தானாய்ப் போகுமா?
ஆடு தழை மேய்ந்தாற் போல. 2035

(பா-ம்.) தின்பது போல.

ஆடுதன் துருப்புச் சொல்லி ஆர் வாழ்ந்தார் அம்மானை?
ஆடுதன் துருப்புச் சொன்னால் அடிப்பது டைமன் தானே?
ஆடுதன் ராஜா மாதிரி.
ஆடு திருடிய கள்ளன் போல விழிக்கிறான்.
ஆடு திருடுகிற கள்ளனுக்கு ஆக்கிப் போடுகிறவள் கள்ளி. 2040
ஆடு தின்பாளாம், ஆட்டைக் கண்டால் சீசீ என்பாளாம்.

(பா-ம்.) இரண்டு ஆடு தின்பாளாம்.

ஆடு நனைகிறதென்று ஓநாய் அழுததாம்.

(பா-ம்.) கோனாய்.

ஆடு நனைகிறதென்று தோண்டான் அழுகிறதாம்.
ஆடு நினைத்த இடத்தில் பட்டி போடுகிறதா?
ஆடு பகை, குட்டி உறவா? 2045
ஆடு பட்டியிலே இருக்கும் போதே கோசம் தன்னது என்கிறான்.
ஆடு பயிர் காட்டும்; ஆவாரை நெல் காட்டும்.
ஆடு பிடிக்கக் காடி அகப்பட்டது போல்.
ஆடு பிடிக்கப்போய் ஓநாயிடம் அகப்பட்டுக் கொண்டது போல்.
ஆடு பிழைத்தால் மயிர்தானும் கொடான். 2050

(பா-ம்.) கொடேன்.

ஆடு போல் சாப்பிட வேண்டும்; ஆனைபோல் குளிக்க வேண்டும்.
ஆடும்காலத்தில் தலைகீழாக நடந்தால் ஓடும் கப்பறையும் ஆவான்.

ஆடும் காலம் தலைகீழாய் விழுந்தாலும் கூடும் புசிப்புத்தான் கூடும்.
ஆடும் திரிகை அசைந்து நிற்குமுன் ஓடும் சிந்தை ஒன்பதாயிரம்.
ஆடு மந்தையிலே இருக்கும்போதே கோசம் என்னுடையது என்றானாம். 2055

ஆடு மிதித்த தொழியை விட்டு ஆறின தொழியை வாங்கு.
ஆடு மலைமேல் மேய்ந்தாலும் குட்டி கோனானது.
ஆடு மலையேறி வந்தாலும் குட்டி கோனானோடே.
ஆடு மறித்தவன் செய் விளையுமா? அங்கலாய்த்தவன் செய் விளையுமா?

ஆடு மாடு இல்லாதவன் அடைமழைக்கு ராஜா; பெண்டு பிள்ளை இல்லாதவன் தண்டுக்கு ராஜா. 2060

(தண்டு - சேனை.)

ஆடு மிதியாக் கொல்லையும் ஆளன் இல்லாப் பெண்ணும் வீண்.
ஆடு மேய்ந்த இடத்தில் அரை மயிர்கூட இல்லை.
ஆடு மேய்த்தாற் போலவும் அண்ணனுக்குப் பெண் பார்த்தாற் போலவும்.
ஆடு மேய்ந்த காடு போல.
ஆடு மேய்வது போல். 2065
ஆடு யாரை நம்பும்?
ஆடுவதும் ஆடி அவரைக் காயும் பறித்தாச்சு.
ஆடுவதே மணியமாய் இருக்கிறான்.
ஆடு வரும் பின்னே, தலை ஆடி வரும் முன்னே.
ஆடு வாங்கப் போனவன் ஆனை விலை கேட்டானாம். 2070
ஆடு வீட்டிலே, ஆட்டுக்குட்டி காட்டிலே.
ஆடு வெட்டுகிற இடத்திலே பார்ப்பானுக்கு என்ன வேலை?
ஆடு வைத்தவன் செய் விளையுமா? அங்கலாய்த்தவன் செய் விளையுமா?

ஆடு வைப்பதிலும் ஆழ உழுவதே நலம்.
ஆடே பயிர், ஆரியமே வேளாண்மை. 2075

(ஆடே படைப்பு, ஆரியம் - கேழ்வரகு.)

ஆடை இல்லாத மனிதன் அரை மனிதன்.
ஆடை இல்லாப் பெண்பிள்ளை அரைப் பெண்பிள்ளை.
ஆடை உடையான் அவைக்கு அஞ்சான்.
ஆடைக்கும் கோடைக்கும் ஆகாது.
ஆடை பாதி, அமுத்தல் பாதி. 2080
ஆடை பாதி, அழகு பாதி.

ஆடையைத் தின்றால் வெண்ணெய் இல்லை.
(பா-ம்.) உண்டா?

ஆடை வாய்க்கவும் ஆபரணம் வாய்க்கவும் அதிர்ஷ்டம் வேணும்.

ஆடை வாய்ப்பதும் அகமுடையான் வாய்ப்பதும் அவரவர் அதிர்ஷ்டம்.

ஆண் அவலம், பெண் அவலம், ஆக்கி வைத்த சோறும் அவலம். 2085

ஆண் அழகனும் சோறும் அடைவாய் இருந்தால் வீடெல்லாம் பிள்ளை விட்டெறிந்து பேசும்.

ஆண் ஆயிரம் ஒத்தாலும் பெண் நாலு ஒவ்வாது.

ஆண் இணலிலே நின்று போ; பெண் இணலிலே இருந்து போ.
(யாழ்ப்பாண வழக்கு. இணல் - நிழல்.)

ஆண் இன்றிப் பெண் இல்லை; பெண் இன்றி ஆண் இல்லை.

ஆண் உறவும் உறவல்ல; வேலி நிழலும் நிழலல்ல. 2090

ஆண் கேடு அரசு கேடு உண்டா?
(பா-ம்.) கேடும் இல்லை.

ஆண் சிங்கத்தை ஆனை அடுக்குமா?

ஆண்ட பொருளை அறியாதார் செய் தவம் மாண்ட மரத்துக்கு அணைத்த மண்.

ஆண்டவர் தரிசனம் அன்பர் விமோசனம்.

ஆண்டவன் ஒருவன் இருக்கிறான். 2095

ஆண்டவன் பலம் இருந்தால் குப்பை ஏறிச் சண்டை போடலாம்.

ஆண்டவன் விட்ட வழி.

ஆண்டார் அன்னத்தை அதிரப் பிடிக்கவும் போகாது; செட்டியார் எட்டிக் கன்னத்தில் அடிக்கவும் போகாது.

ஆண்டார் இருக்கும் வரையில் ஆட்டும் கூத்தும்.

ஆண்டாருக்குக் கொடுக்கிறாயோ? சுரைக் குடுக்கைக்குக் கொடுக்கிறாயோ? 2100

ஆண்டாருக்கும் பறப்பு; கோயிலுக்கும் சிறப்பு.

ஆண்டாரைப் பூதம் அஞ்சும்; மாண்டால் ஒழியப் போகாது.

ஆண்டால் அம்மியும் தேயும்.

ஆண்டி அடித்தானாம்; கந்தை பறந்ததாம்.

ஆண்டி அண்ணாமலை, பாப்பாரப் பஞ்சநதம். 2105
(பஞ்சநதம்-திருவையாறு.)

ஆண்டி அன்னத்துக்கு அழுகிறான்; அவன் நாய் அப்பத்துக்கு அழுகிறது.

ஆண்டி ஆனைமேல் ஏறிவர நினைத்தது போல.
ஆண்டி எப்போது சாவான்? மடம் எப்போது ஒழியும்?
ஆண்டிக்கு அரண்மனை இருந்தால் என்ன? எரிந்தால் என்ன?
ஆண்டிக்கு இடுகிறாயோ? சுரைக்குடுக்கைக்கு இடுகிறாயோ? 2110

ஆண்டிக்கு அம்பாரக் கணக்கு என்ன?

(பா-ம்.) நமக்கு என்ன?

ஆண்டிக்கு அவன் பாடு; தாதனுக்குத் தன் பாடு.

(தாசனுக்கு.)

ஆண்டிக்கு இடச் சொன்னால் தாதனுக்கு இடச் சொல்வான்.
ஆண்டிக்கு இடுகிறதே பாரம்.
ஆண்டிக்கு எதற்கு அரிசி விலை? 2115
ஆண்டிக்கு எதற்கையா ஆனை?
ஆண்டிக்கு எந்த மடம் சொந்தம்?
ஆண்டிக்கு என்ன பித்து? கந்தல் பித்து.
ஆண்டிக்கு ஏன் அம்பாரக் கணக்கு?
ஆண்டிக்குக் கொடுக்கிறாயோ? அவன் சுரைக் குடுக்கைக்குக் கொடுக்கிறாயோ? 2120

ஆண்டிக்குப் பிச்சையா? அவன் குடுவைக்குப் பிச்சையா?
ஆண்டிக்கு வாய்ப் பேச்சு; அண்ணாவுக்கு அதுவும் இல்லை.

(பா-ம்.) பார்ப்பானுக்கு அதுவும் இல்லை.

ஆண்டிகள் கூடி மடம் கட்டுவதும் நாய் போர்வை வாங்கியதும் போல.

ஆண்டி கிடக்கிறான் அறையிலே; அவன் சடை கிடக்கிறது தெருவிலே.

(பா-ம்.) அவன் தோண்டி கிடக்கிறது தெருவிலே.

ஆண்டி கிடப்பான் அறையிலே; கந்தை கிடக்கும் வெளியிலே. 2125

ஆண்டி கிடப்பான் மடத்திலே; சோளி கிடக்கும் தெருவிலே.

(சோளி - பை.)

ஆண்டி குண்டியைத் தட்டினால் பறப்பது சாம்பல்.
ஆண்டி கையில் அகப்பட்ட குரங்குபோல் அலைதல்.

ஆண்டிச்சி பெற்றது அஞ்சும் குரங்கு

(பா-ம்.) அவலம்.

ஆண்டி சங்கை ஏன் ஊதுகிறான்? 2130

ஆண்டி செத்தான்; மடம் ஒழிந்தது.

ஆண்டி சொன்னால் தாதனுக்குப் புத்தி எங்கே போச்சு?

ஆண்டிச்சி பெற்ற அஞ்சும் குரங்கு; பாப்பாத்தி பெற்ற பத்தும் பதர்.

ஆண்டி சோற்றுக்கு அழுகிறான்; லிங்கம் பஞ்சாமிர்தத்துக்கு அழுகிறது.

ஆண்டி பெற்ற அஞ்சும் அவலம். 2135

ஆண்டி பெற்ற அஞ்சும் குரங்கு; முண்டச்சி பெற்ற மூன்றும் முண்டைகள்.

ஆண்டி பெற்ற அஞ்சும் பேய்; பண்டாரம் பெற்ற பத்தும் பாழ்.

(பா-ம்.) அஞ்சும் பிடாரி.

ஆண்டி மகன் ஆண்டி.

ஆண்டி மகன் ஆண்டியானால் நேரம் அறிந்து சங்கு ஊதுவான்.

ஆண்டி மடம் கட்டினது போலத்தான். 2140

ஆண்டியும் ஆண்டியும் கட்டிக் கொண்டால் சாம்பலும் சாம்பலும் ஒட்டிக் கொள்ளும்.

(பா-ம்.) முட்டிக் கொண்டால்.

ஆண்டியும் தாதனும் தோண்டியும் கயிறும்.

ஆண்டியும் பார்ப்பானும் தோண்டியும் கயிறும் போல.

ஆண்டியே சோற்றுக்கு அலையும் போது லிங்கம் பால் சோற்றுக்கு அழுகிறதாம்.

(பா-ம்.) அன்னத்துக்கு.

ஆண்டியை அடித்தானாம்; அவன் குடுவையைப் போட்டு உடைத்தானாம். 2145

ஆண்டியைக் கண்டால் லிங்கன்; தாதனைக் கண்டால் ரங்கன். (+ என்கிறான்)

ஆண்டி வேஷம் போட்டும் அலைச்சல் தீரவில்லை.

ஆண்டு ஆண்டு தோறும் அழுது புரண்டாலும் மாண்டார் வருவரோ மாநிலத்தில்.

(பா-ம்.) மாண்டார் திரும்புவார்களா?

ஆண்டு மறுத்தால் தோட்டியும் கும்பிடான்.

ஆண்டு மாறின காரும் அன்று அறுத்த சம்பாவும் ஆளன் கண்ணுக்கு அரிது. 2150

(பா-ம்.) ஊனக் கண்ணுக்கு.

ஆண்டைக்கு ஆளைக் காட்டுகிறான்; ஆண்டை பெண்டாட்டிக்கு ஆள் அகப்படுவது இல்லை.

ஆண்டை கூலியைக் குறைத்தால் சாம்பான் வேலையைக் குறைப்பான்.

ஆண்டைமேல் வந்த கோபத்தைக் கடாவின்மேல் காண்பித்தான்.

(பா-ம்.) ஆற்றினான்.

ஆண் தாட்சண்யப் பட்டால் கடன்; பெண் தாட்சண்யப் பட்டால் விபசாரம்.

ஆண் நிழலில் நின்று போ; பெண் நிழலில் இருந்து போ. 2155

ஆண்பிள்ளை அழுதால் போச்சு; பெண்பிள்ளை சிரிச்சால் போச்சு.

ஆண் பிள்ளைக்கு அநியாயப்பட்டால் தீரும்; பெண் பிள்ளைக்கு அழுதால் தீரும்.

(அநியாயப்பட்டால் - வெளிப்படையாகச் சொன்னால்.)

ஆண் பிள்ளைகள் ஆயிரம் ஒத்திருந்தாலும் அக்காளும் தங்கையும் ஒத்திரார்கள்.

ஆண் பிள்ளைச் சிங்கத்திற்கு யார் நிகர்?

ஆண்பிள்ளையை அடித்து வளர்; முருங்கையை ஒடித்து வளர். 2160

ஆண் முந்தியோ? பெண் முந்தியோ?

ஆண் மூலம் அரசாளும்; பெண் மூலம் நிர்மூலம்.

ஆண்மையற்ற வீரன் ஆயுதத்தைப் பழிப்பான்.

(பா-ம்.) ஆயுதத்தின் மேல் குறை சொல்லுவான்.

ஆணமும் கறியும் அடுக்கோடே வேண்டும்.

ஆணவம் அழிவு. 2165

ஆணன் உறவுண்டானால் மாமி மயிர் மாத்திரம்.

ஆணாய்ப் பிறந்தால் அருமை; பெண்ணாய்ப் பிறந்தால் எருமை.

ஆணுக்கு அவகேடு செய்தாலும் பெண்ணுக்குப் பிழை கேடு செய்யாதே.

(பா-ம்.) பிழை சொல்லாதே.

ஆணிக்கு இணங்கின பொன்னும் மாமிக்கு இணங்கின பெண்ணும் அருமை.

ஆணுக்குக் கேடு செய்தாலும் பெண்ணுக்குப் பிழை செய்தல் ஆகாது. 2170

ஆணுக்குப் பெண் அழகு.

ஆணுக்குப் பெண் அஸ்தமித்துப் போச்சா?

ஆணுக்கு மீசை அழகு; ஆனைக்குத் தந்தம் அழகு.

ஆணும் அவலம்; பெண்ணும் பேரவலம்.

ஆணை அடித்து வளர்; பெண்ணைப் போற்றி வளர். 2175

(பா-ம்.) பிடித்து வளர்; தட்டி வளர்.

ஆணையும் வேண்டாம்; சத்தியமும் வேண்டாம்; துணியைப் போட்டுத் தாண்டு.

(பா-ம்.) சந்தியும் வேண்டாம்.

ஆத்தாடி நீலியடி, ஆயிரம் பேரைக் கொன்றவன்டி.

(நீலி-ஔரி; அது மருந்தை முறிக்கும்.)

ஆத்தாள் அம்மணம்; அன்றாடம் கோதானம்.

ஆத்தாள் அம்மணம்; கும்பகோணத்தில் கோதானம்.

(பா-ம்.) அன்றாடம் வீட்டில் கோதானம்.

ஆத்தாள் என்றால் சும்மா இருப்பான்; அக்காள் என்றால் மீசைமேல் கை போட்டுச் சண்டைக்கு வருவான். 2180

ஆத்தாள் படுகிற பாட்டுக்குள்ளே மகள் மோருக்கு அழுகிறாள்.

ஆத்தாள் வீட்டுப் பெருமை அண்ணன் தம்பியோடே சொல்லிக் கொண்டாளாம்.

ஆத்தாளும் மகளும் காத்தானுக்கு அடைக்கலம்; அவன் காத்தாலும் காத்தான்; கை விட்டாலும் விட்டான்.

ஆத்தாளை அக்காளைப் பேசுகிறதில் கோபம் இல்லை; அகமுடையாளைப் பேசுகிறதற்குத்தான் கோபம் பொங்கிப் பொங்கி வருகிறது.

ஆத்தாளோடு போகிறவனுக்கு அக்காள் ஏது? தங்கச்சி ஏது? 2185

ஆத்தி நார் கிழித்தாற்போல் உன்னைக் கிழிக்கிறேன்.

ஆத்திரக்காரன் கோத்திரம் அறிவானா?

(பா-ம்.) அறியான்.

ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு.
(+ஆவேசம் கொண்டவனுக்கு மதியூகம் தட்டு.)
ஆத்திரத்துக்கு அவிசாரி ஆடினால் கோத்திரம் பட்ட பாடுபடுகிறது.
ஆத்திரத்தை அடக்கினாலும் அடக்கலாம்; மூத்திரத்தை அடக்க முடியாது. 2190

(பா-ம்.) பொறுத்தாலும் பொறுக்காது; அடக்கப்படாது.

ஆத்திரப் பட்டவனுக்கு அப்போது இன்பம்.
ஆத்திரம் உடையான் தோத்திரம் அறியான்.

(பா-ம்.) கோத்திரம்.

ஆத்திரம் கழிந்தால் ஆண்டவன் ஏது?
ஆத்திரம் கஷ்டத்தைக் கொடுக்கும்.

(பா-ம்) நஷ்டத்தை.

ஆத்திரம் பெரிது; ஆனாலும் புத்தி மிகப் பெரிது. 2195

ஆத்திரம் பெரிது; ஆனாலும் மூத்திரம் பெரிது.
ஆத்தும சுத்தியாகிய நெஞ்சில் இலக்கணம் தெரியாதவனுக்குப் பஞ்ச லக்ஷணம் தெரிந்து பலன் என்ன?

ஆத்துமத் துரோகம் செய்தால் அப்போதே கேட்கும்.
ஆத்தூர் பாலூர் அழகான சீட்டஞ்சேரி, அழகு திருவானைக் கோவில் இருந்துண்ணும் விச்சூரு முப்போகம் நிலம் விளைத்தாலும் உப்புக்காகாத காவித்தண்டலம்.

(இவை செங்கற்பட்டுக் கருகிலுள்ள ஊர்கள்.)

ஆத்தூரான் பெண்டாட்டி ஆரோடோ போனாளாம்; சேத்தூரான் தண்டம் அழுதானாம். 2200

ஆத்தை படுகிற பாட்டுக்குள்ளே மகன் மோருக்கு அழுகிறான்.
ஆத்தை வீட்டுச் சொண்டே, மாமியார் வீட்டேயும் வந்தாயோ.

(யாழ்ப்பாண வழக்கு.)

ஆத்ம சுத்தி என்கிற நெஞ்சிலக்கணம் தெரியாதவனுக்கு பஞ்ச லக்ஷணம் தெரிந்து என்ன பயன்?

ஆத்ம ஸ்துதி ஆறு அத்தியாயம்; பர நிந்தை பன்னிரண்டு அத்தியாயம்.

(பகவத்கீதையைப் பற்றியது.)

ஆதரவு அற்ற வார்த்தையும் ஆணி கடவாத கை மரமும் பலன் செய்யாது. 2205

ஆதரவும் தேவும் ஐந்து வருஷத்திலே பலன் ஈயும்.
ஆதவன் உதிப்பதே கிழக்கு; அக்கம நாயக்கர் சொல்வதே வழக்கு; அதைக் கேட்டு நடத்தல் மினுக்கு; எதிர்த்துப் பேசினால் தொழுக்கு.

ஆதவன் உதிப்பதே கிழக்கு; கணக்கன் எழுதுவதே கணக்கு.
ஆதனக் கோட்டைக்கும் செவ்வாய்க் கிழமையாம்.
ஆதாயம் இல்லாத செட்டி ஆற்றைக் கட்டி இறைப்பானா? 2210

ஆதாயம் இல்லாத செட்டியார் ஆற்றோடே போவாரோ?

(பா-ம்.) செட்டி ஆற்றோடே போகிறானாம்.

ஆதாயம் உள்ளவரை ஆற்றைக் கட்டி இறைத்து விட்டுப் போகிறான்.

ஆதாயமே செலவு; அறை இருப்பதே நிலுவை.
ஆதி அந்தம் இல்லா அருமைப் பொருளே கர்த்தன்.
ஆதி கருவூர். அடுத்தது வெஞ்சமாக் கூடலூர். 2215

ஆதி கருவூர், அழும்பப் பயல் வேலூர்.
ஆதித்தன் தெற்கு வடக்கு ஆனாலும் சாதித்தொழில் ஒருவரையும் விடாது.

(பா-ம்.) சனித்தொழில்.

ஆதி முற்றினால் வியாதி.
ஆதீனக்காரனுக்குச் சாதனம் வேண்டுமா?
ஆந்தை சிறிது; கீச்சுப் பெரிது. 2220
ஆந்தை பஞ்சையாய் இருந்தாலும் சகுனத்தில் பஞ்சை இல்லை.
ஆந்தை விழிக்கிறது போல விழிக்கிறான்.
ஆந்தை விழி விழித்தால் அருண்டு போவாரோ?
ஆப்பக்காரியிடம் மாவு விலைக்கு வாங்கின மாதிரி.
ஆப்பைப் பிடுங்கின குரங்கு நாசம் அடைந்தது போல. 2225
ஆபத்தில் அறியலாம் அருமைச் சிநேகிதனை.

(பா-ம்.) நண்பனை.

ஆபத்தில் காத்தவன் ஆட்சியை அடைவான்.
ஆபத்தில் காத்தவன் ஆண்டவன் ஆவான்.

ஆபத்தில் சிநேகிதனை அறி.
ஆபத்துக்கு உதவாத நண்பனும் சமயத்துக்கு உதவாத பணமும் ஒன்றுதான். 2230

ஆபத்துக்கு உதவாத பெண்டாட்டியை அழகுக்கா வைத்திருக்கிறது?

(பா-ம்.) ஆகாத.

ஆபத்துக்கு உதவினவனே நண்பன்.

(பா-ம்.) பந்து.

ஆபத்துக்கு உதவுவானா அவிசாரி அகமுடையான்.

(பா-ம்.) விலைமாது புருஷன்.

ஆபத்துக்குப் பயந்து ஆற்றில் நீந்தினது போல.
ஆபத்துக்குப் பாபம் இல்லை. 2235

(பா-ம்.) தோஷமில்லை.

ஆபத்து சம்பத்து.
ஆபத்தும் சம்பத்தும் ஆருக்கும் உண்டு?
ஆபஃபுனந்து, ஒருபிடி நாகக் கொழுந்து.
ஆபால கோபாலம்.
ஆபீஸ் பண்ணி ருபீஸ் வாங்கி ஜோபியில் போடுகிறான். 2240

ஆபீஸில் ஐயா அதிகாரம்; அகத்தில் அம்மா அதிகாரம்.
ஆம் என்ற தோஷம், கனத்தது வயிற்றிலே.
ஆம் என்றும் ஊம் என்றும் சொல்லக் கூடாது.
ஆம் காலம் ஆகும்; போம் காலம் போகும்.
ஆம் காலம் எல்லாம் அவிசாரி ஆடிச் சாங்காலம் சங்கரா சங்கரா என்றாளாம். 2245

ஆமணக்கு எண்ணெய் வார்த்துப் புட்டம் கழுவினாற் போல.
ஆமணக்கும் பருத்தியும் அடர விதைத்தல் ஆகாது.
ஆமணக்கு முத்து ஆணி முத்து ஆகுமா?
ஆமணக்கு விதைத்தால் ஆச்சா முளைக்குமா?
ஆமை அசையாமல் ஆயிரம் முட்டையிடும். 2250

ஆமை எடுக்கிறது மல்லாத்தி; நாம் அதைச் சொன்னால் பொல்லாப்பு.

(பா-ம்.) ஆமை சுடுகிறது.

ஆமைக்குப் பத்து அடி என்றால் நாய்க்கு நாலு அடி.
ஆமை கிணற்றிலே, அணில் கொம்பிலே.

ஆமை தன் வாயால் கெட்டது போல.
ஆமை திடலில் ஏறினாற் போல. 2255

ஆமை பிடிப்பார் மல்லாத்துவார்; நாம் அதைச் சொன்னால் பாவம்.
ஆமை புகுந்த வீடும் அமீனா புகுந்த விடும் உருப்படா.
ஆமை புகுந்த வீடும் வெள்ளைக்காரன் காலடி வைத்த ஊரும் பாழ்.
ஆமை மல்லாத்துகிறாற் போல.
ஆமையுடனே முயல் முட்டையிடப் போய் கண் பிதுங்கிச் செத்ததாம். 2260

ஆமையைக் கவிழ்த்து அடிப்பார்களோ; மல்லாத்திச் சுடுவார்களோ? நான் சொன்னால் பாவம்.

ஆமை வேகமா, முட்டை வேகமா?
ஆய்ச்சல் ஆய்ச்சலாய் மழை பெய்கிறது.
ஆய்ந்து ஓய்ந்து அக்காளிடம் போனால் அக்காள் இழுத்து மாமன்மேல் போட்டாளாம்.

ஆய்ந்து ஓய்ந்து பாராதான் தான் சாவக் கடவான். 2265

ஆய்ந்து பாராதான் காரியம் தான் சாந்துயரம் தரும்.
ஆய் பார்த்த கல்யாணம் போய்ப் பார்த்தால் தெரியும்.
ஆய் பிச்சை எடுக்கிறான்; பிள்ளை ஜட்ஜ் வேலை பார்க்கிறான்.
ஆய உபாயம் அறிந்தவன், அரிது அல்ல வெல்வது.
ஆயிரக் கல நெல்லுக்கு ஓர் அந்து போதும். 2270
ஆயிரத்தில் ஒருவனே அலங்காரப் புருஷன்.
ஆயிரத்திலே பிறந்து ஐந்நூற்றிலே கண் விழிக்கிறது.
ஆயிரத்திலே பிறந்து ஐந்நூற்றிலே கால் நீட்டினது போல.
(பா-ம்.) ஐந்நூற்றிலே விழித்தாள்; காலை வைக்கிறது.
ஆயிரம் அகணியால் கட்டிய வீட்டுக்கு ஆனைப்பலம்.
ஆயிரம் அரைக் காசு. 2275
ஆயிரம் ஆனாலும் அவிசாரி சமுசாரி ஆகமாட்டாள்.
ஆயிரம் ஆனாலும் ஆரணிச் சேலை ஆகாது.
ஆயிரம் ஆனாலும் பெண் புத்தி பின்புத்தி.
ஆயிரம் ஆனாலும் மாயூரம் ஆகாது.

(பா-ம்.) ஆகுமா?

ஆயிரம் ஆனாலும் மாயூரம் வெண்ணெய் ஆகுமா? 2280
ஆயிரம் உடையார் அமர்ந்திருப்பார்; துணி பொறுக்கி தோம் தோம் என்று கூத்தாடுவான்.

(பா-ம்.) தொந்தோம் தொந்தோம் என்று.

ஆயிரம் உடையான் அமர்ந்திருப்பான்; அரைப்பணம் உடையான் ஆடி விழுவான்.

ஆயிரம் உளி வாய்ப்பட்டு ஒரு லிங்கம் ஆக வேணும்.

ஆயிரம் எறும்பும் ஆனைப்பலம்.

ஆயிரம் கட்டு அண்டத்தைத் தாங்கும். 2285

ஆயிரம் கட்டு ஆனைப் பலம்.

ஆயிரம் கப்பியில் நழுவின சுப்பி.

ஆயிரம் கல நெல்லுக்கு ஓர் அந்துப் பூச்சி போதும்.

ஆயிரம் காக்கைக்கு ஒரு கல்.

ஆயிரம் காக்கைக்குள் ஓர் அன்னம் அகப்பட்டது போல. 2290

ஆயிரம் காலத்தில் ஆனி அடி அருகும்; தேக்கு நீர் வற்றும்; தேவ தாரு பால் வற்றும்.

ஆயிரம் காலத்துப் பயிர்.

ஆயிரம் காலம் குழலில் இட்டாலும் நாயின் வால் நிமிர்ந்து விடுமா?

ஆயிரம் காலே அரைக்காற் பணம்.

ஆயிரம் காலே மாகாணி. 2295

ஆயிரம் குணத்துக்கு ஒரு லோப குணம் தட்டு.

ஆயிரம் குணம் ஒரு லோப குணத்தால் தட்டும்.

ஆயிரம் குதிரையை அற வெட்டின சிப்பாய்தானா இப்போது பறைச் சேரியில் நாயோடு பங்கம் அழிகிறான்?

ஆயிரம் குருடர்கள் சேர்ந்தாலும் சூரியனைப் பார்க்க முடியுமா?

ஆயிரம் கொடுத்து ஆனை வாங்கி அங்குசம் வாங்கப் பேரம் பண்ணினானாம். 2300

ஆயிரம் கொடுத்து ஆனை வாங்குகிறோமே, அது பல் விளக்கு கிறதா?

ஆயிரம் கோவிந்தம் போட்டாலும் அமுது படைக்கிறவனுக்கு அல்லவோ தெரியும் வருத்தம்?

ஆயிரம் கோழி தின்ற வரகு போல்.

ஆயிரம் செக்கு ஆடினாலும் அந்திக்கு எண்ணெய் இல்லை.

ஆயிரம் சொல்லுக்கு அரை எழுத்து. 2305

ஆயிரம் சொன்னாலும் அவிசாரி சமுசாரி ஆவாளா?

ஆயிரம் தடவை சொல்லி அழுதாச்சு.

ஆயிரம் தலை படைத்த ஆதிசேடனாலும் சொல்ல முடியாது.

ஆயிரம் நட்சத்திரம் கூடிச் சந்திரன் ஆகுமா?

ஆயிரம் நட்சத்திரம் கூடினாலும் ஒரு சந்திரன் ஆகாது. 2310

(பா-ம்.) ஆகுமா?

ஆயிரம் நற்குணம் ஒரு லோப குணத்தால் கெடும்.

ஆயிரம் நாள் இருந்தாலும் அநியாயச் சாவு.

ஆயிரம் பசுக்களில் ஒரு பசு உதைத்துக் கொண்டால் நஷ்டமா?

(பா-ம்.) உதைத்துக் கொண்டால் என்ன?

ஆயிரம் பட்டும் அவம் ஆச்சு; கோயிலைக் கட்டியும் குறை ஆச்சு.

ஆயிரம் பனை உள்ள அப்பனுக்குப் பிறந்தும் பல்லுக் குத்த ஓர் ஈர்க்கு இல்லை. 2315

ஆயிரம் பாட்டுக்கு அடி தெரியும்; நூறு பாட்டுக்கு நுனி தெரியும்.

(பா-ம்.) சொல்வான்.

ஆயிரம் பாம்பில் ஒரு தேரை பிழைக்கிறாற் போல.

ஆயிரம் பாம்பினுள் அகப்பட்ட தேரைபோல.

ஆயிரம் பேர் கூடினாலும் ஓர் அந்துப்பூச்சியைக் கொல்லக் கூடாது.

ஆயிரம் பேர் இடத்தில் சிநேகம் பண்ணினாலும் ஆண்பிள்ளைகளுக்கென்ன? 2320

ஆயிரம் பேரைக் கொன்றவன் அரை வைத்தியன்.

(பா-ம்.) வேரைக் கண்டவன்; அரைப் பரியாரி.

ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணம் செய்து வை.

(பா-ம்.) ஒரு தாலி கட்டி வை.

ஆயிரம் பொய் சொல்லிக் கோயிலைக் கட்டு.

ஆயிரம் பொன் பெற்ற ஆனை பல் விளக்குகிறதா?

ஆயிரம் பொன் 'பெற்ற குதிரைக்கு அரைப்பணத்தில் சவுக்கு. 2325

(பா-ம்.) கழுதைக்கு.

ஆயிரம் பொன் பெற்ற குதிரையானாலும் சவுக்கடி வேண்டும்.

ஆயிரம் பொன் போட்டு ஆனை வாங்கி அரைப் 'பணத்து அங்குசத்துக்குப் பால் மாறுகிறதா?

(பா-ம்.) ஆயிரம் வராகன் அழுவதா?

ஆயிரம் பொன்னுக்கு ஆனை வாங்கினாலும் அரைக் காசுக்குத் தான் சாட்டை வாங்க வேணும்.
ஆயிரம் மாகாணி அறுபத்திரண்டரை.
ஆயிரம் முடி போட்டாலும் ஆனைப் பலம் வருமா? 2330

ஆயிரம் ரூபாய் கொடுத்து ஆனை வாங்கி ஆறு காசு கொடுத்துச் சவுக்கு வாங்கவில்லை.

(பா-ம்.) அரைக்காசு.

ஆயிரம் ரூபாய் முதலில்லாமல் பத்து ரூபாய் நஷ்டம்.
ஆயிரம் வந்தாலும் அவசரம் ஆகாது.
ஆயிரம் வந்தாலும் ஆயத்தொழில் ஆகாது.
ஆயிரம் வந்தாலும் கோபம் ஆகாது. 2335

ஆயிரம் வருஷம் ஆனாலும் ஆனை மறக்குமா?
ஆயிரம் வருஷம் சென்று செத்தாலும் அநீதிச் சாவு ஆகாது.
ஆயிரம் வித்தை கற்றாலும் உலகத்தில் ஆடம்பரம் வேண்டும்.
ஆயிரம் வேரைக் கொன்றவன் அரை வைத்தியன்.

(பா-ம்.) கண்டவன்.

ஆயில்யத்தில் மாமியார் ஆசந்தியிலே. 2340

ஆயுசுக்கும் வியாதிக்கும் சம்பந்தம் இல்லை.
ஆயுசு கெட்டியானால் ஔடதம் பலிக்கும்.
ஆயுசு பூராவாக இருந்தால் மாந்தம் மயிரைப் பிடுங்குமா?
ஆயுதப் பரீக்ஷை அறிந்தவன் ஆயிரத்தில் ஒருவன்.

(பா-ம்.) நூற்றில்.

ஆயுதம் இல்லாரை அடிக்கிறதா? 2345
ஆயோதன முகத்தில் ஆயுதம் தேடுகிறது போல.

(ஆயோதனம்-யுத்தம்)

ஆர் அடா என் கோவிலிலே ஆண் நாற்றம், பெண் நாற்றம்?
ஆர் அடா விட்டது மான்யம்? நானே விட்டுக் கொண்டேன்.
ஆர் அற்றுப் போனாலும் நாள் ஆற்றும்.
ஆர் ஆக்கினாலும் சோறு ஆகவேணும். 2350

ஆர் ஆத்தாள் செத்தாலும் பொழுது விடிந்தால் தெரியும்.
ஆர் ஆர் என்பவர்கள் எல்லாம் தீக் குளிப்பார்களா?
ஆர் ஆருக்கு ஆளானேன், ஆகாத உடம்பையும் புண்ணாக்கிக் கொண்டு.

(பா-ம்.) நான் ஆவேன்.

ஆர் இட்ட சாபமோ அடி நாளின் தீவினையோ?

ஆர்க்காட்டு நவாபு என்றாலும் அரைக்காசுக்குப் பயன் இல்லை. 2355

ஆர் கடன் ஆனாலும் மாரி கடன் ஆகாது.

ஆர் கடன் நின்றாலும் மாரி கடன் நிற்காது.

ஆர் கடன் பட்டாலும் மாரி கடன் வைக்கக் கூடாது.

(பா-ம்.) பட்டாலும்.

ஆர் குடியைக் கெடுக்க ஆண்டி வேஷம் போட்டாய்?

ஆர் குத்தினாலும் அரிசி ஆவது ஒன்று. 2360

ஆர் குத்தினாலும் அரிசி ஆனால் சரி.

(பா-ம்.) ஆகவேண்டும்.

ஆர் கெட்டால் என்ன? ஆர் வாழ்ந்தால் என்ன?

ஆர் சமைத்தாலும் அடுப்புக் கட்டி மூன்று வேண்டும்.

(பா-ம்.) அடுப்புக் கல்.

ஆர் சுட்டாலும் பணியாரம் ஆகவேண்டும்.

ஆர்த்தார் எல்லாம் போருக்கு உரியவர் அல்லர். 2365

ஆர் புருஷனை ஆர் கல்யாணம் பண்ணிக் கொள்ள முடியும்?

ஆர்மேல் கண்? அனந்திமேல் கண்.

ஆர் வாழ்வு ஆருக்கு நின்றது?

ஆர் வாழ்வுதான் சதம்?

ஆர் வைத்த கொள்ளியோ வீடு பற்றி எரிகிறது. 2370

ஆரக் கழுத்தி அரண்மனைக்கு ஆகாது.

ஆரணியமான அழகாபுரிக்கு ஒரு கோரணியான குரங்கு வந்து தோன்றிற்று.

ஆரம்ப சூரத்தனம்.

(பா-ம்.) சூரத்வம்.

ஆரல்மேல் பூனை அந்தண்டை பாயுமோ இந்தண்டை பாயுமோ?

ஆராகிலும் படி அளந்து விட்டதா? 2375

(பா-ம்.) அடி.

ஆராய்ந்து பாராதவன் காரியம் தான் சாந் துயரம் தரும்.

ஆராய்ந்து பாராமுன் தலையிடாதே.

ஆரால் கெட்டான் நோரால் கெட்டான்.

(நோரு-வாய்; தெலுங்கு.)

ஆரால் கேடு, வாயால் கேடு.

ஆராவது என்னைத் தூக்கி மாத்திரம் பிடிப்பார்களானால் நான் பிணக்காடாக வெட்டுவேன் என்று முடவன் கூறியது போல. 2380

ஆரியக் கூத்தாடினாலும் காரியத்திலே கண்.

ஆருக்கு அழுவேன் அப்பா ஹைதர் அலி.

ஆருக்கு ஆகிலும் துரோகம் செய்தால் ஐந்தாறு நாள் பொறுத்துக் கேட்கும்; ஆத்மத் துரோகம் செய்தால் அப்போதே கேட்கும்.

(பா-ம்.) பொறுக்கும்.

ஆருக்கு ஆர் சதம், ஆருக்கு என்று அழுவேனடா ஹைதர் அலி?

(பா-ம்.) ஆடுவேன்.

ஆருக்குப் பிறந்து மோருக்கு அழுகிறாய்? 2385

ஆருக்கும் அஞ்சான், ஆர் படைக்கும் தோலான்.

(பா-ம்.) பகைக்கும்.

ஆருக்கும் பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்.

ஆருக்கும் மாட்டாதவன் பெண்டுக்கு மாட்டுவான்.

ஆருக்கு வந்ததோ, எவருக்கு வந்ததோ என்று இருக்காதே.

ஆருக்கு வந்த விருந்தோ என்று இருந்தால் விருந்தாளி பசி என்னாவது? 2390

ஆரும் அகப்படாத தோஷம், மெத்தப் பதிவிரதை.

ஆரும் அற்றதே தாரம்; ஊரில் ஒருத்தனே தோழன்.

ஆரும் அற்றவருக்குத் தெய்வமே துணை.

ஆரும் அறியாத அரிச்சந்திரன் கட்டின தாலி.

ஆரும் அறியாமல் கொண்டு கொடுத்தானாம்; காடு மேடெல்லாம் கரி ஆக்கினானாம். 2395

ஆரும், ஆரும் உறவு? தாயும் பிள்ளையும் உறவு.

ஆரும் இல்லாத ஊரிலே அசுவமேதம் செய்தான்.

(பா-ம்.) ஆகுமா?

ஆரும் இல்லாப் பெண்ணுக்கு அண்டை வீட்டுக்காரன் மாப்பிள்ளை.

ஆரே சாரே என்கிறவனுக்குத் தெரியுமா? அக்கினி பார்க்கிறவனுக்குத் தெரியுமா?

ஆரை இறுக்கி முகம் பெறுகிறது? பிள்ளையை இறுக்கி முகம் பெறுகிறது. 2400

ஆரைக் காது குத்துவது?

ஆரைப் பகைத்தாலும் ஊரைப் பகைக்காதே.

ஆரை நம்பித் தோழா, ஆற்றுக்கு ஏற்றம் போட்டாய்?

(பா-ம்.) காருக்கு

ஆரை நம்பினாலும் அரங்கியை நம்பக் கூடாது.

ஆரை பற்றிய நஞ்சையும் அறுகு பற்றிய புஞ்சையும். 2405

(களைபோக்கல் கடினம்.)

ஆரோக்கியம் பெரும் பாக்கியம்.

ஆரோக்கியமே ஆயுசு விருத்தி.

ஆரோ செத்தாள்? எவளோ அழுதாளாம்.

(பா-ம்.) எவனோ; ஏனோ.

ஆரோடு போனாலும் போதோடு வந்துவிடு.

(குறவர் பேச்சு.)

ஆல் என்னிற் பூல் என்னுமாறு 2410

(பழமொழி நானூறு.)

ஆல் பழுத்தால் அங்கே கிளி; அரசு பழுத்தால் இங்கே கிளி.

ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரோடி மூங்கில்போல் சுற்றம் முசியாமல் வாழ்ந்திருப்பீர்.

(பா-ம்.) ஆல்போல் கிளைத்து விழுது விட்டு.

ஆலகால விஷம் போன்றவன் அந்தரம் ஆவான்.

ஆலங்காட்டுப் பேய் மாதிரி அலைகிறான்.

ஆலசியம் அதிக விஷம். 2415

(பா-ம்.) அமுதமும் விஷம்.

ஆலம்பாடி அழகு எருது; உழவுக்கு உதவா இழவு எருது.

ஆலமரத்துக்கு அறுகம்புல்லின் வேரா?

ஆலமரத்தைச் சுற்றி வந்து அடிவயிற்றைத் தொட்டுப் பார்த்தது போல.

(பா-ம்.) தடவிப் பார்த்தது போல.

ஆலமரத்தைப் பிடித்த பேய் அத்தி மரத்தைப் பிடித்ததாம்.
ஆலமரத்தை விழுது தாங்குவது போல. 2420
ஆலமரம் பழுத்தால் பறவைக்குச் சீட்டு அனுப்புவார்களா?

(பா-ம்.) ஆர் சீட்டு அனுப்புவது?

ஆலயத்துக்கு ஓர் ஆனையும் ஆஸ்தானத்துக்கு ஒரு பிள்ளையும்.
ஆலயம் அறியாது ஓதிய வேதம்.
ஆலயம் இடித்து அன்னதானம் பண்ணப் போகிறான்.

(பா-ம்.) எடுத்து,

ஆலயம் தகர்த்து அன்னதானம் பண்ணுகிறான். 2425
ஆலயம் தொழுவது சாலவும் நன்று.

(கொன்றை வேந்தன்.)

ஆலின்மேற் புல்லுருவி.
ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி; நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி.

(நாலும் இரண்டும்; எண்கள்; நாலடியாரும் குறளும்.)

ஆலூரு, சாலூரு, அறுதலிப் பாக்கம், முண்டை களத்தூரு; மூதேவி முறப்பாக்கம்.

(இவை செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள ஊர்கள்.)

ஆலே பூலே என்று அலம்பிக் கொண்டிருக்கிறது. 2430
ஆலை இல்லா ஊருக்கு இலுப்பைப்பூச் சர்க்கரை.

(பா-ம்.) கருப்பட்டி.

ஆலைக் கரும்பு போலவே நொந்தேன்.
ஆலைக் கரும்பும் வேலைத் துரும்பும் போல ஆனேன்.

(வேலை-கடல்.)

ஆலைக்குள் அகப்பட்ட சோலைக் கரும்பு போல.
ஆலை பாதி; அழிம்பு பாதி. 2435
ஆலை வாயிலே போன கரும்பு போல்.
ஆலை விழுது தாங்கினது போல.

ஆவணி அவிட்டத்திற்கு அசடியும் சமைப்பாள்.

(நிதானமாகச் செய்யலாம் என்பது கருத்து.)

ஆவணி அழகன்.

(-வெற்றிலை.)

ஆவணி அழுகல் தூற்றல். 2440

(பா-ம்.) ஆவணி மாதம் அழுகைத் தூற்றல்.

ஆவணி இலை அசையக் காவேரி கரை புரள.

(பா-ம்.) இலை உதிர.

ஆவணி தலை வெள்ளமும் ஐப்பசி கடை வெள்ளமும் கெடுதி.

ஆவணி பறந்தால் புரட்டாசி வரும்; தாவணி பறந்தால் புடைவையாகி வரும்.

ஆவணி மருதாணி அடுக்காய்ப் பற்றும்.

ஆவணி மாதம் அழுகைத் தூற்றல். 2445

ஆவணி மாதம் ஐந்தாந் தேதி சிங்க முழக்கம், அவ்வருஷம் மழை.

ஆவணி மாதம் தாவணி போட்டவள் புரட்டாசி மாதம் புருஷன் வீடு போனாளாம்.

ஆவணியில் அகல நடு; ஐப்பசியில் அணைத்து நடு.

ஆவணி முதல் நட்ட பயிர் பூவணி அரசன் புகழ் போலும்.

ஆவணியில் நெல் விதைத்தால் ஆனைக் கொம்பு தானாய் விளையும். 2450

ஆவத்தை அடரான் பாவத்தைத் தொடரான்.

ஆவதற்கும் அழிவதற்கும் பேச்சே காரணம்.

ஆவது அஞ்சிலே தெரியும்; காய்ப்பது பிஞ்சிலே தெரியும்.

ஆவதும் பெண்ணாலே; அழிவதும் பெண்ணாலே.

ஆவர்க்கும் இல்லை; தேவர்க்கும் இல்லை. 2455

ஆவர் மாத்திரம் இருந்தால் என்ன? அன்னம் இறங்கினால் அல்லவோ பிழைப்பான்.

ஆவாரை இலையும் ஆபத்துக்கு உதவும்.

ஆவாரை பூத்திருக்கச் சாவாரைக் கண்டதுண்டோ?

(உள்ள இடத்தில் சாவார் உண்டா?)

ஆவுடையார் கோயில் அடங்கலுக்குப் புறத்தி.

ஆவுடையாரையும் லிங்கத்தையும் ஆறு கொண்டு போகச்சே
சுற்றுக் கோயில் சுவாமி எல்லாம் சர்க்கரைப் பொங்கலுக்கு
அழுகின்றனவாம். 2460

ஆவும் தென்னையும் அஞ்சு வருஷத்தில் பலன் ஈயும்.
ஆவென்று போனபின் அள்ளி இடுவது ஆர்?
ஆ வேறு நிறம் ஆனாலும் பால் வேறு நிறம் ஆகுமா?
ஆழ்வார் சாதித்தது ஆயிரம்; அம்மையார் சாதித்தது பதினாயிரம்.

(ஆழ்வார், நம்மாழ்வார்.)

ஆழ்வாரே போதாதோ? அடியாரும் வேண்டுமோ? 2465

(ஐயங்காரும் வேண்டுமோ?)

ஆழ அமுக்கினாலும் நாழி நானாழி கொள்ளாது.

ஆழ உழுதால் ஆட்டுரத்துக்கும் அதிகம்.

ஆழ உழுதாலும் அடுக்க உழு.

ஆழ உழுது அரும் பாடு பட்டாலும் பூமி விளைவது
புண்ணியவான்களுக்கே.

ஆழங்கால் சேற்றில் அழுந்தியிருக்கிறான். 2470

ஆழப் பொறுத்தாலும் வாழப் பொறுக்க மாட்டார்கள்.
ஆழம் அறியாமல் காலை விட்டுக் கொண்டேன்; அண்ணாமலை
அப்பா காலை விடு.
(+ என்ற கதை)
ஆழம் அறியாமல் காலை விடாதே.
(இடாதே.)
ஆழம் அறியும் ஓங்கில்; மேளம் அறியும் அரவம்.

(ஓங்கில்-ஒரு வகை மீன்.)

ஆழம் தெரியாமல் காலை விட்டுக் கொண்டது போல. 2475

ஆழாக்கு அரிசி அன்ன தானம்; போய் வருகிற வரைக்கும்
புண்ணிய தானம்.
ஆழாக்கு அரிசி, மூழாக்குப் பானை, முதலியார் வருகிற
வீறாப்பைப் பார்.

(மூழாக்கு-மூன்று ஆழாக்கு.)

ஆழாக்கு அரிசி வாங்கி ஐந்து கடை மீனை வாங்கிப் பொல்லாத
புருஷனுக்குப் போட நேரம் இல்லை.

ஆழி எல்லாம் வயல் ஆனால் என்ன? அவனி எல்லாம் அன்னமயம்
ஆனால் என்ன?

ஆழி கொண்டாலும் காழி கொள்ளாது. 2480

(காழி-சீகாழி.)

ஆழுக்கும் பாழுக்கும் ஒருவந்தூரான்; கடா வெட்டுக்கு மோகனூரான்.

(நாமக்கல் தாலுக்காவில் உள்ள ஊர்கள் இவை.)

ஆழும் பாழும் அறைக்கீரைப் பாத்தியும்.

ஆழும் பாழும் ஆகிறது.

ஆள் அகப்பட்டால் மிரட்டுகிறதா?

ஆள் அண்டிப் பேசாதவனும் செடி அண்டிப் பேளாதவனும் ஒன்று. 2485

ஆள் அரை முழம்; கோவணம் முக்கால் முழம்.

ஆள் அற்ற பாவம் அழுதாலும் தீராது.

ஆள் அறிந்து ஆசனம் போடு; பல் அறிந்து பாக்குப் போடு.

ஆள் ஆளும் பண்ணாடி எருது ஆர் மேய்க்கிறது?

ஆள் ஆளை இடிக்கும்; ஆள் மிடுக்குப் பத்துப் பேரை இடிக்கும். 2490

ஆள் ஆளைக் குத்தும்; பகரம் பத்துப் பேரைக் குத்தும்.

ஆள் ஆனையை மறந்தாலும் ஆனை ஆனை மறக்குமா?

ஆள் இருக்கக் குலை சாயுமா?

(கொலை.)

ஆள் இருக்கும் இளக்காரத்தில் ஆவாரையும் பீயை வாரி அடிக்கும்.

ஆள் இல்லா ஊருக்கு அழகு பாழ். 2495

ஆள் இல்லாத இடத்தில் அசுவமேத யாகம் பண்ணினது போல.

(இல்லாத ஊரில்.)

ஆள் இல்லாப் படை அம்பலம்.

ஆள் இல்லாப் பத்தினி, இடம் இல்லாப் பத்தினி, ஆளைக் கண்டால் ஈடு இல்லாப் பத்தினி.

ஆள் இல்லாமல் அடிக்கடி ஓடுமா?

ஆள் இல்லாமல் ஆயுதம் வெட்டுமா? 2500

ஆள் இளந்தலை கண்டால் தோணி மிதக்கப் பாயும்.

(இளந்தலை-குறைவு; கனம் இன்மை.)

ஆள் இளந்தலை கண்டு தோணி மிதக்கும்.

ஆள் இளப்பமாய் இருந்தால் எமனையும் நமனையும் பலகாரம் பண்ணுவான்.

ஆள் இளப்பமாய் இருந்தால் எருதும் மச்சான் முறை கொண்டாடும்.

ஆள் இளைத்ததைக் கண்டால் ஆவாரையும் பீ வாரி அடிக்கும். 2505

ஆள் உள்ளுக்குள்ளே இருக்கிறான்.

ஆள் ஏற நீர் ஏறும்.

ஆள் ஏறினால் உலை ஏறும்; உலை ஏறினால் உப்பு ஏறும்.

ஆள் கண்ட சமுத்திரம்.

ஆள் கண்டு ஏய்க்குமாம் ஆலங்காட்டு நரி. 2510

(மிரட்டுமாம்.)

ஆள் காட்டி சொந்தக்காரனையும் திருடனையும் பிடித்துக் கொடுக்கும்.

ஆள் காட்டி தெரியாமல் திருடப் போகிறவன் கெட்டிக்காரனா? அவன் காலடி பிடித்துப் போகிறவன் கெட்டிக்காரனா?

ஆள் காட்டிய விரலுக்கும் அன்னதானப் பலன்,

(விதுரன்.)

ஆள் கால், வாய் முக்கால்.

ஆள்கிறவளும் பெண்; அழிக்கிறவளும் பெண். 2515

ஆள் கொஞ்சம் ஆகிலும் ஆயுதம் மிடுக்கு.

ஆள் பஞ்சையாய் இருந்தாலும் ஆயுதம் திறமாய் இருக்க வேண்டும்,

ஆள் பாதி, அலங்காரம் பாதி.

ஆள்பாதி, ஆடை பாதி.

ஆள் பாதி, ஏர் பாதி. 2520

ஆள் பாரம் பூமியிலே.

ஆள் போகிறது அதமம்; மகன் போகிறது மத்தியமம்; தான் போகிறது உத்தமம்.

ஆள் போனால் சண்டை வருமென்று நாயை விட்டு ஏவின மாதிரி.

ஆள் மதத்தால் கீரை; ஆனை மதத்தால் வாழை.

ஆள் மறந்தாலும் ஆனை மறக்காது. 2525

ஆள் மெத்தக் கூடினால் மீன் மெத்தப் பிடிக்கலாம்.

ஆள் ஜம்பமே தவிர வேலை ஜம்பம் கிடையாது.

ஆளத் தெரியாத அண்ணாக்கள்ளன் ஒரு குழம்பு வைக்கத் தெரியவில்லை என்றானாம்.

ஆள மாட்டாதவனுக்குப் பெண்டாட்டி ஏன்?

(பெண்டு ஒரு கேடு.)

ஆளவந்தாரும் உடையவரும் சேர்ந்தால் வைகுண்டத்துக்குப் படி கட்டியிருப்பார்கள். 2530

ஆளன் இல்லாத துக்கம் அழுதாலும் தீராது;

(+சீர் இல்லாக் கல்யாணம் செய்தாலும் நிறக்காது.)

ஆளன் இல்லாத பெண்ணுக்கு வாழ்வு இல்லை.

ஆளன் இல்லாத மங்கைக்கு அழகு பாழ்.

ஆளன் இல்லாதவள் ஆற்று மணலுக்குச் சரி.

ஆளன் உறவு உண்டானால் மாமி மயிர் மாத்திரம். 2535

ஆளனைப் பிரிந்திருத்தல் அரிவையர்க்கு அழகன்று.

ஆளான ஆள் புகுந்தால் ஆமணக்கு விளக்கெண்ணெய் ஆகும்.

ஆளான ஆளுக்கு அவிழ் அகப்படாக் காலத்திலே காக்காய்ப் பிசாசு கஞ்சிக்கு அழுகிறது.

ஆளில் கட்டை அரண்மனைக்கு உதவான்.

ஆளிலும் ஆள் அம்மாப் பேட்டை ஆள். 2540

(ஆற்றல் உள்ளவன் 'என்பது பொருள். அம்மாப்பேட்டை தஞ்சை மாவட்டத்தில் உள்ளது.)

ஆளுக்கு ஆள் வித்தியாசம்.

ஆளுக்கு ஒத்த ஆசாரமும் ஊருக்கு ஒத்த உபசாரமும்.

(+வேண்டாமா?)

ஆளுக்கு ஒரு குட்டு வைத்தால் அடியேன் தலை மொட்டை.

(ஆண்டியின் த ல.)

ஆளுக்கு ஒரு குட்டுக் குட்டினாலும் அவனுக்குப் புத்தி வராது.

ஆளுக்கு ஒரு மயிர் பிடுங்கினால் அடியேன் தலை மொட்டை. 2545

ஆளுக்குக் கீரைத்தண்டு; ஆனைக்கு வாழைத்தண்டு.

ஆளுக்குத் தக்கபடி வேஷம் போடுதல்.

ஆளுக்குத் தகுந்த சொட்டுக் கொடுக்கிறது.

ஆளுக்குத் துக்குணி ஆள் பாரம்.

(ஆளுக்குச் சற்றே.)

ஆளுக்குள்ளே ஆளாய் இருப்பான். 2550

ஆளும் அம்பும்.

ஆளும் கோளும் படைத்தவனை வேலும் கோலும் என்ன செய்யும்?

ஆளை அடித்தால் அரைப்பணம்.

ஆளை அறிந்து தாண்டுகிறதா?

ஆளை அறிந்துதான் அறுக்கிறான். 2555

ஆளை ஆள் அறிய வேண்டும்; மீனைப் புளியங்காய் அறிய வேண்டும்.

ஆளை ஆள் குத்தும்; ஆள் மிடுக்குப் பத்துப் பேரைக் குத்தும்.

ஆளை ஏய்க்குமாம் நரி; அதனை ஏய்க்குமாம் ஒற்றைக்கால் நண்டு.

ஆளைக் கண்ட சமுத்திரம்.

ஆளைக் கண்டால் ஆறு மணி; ஆளைக் காணா விட்டால் மூன்று மணி. 2560

ஆளைக் கண்டு ஏமாற்றுமாம் ஆலங்காட்டுப் பேய்.

(ஏய்க்குமாம் பிசாசு.)

ஆளைக் கண்டு மலைக்காதே; ஊது காமாலை.

ஆளைச் சுற்றிப் பாராமல் அளக்கிறதா?

ஆளைச் சுற்றிப் பாராமல் அழுகிறாள் ஒரு காலே.

ஆளைச் சேர்த்தாயோ? அடிமையைச் சேர்த்தாயோ? 2565

ஆளை நீட்டிப் போடு.

ஆளைப் பார் சோளக்காட்டிலே.

(சோளக் கொல்லையிலே.)

ஆளைப் பார், சோளக் கொல்லைப் பொம்மை மாதிரி.

ஆளைப் பார்த்தால் அழகுதான்; ஏரில் கட்டினால் குழவுதான்.

ஆளைப் பார்த்தால் அழகுபோல; வேலையைப் பார்த்தால் குழவு போல. 2570

ஆளைப் பார்த்தால் அழகு மலை; வேலையைப் பார்த்தால் குழவு மலை.

ஆளைப் பார்த்தான்; தலையில் அடித்தான்.

ஆளைப் பார்த்தான் வாயால் ஏய்த்தான்.

(பார்த்துத்தான்.)

ஆளைப் பார்த்து ஆசனம் போடுவான்.

ஆளைப் பார்த்துக் கூலி கேட்கிறது; அவனைப் பார்த்துப் பெண்டு கேட்கிறது. 2575

ஆளைப் பார்த்து மலைக்காதே; ஊது கணை.

ஆளைப் பார்; முகத்தைப் பார்.
ஆற்றங்கரை மரம் விழும்.

(மரம் போலே.)

ஆற்றங்கரையில் தண்ணீர்; அடுப்பங்கரையில் வெந்நீர்.
ஆற்றப் புழுதி ஈரம் தாங்கும். 2580
ஆற்றாக் குலைப் பொல்லாப்பு அடித்துக் கொள்ளுகிறான்.
ஆற்றித் தூற்றி அம்பலத்திலே வைக்கப் பார்க்கிறான்.

(அம்பலத்திலே கொண்டு வந்தானாம்.)

ஆற்றில் இருந்து அரஹராப் பாடினாலும் சோற்றில் இருக்கிறான் சொக்கப்பன்.

ஆற்றில் கரைத்த புளியும் அங்காடிக்கு இட்ட பதரும் ஆயிற்று.

(போல.)

ஆற்றில் கரைத்த பெருங்காயம் போல். 2585
ஆற்றில் கரைத்த மஞ்சள்.

(அரைத்த மஞ்சள்.)

ஆற்றில் நிறையத் தண்ணீர் போனாலும் அள்ளிக் குடிக்கப் போகிறதா நாய்?

ஆற்றில் நிறையத் தண்ணீர் போனாலும் நாய் நக்கித்தான் குடிக்கும்.

ஆற்றில் பெரு வெள்ளம் நாய்க்கு என்ன? சளப்புத் தண்ணீர்.
ஆற்றிலே ஆயிரம் காணி தானம் பண்ணினாற் போலே. 2590

(ஆற்று மணலிலே ஆயிரம் குழி.)

ஆற்றிலே இறங்கினால் ஐம்பத்தெட்டுத் தொல்லையாம்.
ஆற்றிலே ஊறுகிறது, மணலிலே சுவருகிறது.
ஆற்றிலே ஒரு கால்; சேற்றிலே ஒரு கால்.
ஆற்றிலே கணுக்கால் தண்ணீரிலும் அஞ்சி நடக்க வேண்டும்.
ஆற்றிலே போகிற தண்ணீரை அப்பா குடி, ஐயா குடி. 2595

(அம்மா குடி, ஆத்தா குடி.)

ஆற்றிலே போட்டாலும் அளந்து போடு.

(கொட்டினாலும் கொட்டு.)

ஆற்றிலே போட்டாலும் அளந்து போடு; குப்பையிலே போட்டாலும் குறிப்பேட்டில் பதிந்து போடு.

ஆற்றிலே போட்டுக் குளத்திலே தேடுவது போல.

(சுந்தரர் கதை.)

ஆற்றிலே போனாலும் போவேனே அன்றித் தெப்பக்காரனுக்குக் காசு கொடுக்க மாட்டேன் என்றானாம்.
ஆற்றிலே வந்தது மடுவிலே போயிற்று. 2600

ஆற்றிலே வருகிறது, மணலிலே சொருகுகிறது.

ஆற்றிலே விட்ட தர்ப்பை போல் தவிக்கிறேன்.
ஆற்றிலே விட்ட தெப்பத்தைப் போலத் தவிக்கிறேன்.
ஆற்றிலே விளைகிறது மணலிலே சிதறுகிறது.
ஆற்றிலே வெள்ளம் போனால் அதற்கு மேலே தோணி போகும். 2605

ஆற்றிலே வெள்ளம் வந்தால் ஆனை தடுக்குமா?
ஆற்று அருகில் இருந்த மரமும் அரசு அறிந்த வாழ்வும் நிலைஅல்ல.

(இருந்த வாழ்வும் ,அரசன் அருகில் இருந்த.)

ஆற்றுக்கு அருகில் குடியிருந்த கதை.
ஆற்றுக்கு ஒரு நாணல்; நாட்டுக்கு ஒரு பூணல்.
ஆற்றுக்குச் செய்து அபத்தம்; கோயிலுக்குச் செய்து குற்றம். 2610

ஆற்றுக்கு நெட்டையும் சோற்றுக்குக் குட்டையும் வாசி.
ஆற்றுக்குப் பார்ப்பான் துணையா? சோற்றுக்குப் பயற்றங்காய் துணையா?

(பார்ப்பான் துணை அல்ல, பயற்றங்காய் கறியா?)

ஆற்றுக்குப் போகிறதும் இல்லை; அழகரைக் கும்பிடுகிறதும் இல்லை.
ஆற்றுக்குப் போவானேன்? செருப்பைக் கழற்றுவானேன்?
ஆற்றுக்குப் போன ஆசாரப் பாப்பாத்தி துலுக்கச்சி மேலே துள்ளி விழுந்தாளாம். 2615

ஆற்றுக்கும் பயம்; காற்றுக்கும் பயம்.
ஆற்றுக்கும் போகவேண்டாம்; செருப்பையும் கழற்ற வேண்டாம்.
ஆற்றுக்கு மிஞ்சி அரஹராப் போட்டாலும் சோற்றுக்கு மிஞ்சிச் சொக்கேசன்.
ஆற்றுக்குள்ளே போய் அரஹரா சிவசிவா என்றாலும் சோற்றுக்குள்ளே இருக்கிறானாம் சொக்கலிங்கம்.

(ஆற்றுக்குள்ளே நின்று.)

ஆற்றுதே, என்னைத் தேற்றுதே, அம்பலத்திலே என்னை ஏற்றுதே என்றான். 2620

ஆற்றுநீர் ஊற்றி அலசிக் கழுவினாலும் வேற்று நீர் வேற்று நீர் தான்.

ஆற்று நீர் பித்தம் போக்கும்; குளத்து நீர் வாதம் போக்கும்; சோற்று நீர் எல்லாம் போக்கும்.

ஆற்று நீர் வடிந்த பின் ஆற்றைக் கடக்க நினைத்தானாம்.

ஆற்று நீரில் அலசிக் கழுவினாலும் அலை.

ஆற்று நீரை நாய் நக்கிக் குடிக்குமோ? எடுத்துக் குடிக்குமோ? 2625

ஆற்றுப் பெருக்கும் அரச வாழ்வும் அரை நாழிகை.

ஆற்று மண்ணுக்கு வேற்று மண் உரம்.
(மாற்று மண்.)

ஆற்று மணலிலே தினம் புரண்டாலும் ஒட்டுகிறதுதான் ஒட்டும்.

ஆற்று மணலை அரைத்துக் கரைத்தாலும் வேற்று முகம் வேற்று முகந்தான்.

ஆற்று மணலை அளவிடக் கூடாது. 2630

ஆற்று மணலை எண்ணினாலும் எண்ணலாம்; அருச்சுனன் மனைவி யரை எண்ண முடியாது.

ஆற்று மணலையும் ஆகாசத்து நட்சத்திரத்தையும் அளவிடப் படுமோ?

ஆற்று வண்டல் தேற்றும் பயிரை.

ஆற்றுவார் இல்லாத துக்கம் நாளடைவில் ஆறும்.

ஆற்றுவாரும் இல்லை; தேற்றுவாரும் இல்லை. 2635

ஆற்று வெள்ளம் ஆனையை என்ன செய்யும்?

ஆற்றூர் அரிசியும் வேற்றூர் விறகும் இருந்தால் சாத்தூர் சௌக்கியம்.

ஆற்றூர் சேற்றூர் ஆற்றுக்கு அடுத்த ஊர், ஆறுமுக மங்கலம் ஆர் ஒருவர் போனாலும் சோறு கொண்டு போங்கள் சொன்னேன், சொன்னேன்.

(ஆண்டான் கவிராயர் கூற்று.)

ஆற்றை அடைக்கும் அதிவிடையம்.

(ஆற்றுடைப்பை, கிராணி வயிற்றுப் போக்கிற்கு அதி விடையம் மருந்து.)

ஆற்றைக் கட்டிச் செட்டியார் இறைத்தால் சும்மாவா இறைப் பார்? 2640

ஆற்றைக் கடக்க ஒருவன் உண்டானால் அவனைக் கடக்கவும் ஒருவன் உண்டு.

ஆற்றைக் கடக்கும்வரையில் அண்ணன் தம்பி; அப்புறம் நீ ஆர்? நான் ஆர்?

ஆற்றைக் கடத்தி விடு; ஆகாசத்தில் பறக்கக் குளிகை தருகிறேன் என்கிறான் மந்திரவாதி.

ஆற்றைக் கடந்தால் ஓடக்காரனுக்கு ஒரு சொட்டு.

ஆற்றைக் கண்டாயோ? அழகரைச் சேவித்தாயோ? 2645

ஆற்றைக் காணாத கண்களும் அழகரை வணங்காத கைகளும் இருந்தும் பயன் இல்லாதவை.

ஆற்றைக் கெடுக்கும் நாணல்; ஊற்றைக் கெடுக்கும் பூ ணூல்.

ஆற்றைத் தாண்டியல்லவோ கரை ஏறவேண்டும்?

ஆற்றோடு போகிற பிள்ளையில் பெண்ணுக்கு ஓர் அகமுடையான் கருப்பாகப் போச்சோ?

(கருப்பு-பஞ்சம்.)

ஆற்றோடு போகிறவன் நல்ல வேலைக்காரன்.

ஆற்றோடு போனாலும் ஆற்றோரோடே போகாதே. 2650

(திருநெல்வேலி மாவட்டப் பழமொழி.)

ஆற்றோடு போனாலும் கூட்டோடு போகாதே.

ஆற்றோடு போனாலும் தெப்பக்காரனுக்குக் காசு தர மாட்டேன்.

ஆற்றோடு போனாலும் போவான் செட்டி; தோணிக்காரனுக்கு அரைக்காசு கொடுக்கமாட்டான்.

(தெப்பக்காரனுக்கு ஒரு காசு.)

ஆற்றோடு போனாலும் தெப்பக்காரனுக்குக் காசு தர மாட்டேன். 2655

ஆற்றோடு வந்த நீர் மோரோடு வந்தது.

ஆற்றோடே போனாலும் போவேன்; தெப்பக்காரனுக்குக் கூலி கொடுக்க மாட்டேன் என்றானாம்.

(போகிறதே அல்லாமல் தெப்பக்காரனுக்கு ஒரு காசு கொடுக்கிறது இல்லை.)

ஆறாம் குழந்தை பெண்ணாகப் பிறந்தால் ஆனான குடித்தனமும் நீறாய் விடும்.

ஆறாம் திருநாள் ஆனை வாகனம்.

ஆறாம் பேறு பெண்ணாய்ப் பிறந்தால் ஆனான வாழ்வு நீறாய் விடும். 2660

(ஆனான குடித்தனம்.)

ஆறாம் மாசம் அரைக் கல்யாணம்.

ஆறா மீனின் ஓட்டம்.

ஆறாவது பிள்ளை ஆனை கட்டி வாழ்வான்.
ஆறாவது பிள்ளை பிறந்தால் ஆனை கட்டி வாழலாம்.

(ஆண்பிறந்தால்.)

ஆறிலும் சாவு; நூறிலும் சாவு. 2665

ஆறிலே செத்தால் அறியா வயசு; நூறிலே செத்தால் நொந்த வயசு.
ஆறின கஞ்சி பழங்கஞ்சி.
ஆறின சோறு ஆளனுக்கு மிஞ்சும்.
ஆறின சோறு பழஞ் சோறு.
ஆறின புண்ணிலும் அசடு நிற்கும். 2670

(அசடு-பொறுக்கு.)

ஆறினால் அச்சிலே வார்; ஆறாவிட்டால் மிடாவிலே வார்,
ஆறு அல்ல, நூறு அல்ல, ஆகிறது ஆகட்டும்.

ஆறு இல்லா ஊருக்கு அழகு பாழ்.

(இல்லை, வாக்குண்டாம்.)

ஆறு இல்லா ஊருக்குக் கேணியே கங்கை.
ஆறு எல்லாம் கண்ணீர்; அடி எல்லாம் செங்குருதி. 2675

ஆறு எல்லாம் பாலாய் ஓடினாலும் நாய் நக்கித்தானே குடிக்கும்?
ஆறுக்கு இரண்டு பழுதில்லை.

ஆறு கடக்கிறவரையில் அண்ணன் தம்பி; ஆறு கடந்தால் நீ ஆர்? நான் ஆர்?

ஆறு கடக்கைக்குப் பற்றின தெப்பம் போகவிடுமாப் போலே.
ஆறு கல்யாணம்; மூன்று பெண்கள்; மார்போடே மார்பு இடிபடுகிறது. 2680

(தள்ளுகிறது.)

ஆறு காதம் என்கிறபோது கோவணத்தை அவிழ்ப்பானேன்?

(அரைச் சீலையை, அவிழ்த்துக் குடுமியிலே கட்டிக் கொண்டானாம்.)

ஆறு காதம் என்கிற போதே கோவணம் கட்டினானாம்.
ஆறு காதம் என்ன, அவிழ்த்துக் கொண்டானாம் அரைத்துணியை.

ஆறு கெட நாணல் இடு; ஊறு கெடப் பூணாம் இடு; காடு கெட ஆடு விடு; மூன்றும் கெட முதலியை விடு.

(முதலையை.)

ஆறு கெடுத்தது பாதி; தூறு கெடுத்தது பாதி. 2685

ஆறு கொண்டது பாதி; தூறு கொண்டது பாதி.

ஆறு கொத்து, நூறு இறைப்பு; ஆறு சீப்பு, நூறு காய்.
(வாழை.)

ஆறு கொத்து, நூறு தண்ணீர்.
(வாழை.)

ஆறு கோணலாய் இருந்தாலும் நீரும் கோணலோ?
மாடு கோணலாய் இருந்தாலும் பாலும் கோணலோ?

ஆறு நாள் நூறு உழவிலும் நூறு நாள் ஆறு உழவு மேல். 2690

ஆறு நிறையத் தண்ணீர் போனாலும் அள்ளிக் குடிக்கப் போகிறதா நாய்?

ஆறு நிறையத் தண்ணீர் போனாலும் பாய்கிறது கொஞ்சம், சாய்கிறது கொஞ்சம்.

ஆறு நிறைய நீர் ஓடினாலும் நாய் நக்கித்தான் குடிக்க வேண்டும்.
(ஜலம், வெள்ளம்.)

ஆறு நீந்தின எனக்குக் குளம் நீந்துவது அரிதோ?

ஆறு நீந்தினவனுக்கு வாய்க்கால் எவ்வளவு? 2695

ஆறு நூறு ஆகும்; நூறும் ஆறு ஆகும்.

ஆறு நேராய்ப் போகாது.

ஆறு நேரான ஊர் நில்லாது.

ஆறு நேரான ஊரும், அரசனோடு எதிர்த்த குடியும், புருஷனோடு ஏறு மாறான பெண்டிரும் நீறு நீறு ஆகிவிடும்.

ஆறு பாதிக் குரங்கே, மரத்தை விட்டு இறங்கே. 2700

ஆறு பார் ஒத்து வந்தாலும் நாய் நக்கிக் குடிக்கும்.

ஆறு பார்க்கப் போக ஆய்க்குப் பிடித்தது சளிப்பு.

ஆறு பார்ப்பானுக்கு இரண்டு கண்.

ஆறு பிள்ளை அழிவுக்கு லட்சணம்.

ஆறு பிள்ளை பெற்றவளுக்குத் தலைச்சன் பிள்ளைக்காரி மருத்துவமாம். 2705

ஆறு போவதே கிழக்கு; அரசன் செல்வதே வழக்கு.
(சொல்வதே.)

ஆறு போவதே போக்கு; அரசன் சொல்வதே தீர்ப்பு.

ஆறும் கடன்; நூறும் கடன், பெரிசாச் சுடடா பணியாரத்தை.

ஆறும் கருவில் அமைத்தபடி.

(ஆறு-பேர், இன்பம், தாரம், பிணி, மூப்பு, சாக்காடு.)

ஆறும் நாலும் பத்து; நாலும் ஆறும் பத்து. 2710

ஆறு மாசப் பயணம் அஞ்சி நடந்தால் முடியுமா?

ஆறு மாசம் பழுத்தாலும் விளா மரத்தில் வௌவால் சேராது.

ஆறு மாதத்துக்குச் சனியன் பிடித்தாற் போல.

ஆறு மாதத்துக்கு வட்டி இல்லை; அப்புறம் முதலே இல்லை.

ஆறு மாதம் வீட்டிலே; ஆறு மாதம் காட்டிலே. 2715

ஆறுமுக மங்கலத்துக்கு ஆர் போனாலும் சோறு உண்டு போங்கள், சொன்னேன்; சொன்னேன்.

(சோறு கொண்டு; ஆண்டான் கவிராயர் கூற்று.)

ஆறு வடியும் போது கொல்லும்; பஞ்சம் தெளியும் போது கொல்லும்.

(கருப்பு.)

ஆறு வடிவிலேயும் கருப்புத் தெளிவிலேயும் வருத்தும்.

ஆன காரியத்துக்கு மேளம் என்ன? தாளம் என்ன?

ஆன குலத்தில் பிறந்து ஆட்டை மாட்டை மேய்க்காமல் ஓலைவாரியாய்ப் போனானே! 2720

ஆனது அல்லாமல் ஆவதும் அறிவமோ?

ஆனதுக்கு ஓர் ஆகாதது; ஆகாததற்கு ஓர் ஆனது.

ஆன தெய்வத்தை ஆறு கொண்டு போகிறது; அனுமந்தராயனுக்குத் தெப்பத் திருவிழாவா ?

ஆனந்த தாண்டவபுரத்தில் எல்லோரும் அயோக்கியர்கள், உங்களைத் தவிர.

ஆனந்த பாஷ்பத்துக்கு அரைப்பலம் மிளகு. 2725

(புதிய தர்மகர்த்தா சொன்னது.)

ஆனமட்டும் ஆதாளி அடித்துப் போட்டு ஆந்தை போல் விழிக்கிறான்.

(விழிக்கிறேன்.)

ஆன மாட்டை விற்றவனும் அறுகங் காட்டைத் தொட்டவனும் கெட்டான்.

ஆன முதலை அழிப்பவன் மானம் இழப்பது அரிதல்ல.

ஆனவன் ஆகாதவன் எல்லாவற்றிலும் உண்டு.

(எங்கும் உண்டு.)

ஆனாங் கோத்திரத்துக்கு ஏனாந் தர்ப்பயாமி. 2730

(தூரத்து உறவுக் குறிப்பு.)

ஆனால் அச்சிலே வார்; ஆகா விட்டால் மிடாவிலே வார்.

ஆனால் ஆதி வாரம்; ஆகாவிட்டால் சோம வாரம்.

(ஆதித்த வாரம்.)

ஆனால் தெரியாதா? அழுகைக் குரல் கேட்காதா?

ஆனால் பிரம்ம ரிஷி; ஆகாவிட்டால் ரோம ரிஷி.

ஆனால் விட்டு அடுப்பு எரியும்; போனால் விட்டுப் புத்தி வரும். 2735

ஆனான ஆளெல்லாம் தானானம் போடுகிறபோது, கோணல் கொம்பு மாடு கொம்பைக் கொம்பை அலைக்கிறது.

ஆனானப்பட்ட சாமி எல்லாம் ஆடிக் காற்றில் பறக்குது; அநுமந்தப் பெருமாளுக்குத் தெப்பத் திருநாளாம்.

ஆனானப் பட்டவர்கள் எல்லாம் தானானம் அடிக்கறச்சே அழுகற் பூசணிக்காய் தெப்பம் போடுகிறதே!

ஆனி அடி எடார்; கூனி குடி புகார்.

(அடி இடாதே. குடி போகாதே. கூனி-பங்குனி மாதம்.)

ஆனி அடி வைத்தாலும் கூனி குடி புகாதே. 2740

(அடியிடாதே.)

ஆனி அடை சாரல், ஆவணி முச்சாரல், ஆடி அதி சாரல்.

ஆனி அரணை வால் பட்ட கரும்பு, ஆனை வால் ஒத்தது.

ஆனி அரை ஆறு; ஆவணி முழு ஆறு.

ஆனி அறவட்டை; போடி உங்கள் ஆத்தாள் வீட்டுக்கு.

ஆனி ஆவணியில் கிழக்கு வில் பூண்டால் பஞ்சம் உண்டு. 2745

ஆனி ஆனை வால் ஒத்த கரும்பு.

ஆனித் தூக்கம்.

ஆனி மாதம் போடுகிற பூசணியும் ஐயைந்து வயசிற் பிறந்த பிள்ளையும் ஆபத்துக்கு உதவும்.

ஆனி முற்சாரல்; ஆடி அடைசாரல்.

(திருக்குற்றாலத்தில்.)

ஆனியில் அடி கோலாதே; கூனியில் குடி போகாதே. 2750

ஆனியும் கூனியும் ஆகா.

ஆனை அசைந்து உண்ணும்.
ஆனை அசைந்து தின்னும்; வீடு அசையாமல் தின்னும்.
ஆனை அசைந்து வரும்; அடி பெயர்ந்து வரும்.
ஆனை அசைந்து வரும்; அடி மேகம் சுற்றி வரும். 2755
ஆனை அசைந்து வரும்; பூனை பாய்ந்து வரும்.
ஆனை அசைந்து வாங்கும், வீடு அசையாமல் வாங்கும்.
ஆனை அடம் பிடிக்கிறது போல.
(அடம் வைத்ததுபோல.)
ஆனை அடம் வைத்தாற்போல் அமர அமரப் பதித்து வைத்திருக்கிறார்.
ஆனை அடமும் பூனைப் பாய்ச்சலும். 2760
ஆனை அடியில் அடங்கா அடி இல்லை.
ஆனை அடியும் சரி, குதிரை குண்டோட்டமும் சரி.
ஆனை அத்தனை தீப் போட்டாலும் பானை அடியிலேதான்.
ஆனை அத்தனை தீப்போட்டாலும் பானையத்தனை தீத்தான் படும்.
ஆனை அம்பலம் ஏறும்; ஆட்டுக்குட்டி அம்பலம் ஏறுமா? 2765
ஆனை அயர்ந்தாலும் பூனை அயராது.
ஆனை அரசன் கோட்டையைக் காக்கும்; பூனை எலிவளையைக் காக்கும்.
ஆனை அரசு செய்த காட்டிலே பூனை அரசு செய்வது போல.
ஆனை அரைக் காசுக்குக் கிடைத்தாலும் வேண்டாம்.
ஆனை அழிகுட்டி போட்டாற் போல. 2770
ஆனை அழிப்பது தெரிய வில்லையாம்; ஆடுஅழிப்பது தெரிகிறதாம்.
ஆனை அழுக்கு அலம்பினால் தெரியும்.
ஆனை அழுதால் பாகன் பழியா?
ஆனை அறிந்து அறிந்தும் பாகனையே கொல்லும்.
ஆனை அறிவு பூனைக்கு ஏது? 2775
ஆனை ஆங்காரம் அடி பேரு மட்டும்.
ஆனை ஆசார வாசலைக் காக்கும்; பூனை புழுத்த மீனைக் காக்கும்.
ஆனை ஆயிரம் கேட்டாலும் கொடுப்பானே கர்ணப்பிரபு.
ஆனை ஆயிரம் பெற்றால் அடியும் ஆயிரம் பெறுமா?
ஆனை ஆனை என்றால் தந்தம் கொடுக்குமா? 2780

ஆனை இருக்கும் இடத்தைக் காட்ட வேண்டாம்.
ஆனை இருந்த இடமும் அரசன் இருந்த இடமும் ஒரு நாளும் பொய்யாகா.
ஆனை இருந்தால் சேனைக்குப் பலம்.
ஆனை இருந்தாலும் ஆயிரம் பொன்; இறந்தாலும் ஆயிரம் பொன்.
ஆனை இருந்து அரசாண்ட இடத்தில் பூனை இருந்து புலம்பி அழுகிறது. 2785

ஆனை இல்லாத ஊர்வலம் பருப்பு இல்லாத கல்யாணம்.
ஆனை இல்லாத ஊர்வலம் மாதிரி.
ஆனை இளைத்தால் ஆடு ஆகுமா?
ஆனை இளைத்தால் எவ்வளவு இளைக்கும்?
ஆனை உண்ட விளாங்கனி போல. 2790

ஆனை உயரம் பூனை ஆகுமா?
ஆனை உறங்குவதும் ஆட்டுக்கிடா பிந்துவதும்.
ஆனை ஊர்வலத்தில் அடைபட்டதாம் காவேரி.
ஆனை ஊற்றுக்குக் கொசு எம்மட்டோ?
ஆனை எதிர்த்து வந்தாலும் ஆனைக்காவில் நுழையாதே. 2795
(வைணவர் சொல்வது.)

ஆனை எவ்வளவு பெரிதானாலும் அங்குசக் குச்சிக்கு அடக்கந் தானே?
ஆனை ஏற அங்குசம் இல்லாமல் முடியுமா?
ஆனை ஏற ஆசை; தாண்டி ஏறச் சீவன் இல்லை.
ஆனை ஏறிச் சந்தின் வழியாக நுழைவானேன்?
(ஏறியும்.)
ஆனை ஏறித் திட்டிவாசலில் நுழைவதுபோல. 2800
(ஏறியும்.)

ஆனை ஏறி விழுந்தவனைக் கடா ஏறி மிதித்தாற்போல.
ஆனை ஏறினால் மாவுத்தன்; குதிரை ஏறினால் ராவுத்தன்.
ஆனை ஏறினால் வானம் எட்டுமோ?
ஆனை ஏறினாலும் அம்பலத்தில் இறங்கத்தான் வேண்டும்.
ஆனை ஏறும் பெரும்பறையன் ஆரூரில் இருப்பான். 2805

ஆனை ஒட்டினாலும் மாமி ஒட்டான்.
ஆனை ஒரு குட்டி போட்டும் பலன்; பன்றி பல குட்டி போட்டும் பலன் இல்லை.

ஆனை ஒரு குட்டி போடுவதும் பன்றி பல குட்டி போடுவதும் சரி ஆகுமா?

ஆனைக்கண் ஐசுவரியம்.

ஆனைக் கண்ணிலே மோதிரம் பண்ணி வானக் கண்ணி போட்டாளாம். 2810

ஆனைக்கண் விழுந்த பலாக்காய் போல.

ஆனைக் கவடும் பூனைத் திருடும்.

ஆனைக் கறுப்பைக் கண்ட அட்டை, எனக்கு என்ன குறைச்சல் என்று சொல்லிக் கொண்டதாம்.

ஆனைக் கன்றும் வளநாடும் கொண்டு வந்தானோ?

ஆனைக்காரன் ஆனைக்குத் தன் வீட்டைக் காண்பித்துக் கொடாதது போல. 2815

ஆனைக்காரன் பெண் அடைப்பைக்காரனுக்கு வாழ்க்கைப் பட்டாளாம்.

ஆனைக்காரன் பெண்டாட்டி பூனைக்குட்டியைப் பெற்றாளாம்.

ஆனைக்காரன் மனைவி ஆண் பிள்ளை பெற்றால் காச்சு மூச் சென்றிருக்கும்.

ஆனைக்காரனுக்கு ஆனையாலே சாவு.

ஆனைக்கால்காரன் மிதித்து விடுவதாகப் பயங்காட்டலாம்; மிதிக்கக் கூடாது. 2820

ஆனைக் காலில் அகப்பட்ட செல்லுப் போல.

ஆனைக் காலில் பாம்பு நுழைந்தாற் போல.

ஆனைக் காலில் மிதிபட்ட சுண்டெலி போல.

ஆனைக் காலின்கீழ் எறும்பு எம்மாத்திரம்?

ஆனைக்கு அகங்காரமும் பெண்களுக்கு அலங்காரமும். 2825

ஆனைக்கு அடி தூரம், எறும்புக்கு ஏழு காதம்.

ஆனைக்கு அம்பாரி அழகு; அரசனுக்கு முடி அழகு.

ஆனைக்கு அரைஅடி; எலிக்கு எட்டு அடி.

ஆனைக்கு அறுபது முழம், அறக்குள்ளனுக்கு எழுபது முழம்.

(அறுபது அடி. அருங்குள்ளனுக்கு எழுபது அடி.)

ஆனைக்கு ஆயிரம் பாத்தி வேணும்; தோட்டக்காரன் என்ன செய்வான்? 2830

ஆனைக்கு ஆயிர முழம் அகல வேணும்.

(நீதி வெண்பா.)

ஆனைக்கு ஆறு அடி; பூனைக்கு இரண்டு அடி.
ஆனைக்கு ஆனை கைகொடுத்தாற் போல.
ஆனைக்கு இல்லை கானலும் மழையும்.
(வெற்றி வேற்கை.)
ஆனைக்கு உடல் எல்லாம் தந்தம்; மனிதனுக்கு உடல் எல்லாம் பொய். 2835

ஆனைக்கு எதிரி நெருஞ்சி முள்.
ஆனைக்கு ஏற்ற கண்டிர கோடாலி.
ஆனைக்கு ஒரு கவளம்; ஆளுக்கு ஒரு வேளைச் சோறு.
ஆனைக்கு ஒரு காலம்; பூனைக்கு ஒரு காலம்.
ஆனைக்கு ஒரு பிடி; எறும்புக்கு ஒன்பது பிடி. 2840

ஆனைக்குக் கட்டிய கூடாரம் போல.
ஆனைக்குக் கண் அளந்தார்; ஆட்டுக்கு வால் அளந்தார்.
ஆனைக்குக் கண் அளந்து வைத்திருக்கிறது.
ஆனைக்குக் கண் சிறுத்து வர, காது அசைந்து வர.
ஆனைக்குக் கரும்பு; கழுதைக்குத் தாள்; நாய்க்குக் கருப்புக் கட்டி. 2845

ஆனைக்குக் கரும்பும் நாய்க்கு வெள்ளெலும்பும் போல,
ஆனைக்குக் கால் குட்டை; பானைக்குக் கழுத்துக் குட்டை.
ஆனைக்குக் கொட்டாங்கச்சித் தண்ணீர் போதுமா?
ஆனைக்குக் கோபம் வந்தால் அகத்தைப் பிளக்கும்; பூனைக்குக் கோபம் வந்தால் புல்லுப்பாயைப் பிறாண்டும்.
(தின்னும்.)
ஆனைக்குக் கோவணம் கட்ட ஆராலே முடியும்? 2850

ஆனைக்குச் சிட்டுக்குருவி மத்தியஸ்தம் போனாற்போல.
ஆனைக்குச் செருப்புத் தைத்தாற்போல.
ஆனைக் குட்டிக்குப் பால் வார்த்துக் கட்டுமா?
ஆனைக் குட்டி கொழுக்கவில்லையே என்று உட்கார்ந்து அழுததாம் சிங்கக் குட்டி.
ஆனைக்குத் தலை மட்டம்; தவளைக்குத் தொடை மட்டம். 2855

ஆனைக்குத் தீனி அகப்பையில் கொடுத்தால் போதாது.
ஆனைக்குத் தீனி இடும் வீட்டில் ஆட்டுக்குட்டிக்குப் பஞ்சமா?
ஆனைக்குத் தீனி வைத்துக் கட்டுமா?
ஆனைக்குத் துறடும் அன்னத்துக்கு மிளகாயும் வேண்டும்.
ஆனைக்குத் தெரியுமா அங்காடி விலை? 2860

ஆனைக்குத் தேரை இட்டது போல,

(தேரையூன் இரை இட்டது போல.)

ஆனைக்கு நீச்சம், முயலுக்கு நிலை.
ஆனைக்குப் பகை சுள்ளெறும்பு.
ஆனைக் குப்பத்தான் போலே.

(ஆனைக்குப்பம்-திருவாரூருக்கு அருகில் உள்ள ஓர் ஊர், போக்கிரி என்று பொருள்.)

ஆனைக்குப் பனை சர்க்கரை. 2865

ஆனைக்குப் புண் வந்தால் ஆறாது.
ஆனைக்குப் பூனை போலவும் வால் இல்லையே!
ஆனைக்கும் அசையாதது ஆட்டுக்கு அசையும்.
ஆனைக்கும் அடி சறுக்கும்.
ஆனைக்கும் அடி தவறும்; பூனைக்கும் எலி தவறும். 2870

ஆனைக்கும் அடி தவறும்; வேடனுக்கும் குறி தவறும்.
ஆனைக்கும் உண்டா ஏழரை நாட்டுச் சனி?
ஆனைக்கும் உண்டு அவகேடு.
ஆனைக்கும் சரி, பூனைக்கும் சரி.
ஆனைக்கும் பானைக்கும் சரியாய்ப் போச்சு. 2875

ஆனைக்கும் புலிக்கும் நெருப்பைக் கண்டால் பயம்.
ஆனைக்கு மங்கள ஸ்நானம்; கிண்ணத்தில் எண்ணெய் எடு.
ஆனைக்கு மதம் பிடிக்க, பாகனுக்குக் கிலி பிடிக்க.
ஆனைக்கு மதம் பிடித்தால் காடு கொள்ளாது.
ஆனைக்கு முன் முயல் முக்கினது போல. 2880

ஆனைக்கு ராஜா மூங்கில் தடி.
ஆனைக்கு லாடம் அடித்ததைக் கண்டதுண்டா?
ஆனைக்கு வாழைத்தண்டு; ஆளுக்குக் கீரைத்தண்டு.
ஆனைக்கு வேகிற வீட்டில் பூனைக்குச் சோறு இல்லையா?
(வேகிற சோற்றில் பூனைக்குப் பங்கு இல்லையாம்.)

ஆனைக் கூட்டத்தில் சிங்கம் புகுந்தது போல. 2885

ஆனைக் கூட்டம் எதிர்த்தால் பூனைக்குட்டி என்ன செய்யும்?
ஆனைக் கேடும் அரசு கேடும் உண்டா?
ஆனை கட்டச் சங்கிலியைத் தானே எடுத்துக் கொடுக்கும்.
(கயிற்றைக் கொடுத்தது போல.)

ஆனை கட்டத் தாள்; வானை முட்டப் போர்.
ஆனை கட்டி ஆண்டால் அரசனும் ஆண்டி ஆவான். 2890

ஆனை கட்டி ஆளும் அரசனோ?
ஆனை கட்டி உழுகிறான்.
ஆனை கட்டித் தீனி போட முடியுமோ?
ஆனை கட்டியார் வீட்டில் வாழ்க்கைப்பட்டால் ஆறு கலம் அரிசி யாவது சிறப்பு வைக்க வேண்டாமா?
ஆனை கட்டி வாழ்ந்தவன் வீட்டில் பானை சட்டிக்கு வழி இல்லை. 2895

ஆனை கட்டின மரம் ஆட்டம் கொடுக்கும்.
ஆனை கட்டும் தொழுவத்தில் பூனை கட்டலாமா?
ஆனை கண்ட பிறவிக் குருடன் அடித்துக் கொள்கிறது போல.
ஆனை கண் பருத்தால் அகிலத்தை ஆளாதா?
ஆனை கலக்குகிற குட்டையில் கொக்கு மீனைப் பிடிக்கச் சென்றதாம். 2900

ஆனை கவுளில் அடக்கிய கல்லைப்போல.

(அடக்கியது போல.)

ஆனை கறுத்தால் ஆயிரம் பொன்; அட்டைகறுத்தால் உதவி என்ன?

(பூனை கறுத்தால் உதவி என்ன?)

ஆனை கறுத்தால் ஆயிரம் பொன். பூனை கறுத்தால் என்ன பெறும்?

(ஆகும்?)

ஆனை கறுத்தால் என்ன? அசல் வீடு வாழ்ந்தால் என்ன?
ஆனை கறுத்திருந்தும் ஆயிரம் பொன் பெறும். 2905

ஆனைகறுப்போ வெள்ளையோ, கொம்பு வெள்ளைதான்.
ஆனை காட்டுக்கு ராஜாவாக இருந்தாலும் பாகனுக்கு அடிமை.
ஆனை காணாமற் போனால் இரண்டு சட்டியில் தேடினால் அகப் படுமா?
ஆனை காதில் கட்டெறும்பு புகுந்தாற் போல.
ஆனை கிட்டப் போக ஆசையாக இருக்கிறது; மாணி எட்ட வில்லை. 2910

(இடக்கர்.)

ஆனை குட்டி போட்டாற் போல்.
ஆனை குட்டி போட்டதென்று முயல் முக்கினாற்போல.
ஆனை குட்டி போடுகிறது என்று ஆடும் போட்டால் புட்டம் கீறி விடும்.

(நாஞ்சில் நாட்டு வழக்கு.)

ஆனை குட்டி போடும் போடும் என்று எண்ணி லத்தி போட்டதாம்.
(என்று நம்பி.)
ஆனை குட்டையைக் குழப்புவது போல. 2915
ஆனை குடிக்கும் ஜலம் பூனை குடிக்குமா?
ஆனை குண்டு சட்டியிலும் குழிசியிலும் உண்டோ?
ஆனை குப்புற விழுந்தால் தவளைகூட உதைத்துப் பார்க்குமாம்.
ஆனை குளிக்கச் செம்பு ஜலமா?
ஆனை குளித்த குளம் போல. 2920
ஆனை குறட்டில் அவல் அடக்குகிறதுபோல எந்த மட்டும் அடக்குகிறது?
ஆனை கெட்டுக் குடத்தில் கை இடுகிறதா?
ஆனை கெட்டுப் போகக் குடத்தில கைவிட்டுப் பார்க்கிறதா?
ஆனை கெடுத்தவன் குடத்தில் கை இட்டாற் போல.
ஆனை கெடுத்தவன் பானையில் தேடினாற் போல. 2925
(குடத்தில்.)
ஆனை கேட்ட வாயால் ஆட்டுக்குட்டி கேட்கிறதா?
ஆனை கேடு, அரசு கேடு உண்டா?
ஆனை கொடுத்தவன் அங்குசம் கொடானா?
ஆனை கொடுத்து ஆடு வாங்கினான்.
ஆனை கொடுத்தும் அங்குசத்துக்குப் பிணக்கா? 2930
(கொண்டும்.)
ஆனை கொழுத்தால் மண்ணை அள்ளிப் போட்டுக்கொள்ளும்.
ஆனை கொழுத்தால் வாழைத்தண்டு; மனிதன் கொழுத்தால் கீரைத்தண்டு.
ஆனை கொடிற்றில் அடக்குகிறது போல எந்த மட்டும் அடக்குகிறது?
ஆனைச் சிவப்பிலும் அதிகச் சிவப்பு!
ஆனைக் கவடும் பூனைத் திருடும். 2935
ஆனைச் சொப்பனம் கண்டவருக்குப் பானைப் பொன்.
ஆனை சிங்கக்குட்டி போடுவது போல.
ஆனை சிந்திய சிறு கவளம் எறும்புக் கூட்டத்துக்குப் பெருவளம்.
ஆனை சீர் தந்த எங்கள் அம்மான் கத்திரிக்காய்க்குக் குண்டாகரணம் போடுகிறான்.
ஆனை செத்தாலும் ஆயிரம் பொன். 2940

ஆனை சொற்படி பாகன்; பாகன் சொற்படி ஆனை.
ஆனைத் தலையளவு பெருங்காயம் கரைத்த வீடா?
ஆனைத் துதிக்கையில் எலும்பே கிடையாது.
ஆனைத் தோலை எலி கரண்டினது போல.
ஆனை தம்பட்டம் அடிக்க ஒநாய் ஒத்து ஊதிற்றாம். 2945

ஆனை தரைக்கு ராஜா; முதலை தண்ணீருக்கு ராஜா.
ஆனை தழுவிய கையால் ஆட்டுக்குட்டியைத் தழுவுகிறதா?
ஆனை தன் கோட்டிடை வைத்த கவளம் போல.
ஆனை தன் தலையிலே மண்ணைப் போட்டுக் கொள்வது போல.

(தானே மண்ணை வாரிப் போட்டுக் கொள்வது போல.)

ஆனை தன் பலம் அறியாது. 2950

ஆனை தன் பலம் அறியாமல் மத்தகத்தில் மண்ணை வாரிப் போட்டுக் கொண்டது போல.
ஆனை தன் பலம் அறியாமல் மத்தகத்தை மதில் சுவரில் முட்டிக் கொண்டது போல.
ஆனை தன்னைக் கட்டும் சங்கிலியைத் தானே எடுத்துக் கொடுத்தது போல.
ஆனை தாழ்ந்து அரசு வளர்ந்தது.
ஆனை திரும்ப அரைக்கால் நாழிகை. 2955

ஆனை தின்ற விளாங்கனி போல.
ஆனை தும்பிக்கையில் வீசுகிறது என்று கழுதை வாலால் வீசினது போல.
ஆனை துரத்தி வந்தாலும் ஆலயத்தில் நுழையலாகாது.
(ஆனைக்காவில்.)
ஆனை துறடு அறியும்; பாகன் நோக்கு அறிவான்.
ஆனை தொட்டாலும் மரணம் வரும். 2960

ஆனை தொடுவுண்ணின் மூடும் கலம் இல்லை.
ஆனை நடைக்கும் குதிரை ஓட்டத்துக்கும் சமம்.
ஆனை நிழல் பார்க்கத் தவளை அழித்தாற் போல.

(ஆனை கலைத்த கதை. அழுவதைப் போல, தவளை கனைத்ததாம். தவளை கலைத்த கதை.)

ஆனை நிற்க நிழல் உண்டு; மிளகு உருட்ட இலை இல்லை.
ஆனை நீட்டிப் பிடிக்கும்; பூனை தாவிப் பிடிக்கும். 2965

ஆனை நுழைய அடுக்களை பிடிக்குமா?
ஆனைப் பசிக்கு ஆத்திக் கீரையா?

ஆனைப் பசிக்குச் சோளப் பொரியா?

(சோளப் பொரி தாங்குமா?)

ஆனைப் பாகன் மனைவி ஆறுமாசத்துக்கு விதவை.
ஆனைப் பாகன் வீட்டை ஆனைக்குக் காட்ட மாட்டான். 2970

ஆனைப் பாகனுக்கு ஆனையால் சாவு.
ஆனைப் பாகனும் குதிரைப் பாகனும் சவாரி செய்தாற் போல.
ஆனை பட்டால் கொம்பு; புலி பட்டால் தோல்.
ஆனை படுத்தால் ஆட்டுக்குட்டி உயரமாவது இருக்காதா?
ஆனை படுத்தால் ஆட்டுக்குட்டிக்குத் தாழுமா? 2975

ஆனை படுத்தால் ஆள் மட்டம்.
ஆனை படுத்தால் குதிரை உயரம் வராதா?

(குதிரைப் பிரமாணம், குதிரை மட்டம்.)

ஆனை பழக்க ஆனை வேண்டும்.
ஆனை பாய்ந்தால் ஆர் பிடிப்பார்?
ஆனை பார்க்க வெள்ளெழுத்தா? 2980

ஆனை பிடிக்கப் பூனைச் சேனை.
ஆனை பிடிப்பவனுக்குப் பூனை எம்மாத்திரம்?
ஆனை புக்க புலம் போல.

(புறநானூறு.)

ஆனை புகுந்த கரும்புத் தோட்டமும் அமீனா புகுந்த வீடும் உருப்படா.
ஆனை புலி வந்தாலும் தாண்டுவான். 2985

ஆனை பெரிது, ஆனாலும் அதன் கண் சிறிது.
ஆனை பெருத்தும் ஊனம் உதறாதே.

(உதிராதே.)

ஆனை பெருமாளது; ஆர் என்ன சொன்னால் என்ன?
ஆனை போக அதன் வால் போகாதோ?
ஆனை போகிற வழியிலே எறும்பு தாரை விட்டது போல். 2990

ஆனை போய் ஆறு மாசம் ஆனாலும் தாரை மறையுமா?
ஆனை போல் ஐந்து பெண் இருந்தாலும் பூனை போல் ஒரு நாட்டுப் பெண் வேண்டும்.

(ஆயிரம் பெண் இருந்தாலும்.)

ஆனை போல வந்தான்; பூனை போலப் போகிறான்.
ஆனை போனதே வீதி.
ஆனை போன வீதியிலே ஆட்டுக்குட்டி போகிறது வருத்தமா? 2995
(வழியிலே.)

ஆனை போன வீதியையும் கேட்க வேண்டுமா?
ஆனை போனாலும் அடிச்சுவடு போகாது.
ஆனை மதத்தால் கெட்டது; அரசன் பயத்தால் கெட்டான்.
ஆனை மதம் பட்டால் அழகாகும்; பூனை மதம் பட்டால் என்ன ஆகும்?
ஆனை மதம் பட்டால் காடு கொள்ளாது; சாது மதம் பட்டால் ஊர் கொள்ளாது. 3000

ஆனை மதர்த்தால் வாழைத்தண்டு; ஆண் பிள்ளை மதர்த்தால் கீரைத்தண்டு.
ஆனை மயிர் கட்டின ஆண் சிங்கம்.
ஆனை மிதித்த காசு பானை நிரம்பும்.
ஆனை மிதித்தால் பிழைப்பார்களா?
ஆனை மிதித்து ஆள் பிழைக்கவா? 3005

ஆனை மிதித்துக் கொல்லும்; புலி இடிந்து கொல்லும்.
ஆனை முட்டத் தாள்; வானம் முட்டப் போர்.
ஆனை முட்டத் தேர் நகரும்.
ஆனை முதல் எறும்பு வரைக்கும்.
ஆனை முன்னே ஆட்டுக்குட்டி; பின்னே சிங்கக்குட்டி. 3010

ஆனை முன்னே முயல் முக்கினது போல.
ஆனை மூத்திரத்தை நம்பிக் கட்டுச் சோற்றை அவிழ்த்தானாம்.
ஆனை மேய்கிற காட்டில் ஆட்டுக்குட்டிக்குப் புல் கிடைக்காமல் போகுமா?
(தழை கிடைக்காமல்.)
ஆனை மேயும் காட்டில் ஆடு மேய இடம் இல்லையா?
ஆனைமேல் அங்கு மணி எடுத்தாலும் ஆனை வால் கூழை வால். 3015

ஆனைமேல் அங்குமணிச் சீர் எடுத்துக் கொண்டு வந்தாலும் மாமியார் இல்லை என்பாள்.
ஆனைமேல் அம்பாரி போனால் பூனைக்கு என்ன புகைச்சலா?
ஆனைமேல் அம்பாரி வைத்து வரிசை வந்தாலும் ஆனை வால் கூழை என்பார்.
ஆனைமேல் இடும் பாரத்தைப் பூனை மேல் இடலாமா?
(இடுகிறதா?)

ஆனைமேல் இருக்கிற அரசன் சோற்றைக் காட்டிலும் பிச்சை எடுக்கிற பார்ப்பான் சோறு மேல். 3020

ஆனைமேல் இருப்பவனைச் சுண்ணாம்பு கேட்டாற் போல.
(போகிறவனை)

ஆனைமேல் உட்கார்ந்திருப்பவன் வெறிநாய் கடிக்குமென்று அஞ்சுவானா?

ஆனைமேல் ஏறிப் பாறை மேல் விழுவதா? நாயின் மேல் ஏறி மலத்தின்மேல் விழுவதா?

ஆனைமேல் ஏறினால் ஆருக்கு லாபம்?

ஆனை மேல் ஏறு என்றால் பானை மேல் ஏறுவார்? பானைமேல் ஏறு என்றால் ஆனைமேல் ஏறுவார். 3025

ஆனைமேல் ஏறுவேன்; வீரமணி கட்டுவேன்.

ஆனைமேல் திருமஞ்சனம் வருவதென்றால் பெருமாளுக்கு யோகந்தான்.

ஆனைமேல் போகிறவன் அந்து காலன்; குதிரை மேல் போகிறவன் குந்து காலன்.
(வருகிறவன்.)

ஆனைமேல் போகிறவனையும் பானையோடு தின்றான் என்கிறது.
(போகிறவன் பானையோடு தின்றான்.)

ஆனைமேல் வந்தானா? குதிரை மேல் வந்தானா? 3030

ஆனையின் அதிகாரம் சிற்றெறும்பினிடம் செல்லாது.

ஆனையின் கண்ணுக்குச் சிற்றெறும்பும் மலையாம்.

ஆனையின் கரும்புக்குக் காட்டெருமை வந்ததாம்.

ஆனையின் காதில் எறும்பு புகுந்தது போல.

ஆனையின் மூச்சில் அகப்பட்ட கொசுப் போல. 3035

ஆனையின்மேல் இருப்பவனைச் சுண்ணாம்பு கேட்டால் அகப்படுமா?

ஆனையின் வாலைப் பிடித்துக் கரை ஏறலாம்; ஆட்டின் வாலைப் பிடித்துக் கரை ஏறலாமா?

ஆனையும் அறுகம் புல்லினால் தடைப்படும்.

ஆனையும் ஆனையும் உரசிக் கொள்ளக் கொசுவுக்குப் பிடித்ததாம் அனர்த்தம்.

ஆனையும் ஆனையும் முதுதுரைஞ்ச இடையிலிருந்து கொசு நசுங்குகிறது. 3040

ஆனையும் ஆனையும் மோதும் போது இடையிலே அகப்பட்ட கொசுவைப் போல.

(முட்டும் போது கொசுவின் கதி என்னாவது?)
ஆனையும் நாகமும் புல்லினால் தடைப்பட்டன.
ஆனையும் பானையும் ஒன்றானால் பானையே நல்லது.
(ஆனையும் பூனையும்.)
ஆனையை அடக்கலாம்? அடங்காப் பிடாரியை அடக்க முடியாது. 3045

ஆனையை அடக்கலாம்? ஆசையை அடக்க முடியாது.
ஆனையை அடக்குபவனும் அகமுடையாளுக்கு அடக்கம்.
ஆனையை ஆயிரம் பொன்னுக்கு வாங்கி இரும்பு அங்குசத்துக்கு ஏமாந்து நிற்பானேன்?
ஆனையை இடுப்பிலே கட்டிச் சுளகாலே மறைப்பான்.
ஆனையைக் கட்ட ஊணான் கொடி போதுமா? 3050

ஆனையைக் கட்டி ஆள ஆண்டியால் முடியுமா?
ஆனையைக் கட்டி ஆளலாம்; அரைப் பைத்தியத்தைக் கட்டி ஆள முடியாது.
ஆனையைக் கட்டிச் சுளகாலே மறைப்பாள்.
ஆனையைக் கட்டித் தீனி போட முடியுமா?
(போட்டாற் போல.)
ஆனையைக் கண்டு அஞ்சாதவன் ஆனைப் பாகனைக் கண்டால் அஞ்சுவானா? 3055

ஆனையைக் குடத்தில் அடைக்க முடியுமா?
ஆனையைக் குத்தி முறத்தினால் மறைப்பாள்.
(சுளகாலே மறைக்க முடியுமா?)
ஆனையைக் குளிப்பாட்ட அண்டா ஜலம் போதுமா?
ஆனையைக் கெடுத்தவன் பானையில் தேடினாற் போல்.
ஆனையைக் கொட்டத்தில் அடைத்தாற் போல. 3060

ஆனையைக் கொடுத்துத் துறட்டுக்கு மன்றாடினாற் போல.
ஆனையைக் கொன்றவன் பூனையை வெல்ல மாட்டானா?
ஆனையைக் கொன்று அகப்பையால் மூடினாற் போல்.
ஆனையைச் சுளகால் மறைப்பது போல.
ஆனையைத் தண்ணீரில் இழுக்கிற முதலை பூனையைத் தரையில் இழுக்குமா? 3065

ஆனையைத் துரத்த நாயா?
(யாழ்ப்பாண வழக்கு.)
ஆனையைத் தேடப் பானையில் கை விட்டது போல.
(குடத்துள்.)
ஆனையை நம்பிப் பிழைக்கலாம்; ஆண்டியை நம்பிப் பிழைக்க முடியுமா?

ஆனையை நோண்டினால் அது உன்னை நோண்டிவிடும்.
ஆனையைப் படைத்த பகவான் பூனையையும் படைத்திருக்கிறார். 3070

ஆனையைப் பார்க்க ஆயிரம் பேர்.
ஆனையைப் பார்க்க வெள்ளெழுத்தா?
ஆனையைப் பார்த்த கண்ணுக்குக் கரடியைப் பார்ப்பதுபோல் இருந்ததாம்.
ஆனையைப் பார்த்துவிட்டுப் பூனையைப் பார்த்தால் பிடிக்குமா?
ஆனையைப் பிடிக்க ஆனைதான் வேண்டும். 3075

ஆனையைப் பிடிக்க எலிப் பொறியா?
ஆனையைப் பிடித்துக் கட்ட அரை ஞாண் கயிறு போதுமா?
ஆனையைப் பிடிப்பதும் கரகத்தில் அடைப்பதும் அதுவே செல்லப் பிள்ளைக்கு அடையாளம்.

(பானையில் அடைப்பதும்.)

ஆனையைப் பிடிப்பான் ஆண் பிள்ளைச் சிங்கம்; பானையைப் பிடிப்பாள் பத்தினித் தங்கம்.
ஆனையைப் புலவனுக்கும் பூனையைக் குறவனுக்கும் கொடு. 3080

(வித்துவானுக்கும்.)

ஆனையைப் பூனை மறைத்ததாம்.
ஆனையைப் போக்கினவன் குடத்திலே தேடின மாதிரி.
ஆனையைப் போல் சுவர் எழுப்பினால் ஆர் தாண்டுவார்கள்?
ஆனையைப் போல வஞ்சனை; புலியைப் போலப் போர்.
ஆனையை முறுக்கி ஆளச் சாமர்த்தியம் இருந்தாலும் அகமுடையாளை அடக்கி ஆளத் திறமை இல்லாதவன் இருந்தென்ன பிரயோசனம்? 3085

ஆனையை வாங்கலாமா லஞ்சம்?
ஆனையை வாங்கிவிட்டுத் துறட்டுக்கு மன்றாடுகிறான்.
ஆனையை வித்துவானுக்கும் பூனையைக் குறவனுக்கும் கொடு.
ஆனையை விழுங்குவான்; கடைவாயில் ஒட்டிய ஈயைக் கண்டு நடுங்குவான்.
ஆனையை விற்றா பூனைக்கு மருத்துவம் பார்ப்பது? 3090

(வைத்தியம்.)

ஆனையை விற்றுத் துறட்டுக்கு மன்றாடுகிறான்.
ஆனையோடு பிறந்த அலங்காரி, சேனையோடு பிறந்த சிங்காரி.
ஆனை லத்தி ஆனை ஆகுமா?

ஆனை லத்தி போடுகிற மாதிரி குதிரை லத்தி போட்டால் குண்டி கிழிந்து போகும்.

ஆனை வந்தால் ஏறுவேன்; சப்பாணி வந்தால் நகருவேன். 3095

(சப்பாணி கண்டால் தவழ்வேன்.)

ஆனை வந்தாலும் ஏற வேண்டும்; சப்பாணி வந்தாலும் ஏற வேண்டும்.

ஆனை வந்தாலும் தாண்டுவான்; புலி வந்தாலும் தாண்டுவான்.

ஆனை வந்து விரட்டினாலும் ஆனைக் காவில் நுழையாதே.

(வைணவர் கூற்று.)

ஆனை வயிறு ஆனாலும் பானைக்குள்ளேதான்.

ஆனை வயிறு நிறைந்தாலும் ஆட்டுக் குட்டிக்கு வயிறு நிறையாது. 3100

ஆனை வரும் பின்னே; மணி ஓசை வரும் முன்னே:

ஆனை வலம் கிடைத்தாலும் பூனை வலம் கிடைக்காது.

(ஆனை வலம் போனாலும் பூனை வலம் போகக் கூடாது.)

ஆனை வாகனம் ராஜ லட்சணம்.

ஆனைவாய்க் கரும்பும் பாம்பின் வாய்த் தேரையும் யமன்கைக் கொண்ட உயிரும் திரும்பி வரா. 3105

ஆனை வாயில் அகப்பட்ட கொசுவைப் போல்.

ஆனை வாயில் போன கரும்பு போல.

(கரும்பு மீளுமா?)

ஆனை வாயில் போன விளாம் பழம் போல.

ஆனை வால் பிடித்துக் கரை ஏறலாம்; ஆட்டின் வால் பிடித்துக் கரை ஏறலாமா?

(பூனை வால் பிடித்துக் கரை ஏறலாமா?)

ஆனை வால் பிடித்துக் கரை ஏறலாம்; நாய் வால் பிடித்து ஆவது என்ன? 3110

ஆனை வாழ்ந்தால் என்ன? பூனை தாலி அறுத்தால் என்ன?

ஆனை விலை, குதிரை விலை.

ஆனை விழுங்கிய அம்மையாருக்குப் பூனை ஒரு சுண்டாங்கி.

ஆனை விழுந்தால் அதுவே எழுந்திருக்கும்.

ஆனை விழுந்தாலும் குதிரை மட்டம். 3115

ஆனை விற்றால் ஆனை லாபம்; பானை விற்றால் பானை லாபம்

ஆனை விற்றும் துறட்டுக்குப் பிணக்கா?

ஆனை வீட்டிலே பிறந்து அடைப்பக்காரனுக்கு வாழ்க்கைப் பட்டாளாம்.

ஆனை வெளுக்கத் தாழி செய்தது போல.

ஆனை வேகம் அடங்கும் அங்குசத்தால். 3120

ஆஜ்யம் பூஜ்யம்.

(ஆஜ்யம் - நெய்.)

ஆஷ்டுக் குட்டி வந்து வேஷ்டியைத் தின்கிறது; ஓஷ்டு ஓஷ்டு.

ஆஷாட பூதிக்கு ஆயிரம் சொர்க்கம்.

ஆஸ்தி இல்லாதவன் அரை மனிதன்.

(மனிதன் அல்லாதவன்.)

ஆஸ்தி உள்ளவன் ஆஸ்திக்கு அடிமை. 3125

ஆஸ்தி உள்ளவனுக்கு நாசம் இல்லை.

ஆஸ்திக்கு ஓர் ஆணும் ஆசைக்கு ஒரு பெண்ணும்.

ஆஸ்திக்கு மிகுந்த அபராதமும் இல்லை; தலைக்கு மிஞ்சின தண்டமும் இல்லை.

ஆஸ்தி பாஸ்தி.

இக்கரைக்கு அக்கரை பச்சை. 3130
(இக்கரை மாட்டுக்கு.)

இக்கரையில் பாகலுக்கு அக்கரையில் பந்தல்.

இக்கரையில் பாகலைப் போட்டு அக்கரையில் கொழு கொம்பு வைக்கிறான்.

இகழ்ச்சி உடையோன் புகழ்ச்சி அடையான்.

இங்கிதம் தெரியாதவனுக்குச் சங்கீதம் தெரிந்து பலன் என்ன?

இங்கு அற்றவருக்கு அங்கு உண்டு. 3135

இங்கு அற்றவருக்கு அங்கு ஒரு விசுவரூப தரிசனம்.

இங்கு இருந்த பாண்டம் போல.
(இங்கு-பெருங்காயம்.)

இங்கும் புதையல் இருக்குமா ரங்கா? அதற்குச் சந்தேகமா வெங்கா?

இங்கே தலையைக் காட்டுகிறான்; அங்கே வாலைக் காட்டுகிறான்.

இங்கே வாடா திருடா, திருட வந்தாயா என்றாளாம்; உன் வீடு இருக்கிற அழகுக்கா விழித்துக் கொண்டிருக்கிறாய் என்றானாம். 3140

இங்கே வா நாயே என்றால் மூஞ்சியை நக்குகிறது.

இச்சிக் கொண்டே என்னோடே நிற்கிறான்.

இச்சித்த காரியம் இரகசியம் அல்ல.
(அல்லவோ?)

இச்சிப் பெட்டின வாரிக்கு இஞ்சினீரிங் டிபார்ட்மெண்ட்.
(தெலுங்கு. இச்சிப் பெட்டின வாரிக்கு-கொடுத்து வைத்தவருக்கு.)

இச்சை உள்ள காமுகர்க்குக் கண் கண்ட இடத்திலே. 3145

இச்சைச் சொல் யாசகத்தால் இடர்ப்பட்டவன் இல்லை.

இச்சையாகிய பாக்கியம் இருக்கப் பிச்சைக்குப் போவானேன்?
இச்சையும் இல்லை; இருமையும் இல்லை.
இசலிக் கொண்டே என்னோடே நிற்கிறான். 3150
இசை இல்லாப் பாட்டு இழுக்கு.
(இசைவு.)

இசைவில்லாப் பாட்டு இழுக்கு.
இசைவு வந்தது! வடமலை அப்பா!
(வடமலை-திருப்பதி.)
இஞ்சி என்றால் தெரியாதா? எலும்மிச்சம் பழம் போலத் தித்திப்பாய் இருக்குமே!
(எலுமிச்சம் பழம் போல இனிப்பாய் இருக்கும். வெல்லம் போலப் புளிக்கும்.)
இஞ்சி தின்ற குரங்கு போல.
(போலப் பஞ்சரிக்கிறான்.)
இஞ்சியில் பாய்ந்தால் என்ன? மஞ்சளில் பாய்ந்தால் என்ன? 3155

இஞ்சி லாபம் மஞ்சளிலே.
இட்ட அடி கொப்புளிக்க எடுத்த அடி தள்ளாட.
இட்ட உறவு எட்டு நாளைக்கு; நக்கின உறவு நாலு நாளைக்கு.
(நக்கின-உண்ட.)
இட்ட உறவு ஏனாதிக்கூட்டம்;வார்த்த உறவு வண்ணாரக் கூட்டம்.
இட்ட எழுத்திற்கு மேல் ஏற ஆசைப்பட்டால் கிடைக்குமா? 3160

இட்ட கடன் பட்ட கடனுக்கு ஈடாகாது.
இட்ட குடி கெடுமா?
இட்ட குடியும் கெட்டது; ஏற்ற குடியும் கெட்டது.
இட்ட கையை நத்துமா? இடாத கையை நத்துமா?
இட்டத்தில் ஒன்றும் குறையாது. 3165
(குறைவில்லை.)

இட்டத்தின் மேலே ஏறாசைப்பட்டால் கிடைக்குமோ?
(ஏறாசைப் படுகிறதா?)
இட்டது எல்லாம் கொள்ளும் பட்டி மகள் கப்பரை.
இட்டது எல்லாம் பயிர் ஆகுமா?பெற்றது எல்லாம் பிள்ளை ஆகுமா?
இட்ட படியே ஒழிய ஆசைப்பட்டுப் பலன் இல்லை.
இட்டம் அற்ற முனியன், அட்டமத்துச் சனியன். 3170

இட்டலிக் குப்பன்.

இட்டவர்கள் தொட்டவர்கள் கெட்டவர்கள்; இப்போது வந்தவர்கள் நல்லவர்கள்.

இட்டவள் இடா விட்டால் வெட்டுப் பகை.

(இட்டவள்-உணவு படைத்தவள்.)

இட்ட வீட்டுக்கு இரண்டகம் நினைக்கலாமா?

இட்ட வீட்டுக்குப் பிட்டு இட்டுக்கொண்டு, இடிந்த வீட்டுக்கு மண் இட்டுக் கொண்டு திரிகிறான். 3175

இட்டார்க்கு இட்ட படி.

இட்டார் பெரியோர்; இடாதார் இழிகுலத்தோர்.

இட்டாருக்கு இட்ட பலன்.

(ஏரி அடித்தார்க்குக் கோடி பலன். ஏறி அடித்தார்க்கு.)

இட்டார்க்கு இட்ட பலன்; ஆண்டிக்கு அமைந்த பலன்.

இட்டாருக்கு இடலும், செத்தாருக்கு அழுதலும். 3180

இட்டாருக்கு இட வேணும்; செத்தாருக்கு அழ வேணும்.

இட்டு ஆளாப் பெண்ணுக்குச் சுட்டாலும் தெரியாது.

இட்டு உண்டான் செல்வம் தட்டுண்டாலும் கெடாது.

இட்டுக் கெட்டார் எங்கும் இல்லை.

(உலகினில் இல்லை. யாரும் இல்லை.)

இட்டுக் கெட்டாரும் இல்லை; ஈயாது வாழ்ந்தாரும் இல்லை. 3185

இட்டுப் பிறந்தால் எங்கும் உண்டு.

இட்டுப் பேர் பெறு; வெட்டிப் பேர் பெறு.

இட்டு வைத்தால் தின்னவும் எடுத்து வைத்தால் அடுக்கவும் தெரியும்.

இடக்கண், வலக்கண்.

இடக்கனுக்கு வழி எங்கே? கிடக்கிறவன் தலை மேலே. 3190

இடக்காதில் வாங்கி வலக்காதில் விடுவது.

இடக்குக் குடை பிடிக்கலாமா?

இடது கைக்கு வலது கை துணை; வலது கைக்கு இடது கை துணை.

இடது கை பிட்டத்துக்கு எளிது.

இடது கை வலது கை தெரியவில்லை. 3195

இடம் அகப்படாத தோஷம்; மெத்தப் பதிவிரதை.

(அதனால்தான் அவள் மெத்தப் பதிவிரதை.)

இடம் இராத இடத்தில் அகமுடையானைப் பெற்றவள் வந்தாளாம்; போதாக் குறைக்குப் புக்ககத்து அத்தையும் வந்தாளாம்.
இடம் கண்டால் மடத்தைப் பிடிக்கலாம்.
இடம் கண்டால் விடுவானோ யாழ்ப்பாணத்தான்.
இடம் கொடுத்தால் மடத்தைப் பிடிக்கலாம். 3200

இடம் கொடுத்தால் மடம் பிடுங்குவான்.
இடம் பட வீடு இடேல்.
(ஆத்தி சூடி)
இடம் வலம் தெரியாதவனோடு இணக்கம் பண்ணல் ஆகாது.
இட மாட்டாதவன் எச்சில் என்றானாம்.
இட வசதி இல்லாத பதிவிரதை. 3205

இடறின காலிலே இடறுகிறது.
இடன் அறிந்து ஏவல் செய்.
இடாதவனுக்கு இட்டுக் காட்டு.
இடான், தொடான், மனுஷர்மேல் செத்த பிராணன்.
இடி இடி எங்கே போகிறாய்? ஏழையின் தலையில் விழப் போகிறேன். 3210

இடி இடித்தாலும் படபடப்பு ஆகாது.
இடி ஓசை கேட்ட பாம்பு போல.
(நாகம் போல.)
இடிக்கிறவன் ஒன்றை நினைத்துக்கொண்டு இடித்தால், குடிக்கிறவன் ஒன்றை நினைத்துக்கொண்டு குடிப்பான்.
இடிக்கிற வானம் பெய்யாது.
இடிக்குக் குடை பிடிக்கலாமா? 3215

இடி கொம்புக்காரன் கோழிக் குஞ்சின் சத்தத்திற்கு அஞ்சுவானா?
இடி கொம்பும் விட்டுப் பிடி கொம்பும் விட்டது போல.
இடி சோறு தின்கிறான்.
இடித்த புளி போல் இருக்கிறான்.
இடித்தவளுக்கும் புடைத்தவளுக்கும் ஒன்று; ஏன் என்று வந்தவளுக்கு இரண்டு. 3220

இடித்த வானம் பெய்யாது.
இடித்து அடித்து ஒரு கூடை இடுவதிலும் பிடி சோறு அன்பாய்ப் போடுவது போதும்.
இடிந்து கிடந்த அம்பலம் போல.
இடியேறு கேட்ட நாகம் போல.
(இடியேறுண்ட.)
இடி விழுந்த ஊரில் குடி இருந்தாலும் இடை விழுந்த ஊரில் குடியிருக்கல் ஆகாது. 3225

இடி விழுந்த மரம்போல ஏங்குதல்.
இடி விழுவானுக்கு வாழ்க்கைப்பட்டு எந்நேரமும் குடி சாமம்.
இடுகிற தெய்வம் எங்கும் இடும்.
இடுகிறவன் தன்னவன் ஆனால் இடைப் பந்தியில் இருந்தால் என்ன? கடைப் பந்தியில் இருந்தால் என்ன?
(இடுகிறவள், தன்னவள்.)
இடுப்பில் இரண்டு காசு இருந்தால் சருக்கென்று இரண்டு வார்த்தை வரும். 3230

இடுப்பிலே காசு இருந்தால் அசப்பிலே வார்த்தை வரும்.
இடுப்பு ஒடிந்த கோழிக்கு உரல் குழியே கதி.
(கைலாசம்.)
இடுப்புக்கு மேலே அந்தரங்கம் இல்லை.
இடுப்புச் சுருங்குவது பெண்களுக்கு அழகு.
இடுப்பு வைத்த இடமெல்லாம் அடுப்பு வைத்தான். 3235

இடும்பனுக்கு வழி எங்கே? இருக்கிறவன் தலை மேலே.
இடும்பு செய்வாருக்கு இராப்பகல் நித்திரை இல்லை.
(இராப் பகல் இல்லை.)
இடும்பும் கரம்பும் அழியும்.
இடும்பைக்கு ஈன்ற தாய் போல.
இடுவது பிச்சை; ஏறுவது மோட்சம். 3240
(பெறுவது.)

இடுவார் இடுவதையும் கெடுவார் கெடுப்பார்.
இடுவார்க்கு இல்லை கெடுவாழ்வு.
இடுவார் பிச்சையைக் கெடுக்கிறதா?
(கெடுவார் கெடுப்பதா? கெடுக்காதே.)

இடுவான் இடுவான் என்று ஏக்கற்று இருந்தாளாம்; நாலு நாழி கொடுத்து நாலாசை தீர்த்தாளாம்.
இடை ஆண்டியும் இல்லை; குயத் தாதனும் இல்லை. 3245

இடைக் கணக்கன் செத்தான்; இனிப் பிழைப்பான் நாட்டான்.
இடைக் கிழவி எப்போது சாவாளோ? இடம் எப்போது ஒழியுமோ?
இடைக் கோழி இராத் தங்குமா?
இடைச்சன் பிள்ளைக்காரிக்குத் தலைச்சன் பிள்ளைக்காரி மருத்துவம் சொன்னாளாம்.
(மருத்துவம் பார்த்தது போல.)
இடைச்சி ஆத்தாள் தோளிக்கு. 3250

இடைச்சிக்கு எட்டுத் தாலி; பறைச்சிக்குப் பத்துத் தாலி.
இடைச்சிக்கு மாப்பிள்ளை என்றைக்கிருந்தாலும் வருவான்.
இடைச்சி சம்பத்தும் சாணாத்தி வாழ்வும் சரி.
இடை சாய்ந்த குடம் கவிழும்.
இடைத் தெருவில் ஊர்வலம் வரும்போது குசத்தெரு எங்கே என்கிறான். 3255

இடைப் பிறப்பும் கடைப் பிறப்பும் ஆகா.
இடைப் புத்தி பிடரியிலே.
(இடையன்.)
இடையன் எப்போது சாவானோ, கம்பளி எப்போது மிஞ்சுமோ?
இடையன் எறிந்த மரம் போல.
இடையன் கரடிமேல் ஆசைப்பட்டது போல. 3260

இடையன் கல்யாணம் பொழுது விடிந்து போச்சு.
(விடிய விடிய.)
இடையன் கல்யாணம் விடியும் பொழுது.
இடையன் கெடுத்தது பாதி; மடையன் கெடுத்தது பாதி.
இடையன் செய்வது மடையன் செய்யான்.
இடையன் பிடரியிலே ஆட்டைப் போட்டுக்கொண்டு தேடினாற் போல். 3265

இடையன் பெருத்தாலும் இடையன் கிடை நாய் பெருக்காது.
இடையன் பேரிலே சந்நதம் வந்தது போல்.
(சாத்தான் வந்த கதை போல.)

இடையன் பொறுத்தாலும் இடையன் நாய் பொறாதது போல.
(இடைக்குடி பொறாதது போல.)

இடையன் வந்ததும் படுக்க வேண்டியதுதான்.
இடையன் வெட்டின கொம்பு போல. 3270

இடையன் வெட்டு அறா வெட்டு.
இடையனில் ஆண்டி இல்லை; குசவனில் தாதன் இல்லை.
(ஆண்டி - சிவனடியான், தாதன் - திருமால் அடியான்.)
இடையனுக்குப் பிடரியிலே புத்தி.
இடையனும் பள்ளியும் இறைத்த புலம் பாழ்.
(சாவி.)
இடையாலும் கடையாலும் சங்கம் அழிவதாக. 3275
(இடை-இடைக்காடர்; கடை-வள்ளுவர்)

இடையூறு செய்தோன் மனையில் இருக்காது பேய் முதலாய்.
இண்டம் பிடித்தவன்.
இணக்கம் அறிந்து இணங்க வேண்டும்.
இணக்கம் இல்லாதவனோடு என்ன வாது?
இணங்காரோடு இணங்குவது இகழ்ச்சி. 3280

இணங்கினால் தித்திப்பு; பிணங்கினால் கசப்பு.
இணை பிரியா அன்றில் போல.
(பிரிந்த.)
இத்தனை அத்தனை ஆனால் அத்தனை எத்தனை ஆகாது?
(ஆகும்?)
இத்தனை பெரியவர் கைப்பிடித்து இழுத்தால் மாட்டேன் என்று எப்படிச் சொல்வது?
இத்தனை பேர் பெண்டுகளில் என் பிள்ளைக்கு ஒரு தாய் இல்லை. 3285

இத்தனையும் செய்து கத்தரி நட்டவன் இல்லையென்று சொன்னான்.
இதற்கா பயப்பட்டேன் என் ஆண்டவனே, ஆனை குதிரை வந்தாலும் தாண்டுவனே.
இது எமன் ஆச்சே!
இது எல்லாம் பொம்மலாட்டம்.
இது என் குலாசாரம்; இது என் வயிற்று ஆசாரம். 329

இது என்ன வெள்ளரிக்காய் விற்ற பணமா?
(பட்டணமா?)
இது சொத்தை; அது புழுத்தது.
இது சொத்தை; அது புளியங்காய் போல.
இது தெரியாதா இடாவே? நுகத்தடிக்கு நாலு துளை.
இது பெரிய இடத்துப் பேச்சு. 3295

இதைச் சொன்னான் பரிகாரி; அதைக் கேட்டான் நோயாளி.
(பரிகாரி-வைத்தியன்.)
இந்த அடிக்கு எந்த நாயும் சாகும்.
இந்த அம்பலம் போனால் செந்தி அம்பலம்.
இந்த அமாவாசைக்கும் வெட்கம் இல்லை; வருகிற அமாவாசைக்கும் வெட்கம் இல்லை.
இந்த உலக வாழ்வு சதமா? 3300

இந்த ஊருக்கு எமனாக வந்தான்.
இந்த எலும்பைக் கடிப்பானேன்? சொந்தப் பல்லும் போவானேன்?
இந்தக் கண்ணிற் புகுந்து அந்தக் கண்ணிற் புறப்படுகிறான்.
இந்தக் கருப்பிற் செத்தால் இன்னும் ஒரு கருப்பு மயிரைக் பிடுங்குமா?
(கருப்பு-பஞ்சம்.)
இந்தக் குண்டுக்குத் தப்பினாலே மக்கமே கதி. 3305

இந்தக் கூழுக்கா இருபத்தெட்டு நாமம்?
(இத்தனை திருநாமம்.)
இந்தக் கூழுக்கோ பதினெட்டுத் திருநாமமும் நடுவிலே ஒரு திருச்சூர்ணமும்.
இந்தக் கைப் புழுதி தேவலையா? இந்தக் கைச் சாம்பல் தேவலையா?
இந்தச் சளுக்கனுக்கு இரண்டு பெண்சாதி; வந்தவாசி மட்டும் வல்லவாட்டு.
இந்தச் சிற்றுண்டி எனக்குத் தெவிட்டிப் போயிற்று. 3310

இந்த நாயை ஏன் இப்படிச் செய்கிறாய்?
இந்தப் பூராயத்தில் குறைச்சல் இல்லை.
இந்தப் பூனையும் இந்தப் பாலைக் குடிக்குமா?
இந்தப் பெரிய கொள்ளையிலே அப்பா என்னப் பிள்ளை இல்லை.
(அப்பா என்று கூப்பிட.)

இந்தப் பெருமையையும் பந்தல் அழகையும் பார்த்தாயா பண்ணைக்காரா? 3315

இந்தப் பையனுக்கு இந்த வீட்டு ஓதம் உறைத்து விட்டது.

இந்த மடம் இல்லாவிட்டால் இன்னொரு சந்தை மடம்.

இந்த மூஞ்சிக்குத் தஞ்சாவூர்ப் பொட்டு; வந்தவாசி வரையில் வல்ல வாட்டு; அதைக் கழுவப் புழலேரித் தண்ணீர்.

இந்த வளைவு சிக்கினால் எப்படித்தான் பிள்ளை பிழைக்கும்?

இந்த வீட்டிலே வைத்தது மாயமாய் இருக்கிறது. 3320

இந்த வீட்டுக்கு வந்தாலும் வந்தேன்; பக்கத்து வீட்டுக் கருவாட்டு நாற்றம் போச்சு.

இந்திரன் கெட்டதும் பெண்ணாலே; சந்திரன் கெட்டதும் பெண்ணாலே.

இந்திரனைச் சந்திரனை இலையாலே மறைப்பாள்; எமதர்ம ராசாவைக் கையாலே மறைப்பாள்.

(மறைப்பான்.)

இந்திராணிக்கு இந்திரன் வாய்த்தது போல.

இந்திராதி தேவர்க்கும் வந்திடும் தீவினை. 3325

இந்திரைக்கு மூத்தவள் மூதேவி.

(இந்திரை-திருமகள்.)

இப்படிப் பார்த்தால் ஸ்த்ரீ ஹத்தி; அப்படிப் பார்த்தால் பிரம்ம ஹத்தி.

இப்போது இல்லையெனின் எப்போதும் இல்லை.

இம்பூரல் தெரியாமல் இருமிச் செத்தான்.

(இம்பூரல்-தூதுவளை போன்ற ஒரு செடி; இருமலுக்கு ஏற்றது.)

இம்மிய நுண்பொருள் ஈட்டி நிதியாக்கிக் கம்மியருள் மூவர் களிறு. 3330

(இம்மி நுண் பொருள்.)

இம்முனு போனாளாம்; பிள்ளையைப் பெற்றாளாம்.

இமயம் சேர்ந்த காக்கையும் பொன்னாகும்.

இமயம் முதல் குமரி வரையில்.

இமைக் குற்றம் கண்ணுக்குத் தெரியாது.

இயல்பாய் மணம் இல்லாச் சந்தனக் கட்டை இழைத்தாலும் மணக்காது. 3335

இயற்கை அழகே லேசான ஆபரணம்.
இயற்கை வாசனையோ? செயற்கை வாசனையோ?
(சேர்க்கை.)
இரக்கப் போனாலும் சிறக்கப் போ.
(இறக்கப் போனாலும், பரக்கப் போக வேண்டும்.)
இரக்கம் இல்லாதவன் நெஞ்சு இரும்பினும் கொடிது.
(நெஞ்சு இரும்பு.)
இரங்காதவர் உண்டா? பெண் என்றால் பேயும் இரங்கும். 3340

இரட்டைத் தோணியில் கால் வைத்தாற் போல.
இரண்டு ஆட்டில் ஊட்டின குட்டியாய்த் தீர்ந்தது.
(குட்டியானான்.)
இரண்டு ஆட்டில் ஓராடு விழிக்கிறது போல.
இரண்டு ஆட்டிலே ஒட்டின குட்டி.
(ஊட்டின.)
இரண்டு எழுத்து மந்திரம், பச்சிலையால் தந்திரம். 3345

இரண்டு ஏற்றம் இறைக்க எங்கள் அப்பனுக்குத் தெரியாது; இருட்டினால் எப்போதும் இரண்டு பணம் கேட்கிறான்.
இரண்டு ஓடத்தில் கால் வைக்கிறதா?
(கால் வைத்தவனைப் போல.)
இரண்டு கண்ணும் பொட்டை; பெயர் புண்டரீகாக்ஷன்.
இரண்டு கை தட்டினால்தான் ஓசை உண்டு.
(இரண்டு கையையும் அடித்தால்தான் சத்தம்.)
இரண்டு கை போதாது. 3350

இரண்டு கையும் போதாது என்று அகப்பையும் கட்டிக்கொண்டான்.
இரண்டு சாஸ்திரிகள், இரண்டு ஜோசியர்கள், இரண்டு புலவர்கள், இரண்டு தாசிகள், இரண்டு வைத்தியர்கள், இரண்டு நாய்கள், இரண்டு கடிகாரங்கள், சேர்ந்து போக மாட்டார்கள்.
இரண்டு தோணியில் கால் வைக்கிறதா?
(ஓடத்தில்.)
இரண்டு நாய்க்கு ஓர் எலும்பு போட்டாற் போலே.
(போட்ட எலும்பு மாதிரி.)
இரண்டு பட்ட ஊரிலே குரங்கும் குடி இராது. 3355

இரண்டு பெண் கொண்டானுக்கு நடையிலே வாருகோல்; ஒரு பெண் கொண்டானுக்கு உறியிலே சோறு.

இரண்டு பெண்டாட்டிக்காரன் பாடு திண்டாட்டம்.
இரண்டு பெண்டாட்டிக்காரன் வீட்டில் நெருப்பு ஏன்?
இரண்டு பெண்டாட்டிக்காரனுக்குக் கொண்டை உண்டோடி?
(கொண்டை என்ன கொண்டை?)
இரண்டும் இரண்டு அகப்பை; இரண்டும் கழன்ற அகப்பை. 3360

இரண்டும் கெட்டான் பேர்வழி.
இரண்டு வீட்டிலும் கல்யாணம்; இடையே செத்ததாம் நாய்க்குட்டி.
இரண்டு வீட்டு விருந்தாளி கெண்டை புரட்டிச் செத்தான்.
(கெண்டை ஏறிக் கொட்டானாம். கெண்டை-கெண்டைக்கால்.)
இரத்தினத்தைச் சேர்ந்த இழை போல.
இரந்தவன் சோறு என்றைக்கும் பஞ்சம் இல்லை. 3365

இரந்து உண்டவன் இருந்து உண்ணான்.
இரந்து குடித்தாலும் இருந்து குடி.
இரந்தும் பரந்தவைக்குக் கொடுக்கவேணும்.
(யாழ்ப்பாண வழக்கு.)
இரந்தும் பருந்துக்கு இடு.
(கொடு.)
இரந்தோர்க்கு ஈவது உடையார் கடன். 3370

இரப்பவனுக்கு ஈவார் பஞ்சமா?
இரப்பவனுக்கு எங்கும் பஞ்சம் இல்லை.
(என்றும்.)
இரப்பவனுக்குப் பஞ்சம் என்றைக்கும் இல்லை.
இரப்பவனுக்கு வெறுஞ் சோறு பஞ்சமா?
(வெண் சோறு.)
இரப்பான் சோற்றுக்கு எப்போதும் பஞ்சம் இல்லை. 3375

இரப்பான் சோற்றுக்கு வெண்சோறு பஞ்சமா?
இரப்பானைப் பிடித்ததாம் பறைப் பருந்து.
(யாழ்ப்பாண வழக்கு.)
இரவல் உடைமை இசைவாய் இருக்கிறது; என் பிள்ளை ஆணை, நான் கொடுக்கமாட்டேன்.
இரவல் உடைமையும் இல்லாதாள் புடைவையும், அவிசாரி அகமுடையானும் ஆபத்துக்கு உதவா.
இரவல் கொடாதவை இருந்தாளமாட்டினம். 3380
(யாழ்ப்பாண வழக்கு.)

இரவல் சதம் ஆகுமா? மதனி உறவு ஆகுமா?
இரவல் சதமா? திருடன் உறவா?
இரவல் சீலையை நம்பி இடுப்புக் கந்தையை எறிந்தாளாம்.
(இடுப்புச் சீலையை.)
இரவல் சோறு தஞ்சம் தாங்காது.
(தாங்குமா.)
இரவல் துணியாம்; இரவல் துட்டாம்; இழுத்துக் கொட்டு மேளத்தை; இறுகக் கட்டு தாலியை. 3385

இரவல் நகையும் இல்லாத வஸ்துவும் அவிசாரி அகமுடையானும் ஆபத்துக்கு உதவார்.
இரவல் புடைவையிலே இது நல்ல கொய்சகந்தான்.
(கொடிய சுகமாம், யாழ்ப்பாண வழக்கு.)
இரவல் புருஷா, கதவைத் திற; ஏமாளிப் புருஷா, வீட்டை விடு.
இரவிமுன் பனி போல.
இரவியைக் கண்ட இருள் போல. 3390

இரவில் உண்ணாமல் பகல் உண்ணாதவனுக்குப் பெருத்தல் இல்லை.
இரவில் எதுசெய்தாலும் அரவில் செய்யாதே.
(அரவு-ராகு காலம்.)
இரவில் போனாலும் பரக்கப் போக வேண்டும்.
இரவு உண்ணான் பருத்திருப்பான்.
(அருத்தா பத்தி.)
இரவு எல்லாம் இறைத்தும் பொழுது விடிந்து போச்சு. 3395

இரவு எல்லாம் திருடினாலும் கன்னக்கோல் சாத்த ஓர் இடம் வேண்டாமா?
இரவு வேளையில் ருத்திராட்சப் பூனை போல்.
இராக் கண்ட கனவு மிடாப் போல வீங்கின கதை.
(இராக் கண்ட சனி.)
இராச் செத்தால் பகல் பிழைக்கிறான்.
(சூரியன்.)
இராத்திரி செத்தால் விளக்கெண்ணெய்க்கு இல்லை; பகலில் செத்தால் வாய்க்கரிசிக்கு இல்லை. 3400

இராப்பகல் கண்ணிலே.
இராப் பட்டினி கிடந்தவன் அகவிலை கேட்பானா?
(அக விலையைக் குறைத்த கதை.)

இராப் பட்டினி கிடந்தவன் உரித்த வாழைப்பழம் விற்கிறதா என்று விசாரித்தானாம்.
இராப் பட்டினி கிடந்தவனுக்குப் பாதித் தோசை போதாதா?
இராப் பட்டினி, பகல் கொட்டாவி. 3405

இராப் பட்டினி பாயோடே.
இராப் பிறந்த குழவி பகலிலே கத்தும்; பகல் பிறந்த குழந்தை இராவிலே கத்தும்.
இராப் பிறந்த பிள்ளையும் ஆகாது; பகல் பிறந்த பிள்ளையும் ஆகாது.
(பகல் பிறந்த பெண்ணும்.)
இராமனைப் போல் அரசன் இருந்தால் அனுமனைப் போல் சேவகன் இருப்பான்.
இரா முழுதும் ராமாயணம் கேட்டுச் சீதைக்கு ராமன் என்ன வேண்டும் என்றானாம். 3410

இராவணன் என்றால் படையும் நடுங்கும்.
இரிசிக்குப் புருஷன் ஆசை உண்டா?
(இரிசி-பேடி.)

இரிசியார் உடைமை இராத் தங்கப் போகாது.
இருக்க இடம் கொடுத்தால் படுக்க இடம் கேட்டாற் போல்.
(படுக்கப் பாய் கேட்பான்.)

இருக்க இருக்க எல்லாம் இசைவாகும். 3415

இருக்கச் சாண் இடம் இல்லாமல் போனாலும் பெருக்கப் பெருக்கப் பேசுவதில் மாத்திரம் குறைவில்லை.
இருக்க வேண்டும் என்றால் இரும்பைத் தின்னு.
இருக்கிற அளவோடு இருந்தால் எல்லாம் தேடி வரும்.
இருக்கிற அன்றைக்கு எருமை மாடு தின்றாற் போல.
இருக்கிற இடத்தில் இருந்தால் சுகம். 3420

இருக்கிற இடத்தை விளக்கேற்றித்தான் பார்க்க வேண்டும்.
இருக்கிறது மூன்று மயிர்; அதில் இரண்டு புழுவெட்டு.
இருக்கிறதை விட்டுப் பறக்கிறதைப் பிடித்தானாம்.
இருக்கிறபோது பெருங்கும்பம்; இல்லாத போது காவிக் கும்பம்.
இருக்கிற வரையில் இருள் மூடிச் போச்சாம்; செத்தவன் கண் செந்தாமரை என்றானாம். 3425

இருக்கிறவன் செவ்வையாய் இருந்தால் சிரைக்கிறவன் செவ்வயாய்ச் சிரைப்பான்.
(ஒழுங்காய், சரியாய், இருந்தால் தானே.)

இருக்கிறவன் நல்லவன் ஆனால் இடைப்பந்தியில் இருந்தால் என்ன? கடைப்பந்தியில் இருந்தால் என்ன?
(நம்மவன் ஆனால்.)

இருக்கிறவனுக்கு ஒரு வீடு; இல்லாதவனுக்கு அநேக வீடு.
(எங்கும் வீடு.)

இருக்கிறவனுக்கு ஒன்று; இல்லாதவனுக்குப் பத்து.
இருக்கும் இடம் ஏவுமா? 3430

இருக்கும் போதே இரக்கப் போவானேன்?
இருக்கும் வளையில் எலியையும் கொல்ல முடியாது.
இருசி உடைமை இராந் தங்கல் ஆகாது.
இரு சுழி இருந்து உண்டாலும் உண்ணும். இரந்து உண்டாலும் உண்ணும்.
இருட்டில் உதட்டைப் பிதுக்கின மாதிரி. 3435

இருட்டில் சிவப்பாய் இருந்தால் என்ன; கறுப்பாய் இருந்தால் என்ன?
இருட்டில் போனால் திருட்டுக் கை நில்லாது.
(இருட்டுள்ளே போனாலும் திருட்டுக் கை போகாது.)
இருட்டிலே குருட்டு ஆண்டி.
இருட்டு அறையில் மங்கு கறந்து எய்த்தாற் போல.
இருட்டு உள், சுருட்டுப் பாய், முரட்டுப் பெண்டாட்டி. 3440

இருட்டுக்கு எல்லாம் சரி.
இருட்டுக் குடிவாழ்க்கை திருட்டுக்கு அடையாளம்.
இருட்டு வீட்டில் குருட்டு ஆனை.
இருட்டு வீட்டில் குருட்டுப் பிள்ளை பெற்றாளாம்.
இருட்டு வீட்டில் நுழைந்தாலும் திருட்டுக் கை சும்மா இராது. 3445
(போனாலும், திருட்டுக் கை போகாது.)

இருட்டு வீட்டில் குருட்டுக் காக்காய் ஒட்டுகிறது போல;
இருட்டு வீட்டிலே குருட்டுக் கொக்குப் பிடித்தாற் போல,
இருட்டு வேலையோ? குருட்டு வேலையோ?
இருட்டைக் கொண்டு ஓட்டையை அடைத்தது போல்.
இருத்தினவன் தோளில்தான் அழுத்துவார்கள். 3450

இருதயத்தில் நினைத்தது எல்லாம் எழுதிக் கட்டு.
இருதயத்து எழுந்த புண் போல.
இருதலைக் கொள்ளி எறும்பு போல்.
(ஆனேன்.)

இருதலைக் கொள்ளியில் எறும்பு பிழையாது.
இருதலை மணியன் பாம்பைப் போல். 3455

இருதலை வழக்கு நூலினும் செம்மை.
இரு தோணியில் கால் வைக்காதே.
இருந்த இடத்து வேலை என்றால் எங்கள் வீட்டுக்காரரையும் கூப்பிடுங்கள்.
(யாழ்ப்பாண வழக்கு.)

இருந்த இடத்து வேலைக்காரன் எங்கள் வீட்டு ஆண் பிள்ளையாம்.
(யாழ்ப்பாண வழக்கு.)

இருந்த இடம் ஏழு முழம் ஆழம் வெந்து போகும். 3460

இருந்த இடம் தெரியாமல் புல் முளைத்துப் போயிற்று.
இருந்த கால் மூதேவி; நடந்த கால் சீதேவி.
இருந்த நாள் எல்லாம் இருந்துவிட்டு ஊர்ப் பறையனுக்குத் தாரை வார்த்தது போல.
(வீரேர்ப் பறையனுக்கு.)

இருந்தல்லவோ படுக்க வேணும்?
இருந்தவன் இருப்பவனுக்கு வழிகாட்டி. 3465

இருந்தவன் எழுந்திருக்கிறதற்குள்ளே நின்றவன் ஒரு காதம் போவான்.
(நெடுந்தூரம் போவான்.)

இருந்தவன் தலையிலே இடி விழுந்தாற் போல.
இருந்தவனுக்குப் போனவன் குணம்.
இருந்த வெள்ளத்தைத் தள்ளிற்றாம் வந்த வெள்ளம்.
இருந்தால் அப்பன்; இல்லாவிட்டால் சுப்பன். 3470
(சப்பன்.)

இருந்தால் இடுவது; இல்லையேல் விடுவது.
(இடுவது உரம்.)

இருந்தால் ஓணம்; இல்லா விட்டால் ஏகாதசி.
இருந்தால் இருப்பீர்; எழுந்தால் நிற்பீர்.
இருந்தால் செட்டி; எழுந்திருந்தால் சேவகன்.
இருந்தால் துவாதசி; இல்லா விட்டால் ஏகாதசி. 3475

இருந்தால் நவாப் சாயபு; இல்லா விட்டால் பக்கிரி சாயபு.
(நவாப் ஷா; பக்கிரி ஷா.)

இருந்தால் பூனை; பாய்ந்தால் புலி.
இருந்து அடித்தேன்; பறந்து போயிற்று.
இருந்து இருந்து இடையனுக்கு வாழ்க்கைப்பட்டாளாம்.
இருந்து இருந்து ஒரு பிள்ளை பெற்றாள், மலமும் ஜலமும் இல்லாமல். 3480
(வலமும், ஜலமும்.)

இருந்து இருந்து ஒரு பெண்ணைக் கொண்டான்; மலஜலம் எல்லாம் வீட்டுக்குள்ளே.
இருந்து இருந்து பார், இடி விழுவான் காரியத்தை.
இருந்து கொடுத்தால் நடந்து வாங்கு.
(வாங்க வேணும்.)
இருந்து பணம் கொடுத்து நடந்து வாங்க வேண்டியதாய் இருக்கிறது.
(கடன் கொடுத்து.)
இருந்தும் கெடுத்தான்; செத்தும் கெடுத்தான். 3485
(கெடுத்தான் பாவி. கெடுத்தான் முருகப்பன்.)

இரு நாய்க்கு இட்ட எலும்பு போல.
இருப்பது எல்லாம் இருந்துவிட்டு இளித்த வாயன் ஆவானேன்?
இருப்பது பொய்; போவது மெய்.
இருப்பவனுக்கும் கேளாதவனுக்கும் கொடுக்காதே.
இருப்பிடம் தலைப்பிள்ளை; தலைக்கடை தென்னம் பிள்ளை. 3490

இரும்புக்கட்டியைக் காற்று அடித்தபோது இலவம் பஞ்சு எனக்கு என்ன புத்தி என்கிறதாம்.
இரும்புக் கதவை இடித்துத் தவிட்டுக் கொழுக்கட்டை எடுப்பதா?
இரும்பு கோணினால் ஆனையை வெல்லலாம்; கரும்பு கோணினால் கட்டியும் பாகும் ஆகும்.

இரும்புச் சலாகையை விழுங்கிவிட்டு இஞ்சிச் சாற்றைக் குடிப்பதா?
இரும்பு செம்பு ஆனால் திரும்பிப் பொன் ஆகும். 3495

இரும்பு செம்பு ஆனால் துரும்பு தூண் ஆகும்.
இரும்புத் துறட்டுக்கு அசையாத புளியங்காய் திருப்பாட்டுக்கு அசையுமா?
இரும்புத் தூணை எறும்பு அரித்தாற்போல்.
இரும்புத் தூணைச் செல் அரிக்குமா?
இரும்புப் பட்டறையில் ஈக்கு என்ன வேலை? 3500

இரும்பு பிடித்த கையும் சிரங்கு பிடித்த கையும் சும்மா இரா.
(துரும்பு பிடித்தவன் கையும் கரும்பு பிடித்தவன் கையும்.)
இரும்பும் குறும்பும் இருக்கக் கெடும்.
இரும்பு முளைத்தாலும் கரும்பு முளைக்காது.
இரும்பை எலி கவ்விற்று என்கிறான், படுக்காளி.
(எலி தின்றது என்கிறான் இடக்கன்.)
இரும்பை எலி தின்னுமா? 3505

இரும்பை எறும்பு அரிக்குமா?
இரும்பைக் கறையான் அரித்தால் குழந்தையைப் பருந்து கொண்டு போகாதா?
(பிள்ளையை.)
இருமலே இடி விழுகிறது; தும்மல் எப்படியோ?
இரு மனசு மங்கையோடு இணங்குவது அவம்.
(அவலம்.)
இருமும்போது கட்டிய தாலி தும்மும்போது அறுந்து விட்டது. 3510

இருவர் ஒத்தால் ஒருவருக்கும் பயம் இல்லை.
(இருவரும்.)
இருவர் நட்புக்கு ஒருவர் பொறுமை.
இருவரும் ஒத்தால் பிணக்கு வருவானேன்?
இருவிரல் தோலும் அவற்றின்மேல் மயிரும் எனக்கு இல்லையே!
இருளன் பிள்ளைக்கு எலி பஞ்சமா? 3515
(எலிக்குஞ்சு.)

இருளன் பிள்ளைக்கு எலி பிடிக்கக் கற்றுக் கொடுக்க வேண்டுமா?
இருளன் ராஜவிழி விழிப்பானா?
இருளுட் ஒரு காலம்; நிலவும் ஒரு காலம்.
இரை விழுங்கின பாம்பு போல.
இல்லது வாராது; உள்ளது போகாது. 3520

இல்லறம் அல்லது நல்லறம் அன்று.
இல்லறம் நல்லறம்.
இல்லறம் பெரிது; துறவறம் சிறிது.

(துறவறம் பழிப்பு.)

இல்லாத சொல் அல்லல்படும்.
இல்லாததைக் கொண்டு கல்லாததைக் கனா என்றால் யாரால் முடியும்? 3525

இல்லாத பிள்ளைக்கு இலுப்பைப்பூச் சர்க்கரை.
இல்லாதவன் கோபம் பொல்லாதது.
இல்லாதவன் பெண்சாதி எல்லாருக்கும் தோழி.

(மைத்துனி. யாழ்ப்பாண வழக்கு.)

இல்லாதவன் பொல்லாதவன்.
இல்லாதவன் வீட்டில் இருபத்தேழு குழந்தைகள். 3530

இல்லாதவனுக்கு இலுப்பைப்பூச் சர்க்கரை.
இல்லாதவனோ, பொல்லாதவனோ?
இல்லாத வீட்டுக்கு இலஞ்சியம்.
இல்லாது சொல்லி அல்லற்படுதல்.
இல்லாது பிறவாது; அள்ளாது குறையாது. 3535

இல்லாது இல்லன்; இருப்பதும் இல்லன்.
இல்லார் இருமையும் நல்லது எய்தான்.
இல்லாளை விட்டு வல்லாண்மை பேசுகிறதா?
இல்லிடம் இல்லார்க்கு நல்லிடம் இல்லை.
இல்லு அலுக்கானே பண்டுக வச்சுனா. 3540

(தெலுங்கு. வீட்டை மெழுகிவிட்டால் பண்டிகை வந்துவிடுமா என்பது பொருள்.)

இல்லை என்கிற மகராசி இல்லை என்றாள்; தினம் போடுகிற மூதேவிக்கு என்ன வந்தது?
இல்லை என்ற வீட்டில் பல்லியும் சேராது.

(இல்லை என்ற இடத்தில்.)

இல்லையா இலை மறைவு, காய் மறைவு?
இல்லையே ஒன்றுக்கும் உதவாத ஒன்று.
(பழமொழி நானூறு.)
இல்லோர் இரப்பது இயல்பு. 3545

இலக்கணப் பெண்சாதி மானியம் காக்கிறாள்.
இலக்கணம் கற்றவன் கலக்கம் அற மன்னர் சபை காண்பான்.
இலக்கணம் புலவர்க்கு அணிகலன்.
இலங்கையில் பிறந்தவன் எல்லாம் இராவணன் ஆவது இல்லை.
இலங்கையைச் சுட்ட குரங்கு. 3550

இலந்தைப் பழப் புழுப் போலத் துடிக்கிறது.
இலவசமாய் வந்த மாட்டை நிலவிலே கட்டி ஓட்டு.
இலவு காத்த கிளி போல.
இலுப்பைச் சர்க்கரைக் கொடையாம்; துரைகள் மெச்சின நடையாம்.
இலுப்பைப் பூப்போல். 3555

இலுப்பைப் பூவைத் திருப்பினால் இரண்டு புறமும் பொத்தல்.
இலை அசைந்தாலும் இலைக்குக் கேடு; முள் அசைந்தாலும் இலைக்குக் கேடு.
இலைக்கும் உண்டு, மட்டையும் பழுப்பும்.
(பட்டையும்.)
இலை சாய்கிற பக்கம் குலை சாயும்.
(இலை-வாழைஇலை.)
இலை தின்னி காய் அறியான். 3560
(இலை-வாழை இலை.)

இலைப் பழுப்பு ஆனாலும் குலப்பழுப்பு ஆகாது.
இலைப் புரை கிளைத்தல்.
(சீவக சிந்தாமணி.)
இலைமறை காய் போல்.
இலை மறைவு, காய் மறைவு.
இலை மறைவு, தலை மறைவு. 3565

இலையும் பழுப்பும் எங்கும் உண்டு.
இவ்வூர்ப் பூனையும் புலால் தின்னாது.
இவருக்குச் சொல்லும் புத்தி கடலிற் பெருங்காயம் கரைத்தாற் போல் ஆகிறது.

இவன் ஊராருக்குப் பிள்ளை.

இவன் கல்லாது கற்றவன் உள்ளங்கையில் வைகுந்தம் காட்டுவான். 3570

இவன் புத்தி உலக்கைக் கொழுந்து.
(குந்தாணி வேர்.)

இவன் மகா பெரிய கள்ளன்; காலாலே முடிந்ததைக் கையாலே அவிழ்ப்பது அரிது.

இவன் வாழ்ந்த வாழ்வு மறுகிலேன் மல்லாக்கினேன்.

இவனுக்கும் அவனுக்கும் ஏழு பொருத்தம்.

இழந்த சொத்துப் பெரிய சொத்து. 3575

இழப்பாரை ஜயிப்பார் இல்லை; எதிர்ப்பாரை ஜயிப்பார் உண்டு.

இழவுக்கு வந்தவர்கள் எல்லாம் தாலி அறுப்பார்களா?

இழவுக்கு வந்தவளை உழவுக்கு அழைத்தானாம்.

இழவு கொடுப்பானுக்கு வாழ்க்கைப்பட்டு ஓட்டமே ஒழிய நடை இல்லை.

இழவு சொன்னவன் மேலா பழி? 3580
(பேரிலேயா?)

இழவு வீட்டுக்குப் போனாலும் இடக்கை நீளும்.

இழவைத் துறப்பவர் எல்லாம் துறப்பார்.

இழுக்கான பொன்னைப் புடத்தில் வைத்து எடுப்பார்.

இழுக்குடைய பாட்டிற்கு இசை நன்று.

இழுத்தபடி எல்லாம் வரும் தங்கக் கம்பி. 3585

இழுத்துப் பிடித்து நின்றாலும் வழுக்கி வழுக்கிப் போகும்.

இழுத்து மூட வேணும்.

இழுவை கண்டால் அடி பார்ப்பானேன்?

இழை ஆயிரம் பொன் பெற்ற இந்திர வர்ணப்பட்டு.

இழை ஊடாடா நட்புப் பொருள் ஊடாடக் கெடும். 3590

இழையத் தீட்டிக் குழைய வடித்தது போல.

இளகின இரும்பைக் கண்டால் கொல்லன் குண்டியைத் தூக்கி அடிப்பான்.

இளங் கன்று பயம் அறியாது.
(இளமறி.)

இளஞ்சிங்கம் மதயானைக்கு அஞ்சுமா?
இளநீர்க் காய் உதிர்க்கிறது போல. 3595

இளமைச் சோசியம்; முதுமை வைத்தியம்.
இளமையில் கல்வி எப்போதும் நிற்கும்.
இளமையில் கல்வி சிலையில் எழுத்து.
இளமையில் சோம்பல், முதுமையில் வறுமை.
(மிடிமை.)

இளமையில் பழக்கம் எப்போதும் மறவாது. 3600

இளமையில் பழக்கம் சுடுகாடு மட்டில்.
இளமையில் பழக்கம் முதுமையில் சுபாவம்.
இளமையில் முயற்சி முதுமையில் காக்கும்.
இளமையும் முதுமையும் சரியான வயசு அல்ல.
இளவெயில் காயாத நீயா தீப் பாயப் போகிறாய்? 3605

இளிச்ச கண்ணி பிளிச்சை வாங்காள்.
இளிச்ச வாயனைக் கண்டால் எல்லாருக்கும் இளக்காரம்.
இளித்துக் கொண்டிருந்தாளாம் மடத்தாயி; ஏறி அடித்தானாம் தவசிப் பிள்ளை.
(இடக்கர்.)

இளைஞன் ஆனாலும் ஆடுவான் மூப்பு.
(பழமொழி நானூறு.)

இளைத்த உடம்புக்கு இரும்பைக் கொடு. 3610

இளைத்த நாயை ஏறி மிதிப்பது போல,
இளைத்த நேரத்துக்குப் புளித்த மோர்.
இளைத்தவர் கிளைப்பார்; கிளைத்தவர் இளைப்பார்.
இளைத்தவரைச் செயிப்பார் உண்டோ?
இளைத்தவன் இரும்பு தின்ன வேண்டும். 3615

இளைத்தவன் இரும்பை உண்; வலுத்தவன் வாளம் உண்.
இளைத்தவன் எள்ளு; வலுத்தவன் கரும்பு.
இளைத்தவன் எள்ளு; வலுத்தவன் வாழை.
இளைத்தவன் எள்ளு விதைக்க வேண்டும்; கொழுத்தவன் கொள்ளு விதைக்க வேண்டும்.

இளைத்தவன் எள்ளு விதைப்பான்; பருத்தவன் கரும்பு போடுவான். 3620

இளைத்தவன் ஒரு வருஷத்துக்கு எள் விதைக்க வேண்டும்.
இளைத்தவன் சிநேகிதனைச் சேர்.
இளைத்தவன் தலையில் ஈரும் பேனும்.
இளைத்தவன் தலையில் சொட்டு.

(கொட்டு.)

இளைத்தவன் பெண்டாட்டி எல்லாருக்கும் மச்சினி. 3625

(மைத்துனி.)

இளைத்தவனைக் கண்டானாம், ஏணிப் பந்தம் பிடித்தானாம்.
இளைத்தவனை வலியான் கோபித்தால் வலியானை வல்லவன் கேட்பான்.
இளைத்து இனத்தாரிடம் போவானேன்?
இளைது என்று பாம்பு இகழ்வார் இல்.

(பழமொழி நானூறு.)

இளையாள் இலை தின்னி; மூத்தாள் காய் அரிவாள். 3630

இளையாள் முகமோ, இழையாடிக் காற்றோ?
இளையாள் மோகம் கண்ணை மறைக்கிறது.
இளையாளே வாடி மலையாளம் போவோம்; மூத்தாளே வாடி முட்டிக் கொண்டு சாவோம்.
இளையாளைக் கிழவன் அரிக்கிறது போல.
இளையாளே ஆயினும் மூத்தாளே ஆகும் மகன். 3635

(பழமொழி நானூறு.)

இறக்கும் காலம் வந்தால் பிறக்கும் ஈசலுக்குச் சிறகு.
இறகு இல்லாப் பறவைக்கு உட்கார ஒரு நாழிகை இல்லை.
இறகு முற்றிப் பறவை ஆனால் எல்லாம் தன் வயிற்றைத்தான் பார்க்கும்.
இறங்கச் சொன்னால் நொண்டிக்குக் கோபம்; ஏறச் சொன்னால் எருதுக்குக் கோபம்.
இறங்கு துறையிலே நீச்சானால் ஏறு துறையிலே எப்படி? 3640

(இறங்கும்போதே, ஏறு கரையில்.)

இறங்கு பொழுதிலே மருந்து குடி.
இறடுங்கால் இறடும்.
இறந்தவன் இருப்பவனுக்கு வழிகாட்டி.

இறந்தவன் பிள்ளை இருந்தவன் அடைக்கலம்.

இறந்தவனுக்கு எள்ளும் தண்ணீரும். 3645

இறந்தால் போச்சு மூச்சு; மறந்தால் போச்சுக் காசு.

இறந்தாலும் சிங்காரக் கழுவில் இறக்க வேண்டும்.

இறந்து இறந்து பிறந்தாலும் இருவக்கரையானாய்ப் பிறக்க வேணும்.

இறப்பில் இருந்த அகப்பை சோற்றில் விழுந்த மாதிரி.

இறாக் கறியோ, புறாக் கறியோ? 3650

இறுகினால் களி; இளகினால் கூழ்.

இறுத்த குடிக்கு அனர்த்தம் இல்லை.

இறுப்பானுக்குப் பணமும் கிடையாது; உழைப்பானுக்குப் பெண்ணும் கிடையாது.

இறைக்க. இறைக்கக் கிணறு சுரக்கும்.
(ஊறும்.)

இறைக்க ஊறும் மணற்கேணி; ஈயப் பெருகும் பெருஞ் செல்வம். 3655

இறைக்கிற கிணறு சுரக்கும்.

இறைக்கிறவன் இளிச்ச வாயனாக இருந்தால் மாடு மச்சான் முறை கொண்டாடும்.

இறைக்கும் கிணறு ஊறும்.

இறைச்சி தின்றவன் கடுப்புக்கு மருந்து அறிவான்.

இறைச்சி தின்றாலும் எலும்பைக் கோத்துப் போட்டுக் கொள்ளலாமா? 3660
(கழுத்தில் போட்டுக் கொள்ளலாமா? எலும்பைக் கோத்துக் கழுத்தில் அணியலாமா?)

இறைத்த கிணறு ஊறும்; இறையாத கிணறு நாறும்.
(பாழ். ஊறுமா?)

இறைத்த கிணறு சுரக்கும்.

இறைத்தோறும் ஊறும் கிணறு.

(பழமொழி நானூறு.)

இறையாத கிணறு பாழும் கிணறு.

இறைவனை ஏற்று; அரசனைப் போற்று. 3665

இன்சொல் இடர்ப்படுவது இல்லை.
இன்சொல்லால் இடர் வராது.
இன்சொல்லே ஏற்றம் தரும்.
இன்பத்தில் ஆசை எவர்க்கும் உண்டு.
இன்ப துன்பம் இரண்டும் காவடிப் பானைகள் போல. 3670

இன்பம் உற்றிடில் துன்பம் இல்லை.
இன்பம் வருவதும் துன்பம் வருவதும் எடுத்த உடலுக்கு வரம்.
இன்பமும் துன்பமும் இணை விடா.
இன்பமும் துன்பமும் இதயத்தே ஆம்.
இன்பமும் துன்பமும் எடுத்த உடலுக்கு இயல்பு. 3675

இன்பமும் துன்பமும் பொறுமையிலே.
இன்பமும் துன்பமும் யாருக்கும் உண்டு.
இன்று அற்று இன்று போகிறதா?
இன்று இருப்பவர் நாளைக்கு இல்லை.
இன்றைக்கு அரசன் நாளைக்கு ஆண்டி. 3680

இன்றைக்கு அறையில் இருந்தால் நாளைக்கு அம்பலத்தில் வந்தே தீரும்.

இன்றைக்கு ஆகிறது நாளைக்கு ஆகட்டும்.
இன்றைக்கு ஆவது நாளைக்கு ஆகுமா?
இன்றைக்கு ஆளுவார் ஓடு; நாளைக்குக் கையில் ஆளுவார் ஓடு.
இன்றைக்கு இருப்பார் நாளைக்கு இல்லை. 3685

இன்றைக்கு இலை அறுத்தவன் நாளைக்கும் இலை அறுப்பான். (அறுக்க மாட்டானா?)

இன்றைக்கு எல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம் அழுகை; பசியாது.

இன்றைக்கு என்பதும் நாளைக்கு என்பதும் இல்லை என்பதற்கு அடையாளம்.

இன்றைக்குச் சிரிப்பு; நாளைக்கு அழுகை.

இன்றைக்குச் சின்னதுக்கு வந்தால் நாளைக்குப் பெரியதுக்கு வரும். 3690

இன்றைக்குச் செத்தால் நாளைக்கு இரண்டு நாள்.
இன்னம் இருக்கிறது, தேருக்குள் சிங்காரம்.
(இன்னும்.)

இன்னம் இன்னம் இசைச் சொல் அநேகம்.
இன்னமும் கெடுகிறேன், பந்தயம் என்ன என்றது போல.
இன்னாதே பேயோசேடேனும் பிரிவு. 3695
(பழமொழி நானூறு.)

இன்றும் கிடக்குது ரியோ ரியோ.
இனக்கூட்டு ஆனாலும் நிலக்கூட்டு ஆகாது.
இனத்தால் இனம் ஆகும்; பணத்தால் ஜனம் ஆகும்.
இனத்தை இனம் சேரும்.
இனத்தை இனம் தழுவும். 3700

இனம் இனத்தை [illegible] நம்; [illegible] க்கும்.
இனம் இனத்தோடு சேரும்; பணம் பணத்தோடு சேரும்.
இனம் இனத்தோடே; வெள்ளாடு தன்னோடே.
இனம் கெட்ட ஏகாதசிக்கு என்ன பலகாரம்?
இனம் பிரிந்த மான் போல. 3705

இனாம் வந்த மாட்டை நிலவில் கட்டி ஓட்டு என்றானாம்.
இனிமேல் எமலோகம் பரியந்தம் சாதிக்கலாம்.
இனிமேல் ஒரு தெய்வத்தைக் கை எடுக்கிறதா?
இஷ்கா இஷ்பாவாக இருக்கிறான்.
இஷ்டம் அற்ற முனியன், அஷ்டமத்துச் சனியன். 3710

இஷாராவினால் தெரிந்து கொள்ளாதவன் என்ன சொன்னாலும் தெரிந்து கொள்ள மாட்டான்.
(இஷாரா-சமிக்ஞை.)

ஈ அடித்தான் காப்பி.

(காப்பி மாதிரி.)

ஈ ஏறி மலை சாயுமா?

ஈ எறும்பு எண்ணாயிரமும் சிரிக்கிறது. 3715

ஈ என்று போயிருக்கிறான்.

ஈ ஏறி மலை குலுங்கினது போல.

ஈ ஒட்டுகிறான்.

ஈக் கடித்த பெண்ணுக்கு இழை ஒட்டுவதா?

ஈக் கலையாமல் தேன் எடுப்பார்கள்: எடுக்காமல் பிடிப்பார்கள். 3720

ஈக்கும் ஆனைக்கும் சம்பந்தமா?

ஈக்கும் நாய்க்கும் தடை இல்லை.

ஈக்கும் பாலுக்கும் எச்சில் இல்லை.

ஈக்கு விடம் தலையில்; தேளுக்கு விடம் கொடுக்கில்.

ஈகை உடையோன் எக்களிப்பு அடைவான். 3725

ஈச்சங் கள் எதிலும் குளிர்ச்சி.

ஈச்சங் காட்டில் எருமை குடி இருந்தது போல.

ஈச்சங் குலையில் தேன் வைத்த மாதிரி.

ஈச்ச முள் கொண்டு இறுக இறுகத் தைத்தாலும் தேற்றிய வசனம் சொல்லாமல் விடான்.

(தோற்றிய வசனம்.)

ஈச்ச முள்ளாலே இருவாயும் தைத்தாலும் தேங்காய்க்கு மஞ்சள் இல்லை, பூவுக்கு மணம் இல்லை என்கிறான். 3730

(மங்கிலியத்துக்கு.)

ஈசல் இறகு எல்லாவற்றிலும் மிருது.

ஈசல் பறந்தால் மழை.

ஈசல் பிறந்தால் மழை மாறும்.
ஈசல் புற்றில் கரடி வாய் வைத்தாற் போல.
ஈசல் பெறும் போக்கில் சொறியாந் தவளை வேட்டை ஆடும். 3735

ஈசல் பெறும் போக்கில் தவளை தத்தி விழுங்குது.
(விழுந்தது.)
ஈசல் பொறுக்கி பேசவும் அறியான்.
ஈசல் மடிந்தாற் போலே மாண்டதே சேனை.
(மடிந்ததே.)
ஈசலுக்கு இறகு முளைத்தாற் போல.
ஈசலுக்கு எல்லாம் பகை. 3740

ஈசன் எப்படி அப்படித் தாசன்.
ஈசன் கருணை பேசுதல் அரிது.
ஈசனுக்கு ஏது நீச பங்கம்?
ஈசனுக்கு ஒப்பு எங்கும் இல்லை.
(இங்கு ஒன்றும் இல்லை.)
ஈசனுடைய அடியார் மனம் எரிந்து புகைந்தால் வீண் போகுமா? 3745

ஈசனைப் போற்று; அரசனை வாழ்த்து.
ஈசான்ய மின்னலுக்கு எருதும் நடுங்கும்.
ஈசுவரன் கிருபை எல்லார்க்கும் போதும்.
ஈசுவரன் கோவில் திருநாள் ஒரு நாள் கந்தாயம்.
ஈசுவரனுக்குத்தான் வெளிச்சம். 3750

ஈசுரும் பூதூரும் என்றும் இழப்பு.
ஈஞ்சைக் கண்டால் கிழி; எருக்கைக் கண்டால் சொடுக்கு.
ஈட்டி எட்டின மட்டும் பாயும்; பணம் பதின் காதம் குத்தும்.
ஈட்டி எட்டின மட்டும் பாயும்; பணம் பாதாளம் வரையில் பாயும்.
(எட்டு முழம் பாயும்.)
ஈட்டிய பொருளினும் எழுத்தே உடைமை. 3755

ஈட்டுக்கு ஈடும் சோட்டுக்குச் சோடுமாய் இருந்தால் வாசி.
ஈட்டுக்கும் பாட்டுக்கும் இருந்தாள் இரு குமரி.
(இடுகுமரி.)

ஈடன் பாடு அஞ்சான்? கூழை எருது நுளம்புக்கு அஞ்சாது.

(ஈடன்-பலம் உள்ளவன், நுளம்பு-கொசு.)

ஈடு ஆகாதவனை எதிராக்காதே.

(எதிர்க்காதே.)

ஈடு இணை அற்றது. 3760

ஈடு உள்ள குடிக்குக் கேடு இல்லை.

ஈடும் எடுப்பும் இல்லாதது.

ஈடு ஜோடு எங்கும் கிடையாது.

ஈடு ஜோடு சொல்ல முடியாது.

ஈதல் உடையானை யாவரும் புகழ்வர்.

ஈந்து பார்த்தால் இம்மி வெளியாகும்.

ஈப் பறக்க இசை கேடு வந்தாற் போல் ஆச்சுது.

ஈப்பாக்கு வைத்த மாதிரி.

ஈப் பிசினி இரப்பதுகூடக் கஞ்சிசம்.

ஈட்டி வாயன் தேடிக் கற்பூர வாயனுக்குக் கொடுத்தது போல. 3770

(யாழ்ப்பாண வழக்கு.)

ஈமக் கடனை எழுந்து முறை செய்.

ஈ முட்டுவது எருமைக்கடா முட்டுவது போல.

ஈயத்தைக் காதில் காய்ச்சி ஊற்றினாற் போல.

ஈயத்தைக் காய்ச்சலாம்; இரும்பைக் காய்ச்சலாமா?

ஈயத்தைப் பார்த்து இளித்ததாம் பித்தளை. 3775

(கண்டு.)

ஈயத்தைப் புடம் வைத்தால் ஈயம் வெள்ளி ஆகுமா?

ஈயப் பெருகும் பெருஞ் செல்வம்.

ஈயம் பிடித்தவன் எது சொல்லினும் கேளான்.

ஈயாத கருமிக்கு ஏராளச் செலவு.

ஈயாத பத்தினியிடம் ஈ என்றாலும், இல்லையே அது கொசு என்பாளாம். 3780

ஈயாத புல்லர் இருந்தென்ன? போய் என்ன?

ஈயாத புல்லனை எவ்விடத்திலும் காணோம்.

ஈயாத லோபி இருந்தென்ன? போய் என்ன?

(இறந்து என்ன.)

ஈயாதார் வாழ்ந்தென்ன? இண்டஞ்செடி பழுத்து என்ன?

(இண்டஞ்செடி தாழ்ந்து என்ன? தழைத்து என்ன?)

ஈயாப் பத்தன் பேராசை கொண்டு பெருக்கத் தவிக்கிறான். 3785

ஈயார் உறவும் ஈகை இல்லா அன்பும் பாழ்.

ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்.

(உடைமையை. கொன்றை வேந்தன். இருபொருள். ஈயார்-கொடுக்காதவர்; ஈ என்னும் பறவை. தேட்டை-சேமித்த பொருளை; சேமித்த தேனை. தீயார்-கெட்டவர்; நெருப்பை மூட்டுபவர்.)

ஈயார் பொருளுக்குத் தீயார்.

ஈயுந்தனையும் எரு விடு; காயுந்தனையும் களை பறி.

(களை எடு; களை பிடுங்கு.)

ஈயும் எறும்பும் எங்கும் உண்டு. 3790

ஈயைப் பிடித்தால் கை வேறு, கால் வேறு.

ஈயைப் போல் சுத்தமும் எறும்பைப்போல் சுறுசுறுப்பும்.

ஈர் உருவப் பேன் அகப்படும்.

(அகப்படுமா?)

ஈர்க்கிலே குத்தி இறப்பிலே வைத்தாற்போல.

ஈர்ந்து உழும் புன்செய் ஈரம் தாங்கும். 3795

ஈர் பேன் ஆகிப் பேன் பெருமான் ஆனதுபோல.

ஈரச் சீலையைப் போட்டுக் கழுத்தை அறுப்பான்.

(அறுக்கிறதா?)

ஈரத்தில் ஏரைப் பிடி.

ஈரத் துணியைப் போட்டுக் கழுத்தை வெட்டுவான்.

ஈர நாவுக்கு எலும்பு இல்லை. 3800

ஈர நிலத்தில் ஏரைப் பிடி.

ஈர நெஞ்சம் இரங்கும்; இரங்கா நெஞ்சம் அரங்கும்.

ஈரம் அற்ற இடத்திலே ஈ மொய்க்குமா?

(ஈயும் மொய்க்காது. ஈரம் உள்ள இடத்திலே.)

ஈரம் இருக்கிற இடத்திலே ஈ மொய்க்கும்.

ஈரம் இல்லா நெஞ்சத்தார்க்கு என் செய்தும் என்ன? 3805

(ஈரம்-அன்பு.)

ஈரம் உடையோரை யாவரும் புகழ்வர்.
ஈரம் உள்ள இடத்தில் ஈ மொய்க்கும்.
ஈரம் கண்டு அவிசாரி பிடிக்கிறவர்.
ஈரம் காய்ந்தால் பிட்டத்தில் மண் ஒட்டாது.
ஈரம் போகாமல் எருவை மூடு. 3810

ஈர மரத்தில் வயிர ஆணி கடாவினது போல.
ஈரலிலே மயிர் முளைத்தவன்.
ஈர விதைப்பும் ஈரூர் வேளாண்மையும் தாரம் இரண்டும் தனக்குப் பகை.
ஈர வெங்காயத்திற்கு இருபத்திரண்டு புரை.
(இருபத்தெட்டு.)
ஈரூர் வேளாண்மையும் தாரம் இரண்டும் தனக்குப் பகை. 3815

ஈரூரில் உழுதவனும் கெட்டான்; இரண்டு பெண் கட்டினவனும் கெட்டான்.
ஈரை நினைப்பான், பேரை மறப்பான்.
(மறக்கான்.)
ஈரைப் பேன் ஆக்கிப் பேனைப் பெருமாள் ஆக்குகிறது.
ஈவதினும் மேல் இல்லை; இரப்பதினும் தாழ்வு இல்லை.
ஈவதைக் கண்டார் யாவரும் அண்டார். 3820
(கண்டால்.)

ஈ விழுந்தாலும் எடுத்தாலொழியப் போகுமா?
ஈ விஷ்டித்ததும் நாய் திருடித் தின்றதும்.
ஈவோனுக்கு ஒரு போது உணவு; இரப்போனுக்குப் பல போது உணவு.
ஈவோனுக்கு ஒரு போஜனம்: இரப்போனுக்கு ஏராளம்.
ஈழத்தில் செக்கு ஆட, இங்கே பதம் பார்க்க. 3825

ஈழமும் கொங்கும் எதிர்த்து மின்னினால் குட்டியை எதிர்த்துக் குடாப்பில் போடு.
ஈரமும் கொங்கும் எதிர்த்து மின்னினால் சாமத்துக்கு மழை தப்பாமல் வரும்.
ஈன்ற புலி போலே.
ஈன்ற மாடு இறை வானத்தைப் பிரிப்பது போல்.
ஈன்றவள் தாய் பாட்டி; இத் தாயின் தாய் பூட்டி. 3830
(பீட்டி.)

ஈன்றோர் நஞ்சில் சான்றோர் இல்லை.
(ஈன்றோரைவிட.)

ஈனம் மானம் அற்றவன் இரந்து வயிறு வளர்ப்பான்.

ஈனருக்கு இடம் கொடுத்தால் இல்லிடம் எல்லாம் பாழ்.

ஈனரை அடுத்தால் மானம் அழியும்.

ஈனவும் தெரியாது; எடுக்கவும் தெரியாது. 3835
(நக்கவும்.)

ஈனனுக்கு இடம் கொடுத்தால் இல்லிடம் கைக் கொள்வான்.

ஈனனுக்கு இரு செலவு.

ஈனாத மாட்டுக்கு ஒரு கடுக்காய்; இளம் பிள்ளைத் நாய்ச்சிக்கு ஏழு கடுக்காய்.

ஈனாப் பெண்கள் இருவர் கூடினால் காயா வரகு நீறாய்ப் போம்.
(காயாப் புழுங்கல், யாழ்ப்பாண வழக்கு.)

# உ

உகம் முடிய மழை பெய்தாலும் ஓட்டாங் கிளிஞ்சல் பயிர் ஆகுமா? 3840

உகிர்ச் சுற்றின்மேல் அம்மி விழுந்தாற் போல்.
(உலக்கை விழுந்தாற் போல.)
உங்கள் அப்பன் ஆர்க்காட்டு நவாபா?
உங்கள் அப்பன் ஏழரைக் கோடி.
(கொங்கு நாட்டு வழக்கு.)
உங்கள் அப்பன் சீமை ஆளுகிறானா?
உங்கள் அப்பன் செத்தான்; பழி உன்னை விடேன். 3845

உங்கள் அப்பன் பூச்சிக்குப் பயப்பட்டானா, உன் பூச்சிக்குப்பயப்பட?
உங்கள் உறவிலே வேகிறது ஒருகட்டு விறகிலே வேகிறது மேல்.
உங்கள் பெண்டுகள் கொண்டான் அடித்தால் கண்கள் கொள்ளாது.
உங்கள் வீட்டுப் பனங்கட்டை ஒற்றைப் பணத்தை முடிந்து கொண்டு கிடக்குமோ?
உங்களைக் கடலிலே கை கழுவினேன். 3850

உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம்.
(திருவாசகம்.)
உச்சத்தில் சொன்னால் அச்சம் இல்லை.
(பல்லி வாக்கு.)
உச்சந் தலையில் செருப்பால் அடித்தது போல.
உச்சந் தலையில் செருப்பால் அடித்தாலும் உச்சி குளிருமா?
உசசந் தலையில் முள் தைத்து உள்ளங்காலில் புரை ஓடிற்றாம். 3855

உச்சனை உச்சன் பார்த்தால் பிச்சை எடுப்பார்.
(சோதிடம்.)
உச்சனை உச்சன் பார்த்தால் மச்சு வீடும் குச்சு வீடாகும்.
(ஷ)

உச்சஸ்தானே ஷு பூஜித.
உச்சாணிக் கிளையில் ஏறினால் உயிருக்கு ஆபத்துத்தானே?
உச்சி இட உச்சி இட உள்ளே குளிர்ந்தது. 3860

உச்சி குளிர்ந்தது.
உச்சி மீனுக்கு எட்டாம் மீன் உதய மீன்.
(புறநானூறு, 229.)
உசிர் இருந்தால் உப்பு மாற்றிக் குடிக்கலாம்.
(உயிர்.)
உசு பிடி என்றால் நீ பிடி என்கிறது நாய்.
உஞ்ச விருத்திக்குப் போனாலும் பஞ்சம் இல்லாமல் இருக்க வேணும். 3865

உட்கார்ந்தவன் காலில் மூதேவி; ஓடுபவன் காலிலே சீதேவி.
உட்கார்ந்தவனைக் கட்டமாட்டாதவன் ஓடுகிறவனைக் கட்டுவானா?
உட்கார்ந்து அல்லவோ படுக்க வேண்டும்?
உட்கார்ந்து இருக்கச்சே அடித்தால் பொன்னாகும்; ஓடச்சே அடித்தால் செம்பானாலும் ஆகும்; இரும்பானாலும் ஆகும்.
உட்காரச் சொல்லாத சர்க்கரை போல் பேச்சு. 3870

உட்சுவர் இருக்க வெளிச்சுவர் பூசலாமா?
உட்சுவர் தீற்றிப் புறச்சுவர் தீற்று.
உட்புறத்துக்கு வெளிப்புறம் கண்ணாடி.
உடம்பிலே காய்த்துத் தொங்குகிறதா?
உடம்பிலே பயம் இருந்தால் நன்றாகச் செய்வான். 3875

உடம்பு உளைந்த கழுதை உப்புக் களத்துக்குப் போனது போல.
(போயிற்றாம்.)
உடம்பு எங்கும் சுடுகிற தழலை மடியிலே கட்டுகிறாய்.
உடம்பு எடுத்தவன் எல்லாம் ஓடி எடுத்தவன்.
(எடுத்தால்.)
உடம்பு எல்லாம் புழுத்தவன் அம்மன் கோவிலைக் கெடுத்தானாம்.
உடம்பு எல்லாம் புளுகு; பல் எல்லாம் ஊத்தை. 3880

உடம்புக்குப் பால் குடிப்பதா? ஊருக்குப் பால் குடிப்பதா?
(உடம்புக்குப் பால் குடிக்கா விட்டாலும் ஊருக்குப் பால் குடிக்க வேண்டும்.)

உடம்பு தேற்றிக் கொண்டு அல்லவா யோகத்தில் போக வேண்டும்?
உடம்பு போனால் போகிறது; கை வந்தால் போதும்.
(உடும்பு.)

உடம்பு முழுவதும் நனைந்தவர்க்குக் கூதல் என்ன?
உடம்பை ஒடித்துக் கடம்பில் விடு. 3885
(உடம்பை முறித்து. கடம்பமரக் கட்டிலில்.)

உடம்பைச் செருப்பாகத் தைத்துப் போட்டாலும் சமானமாகாது.
உடம்போடே ஒரு நாட்டியம் உண்டா?
உடம்போடே பிறந்தது.
உடல் அளவு விரதம்; பொருள் அளவு தானம்.
உடல் இரண்டு, உயிர் ஒன்று. 3890

உடல் உள்ள வரையில் கடல் கொள்ளாக் கவலை.
(உள்ளவனுக்கு.)

உடல் ஒருவனுக்குப் பிறந்தது; நாக்குப் பலருக்குப் பிறந்தது.
உடல் முழுவதும் எண்ணெய் தேய்த்துக் கொண்டு தெரு முழுவதும் புரண்டாலும் ஒட்டுவதுதான் ஒட்டும்.
உடல் மெச்சப் பால் குடிக்கிறாயா? ஊர் மெச்சப் பால் குடிக்கிறாயா?
உடலுக்குக் கை துரோகம். 3895

உடலுக்குள்ளே நாக்கை வளைக்கிறதா?
உடலுக்கோ பால் வார்த்து உண்பது? ஊருக்கோ பால் வார்த்து உண்பது?
உடலும் உயிரும் போல.
உடன் பிறந்தே கொல்லும் வியாதி.
உடன் பிறப்பால் தோள் வலி போம். 3900
(உடன் பிறப்பு உள்ளவனுக்கு.)

உடன் பிறப்பு இல்லாத உடம்பு பாழ்.
உடாப் புடைவை பூச்சிக்கு இரை.
உடுக்காத புடைவையைச் செல் அரிக்கும்.
உடுக்கு அடிக்கிறவனுக்கு நடுக்கக் கை வேறு.
உடுக்கைக்கு இடை சிறுத்தால் ஓசை உண்டு; உரலுக்கு இடை சிறுத்தால் உதவி என்ன? 3905

உடுத்த சீலை பாம்பாய்க் கடித்தது போல.
(உடுத்தின புடைவை.)

உடுத்துக் கெட்டான் துலுக்கன்; உண்டு கெட்டான் மாத்துவன்.
உடுத்துக் கெட்டான் வெள்ளைக்காரன்; உண்டு கெட்டான் சோனகன்; புதைத்துக் கெட்டான் தமிழன்.
(யாழ்ப்பாண வழக்கு.)

உடுப்பது பீறல் ஆடை; நடப்பது தந்தக் குறடாம்.
உடுப்பாரைப் பார்த்தாலும் உண்பாரைப் பார்க்கலாமா? 3910

உடும்பு உடும்பே இண்டிக்குப் போ.
(தெலுங்கு. இண்டிக்கு-வீட்டுக்கு.)
உடும்புக்கு இரண்டு நாக்கு; மனிதனுக்கு ஒரு நாக்கு.
(உனக்கு இரண்டு நாக்கா?)

உடும்புப் பிடி.
உடும்பு பிடித்தது போதும்; கையை விடு.
உடும்பு போனால் போகிறது; கை வந்தால் போதும். 3915

உடும்பு வேண்டாம்; கை வந்தால் போதும்.
(கையை விடு.)

உடை குலைந்த பிறகு முறை கொண்டாடுவதோ?
உடைத்த சட்டி உலைக்கு உதவாது.
உடைத்து ஓடு பொறுக்குகிறான்.
உடைந்த சங்கில் காற்றுப் பரியுமா? 3920

உடைந்த சங்கு ஊது பரியுமா?
(பரியுமா-பரவச் செய்யுமா.)
உடைந்த தடியை ஒரு போதும் நம்பாதே.
உடை முள்ளுக்கு எதிரே உதைக்கலாமா?
உடைமை என்பது கல்வி உடைமை.
உடைமைக்கு ஒரு முழுக்கு; உடையவனுக்கு ஒன்பது முழுக்கு. 3925

உடைமையும் கொடுத்து அருமையும் குலைகிறதா?
உடைமையும் வறுமையும் ஒரு வழி நில்லா.
(வெற்றி வேற்கை.)

உடையவன் அறிந்திடாத சடுக்கு இல்லை.
உடையன் இல்லாச் சேலை ஒருமுழக் கட்டை.
(பாரா விட்டால்.)

உடையவன் கண் ஓடாப் பயிர் உடனே அழியும்.
உடையவன் காற்றுப் படாப் பயிர் ஒருமுழம் கட்டை,
உடையவன் சொற்படி உரலைச் சுற்றிக் குழி பறி.

உடையவன் பாராப் பயிர் உருப்படுமா?
உடையவன் பாரா வேலை ஒரு முழம் கட்டை.
(பாராப் பயிர்.)
உடையவன் பொறுத்தாலும் உடையவன் வீட்டு நாய் பொறுக்காது.
உடையார் இல்லாவிட்டாலும் உடையார் பொல் இருக்கிறது.
(யாழ்ப்பாண வழக்கு. ஜனன மரணப் பதிவு செய்பவன் வராவிட்டாலும் அவன் கைத்தடியை அனுப்பினால் போதும். பொல்-தடி.)
உடையார் உண்டைக் கட்டிக்கு அழும் போது லிங்கம் பஞ்சாமிர்தம் கேட்கிறதாம்.
உடையார் வீட்டு மோருக்கு அகப்பைக் கணக்கு என்ன?
உண் உண் என்று உபசரிப்பான் இல்லாத வாசலிலே உண்ணுமை கோடி பெறும்.
உண்கிற சோற்றிலே கல்லைப் போடுகிறதா? 3940

உண்கிற சோற்றிலே நஞ்சைக் கலக்கிறதா?
உண்கிற சோறு வெல்லம்.
(வெள்ளம்.)
உண்கிற வயிற்றை ஒளிக்கிறதா?
உண்ட இடத்தில் உட்கார்ந்திருந்தால் கண்ட பேர் கரிப்பார்கள்.
உண்ட இலையில் உட்கார்ந்தால் சண்டை வளரும். 3945

உண்ட இளைப்புத் தொண்டருக்கும் உண்டு.
(களைப்பு.)
உண்ட உடம்பு உருளும்; தின்ற பாக்குச் சிவக்கும்.
உண்டவன் உடம்புக்கு உறுதி, உழுத புலத்தில் நெல்.
(உடம்பு.)
உண்ட சுற்றம் உருகும்.
உண்ட சோற்றிலே நஞ்சைக் கலந்தாற்போல். 3950

உண்ட சோற்றுக்கு இரண்டகம் பண்ணுகிறதா?
உண்டதுதானே ஏப்பம் வரும்?
உண்டதும் தின்றதும் லாபம்; பணியில் கிடந்தது லோபம்.
உண்ட பிள்ளை உரம் பெறும்.
(உரம் செய்யும்.)
உண்ட பேர் உரம் பேசுவார். 3955

உண்ட வயிற்றுக்கு உபசாரமா?
உண்ட வயிற்றுக்குச் சோறும் மொட்டைத் தலைக்கு எண்ணெயும் போல.

உண்ட வயிறு கேட்கும்: தின்ற பாக்குச் சிவக்கும்.
உண்டவன் உண்டு போக என் தலை பிண்டு போகிறது.
(போகிறதா?)
உண்டவன் உரம் செய்வான். 3960

உண்டவன் பாய் தேடுவான்; உண்ணாதவன் இலை தேடுவான்.
உண்ட வீட்டிலே உட்காராமல் போனால் கண்டவர்கள் எல்லாம் கடுகடு என்பார்கள்.
உண்ட வீட்டிலே கிண்டி தூக்குவது போல.
உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்யலாமா?
(இரண்டகம் நினைத்தல்.)
உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைக்கிறவன் உண்டா? 3965

உண்டார் மேனி கண்டால் தெரியும்.
உண்டால் உடம்பு சொல்லும்; விளைந்தால் வைக்கோற்போர் சொல்லும்.
உண்டால் கொல்லும் விஷம்.
உண்டால் கொல்லுமோ? கண்டால் கொல்லுமோ?
உண்டால் தின்றால் உறவு; கொண்டால் கொடுத்தால் உறவு. 3970

உண்டால் தின்றால் ஊரிலே காரியம் என்ன?
உண்டால் தீருமா பசி? கண்டால் தீருமா?
உண்டாலும் உறுதிப்பட உண்ண வேண்டும்.
உண்டான தெய்வங்கள் ஒதுங்கி நிற்கையில் சுற்றுப்பட்ட தெய்வம் ததியோதனத்துக்கு அழுததாம்.
உண்டான போது கோடானுகோடி. 3975

உண்டானால் உண்டு. உலகு அஸ்தமனமா?
உண்டிக்கு அழகு விருந்தோடு உண்டல்.
உண்டி சுருங்குதல் பெண்டிர்க்கு அழகு.
உண்டு இருக்க மாட்டாமல் ஊர் வழியே போனானாம்; தின்று இருக்க மாட்டாமல் தேசாந்தரம் போனானாம்.
உண்டு உறியில் இரு என்றால் உருண்டு கீழே விழுந்தானாம். 3980
(தரையில், தெருவில்.)

உண்டு என்ற பேருக்கு ஈசன் உண்டு; இல்லை என்ற பேருக்கு இல்லை.

உண்டு என்று பெண் கொடுத்தால் சாதிகுலம் கேட்டானாம்.
உண்டு கண்ட பூனை உறியை உறியைத் தாவும்.
உண்டு களித்தவனிடம் சோற்றுக்குப் போ; உடுத்துக்
களித்தவனிடம் துணிக்குப் போ.
உண்டு கெட்டவனும் தின்று கெட்டவனும் இல்லை. 3985

உண்டு கெட்டான் பார்ப்பான்; உடுத்துக் கெட்டான் துலுக்கன்.
(உண்டு கழித்தவன், உடுத்துக் கழித்தவன்.)
உண்டு கொழுத்தால் நண்டு வளையில் இருக்குமா?
(இராது.)

உண்டு தின்று உயரமானால் ஊரிலே காரியம் என்ன?
உண்டு தின்று உள்ளே இரு என்றால் உயர எழும்பி ஏன்
குதிக்கிறாய்?
உண்டு ருசி கண்டவன் ஊரை விட்டுப் போகான்; பெண்டு ருசி
கண்டவன் பேர்த்து அடி வையான். 3990

உண்டை பட்டு உறங்குகிற குருவிபோல.
உண்ண இலை தேடி உறங்கப் பாய் தேடிச் சிவனே என்று
இருந்தேன்
உண்ண உணவும் நிற்க நிழலும்.
உண்ணக் கை சலித்திருக்கிறான்.
உண்ணச் சோறும் உடுக்கத் துணியும் ஒண்டக் கூரையும்
வேண்டும். 3995

உண்ணப் படை உண்டு; வெல்லப் படை இல்லை.
உண்ணப் பார்த்தாலும் உழைக்கப் பாராதே,
உண்ண வந்த பிடாரி ஊர்ப் பிடாரியைத் துரத்திற்றாம்.
உண்ண வருகிறாயோ சோம்பலே,உன் குறுணி அரைநாழிவேலைக்கு
வருகிறாயோ சோம்பலே; நான் சற்றே நோயாளி.
உண்ண வா என்றால் குத்த வருகிறான். 4000
(வருகிறாய்.)

உண்ணவும் தின்னவும் என்னைக் கூப்பிடு; ஊர்க்கணக்குப் பார்க்க
என் தம்பியை அழை.
உண்ணா உடம்பு உருகாது; தின்னாப் பாக்குச் சிவக்காது.
உண்ணாக்கை அறுத்துச் சுண்ணாம்புக் குறி இடுவேன்.
உண்ணாச் சொத்து மண்ணாய்ப் போகும், உடுக்காப் புடைவை
புட்டிலாக்கும்.

உண்ணாத தின்னாத ஊர் அம்பலம். 4005

உண்ணா நஞ்சு ஒருகாலும் கொல்லாது.

உண்ணாமல் ஊர் எல்லாம் திரியலாம்; உடுக்காமல் ஒரு வீட்டுக்கும் போகலாகாது.

உண்ணாமல் ஒன்பது வீடு போகலாம்;உடுக்காமல் ஒரு வீடும் போகலாகாது.

உண்ணாமல் கெட்டது உறவு; கேளாமல் கெட்டது கடன்.

உண்ணாமல் தின்னாமல் உறவின் முறையாருக்கு ஈயாமல். 4010

உண்ணாமல் தின்னாமல் ஊர் அம்பலம் ஆனேனே!
(ஓமல் ஆனேனே.)

உண்ணாமல் தின்னாமல் வயிறு உப்புசம் கொண்டேன்.

உண்ணி கடித்த நாய் உதறுவது போல.

உண்ணியைக் கண்டால் ஊரின் பஞ்சம் தெரியும்.
(உண்ணி-பையன், நாஞ்சில் நாட்டு வழக்கு.)

உண்ணுகிற சோறு வெல்லம். 4015

உண்ணுகிற வயிற்றை ஒளிக்கிறதா?

உண்ணுபவன் உண்டு விட்டுப் போனால் உன் தலைப்புண் விட்டுப் போகிறது.

உண்ணும் கீரையிலே நண்ணும் புல்லுருவி.

உண்ணுவார் இல்லை; உறங்குவார் இல்லை. ஒரு கட்டு வெற்றிலை தின்பார் இல்லை. சாந்து சந்தனம் பூசுவார் இல்லை. தலைக்குத் தப்பளம் போடுவார் இல்லை. வா மருமகளே வா.
(தவளை,)

உண்ணுவாளாம், தின்னுவாளாம் சீதா தேவி; உடன்கட்டை ஏறுவாளாம் பெருமா தேவி. 4020
(தின்னுவாளாம் குந்தமாதேவி, ஏறுவாளாம் சீதா தேவி.)

உண்ணேன், உண்ணேன் என்றால் உடலைப் பார்த்தால் தெரியும்.

உண்பது இருக்க ஒரு கருமம் செய்யேல்.

உண்பது நாழி; உடுப்பது நான்கு முழம்; எண்பது கோடி நினைந்து எண்ணும் மனம்.

உண்பன, தின்பன உறவுதான்; செத்தால் முழுக்குத்தான்.

உண்பார் பாக்கியம், சம்பா விளையும். 4025

உண்பாரைப் பார்த்தாலும் உழுவாரைப் பார்த்தல் ஆகாது.

உண்பான் தின்பான் திவசப்பிராமணன்; குத்துக்கு நிற்பான் வீர முஷ்டி.
உண்பான் தின்பான் சேவைப் பெருமாள்; குத்துக்கு நிற்பான் வைராகி.
(சேப்பெருமாள்.)
உண்பான், தின்பான் நயனப்ப செட்டி; உடன் கட்டை ஏறுவான் பெருமாள் செட்டி.
உண்பான் தின்பான் பைராகி; குத்துக்கு நிற்பான் வீர முஷ்டி. 4030

உண்மை உயர்வு அளிக்கும்.
(தரும்.)
உண்மைக்கு உத்தரம் இல்லை.
உண்மை சொல்லிக் கெட்டாரும் இல்லை; பொய் சொல்லி வாழ்ந்தாரும் இல்லை.
உண்மை சொன்னால் உண்மை பலிக்கும்; நன்மை சொன்னால் நன்மை பலிக்கும்.
உண்மை நன்மொழி திண்மை உறுத்தும். 4035

உண்மைப் படு, உறுதிப்படு.
உண்மையைச் சொன்னவன் ஊருக்குப் பொல்லாதவன்.
உண்மையைச் சொன்னால் உடம்பு எரிச்சல்.
உணர்வு இல்லாக் கருவியும் உப்பு இல்லாச் சோறும் சரி.
(உணவும் சரி.)
உணவு விளைவிப்பது சட்டியில்; உறவு விளைவிப்பது பட்டியில். 4040

உத்தமச் சேரிக் குயவனுக்கு ஒன்றால் ஒன்று குறைவு இல்லை.
உத்தம சேவகன் பெற்ற தாய்க்கு அதிகம்.
உத்தமம் ஆன பத்தினி ஊர்மேலே வருகிறாள்; வீட்டுக்கு ஒரு துடைப்பக்கட்டை, உஷார், உஷார்.
உத்தமனுக்கு உடம்படிக்கை ஏன்?
உத்தமனுக்கு எத்தாலும் கேடு இல்லை. 4045

உத்தமனுக்கு ஓலை எதற்கு?
உத்தமனுக்கும் தப்பிலிக்கும் உடம்படிக்கை வேண்டாம்.
(பாடம்.) போக்கிரிக்கும்.
உத்தரத்தில் ஒரு பிள்ளை; உறவுக்கெல்லாம் ஒரு தொல்லை.
உத்தரத்து அளவு கேட்டால் அரிவாள் பிடி அளவு வரும்.
உத்தரம் இல்லாமல் வீடு கட்டுகிற மாதிரி. 4050

உத்தராடத்தில் ஒரு பிள்ளையும் ஊர் ஓரத்தில் ஒரு காணியும்.
(ஊர் வாரியில் ஒரு வேலியும்.)

உத்தராயணம் என்று உறியைக் கட்டிக் கொண்டு சாகிறதா?

உத்தியோகத்துக்குத் தக்க சுகம்.

உத்தியோகம் குதிரைக் கொம்பாய் இருக்கிறது.

உத்தியோகம் தடபுடல்; சேவிக்கிற இவர் இன்னார் இனியார் என்று இல்லை; சம்பளம் கணக்கு வழக்கு இல்லை; குண்டையை விற்று நாலு வராகன் அனுப்பச் சொல்லு. 4055
(குண்டை-மாடு.)

உத்தியோகம் போன ஊரில் மத்தியானம் இருக்காதே.

உத்தியோகம் புருஷ லக்ஷணம்.

உதட்டில் ஒட்டாமல் பேசுகிறான்.

உதட்டில் வெல்லம்; உள்ளத்தில் நஞ்சு.

[illegible] உறவு, [illegible]. 4060
(பா-ம்.) நெஞ்சிலே.

உதட்டிலே புண்; மாடு கறக்க முடியவில்லை.

உதட்டிலே புன்னகையும் உள்ளத்திலே எரிச்சலும்.

உதட்டிலே வாழைப்பழம் உள்ளே தள்ளுவார் உண்டோ?

உதட்டுக்குப் பால் மாறின தாசியும் மேட்டுக்குப் பால் மாறின கணக்கனும்.

உதட்டுக்கு மிஞ்சின பல்லும் திருட்டுக்கு மிஞ்சின கையும் ஆகா. 4065

உதட்டுத் துரும்பு ஊதப் போகாது.
(பா-ம்.) போதாது.

உதட்டு வாழைப் பழத்தை உள்ளே தள்ள ஓர் ஆள் வேண்டும்.

உதடு ஒட்டாமல் பேசுகிறான்.

உதடு தேய்வதைவிட உள்ளங்கால் தேயலாம்.
(உள்ளங்காலைத் தேய விடு.)

உதடு தேன் சொரிய, உள்ளே நெஞ்சு எரிய. 4070
(பழம் சொரிய.)

உதடு வெல்லம்; உள்ளம் கள்ளம்.

உதயத்தில் வந்த மழையும் அஸ்தமிக்க வந்த மாப்பிள்ளையும் விடா.

உதர நிமித்தம் பகுக்ருத வேஷம்.
(பஹுகோவிந்தம்.)

உதவாத செட்டிக்குச் சீட்டு எழுதினது போல.
உதவாப் பழங்கலமே, ஓசை இல்லா வெண்கலமே. 4075

உதவா முட்டி சுத்தரம், ஓதுகிறாளாம் மந்திரம்.
உதவி செய்வாருக்கு இடையூறு ஏது?
உதறி முடிந்தால் ஒரு குடுமிக்குப் பூ இல்லையா?
உதறு காலி முண்டை உதறிப் போட்டாள்.
உதறு காலி வந்தாள், உள்ளதும் கெடுத்தாள். 4080
(பா-ம்.) எடுத்தாள்.

உதாரிக்குப் பொன் துரும்பு.
உதிக்கின்ற கதிரோன் முன்னே ஒளிக்கும் மின்மினியைப் போல்.
உதி பெருத்தாலும் உத்தரத்துக்கு உதவாது.
உதிரத்துக்கு அல்லவோ உருக்கம் இருக்கும்?
உதிரம் உறவு அறியும். 4085

உதைத்த கால் புழுக்கிறதற்கு முன்னே அடி வயிறு சீழ்க்கட்டுகிறது.
(நெஞ்சு சீழ் கட்டிக் கொள்ளும்.)
உதைத்த காலை முத்தம் இடுவது.
உதைத்து வளர்க்காத பிள்ளையும் முறுக்கி வளர்க்காத மீசையும் உபயோகப்படா.
உதைப்பானுக்கு வெளுப்பான் ஜாதி வண்ணான்.
உதைப்பானுக்கு வெளுப்பான் ஜாதி வண்ணான்; கொட்டி வெளுப்பான் கொங்கு வண்ணான். 4090

உதைபட்ட நாய் ஊரெல்லாம் சுற்றினாற்போல.
உப்பளத்து மண்ணும் உழமண்ணும் செம்மண்ணும் காவேரி மண்ணும் கலந்து வழங்குகிறது.
உப்பின் அருமை உப்பு இல்லாவிட்டால் தெரியும்.
உப்பு இட்ட பாண்டமும் உபாயம் மிகுந்த நெஞ்சமும் தட்டி உடையாமல் தாமே உடையும்.
உப்பு இட்டவரை உள்ளளவும் நினை. 4095

உப்பு இட்டுக் கெட்டது மாங்காய்; உப்பு இடாமற் கெட்டது தேங்காய்.
உப்பு இருக்கிறதா என்றால் பப்பு இருக்கிறது என்றார்.
(பப்பு-பருப்பு.)
உப்பு இருந்த பாண்டமும் உளவு அறிந்த நெஞ்சமும் தப்பாமல் தட்டுண்டு உடையும்.

உப்பு இருந்தால் பருப்பு இராது; பருப்பு இருந்தால் உப்புஇராது.
(இல்லை.)

உப்பு இல்லாக் கீரை குப்பையில் இருந்தால் என்ன? உபயோகம் அற்ற அகமுடையான் பக்கத்தில் இருந்தால் என்ன? 4100

உப்பு இல்லாப் பண்டம் குப்பையிலே.

உப்பு இல்லாமல் கலக்கஞ்சி குடிப்பான்.
(பா-ம்.) ஒரு மிடாக் கஞ்சி

உப்பு இல்லாவிட்டால் தெரியும் உப்பு அருமை; அப்பன் இல்லா விட்டால் தெரியும் அப்பன் அருமை.

உப்பு உந்தியா செட்டியாரே என்றால் பப்பு உந்தி என்கிறுர்.
(உந்தியா - இருக்கிறதா, - பப்பு - பருப்பு.)

உப்பு உள்ள பாண்டம் உடையும். 4105

உப்பு எடுத்த கையாலே கர்ப்பூரமும் எடுக்க வேண்டும்.

உப்புக் கட்டிஞல் உலகம் கட்டும்.

உப்புக் கண்டம் பறிகொடுத்த பாப்பாத்தி போல.
(விழிக்கிருள்.)

உப்புக்கு ஆகுமா, புளிக்கு ஆகுமா?

உப்புக்கும் உதவாதவன் ஊருக்கு உதவமாட்டான். 4110

உப்புக்கும் உதவாத விஷயம்.

உப்புச் சட்டியும் வறை ஓடும் தோற்றுவிட்டான்.

உப்புச் சட்டியும் வறை ஓடும் விற்றுக்கடனைக் கொடுத்து விட்டான்.

உப்புச் சப்பு இல்லாத காரியம்

உப்புச் சமைந்தால் உப்பின் அருமை தெரியும்; அப்பன் சமைந்தால் அப்பன் அருமை தெரியும். 4115
(யாழ்ப்பாண வழக்கு.)

உப்புத் தண்ணீரும் கப்பு மஞ்சளும் ஊறிப் போச்சுது.

உப்புத் தண்ணீருக்கு விலாமிச்சவேர் வேண்டுமா?

உப்புத் தின்றவன் தண்ணீர் குடிப்பான்.

உப்பு நளபாகமாய் இருக்கிறது.

உப்பு நீர் மேகம் உண்டால் உலகில் பிரவாகம். 4120
(பா-ம்.) சேர்ந்தால்

உப்புப் புளிக்கு ஆகாத சமாசாரம்,

உப்புப் பெறாத காரியத்துக்கு ஊரைக் கூட்டினானாம்.

உப்புப் பெறாதவன் பருப்புப் பெற்றான்; உறித்தயிரைப் போய் எட்டி எட்டிப் பார்த்தானாம்,
உப்புப் பொதிக்காரன் உருண்டு உருண்டு அழுதானாம்,
வெற்றிலைப் பொதிக்காரன் விழுந்து விழுந்து சிரித்தானாம்.
உப்புப் போட்டுச் சோறு தின்றால் சுரணை இருக்கும். 4125

உப்பும் இல்லை, சப்பும் இல்லை.
உப்பும் இல்லை, புளியும் இல்லை.
உப்பும் இல்லை, புளியும் இல்லை, உண்டைக் கட்டியே, உன்னை விட்டால் கதியும் இல்லை பட்டைச் சாதமே!
உப்பும் கர்ப்பூரமும் ஒன்றாய் வழங்குமா?
உப்பும் சோறும் உணர்த்தியாய் உண்ணவில்லையோ? 4130

உப்பு மிஞ்சினால் உப்புச் சாறு; புளி மிஞ்சினால் புளிச் சாறு.
உப்பு மிஞ்சினால் தண்ணீர்; தண்ணீர் மிஞ்சினால் உப்பு.
(தண்ணீர் விடு. உப்புப் போடு.)
உப்பு முதல் கர்ப்பூரம் வரையில்.
உப்பு வண்டிக்காரன் உருண்டு அழுதான்; வெற்றிலை வண்டிக்காரனும் விழுந்து அழுதான்.
(உப்புப் பொதிக்காரன். வெற்றிலைக்காரன்.)
உப்பு வாணிகன் அறிவானோ கர்ப்பூர விலை? 4135
(வாசனை.)
உப்பு விற்கச் சொன்னாளா? ஊர்ப் பெரிய தனம் செய்யச் சொன்னாளா?
உப்பு வைத்த பாண்டம் உடையும்.
உப்பு வைத்த மண்பாண்டம் போல.
உப்பைக் கடித்துக் கொண்டு உரலை இடித்தானாம்.
உப்பைச் சிந்தினையோ, துப்பைச் சிந்தினையோ? 4140

உப்பைத் தின்றவன் தண்ணீர் குடிப்பான்.
உப்பைத் தொட்டு உப்பைத் தின்னாதே.
உப்பைத் தொட்டுக் கொண்டு உரலை விழுங்குவான்.
உப்போடு ஒன்பதும் பருப்போடு பத்தும் வேண்டும்.
உப்போடே முப்பத்திரண்டும் வேண்டும். 4145

உபகாரத்துக்கு அபகாரம் வருவது துரதிருஷ்டம்.
உபகாரம் செய்தவருக்கு அபகாரம் செய்யலாமா?
உபகாரம் செய்யாவிட்டாலும் அபகாரம் செய்யாதே.

உபகாரம் வீண் போகாது.
உபசரிப்பு இல்லாத உணவு கசப்பு ஆகும். 4150

உபசரியாத மனையில் உண்ணாது இருப்பதே கோடி தனம்.
(வீட்டிலே.)
உபசாரம் செய்தவருக்கு அபசாரம் பண்ணுகிறதா?
(எண்ணுகிறதா?)
உபசார வார்த்தை காசு ஆகுமா? உண்டால் ஒழியப் பசி தீருமா?
உபசார வார்த்தை வாய்க்குக் கேடு; தூற்றுப் பருக்கை வயிற்றுக்குக் கேடு.
உபநயனம் இல்லாமல் கல்யாணம் பண்ணினானாம். 4155

உபாத்தியாயர் நின்று கொண்டு பெய்தால் சிஷ்யன் ஓடிக்கொண்டே பெய்வான்.
உபாயத்தால் ஆகிறது பராக்கிரமத்தால் ஆகுமா?
உம் என்றாளாம் காமாட்சி, ஒட்டிக் கொண்டாளாம் மீனாட்சி.
(மீனாட்சி. காமாட்சி.)
உமக்கு என்ன, வயசுக்கு நரைத்ததோ. மயிருக்கு நரைத்ததோ?
உமி குத்திக் கை நோகலாமோ? 4160

உமி குற்றிக் கை வருந்துமாறு
(பழமொழி நானூறு.)
உமி சலித்து நொய் பொறுக்கினாற் போல.
உமியும் கரியும் இருக்கின்றன; உடைமை செய்யப் பொன் இல்லை.
உமியைக் குத்திக் கை சலித்தது போல.
உயர்ந்த அடுப்பு அமர்ந்த அடுப்பு. 4165
(அயர்ந்த.)

உயர்ந்த காற்றைக் காற்று மோதும்.
உயர உயரப் பறந்தாலும் ஊர்க் குருவி பருந்து ஆகுமா?
(கருடன்.)
உயிர் அறியும் உறவு.
உயிர் இருக்க ஊனை வாங்குகிறது போல.
உயிர் இருக்கும் போது குரங்கு; இறந்த பிறகு அநுமார். 4170

உயிர் இருந்தால் உப்பு மாறித் தின்னலாம்.
(உப்பு விற்றுப் பிழைக்கலாம். உண்ணலாம்.)
உயிர் உதவிக்கு மிஞ்சின உதவி வேறு இல்லை.
உயிர் உள்ள மட்டும் தைரியம் விடலாமா?

உயிர் என்ன வெல்லமா?
உயிர் காப்பான் தோழன். 4175

உயிர் தப்பியது தம்பிரான் புண்ணியம்.
உயிர் போகும் போதும் தைரியம் விடலாகாது.
உயிருக்கு மிஞ்சின ஆக்கினையும் இல்லை; கோவணத்துக்கு
மிஞ்சின தரித்திரமும் இல்லை.
உயிருக்கு வந்தது மயிரோடே போயிற்று,
உயிரும் உடலும் போல. 4180
(உடம்பும்.)

உயிரைக் கொடுத்த சாமிக்கு மயிரைக் கொடுக்க வேணும்.
உயிரைப் பகைத்தேனோ! ஒரு நொடியில் கெட்டேனோ?
உயிரை வைத்திருக்கிறதிலும் செத்தாற் குணம்.
உயிரோடு இருக்கும் போது ஒரு கரண்டி நெய்க்கு வழி இல்லை.
ஓமத்துக்கு ஒன்பது கரண்டி நெய் விட்டது போல.
உயிரோடு ஒரு முத்தம் கொடுக்கவில்லை; செத்த பிறகு
கட்டிக் கட்டி முத்தமிட்டாளாம். 4185

உயிரோடு ஒரு முத்தம் தராதவள் செத்தால் உடன் கட்டை
ஏறுவாளா?
உயிரோடு திரும்பிப் பாராதவள் செத்தால் முத்தம் கொடுப்பாளா?
உரத்த குடிக்கு அனர்த்தம் இல்லை.
உரத்தைத் தள்ளுமாம் உழவு.
உரம் உதவுவது ஊரார் உதவார். 4190

உரம் ஏற்றி உழவு செய்.
உரம் செய்கிறது உறவுடையான் செய்யமாட்டான்.
உரல் பஞ்சம் அறியுமா?
உரல் போய் மத்தளத்தோடு முறையிட்டது போல.
உரலில் அகப்பட்டது உலக்கைக்குத் தப்புமா? 4195
(அகப்பட்டு. அஞ்சுகிறதா?)

உரலிலே தலையை விட்டுக்கொண்டு உலக்கைக்குப் பயப்படலாமா?
உரலிலே தலை விட்டால் உலக்கைக்குத் தப்பலாமா?
(மாட்டிக்கொண்டு. பயப்பட்டால் தீருமா?)

உரலிலே துணி கட்டியிருந்தாலும் உரிந்து பார்க்கவேண்டும் என்கிறான்.
உரலுக்கு ஒரு பக்கம், இடி; மத்தளத்துக்கு இரு பக்கமும் இடி.
உரலுக்குப் பஞ்சம் உண்டா? 4200

உரலுக்குள் தலையை விட்டு உலக்கைக்கு அஞ்சலாமா?
உரலும் கொடுத்துக் குரலும் போக வேண்டும்.
உரித்த பழம் என்ன விலை? உரிக்காத பழம் என்ன விலை என்றானாம் ஒரு சோம்பேறி.
உரித்த வாழைப் பழத்தை ஒன்பது வெட்டு வெட்டும்.
உரிய உரிய மழை பெய்து எரிய எரிய வெயில் காய்கிறது. 4205

உரியிலே ஒக்குமாம் உருளைக் கிழங்கு; கண்டு பிடிக்குமாம் கருணைக் கிழங்கு.
உரியை இரட்டித்தால் உழக்கு.
உரு ஏறத் திரு ஏறும்.
உருக்கம் உருக்கமாய் ஊட்டி உள்ளே போச்சுது.
உருக்கம் உள்ள சிற்றாத்தை, ஒதுக்கில் வாடி கட்டி அழலாம். 4210

உருக்கின நெய் வார்த்தாலும் கண்ட நியாயந்தான் சொல்லுவேன்.
உருக்கின நெய் வார்த்தாலும் கண்ணாரக் கண்டதைத் சொல்லுவான்.
உருசி கண்ட பூனை உறியை உறியைத் தாவுமாம்; வரிசை கண்ட மாப்பிள்ளை வந்து வந்து நிற்பானாம்.
உருட்சிக்கு நீட்சி, புளிப்புக்கு அவள் அப்பன். (புளியங்காய்.)
உருட்டி விளையாடுகிற தஞ்சாவூர்ப் பொம்மை. 4215

உருட்டுப் புரட்ட உள்ளதும் உள்ளுக்கு வாங்கும்.
உருட்டும் புரட்டும் ஒடுக்கும் சிறப்பை.
உருட்டும் புரட்டும் சிரட்டையும் கையும்.
உருட்டும் புரட்டும் மிரட்டும் சொல்லும்.
உருண்டு உருண்டு புரண்டாலும் உடம்பில் ஒட்டுவதுதான் ஒட்டும். 4220

உருண்டு புரண்டாலும் ஒட்டுகிற மண்தான் ஒட்டும்.
உருப்படத் திருப்படும்.
உருப்படாக் கோயிலில் உண்டைக் கட்டி வாங்கி விளக்கு இல்லாக் கோயிலில் விண்டு விண்டு தின்றானாம்.
உருவத்தினால் அல்ல; பேச்சினால் கிளி நன்கு மதிக்கப்படும்.
உருவத்தை அல்ல; குணத்தைப் பார். 4225

உருவிக் குளிப்பாட்டி உள்ளாடை கட்டாமல்.
உருவிய வாளை உறையில் இடாத வீரன்.
உருவின கத்தி உறையில் அடங்கும்.
உருளுகிற கால் பாசி சேர்க்காது.
உரைத்த கட்டை வாசனை பெறும். 4230

உரையார் இழித்தக்க காணிற் கனா.
(பழமொழி நானூறு.)
உல்லாச நடை மெலுக்குக் கேடு; மினுக்கு எண்ணெய் தலைக்குக் கேடு.
(நெய்.)
உலக்கைக்குப் பூண் கட்டினது போல.
உலக்கைக் கொழுந்தும் குந்தாணி வேரும்.
உலக்கை சிறுத்துக் கழுக்காணி ஆயிற்று. 4235

உலக்கை தேய்ந்து உளிப்பிடி ஆனது போல.
உலக்கைப் பூசைக்கு அசையாதது திருப்பாட்டுக்கு அசையுமா?
(அசையாதவன், அசைவானா?)
உலக்கை பெருத்து உத்தரம் ஆயிற்று.
உலக்கையாலே காது குத்தி உரலாலே தக்கை போட்டது போல
உலகத்துக்கு ஞானி பேய்; ஞானிக்கு உலகம் பேய். 4240

உலகம் அறிந்த தாசிக்கு வெட்கம் ஏது? சிக்கு ஏது?
உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே.
(திவாகரம்.)
உலகம் பல விதம்
உலகம் முழுவதும் உடையான் அருள்.
உலகமே ஒரு நாடக சாலை. 4245

உலகிலே பெண் என்றால் பேயும் இரங்கும்.
உலகின்கண் இல்லததற்கு இல்லை பெயர்.
(பழமொழி நானூறு.)
உலர்ந்த தலைக் கோலமும் ஓர்ப்படி பெற்ற பிள்ளையும் ஒட்டா.
உலுத்தன் விருந்திற்கு ஒப்பானது ஒன்றும் இல்லை.
உலுத்தனுக்கு இரட்டைச் செலவு. 4250

உலையில் ஈ மொய்த்ததுபோல.

உலை வாய் மெழுகு உருகுவது போல.

உலை வாயை மூடினாலும் மூடலாம்; ஊர் வாயை மூட முடியாது.

உலை வைத்த சந்தியிலே சாறு காய்ச்சுகிறது.

உவர் நிலத்தில் இட்ட விதையும் சமரிடத்தில் சென்ற சேனையும் இரண்டாம் பட்சம். 4255

உழக்கில் கிழக்கு மேற்கு.
(மேற்கா.)

உழக்கிலே கிழக்கு மேற்கு ஏது?

உழக்கிலே வழக்கு.

உழக்கு அரிசி ஆனாலும் ஓயாது மெல்லுவாள்.

உழக்கு உள்ளூருக்கு; பதக்குப் பரதேசிக்கு. 4260

உழக்கு உற்றாருக்கு; பதக்குப் பரதேசிக்கு.

உழக்கு உற்றாருக்கும் பதக்குப் பரதேசிக்கும் ஆனால் உழுத வனுக்கு என்ன?

உழக்கு உறிஞ்சப் போய்ப் பதக்குப் பன்றி கொண்டு போச்சுதாம்.

உழக்கு எண்ணெய் வாங்கி உழக்கு எண்ணெய் விற்றாலும் மினுக்கு எண்ணெய் மிச்சம்.

உழக்கு நெல்லுக்கு உழைக்கப் போய்ப் பதக்கு நெல்லைப் பன்றி தின்றதாம். 4265
(தின்றது போல.)

உழக்கு மிளகு கொடுப்பானேன்? ஒளிந்திருந்து இளநீர் குடிப் பானேன்?

உழக்கு மிளகு கொடுப்பானேன்? ஒளிந்திருந்து மிளகு சாறு குடிப் பானேன்?

உழக்கு விற்றாலும் உரலுக்குப் பஞ்சமா?

உழக் குளிர் அடித்தால் நாற்றுப் பிடுங்கப்படாதா?

உழவன் மேட்டை உழுதால் அரசன் நாட்டை ஆளலாம். 4270

உழவனுக்கு உழவுக் கம்புதான் மிச்சம்.

உழவால் பயிர் ஆகிறது எருவாலும் ஆகாது.

உழவில் பகை ஆனால் எருவிலும் தீராது.

உழவிலே இல்லாவிட்டால் மழையிலே.

உழவிலே பகை எருவிலும் தீராது. 4275

உழவினும் மிகுந்த ஊதியம் இல்லை.
(சிறந்த.)

உழவுக்குப் பகை எருவில் தீருமோ?
உழவின் பகை எருவிலும் தீராது.
உழவின்றி ஊதியம் இல்லை, உடையவன் இருந்தக்கால்.
உழவு அற உழுதவன் விளைவு அற விளையும். 4280
(ஏற விளையும்.)

உழவு ஆள் மேற்கே பார்ப்பான்; கூத்தாடி கிழக்கே பார்ப்பான்.
உழவு உழுது காய்ந்தால் வித்து இரட்டி காணும்.
உழவு ஏற உழுதால் நெல் ஏற விளையும்.
(விளைவு அற விளையும்.)

உழவு ஒழிந்த மாடு பட்டிப் புறத்திலே.
உழவுக்கு ஏற்ற கொழு. 4285

உழவுக்கு ஒரு சுற்றும் வராது; ஊணுக்குப் பம்பரம்.
(ஊணுக்கு முன்னே வரும்.)

உழவுக்குப் பிணைத்து விடுகிற மாடும் கூட்டுக்குப் பிணைத்து விடுகிற ஆளும் உதவா.
(சரி.)

உழவுக்கும் அக்கினி ஹோத்திரத்துக்கும் வெகு தூரம்.
உழவுக்கு மிஞ்சிய ஊதியம் இல்லை.
உழவு காலத்தில் ஊரை விட்டே போய்விட்டால், அறுப்புக் காலத்தில் ஆள் தேட வேண்டியதே இல்லை. 4290

உழவு குளிர அடித்தால் நாற்றுப் பிடுங்கப் படாதா?
உழவு நட்பு இல்லா நிலமும் மிளகு நட்பு இல்லாக் கறியும் வழ வழ.
உழவும் தரிசும் ஓரிடத்திலே; ஊமையும் செவிடனும் ஒரு மடத்திலே.
உழவு மாடு ஆனால் ஊருக்குள்ளே விலை போகாதா?
(என்றால், ஊரிலே.)

உழவு மாடு ஊர் வெளியே போனாலும் அங்கேயும் ஏரில் பூட்டி அடிப்பார்கள், 4295

உழுகிற எருமையும் உள்ளூர் மருமகனும் ஒன்று.
உழுகிற காலத்தில் ஊர் சுற்றிவிட்டு அறுக்கிற காலத்தில் அரிவாள் எடுத்துக் கொண்டு போனானாம்.

உழுகிற குண்டை ஆனால் உள்ளூரில் விலை ஆகாதா?
(குண்டை-எருது.)
உழுகிறது ஓர் ஏர்; முன் ஏரை மறி என்றானாம்.

உழுகிறதை விட்டு உழவன் சாமி ஆடினானாம்.
உழுகிற நாளில் ஊருக்குப் போய்விட்டு அறுக்கிற நாளில் அரிவாள் கொண்டு வந்தாற்போல். 4300

உழுகிற நாளில் ஊரை விட்டுப் போனால் அறுக்கிற நாளில் ஆள் தேட வேண்டாம்.
(ஆள் தேவை இல்லை.)

உழுகிற மாட்டுக்கும் ஒரு படி கொள்ளு; ஊர் சுற்றுகிற மாட்டுக்கும் ஒரு படி கொள்ளா?
உழுகிற மாட்டை எருது நக்கினது போல.
உழுகிற மாட்டைக் கொம்பிலே அடித்தாற் போல.
உழுகிற மாட்டை நுகத்தால் அடித்தாற் போல. 4305

உழுகிற மாடு ஆனால் உள்ளூரில் விலை போகாதா?
(போகும்.)

உழுகிற மாடு ஊருக்குப் போனால் ஏரும் கலப்பையும் எதிர்த்தாற் போல் வரும்.
உழுகிற மாடு பரதேசம் போனால் அங்கு ஒருவன் கட்டி உழுவான்; இங்கு ஒருவன் கட்டி உழுவான்.
உழுகிறவன் இளப்பமானால் எருது மச்சான் முறை கொண்டாடும்.
உழுகிறவன் கணக்குப் பார்த்தால் உழவுக் கோலும் மிஞ்சாது. 4310
(உழக்கு நெல்லும்.)

உழுகிறவன்தான் வைக்கோல் போட வேண்டும்.
உழுகிறவனுக்குத்தான் தெரியும், உடம்பு வருத்தம்.
உழுத எருது ஆனாலும் ஒரு முடி நாற்றைத் தின்ன ஒட்டார்.
(ஒரு முடி தின்னவிடார்.)

உழுத காலாலே உழப்பி விடு.
உழுத சேறு காய்ந்தால் உழக்கு நெல் காணாது. 4315

உழுத மாடு ஊருக்குப் போனால் அங்கும் ஒருசால் அடித்துக் கொண்டானாம்.
(அடித்துக் கட்டி உழுதானாம்.)

உழுத மாடு பரதேசம் போச்சாம்; அங்கும் ஒரு சால் கட்டி உழுதானாம்.
உழுதவன் கணக்குப் பார்த்தால் உழக்குக்கூட மிஞ்சாது.
(உழவுகோல் கூட மிச்சம் இல்லை.)

உழுதவன் காட்டைப் பார்; மேய்த்தவன் மாட்டைப் பார்.
உழுதவன் கெட்டது இல்லை. 4320

உழுது இல்லாது உலகில் ஒன்றும் செல்லாது.
(இல்லாதது.)

உழுது உண்டு வாழ்வதற்கு ஒப்பு இல்லை ஒரு காலும்.
உழுது உப்பு விதைத்து விடுவேன்.
உழுது உலர்ந்தது பழுது ஆகாது.
உழுது உழுது காய்ந்தால் வித்து இரட்டி காணும். 4325

உழுது பிழைக்கிறவன் ஒரு கோடி; ஏய்த்துப் பிழைக்கிறவன் ஏழு கோடி.
உழுந்து அரைத்த அம்மி போல.
உழுபவன் ஊர்க்கணக்குப் பண்ணுவானோ?
உழுபவன் ஏழை ஆனால் எருதும் ஏழைமை முறை கொண்டாடும்.
உழுபவன் கணக்கு எடுத்தால் உழவுக் கோலும் மிஞ்சாது. 4330

உழுவார் உலகத்துக்கு ஆணி.
உழுவார் கூலிக்கு அழுவார்.
உழுவாரைப் பார்த்தாலும் பார்க்கலாம்; உண்பாரைப் பார்க்க மனம் தாங்காது.
உழுவானுக்கு ஏற்ற கொழு; ஊராருக்கு ஏற்ற தொழு.
உழுவோர் உழைப்பால்தான் உலகோர் பிழைப்பார். 4335

உழைக்காத உடம்பு உரம் கொள்ளாது.
உழைக்கிற கழுதை எந்நாளைக்கும் உழைத்தே தீர வேண்டும்.
(என்றைக்கும்.)

உழைத்த அளவுக்கு ஊதியம்.
உழைப்பவன் ஒரு கோடி; உண்பவன் ஒன்பது கோடி.
உழைப்பாளி சுகம் அடைந்தால் வரப்பு ஏறிப் பேளமாட்டான். 4340
(ஏறுவானா.)

உழைப்புக்கு ஊர்க்குருவி; இழைப்புக்கு வான் குருவி.
உழைப்புக்குத் தகுந்த ஊதியம்.
உள் ஆள் இல்லாமல் கோட்டை அழியாது.
உள் ஆளும் கள்ளாளும் கூட்டமா?
உள் இருந்தாருக்குத் தெரியும் உள் வருத்தம். 4345

உள் இருந்து கள்வன் உளவறிந்து செய்வான்.
உள் எல்லாம் புண்ணும் உடம்பெல்லாம் புண்ணுமாய் இருக்கிறான்.
உள் சுவர் இருக்கப் புறச்சுவர் பூசுவார் போல.
(ஈஷுவார் போல.)
உள் சுவர் இருக்கப் புறச்சுவர் மண் இட்டு, பிள்ளை பெற்றவள் இருக்கப் பீத்துணியை மோந்து பார்த்தாளாம்.
உள் சுவர் தீற்றிப் புறச்சுவர் தீற்று. 4350

உள் நாக்கும் தொண்டையும் அதிர அடித்தது போல.
உள் வீட்டிலே கீரையை வைத்துக்கொண்டு அயல் வீட்டுக்குப் போவானேன்?
உள் வீட்டுக் கடனும் உள்ளங்கைச் சிரங்கும் கெட்டவை.
உள்ள அன்றுக்கு ஓணம்; இல்லாத அன்றைக்கு ஏகாதசி.
உள்ளக் கருத்து வள்ளலுக்குத் தெரியும். 4355

உள்ளங்கால் வெள்ளெலும்பு தேய உழைத்தான்.
(ஆட உழைத்தான்.)
உள்ளங் காலில் முள்ளுத் தைக்காமல் இருக்க வேண்டும்.
உள்ளங்கை நெல்லிக் கனி போல.
உள்ளங்கைப் பாற்சோற்றை விட்டுப் புறங்கையை நக்கினது போல.
உள்ளங் கைப் புண்ணுக்குக் கண்ணாடி ஏன்? 4360
(பூணுக்கு.)[1]

உள்ளங்கையில் அஞ்சு கொண்டை முடிக்கிறேன்.
உள்ளங்கையில் இட்டவர்களை உள்ளளவும் நினை.
உள்ளங்கையில் இட்டுப் புறங்கையை நக்குவதா?
உள்ளங்கையில் உப்பிட்டாரை உள்ளளவும் நினை.
உள்ளங்கையில் தேனை வைத்துப் புறங்கையை நக்கினாற் போல. 4365
உள்ளங்கையில் போட்டுப் புறங்கையை நக்கலாமா?
உள்ளங்கையில் ரோமம் முளைத்ததாயின் அறிவிலான் அடங்குவான்.
உள்ளங்கையில் வைகுண்டம் காட்டுகிறேன்.
உள்ளத்தில் ஒன்றும் குறையாது, கள்ளம் இல்லா மனத்தார்க்கு.
உள்ளத்தில் கள்ளமும், உதட்டில் வெல்லமும். 4370

உள்ளத்தில் நஞ்சும், உதட்டில் வெல்லமும்.
உள்ளத்துக்கு ஒன்றும் இல்லை; குப்பத்துக்கு ஆள் தள்ளு என்றானாம்.

உள்ளதுக்குக் காலம் இல்லை.
உள்ளது குற்றம் ஒரு கோடி ஆனாலும் பிள்ளைக்கும் தாய்க்கும் பிணக்கு உண்டோ?
உள்ளது குறைவதும் நிறைவதும் ஊழ்வினை. 4375
(உழவினை.)

உள்ளது சொல்ல ஊரும் அல்ல; நல்லது சொல்ல நாடும் அல்ல.
உள்ளது போகாது; இல்லது வராது.
உள்ளதும் போச்சு நொள்ளைக் கண்ணா!
(உள்ளதும் கெட்டதடா.)
உள்ளதும் போச்சு, பிள்ளை பள்ளிக்கூடம் போய்.
உள்ளதைச் சொல்லி ஊரை விட்டு ஓடு. 4380

உள்ள தெய்வங்களை எல்லாம் ஒருமிக்க வருந்தினாலும் பிள்ளை கொடுக்கிற தெய்வம் புருஷன்.
உள்ளதை எல்லாம் விற்று உள்ளான் மீனைத் தின்று பார்.
உள்ளதைக் கொண்டு இல்லதைப் பாராட்டலாம்.
உள்ளதைக் கொண்டுதான் ஊராள வேண்டும்,
உள்ளதைச் சொல்லு; உலகத்தை வெல்லு. 4385

உள்ளதைச் சொன்னவன் ஊருக்குப் பகை.
(சொன்னால் ஊருக்குப் பொல்லாதவன்.)

உள்ளதைச் சொன்னவன் ஊருக்குப் பொல்லாதவன்.
உள்ளதைச் சொன்னால் உடம்பெரிச்சல்.
உள்ளதைச் சொன்னால் உடம்பெல்லாம் புண் ஆகும்.
உள்ளதைச் சொன்னால் உறவு அற்றுப் போகும். 4390

உள்ளதைச் சொன்னால் எல்லோருக்கும் பகை.
உள்ளதைச் சொன்னால் நொள்ளைக் கண்ணிக்கு நோப்பாளமாம்.
(கண்ணனுக்கு.)

உள்ளதையும் கெடுத்தாள், உதறு காலி வந்து.
உள்ளதையும் கெடுத்தான் கொள்ளிக் கண்ணன்.
(நொள்ளைக் கண்ணன்.)

உள்ளதை விற்று நல்லதைக் கொள்ளு. 4395

உள்ள பிள்ளை உரலை நக்கிக் கொண்டிருக்க மற்றொரு பிள்ளைக்குத் திருப்பதிக்கு நடக்கிறான்.
உள்ளம் அறியாத கள்ளம் இல்லை.

உள்ளம் எல்லாம் புண்ணும் உடம்பெல்லாம் கொப்புளமும்.
உள்ளம் களிக்கக் கள் உண்டு கலங்காது.
உள்ளம் தீ எரிய உதடு தேன் சொரிய. 4400
(பழம்.)

உள்ளம் படர்ந்ததே கூறும் முகம்.
(பழமொழி நானூறு.)
உள்ள மயிருக்கு எண்ணெய் இல்லை; சுற்றுக் குடுமிக்கு எண்ணெய் ஏது?
உள்ள மாற்றைக் காட்டும், உரை கல்லும் மெழுகுண்டையும்.
உள்ளவன் பிள்ளை உப்போடு உண்ணும்; இல்லாதவன் பிள்ளை சர்க்கரையோடு உண்ணும்.
உள்ளவனிடம் கள்ளன் போனாற் போல. 4405

உள்ளனும் கள்ளனும் கூடினால் விடிகிற மட்டும் திருடலாம்.
உள்ளி இட உள்ளி இட உள்ளே போச்சுது.
உள்ளிக்கு நாற்றம் உடந்தை.
உள்ளிப் பூண்டுக்கு எத்தனை வாசனை கட்டினாலும் துர்க்கந்தத்தையே வீசும்.
உள்ளிய தெள்ளியர் ஆயினும் ஊழ்வினை பைய நுழைந்து விடும். 4410

உள்ளுக்குள்ளே கொட்டின தேளே, ஒரு மந்திரம் செய்கிறேன் கேளே.
உள்ளூர் ஆண்டி காத்தாண்டி; நீ பீத்தாண்டி.
உள்ளூர்க் குளம் தீர்த்தக் குளம் ஆகாது.
உள்ளூர்க் குறுணியும் சரி; அசலூர்ப் பதக்கும் சரி.
உள்ளூர்ச் சம்பந்தம் உள்ளங்கைச் சிரங்கு போல. 4415

உள்ளூர்ச் சம்பந்தியும் உள்ளங்கைப் புண்ணும் ஒரே மாதிரி.
உள்ளூர்ப் பகையும் உலகத்துக்கு உறவும்.
உள்ளூர்ப் பிறந்தகமோ? உள்ளங்கைப் புண்ணோ?
உள்ளூர்ப் புலி, வெளியூர் எலி.
உள்ளூர்ப் பூனை, அசலூர் ஆனை. 4420

உள்ளூர்ப் பெண்ணும் அசலூர் மண்ணும் ஆகா.
உள்ளூர் மருமகனும் உழுகிற கடாவும் ஒன்று.
(சரி.)

உள்ளூர் மேளம்.

உள்ளூரான் தண்ணீர்க்கு அஞ்சான்; அயலூரான் பேய்க்கு அஞ்சான்.

உள்ளூரில் ஓணான் பிடிக்க முடியாதவன் அயலூரில் ஆனை பிடிக்கப் போகிறானாம். 4425

உள்ளூரில் ஓணான் பிடிக்காதவன் உடையார் பாளையம் சென்று உடும்பு பிடிப்பானா?

உள்ளூரில் பூனை பிடிக்காதவன் அசலூரில் ஆனை பிடிப்பானா?

உள்ளூரில் விலைப்படாத மாடா வெளியூரில் விலைப்படும்?

உள்ளூருக்கு ஆனை, அயலூருக்குப் பூனை.

உள்ளூறக் கொட்டின தேளே, ஒரு மந்திரம் சொல்கிறேன் கேளே. 4430

உள்ளே இருக்கிற பூபம்மா, பிள்ளை வரம் கேளம்மா.

உள்ளே இருக்கும் சாமி உண்டைக்கட்டி, உண்டைக்கட்டி என்கிறது; வெளியிலே இருக்கும் சாமி தத்தியோன்னம். தத்தியோன்னம் என்கிறதாம்.

உள்ளே பகையும் உதட்டிலே உறவும் கள்ளம் இல்லா மனசுக்கு ஏன்?

உள்ளே பகையும் உதட்டிலே உறவுமா?

உள்ளே பார்த்தால் ஒக்காளம்; வெளியே பார்த்தால் மேற்பூச்சு. 4435
(டம்பம்.)

உள்ளே போனால் பிணம்; மேலே வந்தால் பணம்.
(கோலார் தங்க வயலில்.)

உள்ளே வயிறு எரிய. உதடு பழம் சொரிய.

உளவன் இல்லாமல் ஊர் அழியுமா?

உளவு இல்லாமல் களவு இல்லை.
(நடக்குமா?)

உளவு போல இருந்து குளவி போலக் கொட்டுகிறதா? 4440

உளறிக் கொட்டிக் கிளறி மூடாதே.

உளி எத்தனை? மலை எத்தனை?

உளுவைக் குஞ்சுக்கு நீஞ்சக்கற்றுக் கொடுக்க வேண்டுமா?
உளுவைக் குட்டிக்கு ராய பாரமா?
உளை வழியும் அடைமழையும் பொதி எருதும் ஒருவனுமாய் அலைகிறான். 4445

உற்சாகம் செய்தால் மச்சைத் தாண்டுவான்.
உற்ற கணவனும் ஒரு நெல்லும் உண்டானால் சித்திரம் போலே குடிவாழ்க்கை செய்யலாம்.
உற்ற சிநேகிதன் உயிருக்கு அமிர்தம்.
உற்றது சொல்ல ஊரும் அல்ல; நல்லது சொல்ல நாடும் அல்ல.
உற்றது சொன்னால் அற்றது பொருந்தும் 4450
(பாரதம்.)

உற்ற பேர்களைக் கெடுக்கிறதா?
உற்றார் உதவுவரோ? அன்னியர் உதவுவரோ?
உற்றார்க்கு ஒரு பிள்ளை கொடான்; நமனுக்கு நாலு பிள்ளை கொடுப்பான்.
உற்றார் தின்றால் புற்றாய் விளையும்; ஊரார் தின்றால் போராய் விளையும்.
(வேறாய் விளையும். பேறாய் விளையும்.)
உற்றாருக்கு ஒரு மாசம்; பகைத்தாருக்குப் பத்து நாள். 4455

உற்றாருக்கு ஒன்று கொடான்; பகைவருக்கு நாலும் கொடுப்பான்.
(ஒரு பிள்ளை. நாலு பிள்ளை.)
உற்றுப் பார்க்கில் சுற்றம் இல்லை.
உற்றுப் பார்த்த பார்வையிலே ஒன்பது பேர் பட்டுப் போவார்.
(பார்த்தால்.)
உறக்கத்தில் காலைப் பிடிப்பது போல.
உறக்கம் சண்டாளம். 4460
உறங்காப் புளி, ஊறாக் கிணறு, காயா வருளம், தோரா வழக்குத் திருக்கண்ணங்குடி.
(தீரா வழக்கு, தேறா வழக்கு.)

உறங்கின நரிக்கு உணவு கிட்டாது.
உறவிலே நஞ்சு கலக்கிறதா?
உறவிலே போகிறதைவிட ஒரு கட்டு விறகிலே போகலாம்.
(வேவதைவிட. வேகலாம்.)

உறவு உண்ணாமல் கெட்டது; உடை உடுக்காமல் கெட்டது. 4465

உறவு உறவுதான்; மடியிலே கைவைக்காதே.
உறவுக்கு ஒன்பது படி; ஊருக்குப் பத்துப் படி.
உறவுக்கு ஒன்பது படி; பணத்துக்குப் பத்துப் படி.
உறவுக்கும் பகைக்கும் பொருளே காரணம்.
(துணை.)
உறவுதான்; பயிரிலே கை வாயாதே. 4470

உறவுதானே உணர்ந்து கொள்ளும்.
உறவு போகாமல் கெட்டது; கடன் கேளாமல் கெட்டது.
உறவுபோல் இருந்து குளவிபோல் கொட்டுகிறதா?
உறவும் பகையும் ஒரு நிலை இல்லை.
உறவும் பாசமும் உதட்டோடே. 4475

உறவு முறையான் மூத்திரத்தை உமிழவும் முடியாது; விழுங்கவும் முடியாது.
உறவு முறையான் வீட்டில் உண்ட வரைக்கும் மிச்சம்.
உறவைப் பகைத்தாலும் ஊரைப் பகைக்காதே.
உறவைப்போல் இருந்து குளவியைப்போல் கொட்டுவர்.
உறன் பால தீண்டா விடுவது அரிது. 4480
(பழமொழி நானூறு.)

உறி அற மூளி நாய்க்கு வேட்டை.
உறிப் பணம் போய்த் தெருச் சண்டை இழுக்கிறது.
(இழுத்தாளாம்.)
உறியிலே கட்டித் தூக்கினாலும் அழுகற் பூசணிக்காய் அழுகலே.
உறியிலே தயிர் இருக்க ஊர் எங்கும் அலைவானேன்?
உறியிலே தயிர் இருந்தால் உறங்குமோ பூனைக்குட்டி? 4485

உறியிலே வெண்ணெய் இருக்க நெய்க்கு அழுவானேன்.
உறுதி எதிலும் பெரிது.
உறுதியான் காரியம் ஒரு போதும் கெடாது.
உறு தீங்குக்கு உதவாதவன் உற்றவனா?

உறை மோருக்கு இடம் இல்லாத வீட்டில் விலை மோருக்குப் போனது போல. 4490

உன் அப்பன்மேல் ஆணை; என்மேலே ஆசையாய் இருக்க வேண்டும்.

உன் இழவு எடுக்க.

உன் உத்தமித் தங்கை ஊர் மேயப் போனதால் என் பத்தினிப் பானை படபட என்கிறது.

உன் உபசாரம் என் பிராணனுக்கு வந்தது.

உன் உயிரினும் என் உயிர் கருப்பட்டியா? 4495

உன் எண்ணத்தில் இடி விழ.

உன் எண்ணத்தில் எமன் புகுத.

உன் காரியம் முப்பத்திரண்டிலே.

உன் காலை நீயே கும்பிட்டுக் கொள்ளாதே.

உன் குதிரை குருடு; ஆனாலும் கொள்ளுத் தின்பது கொள்ளை. 4500

உன் கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம்.
(திருவாசகம்.)

உன் கொண்டை குலைய.

உன் சமர்த்திலே குண்டு பாயாது.

உன் சொல்லிலே உப்பும் இல்லை; புளியும் இல்லை.

உன் தலையில் எழுதி மயிரால் மறைத்து விட்டான் ஆண்டவன். 4505

உன் தாலி அறுக்கச்சே ஒரு கட்டுத் தாலி ஒருமிக்க அறுக்க வைக்கிறேன்.

உன் தாலி அறுந்து தண்ணீர்ப் பானையில் விழ.

உன் தொடையைப் பாம்பு பிடுங்க.
(தொண்டையை.)

உன் நெஞ்சில் தட்டிப் பார்.
(தொட்டுப்பார்.)

உன் பாடு கொள்ளைதானே? 4510

உன் பாடு யோகம்.

உன் பிள்ளையைத் தின்று தண்ணீர் குடிக்க.

உன் பெண்சாதி தாலி பிணத்தின்மேல் விழ.

உன் பொங்கு மங்க.

உன்மத்தம் பிடித்தது போல. 4515

உன் மதம் மண்ணாய்ப் போக.

உன் மஹலூத்தைக் கேட்டுக் காது புளிச்சாறு மாதிரி புளித்துப் போயிற்று.
(முஸ்லீம் வழக்கு, மஹலூத்-காலக்ஷேபம்.)

உன் முகத்தது தஞ்சாவூர் மஞ்சளா?

உன் முறுக்குத் திறுக்கு எல்லாம் என் உடுப்புக்குள்ளே.

உன் வண்டவாளம் எல்லாம் எனக்குத் தெரியும். 4520
(வெளிப்பட்டுப் போச்சு.)

உன் வாயில் நாகராஜா பிரசாதத்தைத்தான் போடவேணும்.
(நாகர்கோயிலில் மண் பிரசாதம்.)

உன் வாயிலே சீதேவி.

உன் வாயிலே மண் விழ.

உன் வீடு இருக்கிற அழகுக்கா விழித்துக் கொண்டிருக்கிறாய்?

உன்ன ஓராயிரம்; பன்னப் பதினாயிரம். 4525

உன்னாலே நான் கெட்டேன்; என்னாலே நீ கெட்டாய்.

உன்னுடைய கர்வத்தால் ஓதுகிறாய் சூதும் வாதும்.

உன்னை அடித்துப் போட்டால் பத்துக் காணிக்கு எரு ஆகும்.
(அறுத்து.)

உன்னை அள்ளத் துள்ளிக்கொண்டு போக.

உன்னை ஒண்டிப் பாடை கட்ட. 4530

உன்னைக் கடலிலே கை கழுவினேன்.

உன்னைக் கேடு அடிக்க.

உன்னைக் கொடுத்து என்னை மறந்தேன்.

உன்னைக் கொடுப்பேனோ ஒரு காசு; உன்னோடே போச்சுது புரட்டாசி.

உன்னைக் கொடுப்பேனோ சென்னைக் கிளி? நீ சுமை சுமந்தல்லவோ கூனிப்போனாய்? 4535

உன்னை நீ அறிவாயாகில் உனக்கொரு கேடும் இல்லை.
(கைவல்ய நவநீதம்.)

உன்னைப் பாடையிலே வைத்துப் பயணம் இட,

உன்னைப் பிடி, என்னைப் பிடி, உலகாத்தாள் தலையைப் பிடி.

உன்னைப் பிடி, என்னைப் பிடி என்று ஆய் விட்டது.

உன்னைப் பிழிந்தெடுத்துப் போடுவேன். 4540

உன்னையும் என்னையும் ஆட்டுகிறது மன்னி கழுத்துச் சிறு தாலி.
உன்னை வஞ்சித்தவனை ஒருபோதும் நம்பாதே.
உன்னை வாரிக் கொண்டு போக.
உன்னை வெட்டிப் பலி போட.
உன்னோடே பிறந்ததில் மண்ணோடே பிறக்கலாம். 4545
(பிறப்பதில்.)

உனக்கு ஆச்சு, எனக்கு ஆச்சு; பார்க்கிறேன் ஒரு கை.
உனக்கு இருக்கிற கஞ்சியை எனக்கு வார்; பசியாமல் இருக்க வரந் தருகிறேன் என்ற கதை.

உனக்கு உட்பட்டும் பின்பாட்டுப் பாடுகிற மனிதர்கள் போல.

உனக்கு என்ன, கொம்பு முளைத்திருக்கிறதோ?
உனக்கு ஒட்டுத் திண்ணைபோல் இருக்கிறான். 4550

உனக்குக் கொடுப்பேனோ ஒரு காசு;நேற்றோடு போச்சு புரட்டாசு.
(புரட்டாசி.)

உனக்கு நான் அபயம்; எனக்கு நீ அபயம்.
(யான்.)

உனக்குப் போடும் தண்டத்தை நாய்க்குப் போட்டாலும் வாலையாவது ஆட்டும்.

உனக்கும் பெப்பே; உங்கள் அப்பனுக்கும் பெப்பே.
உனக்கு மழை பெய்யும், எனக்கு நீர் தா என்றானாம். 4555

உனக்கு முதுகு வளைகிறதா?

ஊ

ஊ என்றாளாம் காமாட்சி; ஒட்டிக் கொண்டாளாம் மீனாட்சி.
ஊக்கம் உடைமை ஆக்கத்திற்கு அழகு.
ஊக்கமது கைவிடேல்.
(ஆத்தி சூடி.)
ஊசல் ஆடித் தன் நிலையில் நிற்கும். 4560

ஊசி ஒரு முழத் துணியையாவது கொடுக்கும்; உற்றார் என்ன கொடுப்பார்.
(உற்றார் அதுதானும் கொடார்.)

ஊசிக் கண்ணிலே ஆகாயம் பார்த்தது போல.
(பார்க்கிறதா?)

ஊசிக் கணக்குப் பார்க்கிறான்.

ஊசிக்கு அடிப்புறம் கனமா? தலைப்புறம் கனமா?

ஊசிக்கு ஊசி எதிர் ஏறிப் பாயுமா? 4565
(எதிர் ஊசி பாயாது.)

ஊசிக்குக் கள்ளன் உடனே வருவான்.
ஊசிக் குத்தின்மேல் உரல் விழுந்த கதை.
ஊசி குத்திக் கொண்டவன் அழாமல் இருக்கப் பார்த்தவன் அழுவானேன்?
ஊசி கொண்டு கடலாழம் பார்ப்பது போல.
ஊசி கொள்ளப் போய்த் துலாக் கணக்குப் பார்க்கிறதா? 4570

ஊசி கோக்கிறதற்கு ஊரில் உழவாரம் ஏன்?
ஊசித் தொண்டையும் தாழி வயிறும்.
(கலப்பட்ட வயிறும்.)

ஊசி நூலால் இறுகத் தைத்தாலும் தேங்காய்க்கு மஞ்சள் இல்லை என்றாளாம்

ஊசி பொன்னானால் என்ன விலை பெறும்.

ஊசி போகிறது கணக்குப் பார்ப்பான்; பூசணிக்காய் போகிறது தெரியாது. 4575

ஊசி போலத் தொண்டை; கோணி போல வயிறு.
ஊசி போலத் தொண்டையும் சால் போல வயிறும்.
(உஷ்டேரி போல வயிறும்.)

ஊசி போல மிடறும் தாழி போல வயிறும்.
ஊசி மலராமல் சரடு ஏறுமா?
ஊசி மலிவு என்று சீமைக்குப் போகலாமா? 4580

ஊசி முனையில் தவம் செய்தாலும் உள்ளதுதான் கிடைக்கும்.
ஊசி முனையிலே நிற்கிறான்.
ஊசி மூஞ்சியை ஊதை என்ன செய்யும்.
(ஊசி மூஞ்சி-தூக்கணங்குருவி.)

ஊசியின் காதில் ஒட்டகம் நுழையுமா?
ஊசியும் அல்லவோ ஒரு சரட்டைக் கோத்துக்
கொண்டிருக்கிறது. 4585

ஊசியும் கருமானும் உருண்டு ஓடிப் போனான்.
ஊசியும் சரடும் போல.
ஊசியை ஊசிக் காந்தம் இழுக்கும்; உத்தமனைச் சிநேகம்
இழுக்கும்.
(நட்பு.)

ஊசியைத் தொட்டு உரலை விழுங்குவது போல.
ஊசி விழுந்தால் ஒலி கேட்கும். 4590

ஊட்டி வளர்த்த பிள்ளை உருப்படாது.
ஊடும் பாவும் போல.
ஊடைக்குப் பாவு இருந்தால் அல்லவோ ஓடி ஓடி நெய்வான்?
ஊண் அருந்தக் கருமம் இழப்பர்.
ஊண் அற்ற போதே உடல் அற்றுப் போம். 4595

ஊண் அற்ற போதே உளம் அற்றது போல.
ஊண் அற்ற போதே உறவு அற்றது.
(அற்றாரோடு.)

ஊண் அற உயிர் அறும்.
ஊண் ஒடுங்க வீண் ஒடுங்கும்.
ஊண் பாக்கு ஒழிய வீண் பாக்கு ஆகாது. 4600

ஊன் மிச்சம் உலகாளலாம்.

ஊண் மிச்சம் உழவிலும் இல்லை.
ஊணன் கருமம் இழந்தான்; உலுத்தன் பெயர் இழந்தான்.
ஊணினால் உறவு; பூணினால் அழகு.
ஊணினால் புத்தி; பூணினால் சாதி. 4605

ஊணுக்கும் உடைக்கும் என்னைக் கூப்பிடு; ஊர்க் கணக்குக்குத் தம்பியைக் கூப்பிடு.
ஊணுக்கு முந்து, படைக்குப் பிந்து.
(முந்தி, பிந்தி.)

ஊணும் இல்லை; உறக்கமும் இல்லை.
ஊணும் உறக்கமும் ஒத்தார்க்கு ஒத்த படி.
(ஊணும் உறையுளும்.)

ஊத்தை திரண்டு அச்சாணி ஆகுமா? 4610

ஊத்தை திரண்டு கழுக்காணி ஆச்சுது.
ஊத்தைப் பல்லுக்கு விளாங்காய் சேர்ந்தது போல.
ஊத்தைப் பெண் பெற்ற பிள்ளை கழுவக் கழுவத் தேயும்.
ஊத்தை போகக் குளித்தவனும் இல்லை; பசி போகத் தின்றவனும் இல்லை.
(உண்டவனும்.)

ஊத்தை போனாலும் உள்வினை போகாது. 4615
(ஊழ்வினை.)

ஊத்தை வாய்க்கும் உமிழ் நீருக்கும் கேடு.
ஊத்தை வாயன் தேடக் கர்ப்பூர வாயன் தின்ன.
ஊத்தை வாயன் தேட நாற்ற வாயன் தின்ன.
(நாறல் வாயன்.)

ஊத அறிந்தவன் வாதி; உப்பு அறிந்தவன் யோகி.
(உப்ப.)

ஊதாரிக்குப் பொன்னும் துரும்பு. 4620

ஊதி ஊதி உள்ளதெல்லாம் பாழ்.
ஊதின சங்கு ஊதினால் விடிகிற போது விடியட்டும்.
ஊதினால் போம்; உறிஞ்சினால் வரும்.
ஊமை ஊரைக் கெடுக்கும், பெருச்சாளி வீட்டைக் கெடுக்கும்.
(ஆமை வீட்டைக் கெடுக்கும்.)

ஊமை ஊரைக் கெடுக்கும்; வாயாடி பேரைக் கெடுக்கும். 4625

ஊமை ஊரைக் கெடுப்பான்; ஆமை ஆற்றைக் கெடுக்கும்.
(ஆமை கிணற்றைக் கெடுக்கும்.)

ஊமைக்கு உளறு வாயன் உற்பாத பிண்டம்.
ஊமைக்கு உளறு வாயன் சண்டப் பிரசண்டன்.
ஊமைக்குத் தெத்து வாயன் உயர்ந்த வாசாலகன்.
ஊமைக்கு வாய்த்தது ஒன்பதும் பிடாரி. 4630

ஊமை கண்ட கனா. (+ ஆருக்குத் தெரியும்.)
ஊமை கண்ட கனாப்போலச் சீமைப் பட்டணம் ஆகுமா?
ஊமை பிரசங்கம் பண்ணச் செவிடன் கேட்டது போல.
ஊமை போல இருந்து எருமை போலச் சாணி போட்டதாம்.
ஊமையர் சபையில் உளறு வாயன் மகாவித்துவான். 4635
(யாழ்ப்பாண வழக்கு.)

ஊமையன் கனவு கண்டது போலச் சிரிக்கிறான்.
ஊமையன் பாட, சப்பாணி ஆட, செவிடன் கேட்க, குருடன் பார்க்க.
ஊமையன் பேச்சுப் பழகின பேருக்குத் தெரியும்.
ஊமையாய் இருந்தால் செவிடும் உண்டு.
ஊமையின் பிரசங்கத்தைச் செவிடன் கேட்டானாம். 4640

ஊமையும் அல்ல, செவிடனும் அல்ல.
(செவிடும்.)

ஊமையும் ஊமையும் மூக்கைச் சொறிந்தாற் போல்.
ஊமையை விட உளறு வாயன் மேல்.
ஊர் அருகே ஒரு வயலும் உத்தரத்தில் ஒரு புத்திரனும்.
ஊர் அறிந்த பார்ப்பான். 4645

ஊர் அறிந்த பிராமணனுக்குப் பூணூல் எதற்கு?
ஊர் ஆளுகிற ராஜாவுக்குப் பேள இடம் கிடைக்கவில்லையாம்.
(துரைக்கு.)

ஊர் ஆளுகிறவன் பெண்டு பிடித்தால் ஆருடன் சொல்லி முறையிடுகிறது?
ஊர் ஆளுகிறவன் பெண்டாட்டிக்குப் பேள இடம் இல்லையாம்.
(பேண.)

ஊர் ஆளுகிறவனுக்குப் பேளப் புறக்கடை இல்லையா? 4650

ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக்கு எளிது.
(கொண்டாட்டம், அழகு.)

ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக்குத் தொக்கு.
(கொள்ளை.)

ஊர் இருக்கிறது; ஓடு இருக்கிறது.

ஊர் இருக்கிறது பிச்சை போட; ஓடு இருக்கிறது வாங்கிக் கொள்ள.

ஊர் இருக்கிறது; வாய் இருக்கிறது. 4655

ஊர் இளக்காரம் வண்ணானுக்குத் தெரியும்; வீட்டு இளக்காரம் மாப்பிள்ளைக்குத் தெரியும்.

ஊர் உண்டாகி அல்லவோ, கிழக்கு மேற்கு உண்டாக வேண்டும்?

ஊர் உண்டு பிச்சைக்கு; குளம் உண்டு தண்ணீருக்கு.

ஊர் ஊராய்ப் போவானுக்கு வாழ்க்கைப்பட்டு ஓட்டமே ஒழிய நடை இல்லை.

ஊர் எங்கும் சம்பை; என் பேரோ வம்பை. 4660

ஊர் எங்கும் சுற்றி உனக்கு ஏதடா புத்தி?

ஊர் எங்கும் பேறு; வீடு பட்டினி.
(பேர்.)

ஊர் எச்சம்; வீடு பட்டினி.
(யாழ்ப்பாண வழக்கு.)

ஊர் எல்லாம் உற்றார்; அந்தி பட்டால் பொதுச் சந்தியிலே.

ஊர் எல்லாம் உறவு; ஒரு வாய்ச் சோறு இல்லை. 4665

ஊர் எல்லாம் கடன்; உடம்பெல்லாம் பொத்தல்.

ஊர் எல்லாம் கல்யாணம்; மார் எல்லாம் சந்தனம்.

ஊர் எல்லாம் சதமாகுமோ? ஒரு மரம் தோப்பாகுமோ?

ஊர் எல்லாம் சுற்றி எனக்கென்ன புத்தி?
(என் பேர் முத்தி.)

ஊர் எல்லாம் வாழ்கிறது என்று வீடு எல்லாம் புரண்டு அழுதால் வருமா? 4670

ஊர் என்று இருந்தால் பறைச் சேரியும் இருக்கும்.

ஊர் எனப்படுவது உறையூர்.
(இறையனார் அகப்பொருள் உரை.)

ஊர் ஒக்க ஓட வேண்டும்.
ஊர் ஒச்சன் பட்டினி.
ஊர் ஓசை அடங்க நெய் காய்ச்சினாளாம். 4675

ஊர் ஓசை அடங்கும் வரை வெண்ணெய் காய்ச்சினாளாம்.
ஊர் ஓட உடன் ஓட.
ஊர் ஓட ஒக்க ஓடு; நாடு ஓட நடு ஓடு.
ஊர் ஓடினால் ஒத்தோடு; ஒருவன் ஓடினால் கேட்டு ஓடு.
(யாழ்ப்பாண வழக்கு.)

ஊர் ஓமல் ஆனது அல்லால் ஒன்றும் அறியேன். 4680

ஊர் ஓரத்தில் கொல்லை; உழுதவனுக்குப் பயிர் இல்லை.
ஊர் ஓரத்து உழவுக்காரனும் உண்டவுடன் பேளாதவனும் உருப்படமாட்டான்.
ஊர்க்கடனும் உள்ளங்கைச் சிரங்கும் போல.
ஊர்க் கழுதை இருக்கக் கூத்தாடிக் கழுதைக்குச் சனி பிடித்தது.
ஊர்க் காக்காய் கரையிலே; வந்தட்டிக் காக்காய் வரப்பிலே. 4685

ஊர்க்குருவிமேலே ராம பாணம் தொடுக்கிறதா?
ஊர்க்கோடியில். ஒரு வீடு கட்டி ஓர்ப்படி தம்பிக்குப் பெண் கொடுத்தாற்போல்.
ஊர்க் கோழியும் நாட்டுக் கோழியும் கூடினால் உரலில் உள்ள புழுங்கல் அரிசிக்குச் சேதம்.
ஊர்கிறதென்றால் பறக்கிறது என்று சொல்லும் ஜனம்.
ஊர் கூடிச் செக்குத் தள்ளலாமா? 4690

ஊர் கூடிச் செக்குத் தள்ள, வாணியன் எண்ணெய் கொண்டு போக.
ஊர் கூடித்தானே தேர் இழுக்க வேண்டும்?
ஊர் கோப்பழிந்தால் ஓடிப் பிழை.
(கோப்பறிந்தால்.)
ஊர்ச் சக்கிலி எல்லாம் சேர்ந்து தோலைக் கெடுத்தனராம்.
ஊர்ச் சண்டை, கண்ணுக்கு அழகு. 4695

ஊர் திரிந்த தேவடியாளுக்குப் பூணூல் அபூர்வமா?
(பூநூல்.)
ஊர் நடு நின்ற ஊர் மரம் போல.
ஊர் நத்தத்தில் நாய் ஊளையிட்டாற் போல.

ஊர் நல்லதோ? வாய் நல்லதோ?

ஊர் நஷ்டம் ஊரிலே; தேர் நஷ்டம் தெருவிலே. 4700

ஊர்ப் பசங்களெல்லாம் கால் பாடம்; பிச்சைக்கு வந்த பெண் அகமுடையாள்.

ஊர்ப் பிள்ளையை முத்தமிட்டால் உதட்டுக்குக் கேடு.
(உதட்டுக்குத்தான் சேதம்.)

ஊர்ப் பொருளை உப்பு இல்லாமல் கூடச் சாப்பிடுவான்.

ஊர் பேர் அறியாதவன் ஊர்வலம் வருகிற மாதிரி.

ஊர் மெச்சப் பால் குடிக்கலாமா? 4705

ஊர் மேலே போனவளுக்குத் தோள்மேலே கொண்டையாம்; அதைப் போய்க் கேட்கப் போனால் லடாபுடா சண்டையாம்.

ஊர்வலத்தைக் காண வந்தவன் அடித்துக் கொள்வது போல.

ஊர் வாயை அடக்கினாலும் உளறு வாயை அடக்க முடியாது.

ஊர் வாயைப் படல் இட்டு மூடலாமா?

ஊர் வாயை மூட உலை மூடி இல்லை. 4710

ஊர் வாயை மூடலாமா? உலை வாயை மூடலாமா?

ஊர் வாரியில் ஒரு கொல்லையும் உத்தராட நட்சத்திரத்தில் ஒரு பிள்ளையும்.

ஊர் வாழ்ந்தால் ஒக்க வாழலாம்.

ஊர் வாழ்த்தால் ஓட்டுப் பிச்சைக்கு வழி இருக்கும்.
(விளைந்தால்.)

ஊர் விஷயங்களில் ஊமை செவிடாய் இரு. 4715

ஊரார் உடைமைக்கு உலை வைக்கிறான்.

ஊரார் உடைமைக்கு ஓயாண்டி போல் திரிவான்.

ஊரார் உடைமைக்குப் பேயாய்ப் பறக்கிறான்.
(திரிகிறான்.)

ஊரார் உடைமைக்குப் பேராப் பேராசை கொள்ளாதே.

ஊரார் எருமை பால் கறக்கிறது; நீயும் ஊட்டுகிறாய்; நானும் உண்ணுகிறேன். 4720

ஊரார் கணக்கு உடையன் பிடரியிலே.

ஊரார் சிரித்தால் என்ன? நாட்டார் நகைத்தால் என்ன? நான் நடக்கிற நடை இவ்வளவுதான்.

ஊரார் சொத்துக்குப் பேயாய்ப் பறக்கிறான்.
ஊரார் சொத்துத் தூமகேது.
(பொருள்.)
ஊரார் நாய்க்குச் சோறு போட்டால் அது உடையவன் வீட்டிலே போய்த்தான் குரைக்கும். 4725

ஊரார் பண்டம் உமி போல்; தன் பண்டம் தங்கம் போல்.
ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்.
ஊரார் புடைவையில் தூரம் ஆவது.
ஊரார் வீட்டுக் கல்யாணமே; ஏன் அவிழ்ந்தாய் கோவணமே!
ஊரார் வீட்டுச் சோற்றைப் பார்; ஓசு பாடி வயிற்றைப் பார். 4730

ஊரார் வீட்டு நெய்யே; என் பெண்டாட்டி கையே.
ஊராருக்கெல்லாம் ஒரு வழி; இவனுக்கு ஒரு வழி.
ஊராருக்கெல்லாம் ஒரு வழி; ஓச்சனுக்கு ஒரு வழி.
ஊராரே வாருங்கள்; முதுகிலே குந்துங்கள்.
ஊராரைப் பகைத்து உயிரோடு இருந்தவர் இல்லை. 4735

ஊரான் ஆகில் உழுது விட்டுப் போகப் பண்ணைக்காரன் தண்ட வரி செலுத்த வேண்டியிருக்கிறது.
ஊரான் ஆகில் தாசன் பார்க்கிறதற்குச் சந்தேகமா?
ஊரான் ஆகில் தாசனுக்குப் பேள இடம் இல்லையா?
ஊரான் சொத்தை உப்பு இல்லாமல் தின்பான்.
ஊரான் மகன் நீரோடே போன கதை. 4740

ஊரான் வீட்டுச் சோற்றைப் பார்; சோனிப் பையன் வயிற்றைப் பார்.
ஊரில் இருக்கும் சனியனை வீட்டிலே அழைத்தாற் போல.
ஊரில் இளக்காரம் வண்ணானுக்குத் தெரியும்.
ஊரிலே எளியாரை வண்ணான் அறிவான்; சாதிப் பொன் பூண்பாரைத் தட்டான் அறிவான்.
ஊரில் ஒருத்தனே தோழன்; ஆரும் அற்றதே தாரம். 4745

ஊரில் நடக்கும் விஷயம் எல்லாம் ஊசல் குமரிக்குத் தெரியும்.
ஊரில் பஞ்சம் நாயில் தெரியும்.

ஊரில் பெண் திரண்டால் எனக்கு என்ன ஆச்சு; உனக்கு என்ன ஆச்சு.
(புரோகிதர் கூற்று.)

ஊரிலே அழகியைப் பிடிக்கப் போகிறானென்று ஆந்தையும் குரங்குமாய் ஓடிப் போச்சாம்.

ஊரிலே ஒரு குடியும் அல்ல; ஏரியிலே ஒரு பயிரும் அல்ல. 4750

ஊரிலே கல்யாணம்; மாரிலே சந்தனம்.

ஊரிலேயும் போவான்; சொன்னால் அழுவான்.

ஊருக்கு அரசன் ஆனாலும் தாய்க்குப் பிள்ளைதான்.

ஊருக்கு அரசன் காவல்; வீட்டுக்கு நாய் காவல்.

ஊருக்கு ஆகாதது உடம்புக்கும் ஆகாது. 4755

ஊருக்கு ஆகாத பிள்ளை தாய்க்கு ஆவானா?
(ஆகான்.)

ஊருக்கு இட்டு ஊதாரி ஆனான்.

ஊருக்கு இரண்டு பைத்தியக்காரன்.

ஊருக்கு இரும்பு அடிக்கிறான்; வீட்டுக்குத் தவிடு இடிக்க முடியவில்லை.

ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார் கோவில் ஆண்டி; அதற்கும் இளைத்தவன் மச்சினன் பெண்டாட்டி. 4760

ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார் கோவில் ஆண்டி; அதற்கும் இளைத்தவன் பள்ளிக்கூடத்து வாத்தியார்.

ஊருக்கு உழைக்கிற கிராமணி.

ஊருக்கு எல்லாம் ஒரு வழி; உச்சிப் பிள்ளையாருக்கு ஒரு வழி.

ஊருக்கு எல்லாம் ஒரு வழி; உனக்கு ஒரு வழியா?

ஊருக்கு எல்லாம் சாஸ்திரம் சொல்லுகிற பல்லி, கூழ்ப் பானையில் விழுந்தது போல. 4765
(காடிப் பானையில், கழுநீர்ப் பானையில்,)

ஊருக்கு ஏற்ற மாடு வாங்கினவனும் இல்லை; தாய்க்கு ஏற்ற பெண் கட்டினவனும் இல்லை.

ஊருக்கு ஏற்றுக் கெட்டான்; உள்ளதைச் சொல்லிக் கெட்டான்.

ஊருக்கு ஒடுங்கான், யாருக்கும் அடங்கான்.

ஊருக்கு ஒரு தேவடியாள் ஆருக்கென்று ஆடுவாள்?
(தாசி.)

ஊருக்கு ஒரு வழி; ஒன்றரைக் கண்ணனுக்கு ஒரு வழி. 4770

ஊருக்கு ஒருவன் துணை.

ஊருக்கு ஓமல்; வீட்டுக்கு வயிற்றெரிச்சல்.

ஊருக்குக் கடைசி உலகம்பட்டி.
(நகரத்தார் ஊர்களுக்குள் கடைசி.)

ஊருக்கு நாட்டான் பெண்டாட்டி என்றால் ஓ என்னுவாளாம்; ஓர் ஆளுக்குச் சோறு என்றால் ஹூம் என்னுவாளாம்.

ஊருக்குப் பால் வார்த்து உண்கிறாயா! உடம்புக்குப் பால் வார்த்து உண்கிறாயா? 4775

ஊருக்குப் பேரும் உறவின் முறைக்குப் பொல்லாப்பும்.

ஊருக்குப் போகிறவர் வேலை சொன்னால் ஓடி ஓடிச் செய்தாலும் தீராது.

ஊருக்கும் பேருக்கும் வடுகு இல்லை.

ஊருக்கு மாரடித்து ஒப்புக்குத் தாலி கட்டுகிறாளாம்.

ஊருக்கு முந்தி விளக்கு ஏற்றினால் உயர்ந்த குடியாக ஆகலாம். 4780

ஊருக்கு முன்னால் விளக்கு ஏற்றினால் ஒரு பிடி உயரும்.

ஊருக்கு விளைந்தால் ஓட்டுக்குப் பிச்சை.

ஊருக்கு வேலை செய்வதே மணியமாய் இருக்கிறான்.

ஊருக்குள் நடக்கிற விஷயம் யாருக்குத் தெரியும்? உள்ளே இருக்கிற குமரிக்குத் தெரியும்.

ஊருகிற அட்டைக்குக் கால் எத்தனை என்று அறிவான். 4785

ஊருடன் கூடி வாழ்.
(ஊரோடு ஒத்து வாழ்.)

ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.

ஊருராய்ப் போகிறவனுக்கு வாழ்க்கைப்பட்டு ஓட்டமே ஒழிய நடை இல்லை.

ஊரே தாய்; வேலியே பயிர்.

ஊரை அடித்து உலையில் போடுகிறான். 4790

ஊரை ஆண்டாயோ? ஊரான் பெண்ணை ஆண்டாயோ?

ஊரை ஆள்கிற ராசாவுக்கு உட்கார இடம் இல்லையாம்!

ஊரை உழக்கால் அளக்கிறான்; நாட்டை நாழியால் அளக்கிறான்.

ஊரைக் கண்டவுடனே உடுக்கையைத் தோளில் போட்டுக் கொண்டானாம்.

ஊரைக் காட்ட ஒரு நாய் போதும். 4795

ஊரைக் கெடுத்தான் ஒற்றைக் கடைக்காரன்.
ஊரைக் கெடுத்தான் ஒற்றை மாட்டுக்காரன்.
ஊரைக் கொளுத்துகிற ராஜாவுக்கு ஊதிக் கொடுக்கிறவன் மந்திரி.
ஊரைச் சுற்றி வந்த யானை ஒற்றடம் வேணும் என்றாற்போல்.
ஊரைச் சொன்னாலும் பேரைச் சொல்லாதே. 4800

ஊரைப் பகைத்தேனோ? ஒரு நொடியில் கெட்டேனோ?
ஊரைப் பார்க்கச் சொன்னால் பறைச்சேரியைப் பார்க்கிறான்.
ஊரைப் பார்த்து ஓம்பிப் பிழை.
ஊரைப் பிடித்த சனி பிள்ளையாரையும் பிடித்தது.
ஊரைப் பிடித்த சனியனுக்கு நாயைப் பிடித்துக் சூலம் போட்டது போல். 4805
(பீடையைப் பிடித்து.)

ஊரை வளைத்தாலும் உற்ற துணை இல்லை; நாட்டை வளைத்தாலும் நல்ல துணை இல்லை.
(வீட்டை.)

ஊரை விட்டுப் போகும்போது தாரை விட்டு அழுதாளாம்.
ஊரை விழுங்குகிற மாமியாருக்கு அவளையே விழுங்குகிற மருமகள் வந்தாளாம்.
ஊரை விழுங்கும் மாமனாருக்கு அவரையே விழுங்கும் மாப்பிள்ளை.
ஊரோடு ஒக்க ஓடு; ஒருவன் ஓடினால் கேட்டு ஓடு. 4810

ஊரோடு ஒக்க நட; நாட்டோடு நடுவே ஓடு.
(ஒக்க நடு.)
ஊரோடு ஒட்டி வாழ்.
(ஒன்றி வாழ்.)
ஊரோடே ஒக்கோடே.
ஊழ்வினை ஓநாய் மாதிரி இருக்கும்.
ஊழிக் காய்ச்சல் அதிகமானால் சூனியக்காரன் கொள்ளை. 4815

ஊழி பெயரினும் கலங்கார் உறவோர்.
ஊழி பேரினும் ஊக்கமது கைவிடேல்.
ஊழிற் பெருவலி ஒன்று உண்டோ?
ஊழும் உற்சாகமும் ஒத்துக்கொள்ள வேண்டும்.
ஊற்றுத் தண்ணீரில் நாய்க்குப் பால் வார்த்தது போல. 4820

ஊற்றுப் பாய்ச்சல் ஆற்றுப் பாய்ச்சல் பத்துக் குழியும், ஏரிப் பாய்ச்சல் நூறு குழியும் ஒன்று.

ஊற்றை நம்பினாலும் ஆற்றை நம்பாதே.

ஊற்றைப் பல்லுக்கு விளாங்காய் சேர்ந்தாற் போல்.
(பா-ம்.) ஊத்தை.

ஊற்றைப் பெண் பிள்ளை கழுவக் கழுவத் தேயும்.
(பா-ம்.) ஊத்தை.

ஊற்றை போகக் குளித்தவனும் இல்லை; பசி போகத் தின்றவனும் இல்லை. 4825
(பா-ம்.) ஊத்தை.

ஊற்றை மலத்தைக் கண்ட பன்றி உதட்டுக்குள்ளே சிரித்துக் கொண்டதாம்.
(பா-ம்.) ஊத்தை.

ஊறச்சே துடைக்க வேண்டும்.

ஊறல் எடுத்தவன் சொறிந்து கொள்வான்.

ஊறாக் கிணறு. உறங்காப் புளி. தீரா வழக்கு, திருக்கண்ணங் குடி.
(கண்ணங்குடி. சிக்கலுக்குப் பக்கத்தில் இருக்கிறது.)

ஊறுகாயைக் கடித்துக் கொண்டு ஒரு பானைச் சோற்றை என்னது என்பான். 4830

ஊறுகாயைக் கடித்துக் கொண்டு ஒரு பானைச் சோற்றைத் திணிப்பது போல,

ஊன்றக் கொடுத்த தடி உச்சியை உடைக்கிறது.

ஊன்றக் கொடுத்த தடி மண்டையைப் பிளந்தது போல.

ஊன்ற வைத்த கொம்பு உச்சி மோட்டை உச்சி மோட்டைப் பிளக்கிறது.

ஊனம் இல்லா உடம்புக்கு நாணம் ஏன்? 4835

ஊனம் இல்லான் மானம் இல்லான்.

ஊனுக்கு ஊன் உற்ற துணை.

# எ

எக்கியத்தில் மூத்திரம் பெய்தது போல.
எக்குப் புடைவை சோர்ந்தால் கைக்கு உண்டோ உபகாரம்?
(உபசாரம். எக்கு-இடுப்பு.)
எக்கேடு கெட்டுப் போ; எருக்கு முளைத்துப் போ. 4840

எகனை முகனை பார்க்கிறான்.
எங்கள் அகத்துக்காரரும் கச்சேரிக்குப் போகிறார்.
(போய் வந்தார்.)
எங்கள் அகத்துக்கு வந்தால் என்ன கொண்டு வருகிறாய்? உங்கள் அகத்துக்கு வந்தால் என்ன தருகிறாய்?
(வீட்டுக்கு.)
எங்கள் அகத்துப் பெண் பொல்லாதது; உங்கள் அகத்துப் பிள்ளையை அடக்குங்கள்.
எங்கள் அப்பன் பிறந்தது வெள்ளி மலை; ஆய் பிறந்தது பொன் மலை. 4845

எங்கள் அப்பன் குதிருக்குள் இல்லை.
எங்கள் வீட்டில் விருந்து வைக்கிறேன் வாருங்கள்; இலை வாங்க மறந்துவிட்டேன் போங்கள்.
எங்கள் வீட்டு அகமுடையானுக்கும் அரண்மனையில் சேவகம்.
எங்களால் ஒன்றும் இல்லை; எல்லாம் உங்கள் தர்மம்.
எங்கு இருந்தாலும் ஆனை பெருமாளதுதானே? 4850
(பெருமாள்தானே.)

எங்கும் சுற்றி ரங்கநாதா என்றான்.
எங்கு ஏறிப் பாய்ந்தாலும் கொங்கு ஏறிப் பாயேன்.
(காவிரியின் கூற்று, ஏறிப் பாயாது.)
எங்கும் சிதம்பரம் பொங்கி வழிகிறது.
எங்கும் சிரித்து எள்ளுக் கொல்லை காக்கிறவன்.
எங்கும் சுற்றி ரங்கனைச் சேவி. 4855
(பார்.)

எங்கும் செத்தும் நாக்குச் சாகவில்லை.
எங்கும் பருத்தி எழுபது பலம்.
எங்கும் பொன்னம்பலந்தான்.
எங்கும் மடமாய் இருக்கிறது; இருக்கத்தான் இடம் இல்லை.
எங்கே அடித்தாலும், நாய்க்குக் காலிலே முடம். 4860

எங்கே அடித்தாலும் நாய் காலைத் தூக்கும்.
எங்கே சுற்றியும் ரங்கனைத்தான் சேவிக்க வேணும்.
எங்கே திருடினாலும் கன்னக்கோல் வைக்க இடம் ஒன்று வேண்டும்.
எங்கே புகை உண்டோ, அங்கே நெருப்பு உண்டு.
எங்கேயோ இடித்தது வானம் என்று இருந்தேன்; தப்பாது என் தலையிலேயே இடித்தது. 4865

எங்கேயோ எண்ணெய் மழை பெய்ததென்று இருந்தாளாம்.
எங்கே வந்தது இரை நாய்? பங்குக்கு வந்தது மர நாய்.
எங்கே வெட்டினாலும் எப்படிச் சாயும் என்று பார்க்க வேணும்.
எச்சரசம் ஆனாலும் கைச்சரசம் ஆகாது.
எச்சில் அறியாள், துப்பல் அறியாள்; என் பெண் பதின்கலக் காரியம் செய்வாள். 4870

எச்சில் இரந்து அடிக்கும்; பற்றுப் பறக்க அடிக்கும்.
எச்சில் இரக்கும்; தூமை துடைக்கும்.
(தீட்டுத் துடைக்கும்.)
எச்சில் இலை எடுக்க வந்ததா நாய்? எண்ணிப் பார்க்க வந்ததா நாய்?
எச்சில் இலைக்கு அலையும் நாய் போல.
எச்சில் இலைக்கு இச்சகம் பேசுகிறது. 4875
(எச்சில் தீட்டுக்கு.)

எச்சில் இலைக்கு இதம் பாடுகிறது.
எச்சில் இலைக்கு எதிர் இலை போடலாமா?
எச்சில் இலைக்கு ஏஜெண்டு; குப்பைத் தொட்டிக்குக் குமாஸ்தா.
எச்சில் இலைக்கு நாய் அடித்துக்கொண்டு நிற்கிறது போல.
எச்சில் இலைக்குப் போட்டி போடும் நாய் மாதிரி. 4880

எச்சில் இலைக்கு மண்ணாங்கட்டி ஆதரவு; மண்ணாங்கட்டிக்கு எச்சில் இலை ஆதரவு.
எச்சில் இலை கண்ட நாய் போல.

எச்சில் இலை நாய்க்கும் பிறந்த நாள் கொண்டாட்டமா?
எச்சில் இலை நாயானாலும் எசமான் விசுவாசம் உண்டு. 4885

எச்சில் இலையை எடுக்கச் சொன்னார்களா? எத்தனை பேர் என்று எண்ணச் சொன்னார்களா?
(எச்சிலிலைக் கணக்குக் கேட்கச் சொன்னார்களா?)

எச்சில் கையால் காக்கை ஓட்டாதவன் என்ன சாமி? என்ன பூஜை?
எச்சில் கையால் காக்கை ஓட்டமாட்டான்.
(கையாலும்.)

எச்சில் கையால் காக்கை ஓட்டாதவன் பிச்சை இடுவானா?
(பிச்சை எடுப்பானா?)

எச்சில் தின்றாலும் வயிறு நிரம்பத் தின்னவேண்டும்; ஏச்சுக் கேட்டாலும் பொழுது விடியும்மட்டும் கேட்க வேண்டும். 4890

எச்சில் நாய்க்குக் கண்டது எல்லாம் ஆசை.
எச்சிலை எடுக்கச் சொன்னாளா? இலையை எண்ணச் சொன்னாளா?
எச்சிலைக் கழுவி உன் சுத்தத்திலே வார்.
எச்சிலைக் குடித்துத் தாகம் தீருமா?
(அடங்குமா?)

எச்சிலைத் தின்றாலும் எஜமானன் விசுவாசம் காட்டும் நாய்; பாலைக் குடித்தாலும் பகையை நினைக்கும் பூனை. 4895

எச்சிலைத் தின்று ஏப்பம் விட்டாற் போல.
எச்சிலைத் தின்று பசி தீருமா?
எசமான் கோபத்தை எருமைக் கடாவின்மேல் காண்பித்தானாம்.
எசமான் வீடு நொடித்து விட்டதென்று நாய் பட்டினியாக இருந்ததாம்.
எசமான் வெளியே போனால் பசங்கள் எல்லாம் கும்மாளம் போடுவார்கள். 4900

எட்கிடை நெற்கிடை விட்டு எழுது.
எட்டாக் கனியைப் பார்த்து இச்சித்து என்ன பயன்?
எட்டாத தேனுக்கு ஏறாத நொண்டி கொட்டாவி விட்ட கதை போல.
எட்டாத பழம் புளிக்கும்.
எட்டாத மரத்து இளநீர் போல ஒட்டாத பேரோடே உறவாக நிற்காதே. 4905

எட்டாப் பழத்திற்குக் கொட்டாவி விட்டாற் போல.
எட்டாப் பூத் தேவருக்கு; எட்டும் பூத் தங்களுக்கு.
எட்டாம் நாள் வெட்டும் குதிரை; ஒன்பதாம் நாள் ஓடும் குதிரை.
எட்டாம் பேறு பெண் பிறந்தால் எட்டிப் பார்த்த வீடு குட்டிச்சுவர்.
(இடம்.)
எட்டாவது ஆண் பிறந்தால் வெட்டி அரசாளும். 4910

எட்டாளம் போனாலும் கிட்டாதது எட்டாது.
எட்டி எட்டிப் பார்த்துக் குட்டிச் சுவரில் முட்டிக் கொள்ளலாம்.
எட்டி எட்டிப் பார்ப்பாரும், ஏணி வைத்துப் பார்ப்பாரும், குட்டிச்சுவர் போலக் குனிந்து நின்று பார்ப்பாரும்.
எட்டிக் கனியின்மேல் அழகாய் இருந்தும் உள்ளே இருக்கும் வித்தைப் போல்.
எட்டிக் குட்டி இறக்கிக் காலைப் பிடித்துக் கொள்கிறது. 4915

எட்டிக் குடுமியைப் பிடித்து இறங்கிக் காலைப் பிடிக்கிறவன்.
எட்டிக்குப் பால் வளர்த்தாலும் தித்திப்பு உண்டாகாது.
(இனிப்பு.)
எட்டிக் கோட்டை கட்டினால் கிட்டி மழை உண்டு.
எட்டிப் பழத்தை இச்சிக்கிறது போல்.
(இச்சிக்கிறதா?)
எட்டிப் பார்த்தால் எட்டு இழை நட்டம். 4920

எட்டிப் பார்த்தாற்போலக் கொட்டிக் கொண்டு போகிறான்.
எட்டிப் பிடித்தால் ஒரு கத்திப் பிடிக்கு ஆகாதா?
எட்டி பழுத்தால் என்ன? ஈயாதார் வாழ்ந்தால் என்ன?
எட்டி மரம் ஆனாலும் பச்சென்று இருக்க வேண்டும்.
(பச்சென்று இருந்தால் கண்ணுக்கு அழகு.)
எட்டி மரம் ஆனாலும் வைத்த மரத்தை வெட்டாதே. 4925
(வைத்த மரம் தோப்பாக வேணும்.)

எட்டி மரம் ஆனாலும் வைத்தவர்க்குப் பாசம்.
(பக்ஷம்.)
எட்டி முளையிலும் இரட்டி அதிகம் உண்டாகுமா?
எட்டியிலே கட்டு மாம்பழம் உண்டாகுமா?
(உண்ணலாமா?)
எட்டியுடன் சேர்ந்த இலவும் தீப்படும்.
(எட்டியுடன் கூடி.)

எட்டின மட்டும் வெட்டும் கத்தி; எட்டாத மட்டும் வெட்டும் பணம். 4930

எட்டினவன் ஆனாலும் முட்டப் பகை ஆகாது.

எட்டினால் குடுமியைப் பிடித்து எட்டாவிட்டால் காலைப் பிடிப்பது. (தலையை.)

எட்டு அடி வாழை, கமுகு; ஈரடி கரும்பு, கத்தரி; இருபதடி பிள்ளை (பிள்ளை-தென்னம் பிள்ளை.)

எட்டு அடி வாழையும் பத்தடி பிள்ளையும். (பிள்ளை-தென்னம் பிள்ளை.)

எட்டு ஆள் வேலையை ஒரு முட்டாள் செய்வான். 4935

எட்டு இருக்கிறது, எழுந்திரடி அத்தையாரே.

எட்டு எருமைக்காரி போனாளாம், ஓர் எருமைக்காரியிடம்.

எட்டு எள்ளுக்குச் சொட்டு எண்ணெய் எடுப்பான்.

எட்டு என்றால் இரண்டு அறியேன்.

எட்டுக் கிழவருக்கு ஒரு மொட்டைக் கிழவி. 4940

எட்டுக் குட்டுக் குட்டி இறங்கிக் காலைப் பிடிக்கிறது.

எட்டுக் கோவில் பூசை பண்ணியும் எச்சன் வீடு பட்டினி.

எட்டுச் சந்தைக்கு ஒரு சந்தை பொட்டைச் சந்தை.

எட்டுச் சிந்தாத்திரை ஒரு தட்டுதலுக்கு ஒக்கும்.

எட்டுச் செவ்வாய் எண்ணித் தலை முழுகில் தப்பாமல் தலைவலி போம். 4945

எட்டு நாயும் பெட்டைக் குட்டியும் போல்.

எட்டுப் படி அரிசியும் ஒரு கவளம்; ஏழூர்ச் சண்டை ஒரு சிம்மாளம்.

எட்டுப் பிள்ளைக்கு ஒரு செட்டுப் பிள்ளை போதும்.

எட்டும் இரண்டும் அறியாதவன்.

எட்டும் இரண்டும் அறியாத பேதை. 4950

எட்டு மாசம் குளிர்ந்திருந்தால்.

எட்டு மாட்டுக்கு ஒரு சாட்டை.

எட்டு முழமும் ஒரு சுற்று; எண்பது முழமும் ஒரு சுற்று.

எட்டு வருஷத்து எருமைக் கடா ஏரிக்குப் போக வழி தேடுகிறது. (எட்டுப் பிராயத்து.)

எட்டு வட்டம் கட்டிக் கொண்டு எதிர்ப்புறம் போனாளாம்; அவள் பத்து வட்டம் கட்டிக் கொண்டு பரக்கப் பரக்க வந்தாளாம். 4955
(வட்டம்-தையல்.)

எட்டு வீடு தட்டியும் ஓச்சன் குடி பட்டினி.

எட்டே கால் லக்ஷணமே, எமனேறும் வாகனமே.
(எட்டேகால் லக்ஷணமே-அவலக்ஷணமே. எமனேறும்வாகனம்-எருமைக்கடா.)

எடக்கு நாட்டுக்குப் போனானாம் தேங்காய் வாங்க.

எடுக்கப் பிடிக்க ஆள் இருந்தால் வரப்பு ஏறிப் பேள்கிறதற்கும் கஷ்டம்.

எடுக்கப் போன சீமாட்டி இடுப்பு ஒடிந்து விழுந்தாளாம். 4960
(விழுந்தாற் போல.)

எடுக்கிறது எருத்து மட்டுச் சுமை; படுக்கிறது பஞ்சணை மெத்தை.
(எருமைச்சுமை.)

எடுக்கிறது சந்தைக் கோபாலம்; ஏறுகிறது தந்தப் பல்லக்கா?
(கோபாலம் -பிச்சை.)

எடுக்கிறது பிச்சை; ஏறுகிறது பல்லக்கு.
(முட்டி. பல்லக்கா.)

எடுக்கிறது வறட்டிச் சுமை; நடக்கிறது தங்கச் சிமிழ்ப் பாதரட்சை.

எடுக்கு முன்னே கழுதை இடுப்பு ஒடிந்து விழுந்ததாம். 4965

எடுத்த அடி மடங்குமா?

எடுத்த கால் வைப்பதற்குள் வைத்த கால் செல் அரிக்கிறது.

எடுத்த கை சிவக்கும்.

எடுத்த சுமை சுமந்தல்லவோ இறக்க வேண்டும்?

எடுத்தாலும் பங்காருப் பெட்டியை எடுக்க வேண்டும்; இருந்தாலும் சிங்காரக் கழுவில் இருக்க வேண்டும். 4970

எடுத்தாலும் பெயர் சரியாய் எடுக்க வேணும்.

எடுத்தாற் போல் தப்பட்டைக்காரன் பட்டான்.
(செத்தான்.)

எடுத்து ஆளாத பொருள் உதவாது.

எடுத்து எடுத்து உழுதாலும் எருதாகுமா கடா.
(எருது மாடு ஆகாது.)

எடுத்து எறிந்து பேசுகிறான். 4975

எடுத்துக் கவிழ்த்துப் பேசுகிறான்.
எடுத்துச் சொல்; முடித்துச் சொல்.
எடுத்துப் பிடித்தால் வெட்டுவேன் என்ற கதை.
எடுத்துப் போட்டு அடிக்கிறது; முறத்தைப் போட்டுக் கவிழ்க்கிறது.
எடுத்து மூடிவிட்டு எதிரே வந்து நிற்பான். 4980

எடுத்து விட்ட எருது போல.
எடுத்து விட்ட நாய் எத்தனை நாளைக்குக் குரைக்கும்?
எடுத்து விட்ட மாடு எத்தனை தூரம் ஓடும்?
எடுத்து வைத்தாலும் கொடுத்து வைக்க வேணும்.
எடுப்பது பிச்சை; ஏறுவது பல்லக்கு. 4985

எடுப்பார் கைப் பாவை போல.
எடுப்பார் கைப் பிள்ளை.
(கைக் குழந்தை.)

எடுப்பார் மழுவை; தடுப்பார் புலியை; கொடுப்பார் அருமை.
எடுப்பாரும் பிடிப்பாரும் இருந்தால் பிள்ளை களைத்தாற் போல இருக்கும்.
(தம்பி.)

எடுப்பாரும் பிடிப்பாரும் உண்டானால் இளைப்பும் தவிப்பும் உண்டு. 4990

எடுப்பாரைக் கண்டால் குடமும் கூத்தாடும்.
எடுப்புண்ட கலப்பை இருந்து உழுமா?
எண் அற்றவர் கண் அற்றவர்; எழுத்தற்றவர் கழுத்தற்றவர்.
(இல்லாதவன்.)

எண் அறக் கற்று எழுத்து அற வாசித்தாலும் பெண்புத்தி பின் புத்திதான்.
எண் காதம் போனாலும் தன் பாவம் தன்னோடே. 4995

என்சாண் இருக்க இடி விழுந்ததாம் வயிற்றிலே.
எண்சாண் உடம்பிலே எள்ளத்தனை இரத்தம் இல்லை.
எண்சாண் உடம்பிற்குச் சிரசே பிரதானம்.
எண்சாண் உடம்பு இருக்கக் கோவணத்திலே விழுந்ததாம் இடி.
எண்சாண் உடம்பும் ஒரு சாண் ஆனேன். 5000

எண்ணத்தில் மண் விழுந்தது.

எண்ணத் தொலையாது; ஏட்டில் அடங்காது.
(ஏடு இடம் கொள்ளாது.)

எண்ணப்பட்ட குதிரை எல்லாம் மண்ணைப் போட்டுக் கொள்ள, தட்டுவாணிக் குதிரை வந்து கொள்ளுக்கு அழுகிறதாம்.
(மண்ணைத்தின்ன. நொண்டிக்குதிரை வந்து.)

எண்ணப்பட்ட குதிரை எல்லாம் மண்ணை மண்ணைத் தின்னு கையில் குருட்டுக் கழுதை கோதுமை ரொட்டிக்கு அழுகிறதாம்.

எண்ணம் அற்ற ராஜா பன்றிவேட்டை ஆடினாற்போல். 5005
(எண்ணச் சுற்ற.)

எண்ணம் இட்டவன் தூங்கான்; ஏடு எடுத்தவனும் தூங்கான்.

எண்ணம் எல்லாம் பொய்; எமன் ஓலை மெய்.

எண்ணம் எல்லாம் பொய்; எழுதிய எழுத்து மெய்.

எண்ணம் எல்லாம் பொய்; ஏளிதம் மெய்.
(ஏளனம்.)

எண்ணம் எல்லாம் பொய்; மௌனமே மெய். 5010

எண்ணாச் சொத்து மண்ணாய்ப் போகும்.

எண்ணிச் சுட்டது தேசை.

எண்ணிச் செய்கிறவன் செட்டி; எண்ணாமல் செய்கிறவன் மட்டி.

எண்ணிச் சுட்ட பணியாரம்,பேணித் தின்னு மருமகனே மருமகனே.
(மாப்பிள்ளை.)

எண்ணிச் செட்டுப் பண்ணு; எண்ணாமல் சாகுபடி பண்ணு. 5015

எண்ணிச் செய்வது செட்டு; எண்ணாமல் செய்வது வேளாண்மை.

எண்ணித் துணிக கருமம், துணிந்தபின் எண்ணுவது இழுக்கு.
(குறள்.)

எண்ணிப் பார் குடித்தனத்தை;எண்ணாதே பார் வேளாண்மையை.

எண்ண முடியாது; ஏட்டில் அடங்காது.

எண்ணிய எண்ணம் எல்லாம் பொய்; எழுதிய எழுத்து மெய். 5020

எண்ணிய எண்ணம் என்னடி? அண்ணா என்று அழைத்த முறை என்னடி?

எண்ணிய ஒரு குடிக்கு ஒரு மின்னிய குடி.
எண்ணினேன் ஒரு கோடி, இழப்பது அறியாமல்.
எண்ணும் எழுத்தும் கண்ணும் கருத்தும்.
எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும். 5025

எண்ணெய் இல்லாத பந்தம், எரியுதடி தங்கம்.
எண்ணெய்க்குச் சேதமே ஒழியப் பிள்ளை பிழைக்கிறதில்லை.
எண்ணெய்க் குடத்தில் குளிப்பாட்டின ஆனைக்குட்டி போல.
எண்ணெய்க் குடத்திலே பிடுங்கி எடுத்தாற் போல.
எண்ணெய்க் குடத்தைச் சுற்றும் எறும்பு போல. 5030

எண்ணெய்க் குடம் உடைந்தவளும் அழுகிறாள்; தண்ணீர்க்குடம் உடைந்தவளும் அழுகிறாள்?
எண்ணெய்க் குடம் உடைந்தாலும் ஐயோ! தண்ணீர்க்குடம் உடைந்தாலும் ஐயோ!
எண்ணெய்க் குடம் போட்டவனும் அப்பாடா, அம்மாடி; தண்ணீர்க் குடம் போட்டவனும் அப்பாடி, அம்மாடி.
எண்ணெய்க் குடமும் வெறும் குடமும் முட்டினால் எதற்குச் சேதம்?
எண்ணெய் கண்ட இடத்தில் தடவிக் கொண்டு சீப்புக் கண்ட இடத்தில் தலை வாரிக் கொள்கிறது. 5035
(தலை சீவி.)

எண்ணெய் காணாத மயிரும் தண்ணீர் காணாத பயிரும்.
எண்ணெய் குடித்த நாய் திண்ணையில் கிடக்க, எதிரே வந்த நாய் உதைபட்டது மாதிரி.
(குடித்த நாய் இருக்க.)
எண்ணெய்ச் சேதமே ஒழியப் பிள்ளை பிழைக்கவில்லை.
(செலவே ஒழிய. பிழைக்காது. பிழைத்தபாடு இல்லை.)
எண்ணெய் தடவிக் கொண்டு மண்ணில் புரண்டாலும் ஒட்டுவது தானே ஒட்டும்?
எண்ணெய்ப் பிள்ளையோ? வண்ணப் பிள்ளையோ? 5040

எண்ணெய் போக முழுகினாலும் எழுத்துப் போகத் தேய்ப்பார் உண்டோ?
எண்ணெய் முந்துமோ? திரி முந்துமா?
(எண்ணெய் மிஞ்சுமோ?)
எண்ணெயில் இட்ட அப்பம் போலக் குதிக்கிறான்.
எண்ணெயில் விழுந்த ஈயைப் போல.

எண்ணெயைத் தேய்க்கலாம்; எழுத்தைத் தேய்க்க முடியாது. 5045
(எண்ணெயைத் துடைக்கலாம், எழுத்தை அழிக்க முடியுமா?)

எண்பது அடிக் கம்பத்தில் ஏறி ஆடினாலும் இறங்கி வந்துதான் சம்மானம் வாங்க வேண்டும்!
எண்பது வயசுக்கு மண் பவளம் கட்டிக் கொண்டாளாம்.
எண்பது வேண்டாம்; ஐம்பதும் முப்பதும் கொடு.
எண் மிகுத்தவனே திண் மிகுத்தவன்.
எத்தனை ஏழையானாலும் எலுமிச்சங்காய் அத்தனை பொன் இல்லாமற் போகாது. 5050
(நாவிதன் கூற்று.)

எத்தனை சிரமம் இருந்தாலும் திண்டிக்குச் சிரமம் இல்லை.
எத்தனை தரம் சொன்னாலும் பறங்கி வெற்றிலை தின்னான்.
எத்தனை தரம் துலக்கினாலும் பித்தளை நாற்றம் போகுமா?
(எத்தனை தேய்த்தாலும் போகாது.)

எத்தனை தேய்த்தாலும் பித்தளைக்குத் தன் நாற்றம் இயற்கை.
எத்தனை பாட்டுப் பாடினாலும் எனக்கு நீ அருகதையோ? 5055

எத்தனை பிரியமோ அத்தனை சவுக்கை.
எத்தனை புடம் போட்டாலும் இரும்பு பசும்பொன் ஆகுமா?
எத்தனை பேர் துடுப்புப் போட்டாலும் தோணி போவது சுக்கான் பிடிப்பவன் கையில் இருக்கிறது.
எத்தனைமுறை சொன்னாலும் பறங்கி வெற்றிலை போடமாட்டான்.
(தின்னான்.)

எத்தனை வந்தாலும் மிச்சம் இல்லை. 5060

எத்தனை வித்தை கற்றாலும் செத்தவனைப் பிழைப்பிக்க அறியான்.
எத்தால் உரைத்தாலும் தட்டான் பவுனாக வளர்ந்ததாம் உண்டை.
எத்தால் கெட்டான் என்றால் நோரால் கெட்டான்.
(நோரு-வாய்.)

எத்தால் வாழலாம்? ஒத்தால் வாழலாம்.
(பிழைக்கலாம்.)

எத்திக் கழுத்தை அறுக்கிறதா? 5065

எத்திலே பிள்ளை பெற்று இலவசத்திலே தாலாட்டுவது.
(இரவிலே தாலாட்டுவது.)

எத்துவாரை எத்தி நான் எலி பிடிச்சுக்கிட்டு வாரேன்; கேட்பாரை கேட்டு நாழி கேப்பை வாங்கித் திரி.
(கேப்பை-கேழ்வரகு.)

எத்தூருக்குப் போனாலும் புத்தூருக்குப் போகாதே.
(யாழ்ப்பாண வழக்கு.)

எத்தேச காலமும் வற்றாப் பெருஞ் சமுத்திரம்.
எத்தைக் கண்டு ஏய்த்தான்? துப்பைக் கண்டு ஏய்த்தான். 5070

எத்தைச் சொன்னானோ பரிகாரி, அத்தைக் கேட்பான் நோயாளி.
(பரிகாரி-வைத்தியன். பிணியாளி.)

எத்தைத் தின்றால் பித்தம் தீரும்?
எதற்கும் உருகாதவன் இச்சைக்கு உருகுவான்.
எதற்கு ஜோடிக்க வேணும், இடித்துக் கிழிக்க வேணும்.
எதற்கு தலம் பேசினால் அகப்பைச் சூன்யம் வைப்பேன். 5075

எதார்த்த வாதி வெகுஜன விரோதி.
(பொதுஜன விரோதி. மகாஜன துவேஷி.)

எதிர்த்தவர் மார்புக்கு ஆணியாய் இரு.
எதிர்த்தவன் ஏழை என்றால் கோபம் சண்டாளம்.
எதிர்த்த வீடு ஏகாலி வீடு; அடுத்த வீடு அம்பட்டன் வீடு.
எதிர்த்தும்மல் எடுத்துக் கொடுக்கும். 5080

எதிர் நீச்சம் போடுகிறான்.
எதிர்ப்பாரைச் செயிப்பார் உண்டு.
எதிர் வீட்டுக் கல்யாணமே, ஏன் அழுதாம் கோவணமே?
எதிர் வீடு ஏகாலி வீடு; பக்கத்து வீடு பணி செய்வோன் வீடு; அடுத்த வீடு அம்பட்டன் வீடு.
எதிரி இளப்பமானால் கோபம் சண்டப் பிரசண்டம். 5085

எதிரிக்கு அஞ்சிப் படைக்குப் போகாதவன் நல்ல சேவகன் என்று கூறிக் கொண்டானாம்.
எதிரிக்கு இளக்காரமாய்ச் சொல்லுகிறதா?
(பேசுகிறதா?)

எதிரிக்குச் சகுனத் தடை என்று மூக்கை அறுத்துக் கொள்கிறதா?
எதிரி சுண்டெலி ஆனாலும் எச்சரிக்கையாய் இருக்க வேண்டும்.
எதிரி போட்டு மா இடித்தால் குளுமை நெல்லுக்குச் சேதாரம். 5090

எதிரும் புதிரும் உட்கார்ந்து கொள்ளுதல்.
எது எப்படிப் போனாலும் தன் காரியம் தனக்கு.
எதை அடக்காவிட்டாலும் நாக்கை அடக்க வேண்டும்.
எதை வாரிக் கட்டிக் கொண்டு போகிறது?
எந்த ஆண்டாருக்கு எந்த மடம் சதம்? 5095

எந்த ஆயுதமும் தீட்டத் தீட்டச் சுடர்.
எந்த இலை உதிர்ந்தாலும் ஈச்சம் இலை உதிராது.
எந்தத் தலைமுறையிலோ ஒரு நாத்தனாராம்; அவள் கந்தல் முறத்தை எடுத்துச் சாத்தினாளாம்.
எந்தத் துரை வந்தாலும் தோட்டிக்குப் புல்லுச் சுமை போகாது.
எந்த நாய் எந்தச் செருப்பைக் கடித்தால் என்ன? 5100

எந்த நிலத்து வித்திடினும் காஞ்சிரங்காய் தெங்கு ஆகாது.
எந்தப் புராணத்தில் இல்லாவிட்டாலும் கந்த புராணத்தில் இருக்கும்.
எந்தப் புற்றிலே எந்தப் பாம்பு இருக்குமோ?
எந்தப் பொருளும் கந்த புராணத்திலே.
('புளுகும்' என்பது தவறான பாடம்.)
எந்த மடத்துக்கு எந்த ஆண்டி சதம்? 5105

எந்த மனசும் மைந்தனை வெறுக்குமா?
எந்த வேஷம் வந்தாலும் தீவட்டிக்காரனுக்குக் கேடு.
எந்நேரமும் அவள் பேரில் கண்ணாய் இருக்கிறான்.
எப்படியாவது என் கோயில் வாழ.
எப்பயிர் செய்யினும் நெற்பயிர் செய். 5110

எப்பிறை கோணினாலும் தைப்பிறை கோணலாகாது.
எப்போது பார்த்தாலும் என்ன சண்டை, நாயும் பூனையும் மாதிரி?
எம்மதமும் சம்மதம்.
எமன் ஏறுகிற கிடாவாக இருந்தாலும் உழுது விடுவான்.
எமன் ஒருவனைக் கொல்லும்; ஏற்றம் மூவரைக் கொல்லும். 5115

எமன் கடாவை ஏரில் பூட்டினது போல,
எமன் கையில் அகப்பட்ட உயிர் போல,
எமன் நினைக்கவும் பிள்ளை பிழைக்குமா?

எமன் பிடித்தால் எவன் பிழைப்பான்?
எமன் பிள்ளையைப் பேய் பிடிக்குமா? 5120

எமன் வாயிலிருந்து மீண்டது போல.
(வந்தது போல.)

எமனுக்கு வழி காட்டுவான்.
எமனைப் பலகாரம் பண்ணிச் சுப்பிரமணியனைத் துவையல் அரைத்தாற் போல.
எமனையும் நமனையும் பலகாரம் செய்வான்.
எய்த்து இளைத்த நாய் போல ஓடி வருகிறான். 5125

எய்தவன் இருக்க அம்பை நோகலாமா?
எய்தவன் எய்தால் அம்பு என்ன செய்யும்?
எரிகிற கொள்ளியில் எண்ணெய் வார்க்காதே.
(தீயில் வார்த்தாற் போல்.)

எரிகிற கொள்ளியில் எந்தக் கொள்ளி நல்ல கொள்ளி?
எரிகிற கொள்ளியை ஏறத் தள்ளியது போல. 5130

எரிகிறதைப் பிடுங்கினால் கொதிக்கிறது அடங்கும்.
(இழுத்தால்.)

எரிகிற நெருப்பில் எண்ணெய் வார்த்தாற் போல்.
எரிகிற நெருப்பில் தண்ணீரைக் கொட்டலாமா?
எரிகிற நெருப்பில் எண்ணெய் விட்டு அடக்கலாமா?
(எண்ணெய் ஊற்றியது போல.)
எரிகிற நெருப்புக்குப் பயந்து எண்ணெய்க் கொப்பரையில் விழுந்த மாதிரி. 5135

எரிகிற நெருப்பை ஊதிக் கெடுத்தது போல.
எரிகிற புண்ணில் எண்ணெய் விட்டது போல.
எரிகிற புண்ணில் புளி இட்டது போல.
எரிகிற மூக்கில் திரியைக் கொளுத்தினாற் போல.
எரிகிற விளக்கில் எண்ணெய் விட்ட மாதிரி. 5140

எரிகிற விளக்கு ஆனாலும் தூண்டுகோல் ஒன்று வேண்டும்.
எரிகிற வீட்டில் எண்ணெயை ஊற்றினாற் போல்.
எரிகிற வீட்டில் சுருட்டுக்கு நெருப்புக் கேட்டான்.

எரிகிற வீட்டில் பிடுங்கினது லாபம்.
(எடுத்தது.)
எரிகிற வீட்டை அணைக்கக் கிணறு வெட்ட நாள் பார்த்தது போல. 5145
எரிச்சல் வந்தல்லவோ அடிக்கும்? எழுப்பி விட்டா அடிக்கும்?
எரிந்த பரியில் இழந்த மணியைத் தேடிப் போனாற் போல.
எரிநெருப்பை எண்ணெய் விட்டு அணைக்கலாமா?
எரிப்புக்கு ஆற்றாமல் ஏர் உழப் போகிறேன்; கஞ்சியுடனே சாறு கொண்டு வா என்ற கதை.
எரிப்புக்காரன் பின்னோடு போனாலும் போகலாம்; செருப்புக்காரன் பின்னோடு போகக் கூடாது. 5150

எரியும் உடம்பில் எண்ணெய் வார்த்தாற்போல்.
எரியும் கொள்ளியை ஏறத் தள்ளாதே.
எரு இல்லாப் பயிர் மாடு இல்லாக் கன்று போல.
எரு இல்லா வயல் கன்று இல்லா மாட்டுக்குச் சமம்.
(பயிர்.)
எரு இல்லையேல் மறு பயிரும் இல்லை. 5155

எரு உள்ள காட்டில் மடையனும் பயிர் செய்வான்.
எருக்கம் புதரில் மறைந்து ஆனையை வெருள்விப்பான் போல.
எருக்கிலைக்கு மருக்கொழுந்து வாசனையா?
எருக்குழியின்றி ஏர் பிடியாதே.
எருக்கைச் சொடுக்க வேணும்; ஈச்சைக் கிழிக்க வேணும். 5160

எருக்கை வெட்டி அடித்து ஏரைக் கட்டி உழு.
எருச் செய்கிறது இனத்தான் செய்ய மாட்டான்.
எருதாலம்மாவுக்குக் கல்யாணம்; எரு முட்டைப் பணியாரம்.
எருதில் ஏழை உண்டா?
எருதின் நோய் காக்கை அறியுமா? 5165

எருதின் புண்ணுக்குச் சாம்பல் மருந்து.
எருது இளைத்தால் எல்லாம் இளைக்கும்.
எருது இளைத்தால் காக்கை மச்சான் முறை வைத்துக் கூப்பிடும்.
எருது ஈன்றது என்றால் தோட்டத்திலே கட்டு என்பது போல.
(தொழுவத்திலே-கொட்டகையிலே.)
எருது ஈன்றது என்னுமுன் என்ன கன்று என்றது போல. 5170

எருது உழவுக்குக் காய்கிறது; உண்ணி எதற்குக் காய்கிறது?
எருது உழுகிறதாம்; உண்ணி விடாய்க்கிறதாம்.
(உண்ணிக்கு நாக்கு வாங்குகிறதாம்.)

எருது ஏழை ஆனால் பசு பத்தினித்துவம் கொண்டாடும்.
எருது ஏறாதவரையும் பசு பத்தினி கொண்டாடும்.
எருதுக்குச் சூடு போட்டது போல. 5175
(எருமைக்கு.)

எருதுக்கு நோய் வந்தால் கொட்டகையைச் சுடுகிறதா?
எருதுக்கும் தன் புண் அழற்சி; காக்கைக்கும் தன் பசி அழற்சி.
எருது கூடா விட்டால் பசு பத்தினி விரதம் கொண்டாடும்.
எருது கெட்டார்க்கும் எட்டுக் கடுக்காய்; இளம் பிள்ளைத் தாய்ச்சிக்கும் எட்டுக் கடுக்காய்.

எருது கெடுத்தார்க்கும் ஏழே கடுக்காய்; ஈனாப் பெண்டிர்க்கும் ஏழே கடுக்காய், படை எடுத்த மன்னர்க்கும் ஏழே கடுக்காய். 5180
(இளம் பிள்ளைத் தாய்ச்சிக்கும் ஏழே கடுக்காய். எட்டே கடுக்காய்.)

எருது கொழுத்தால் தொழுவத்தில் இராது; பறையன் கொழுத்தால் பாயில் இருக்க மாட்டான்.
எருது கோபம் கொண்டு பரதேசம் போனது போல.
எருது சுமந்தது; கோணி கொண்டது.
எருது தன் நோயை நினைக்கும்; காக்கை தன் பசியை நினைக்கும்.
எருது நினைத்த இடத்தில் தோழம் கட்டுகிறதா? 5185
(தோழம்-தொழுவம்.)

எருது நினைத்த இடத்தில் புன்செய்க்கு உழுகிறதா?
எருது நினைத்தால் கொட்டகை கட்டுகிறதா?
எருது நோய் உண்ணிக்கு என்ன தெரியும்?
எருது நோய் காக்கைக்குத் தெரியுமா?
(காக்கை அறியுமா?)

எருது நோயை நினைக்கும்; காக்கை பசியை நினைக்கும். 5190

எருது பொதி சுமந்தாற் போல.
எருதும் எருதும் போராட நடுப்புல்லுத் தேய்ந்தாற் போல.
எருதும் வண்டியும் ஒத்தால் மேடு ஏது? பள்ளம் ஏது?
எருது மறைவில் புல்லுத் தின்கிறாயா?
எருப் போட்டவன் காடு விளையுமா? ஏர் உறிஞ்சாக் காடு விளையுமா? என்றாற் போல. 5195

எருப்போட்டு ஏர் இடு.
எருமணம் இல்லாத பயிரும் நறுமணம் இல்லாத மலரும் வீணே.
எருமுட்டைப் போரைப் பேய் அடிக்குமா?
எருமை இருந்தால் அல்லவோ பால் கறக்க வேணும்?
எருமைக்கடா சந்தைக்குப் போச்சாம்; அங்கேயும் கட்டி உழுதானாம். 5200

எருமைக் கடா என்றாலும் குழந்தைக்கு ஒரு பீர் பால் கொடு. என்கிறாய்.
(ஒரு பீர் பால் தா. கொடுக்காதா என்றானாம்.)

எருமைக் கன்று அருமைக் கன்று.
எருமைக் கிழமும் மாப்பிள்ளைக் கிழமும் இல்லை.
எருமைக்குச் சூடு போட்டது போல.
எருமைக்கு வெள்ளாடு ஏத்தக் கறக்குமா? 5205

எருமைக் கொம்பு காய்வதற்கு முன் எட்டுத்தரம் மழை பெய்யும்.
எருமைக் கொம்பு நனைகிறதற்குள்ளே எழுபது தரம் மழை வருகிறது.
(முறை.)

எருமைக் கோமயம் எக்கியத்துக்கு ஆகுமா?
(ஏற்குமா?)

எருமைச் சாணி ஓமத்திற்கு ஆகுமா?
(எக்கியத்திற்கு.)

எருமைப் பிட்டத்திலே விளக்கு வைத்தாற் போல. 5210

எருமை போய் ஏரியிலே விழுந்தால் தவளைத் தானே குதித் தோடும்.
எருமை மாட்டின்மேல் எத்தனை சூடு இருந்தாலும் தெரியாது; பசு மாட்டின்மேல் ஒரு சூடு இருந்தாலும் தெரியும்.
எருமை மாட்டின்மேல் மழை பெய்தது போல.
(எருமைமேல்.)
எருமை மாட்டுப் பிட்டத்தில் விளக்கு வைத்துப் படித்தான்.
எருமை மாட்டைத் தண்ணீரில் போட்டுக் கொண்டு விலை பேசுகிறது. 5215

எருமை மாடு கன்றுக்குட்டி போட்டாற் போல.
(கருத்து; அசுத்தம்.)

எருமை மாடு மூத்திரம் பெய்தாற் போல.

எருமை முட்டைப் புராணம் வாசிக்கிறான்.
(எரு முட்டை.)

எருமை மூத்திரம் லேகியத்திற்கு ஆகுமா?
(எக்கியத்திற்கு.)

எருமையிலும் வெள்ளாடு ஏறக் கறக்குமா? 5220

எருமை வாங்குமுன் ஏன் விலை கூறுகிறாய்?
எருமை வாங்கும்முன் நெய் விலை பேசுகிறதா? பிள்ளை பெறுமுன் பெயர் வைக்கிறதா?
எருமை வாங்கும் முன்னே நெய் விலை கூறுகிறதா?
எருவுக்குப் போனவன் இளையாளைக் கைப்பிடித்தாற் போல.
எருவுக்குப் போனவன் எலுமிச்சம் பழம் எடுத்தது போல. 5225

எருவும் தண்ணீரும் உண்டானால் எந்த நிலமும் விளையும்.
எல்லப்ப செட்டி லக்க ஏக லக்க.
(லக்க-கணக்கு.)

எல்லா ஓட்டும் குல்லாவிலே.

எல்லாத் தாட்டோட்டும் என் குல்லாய்க்குள்ளே.
(எல்லா ஓட்டும்.)

எல்லாம் அதிசயந்தான்; ஆக்குகிறது பூஜ்யந்தான். 5230

எல்லாம் அறிந்தவனும் இல்லை; ஒன்றும் அறியாதவனும் இல்லை.
(ஏதும்.)

எல்லாம் அறிந்தும் கழுநீர்ப் பானையில் கை இடுகிறதா?

எல்லாம் அறியாதவனும் இல்லை; யாதும் அறிந்தவனும் இல்லை.

எல்லாம் இருக்கிறது பெட்டியிலே; இலைக்கறி கடையச் சட்டி இல்லை.
(கீரை கடைய.)

எல்லாம் ஈசன் செயல். 5235

எல்லாம் ஏறி இளைத்த குதிரையின்மேல் தம்பி பொற்பட்டம் கட்டிப் புறப்பட்டான்.

எல்லாம் களத்தின்மேல் விளைவு.

எல்லாம் கிடக்க எருதுக்குச் சீமந்தமாம்.

எல்லாம் கிடக்க எருமை மாட்டுக்கு என்ன?

எல்லாம் கிடக்கக் கிழவனைத் தூக்கி மணையில் வைத்தாளாம். 5240

எல்லாம் சரி என்று எண்ணலாமா?

எல்லாம் செய்து விட்டுக் கழுநீர்ப் பானையில் கையை விட்டான்.

எல்லாம் சொல்லும் பல்லி கழுநீர்ப் பானையில் விழுந்ததாம் துள்ளி.
(காடிப் பானையில்.)

எல்லாம் தபோபலத்தால் கைகூடும்.

எல்லாம் தெரிந்த நாரி, நிமிண்டி ஏற்றடி விளக்கை. 5245
(நிமிர்த்தி.)

எல்லாம் தெரிந்தவர்களுக்குக் கொஞ்சம் தெரியாது.

எல்லாம் தெரியும்; ஒன்றும் தெரியாது.
(ஒன்று.)

எல்லாம் மாயை என்கிறதைக் கண்டேன்.

எல்லா மீனுக்கும் பெரிய மீன் நான்தான்.

எல்லார் தலையிலும் எட்டு எழுத்து; பாவி தலையில் பத்து எழுத்து. 5250

எல்லார் வீட்டுத் தோசையிலும் ஓட்டை.

எல்லாருக்கும் உண்டு இலையும் பழுப்பும்.
(எல்லாவற்றுக்கும்.)

எல்லாருக்கும் ஒவ்வொன்று எளிது.

எல்லாருக்கும் சனி துரும்பு போல; எனக்குச் சனி மலை போல.

எல்லாருக்கும் சொல்லும் பல்லி தான் போய்க் காடிப் பானையில் விழுமாம். 5255

எல்லாருக்கும் புத்தி இருந்தால் புத்தி இல்லாதவன் ஆர்?

எல்லாருக்கும் ஆளின் கீழே நுழைந்தால், இவன் ஆளின் நிழலின் கீழே நுழைவான்.

எல்லாரும் ஆளை மேய்ந்தால், இவன் அவன் நிழலை மேய்ப்பான்.

எல்லாரும் உலர்த்தினார்கள் என்று எலியும் தன் வாலை உலர்த்தியதாம்.

எல்லாரும் உழுதார்களென்று ஈழவனும் உழுதானாம். 5260

எல்லாரும் எல்லாரும் என் தலையில் குட்டுகிறார்; என்னைப் பெற்ற தாயாரும் என் தலையில் குட்டுகிறாள்.

எல்லாரும் என் மண்டையில் பொங்கித் தின்கிறார்கள்.

எல்லாரும் சட்டியைப் போட்டு உடைத்தால் இவன் சிரட்டையைப் போட்டு உடைக்கிறான்.
(சிரட்டை-கொட்டங்கச்சி.)

எல்லாரும் ஏறி இளைத்த குதிரையின் மேல் சாஸ்திரியார் ஏறிச் சரிந்து விழுந்தார்.
எல்லாரும் கப்பல் ஏறி ஆயிற்று; இனி அம்மானார் பொற்பட்டம் கட்டப் போகிறார். 5265

எல்லாரும் கூடி எனக்குக் குல்லாப் போட்டார்கள்.
(நாமம்.)
எல்லாரும் கூடிக் குல்லாவைத் தந்தார்கள்.
எல்லாரும் தடுக்கின் கீழே நுழைந்தால் அவன் கோலத்தின் கீழ் நுழைகிறான்.
எல்லாரும் தேங்காய் உடைத்தால் நான் சிரட்டையாவது உடைக்கலாம்.
எல்லாரும் நல்லவர்கள், சேர்ந்தால் பெரியவர்கள். 5270

எல்லாரும் நல்லாரா? கல் எல்லாம் மாணிக்கமா?
(மனிதர் எல்லாம்.)
எல்லாரும் நெல்லை உலர்த்தினால் எலி வாலை உலர்த்திற்றாம்.
எல்லாரும் ரெட்டியார் ஆனால் பின்னே ஓடுகிறது ஆர்?
எல்லாரும் பல்லக்கு ஏறினால் சுமப்பவர் யார்?
(பல்லக்கை யார் தூக்குவார்கள்.)
எல்லாரும் பாக்கு; இவன் ஒரு தோப்பு. 5275

எல்லாரையும் காக்க ஓர் ஈசன் இருக்கிறான்.
எல்லாரையும் சொல்லி ராஜா குசு விட்டானாம்.
எல்லாவற்றுக்கும் உண்டு இலையும் பழுப்பும்.
எல்லாவற்றுக்கும் ஒரு சொட்டு உண்டு.
எல்லாவற்றுக்கும் ஓர் அழுகை அழுங்கள். 5280

எல்லாவற்றையும் செய்து கழுநீர்ப் பானையில் கைவிட்டது போல
எல்லா வீட்டிற்கும் இரும்பு அடுப்பே ஒழியப் பொன் அடுப்பு இல்லை.
எல்லா வேலையும் செய்வான்; செத்தால் பிழைக்கமாட்டான்.

எல்லி செட்டி லக்க ஏக லக்க.
(லக்க - கணக்கு.)
எல்லை கடந்தால் தொல்லை. 5285

எல்லை சுற்றின பிடாரி மாதிரி.
எல்லை பாழ்பட்டாலும் கொல்லைக் கடமை விடார்.
எலக்ட்ரியை நம்பி இலை போடாதே.
(எலக்ட்ரி-மின்சாரம்.)
எலி அம்மணத்தோடே போகிறது என்கிறான்.
எலி அழுது புலம்பினாலும் பூனை விட்டுவிடுமா? 5290
(பூனை பிடித்து விடாது.)

எலி அறுக்கும்; தூக்க மாட்டாது.
எலி இருக்கிற இடத்தில் பாம்பு இருக்கும்.
எலி எட்டப் பாம்பு குடிகொள்ள.
எலிக்கு அஞ்சிச் சந்நியாசம் போனது போல.
எலிக்கு அஞ்சுவான்; புலிக்கு அஞ்சானாம். 5295

எலிக்கு அநுகூலம் பாம்பு பிடாரனுக்கு அஞ்சுதல்; எளியார்க்கு அநுகூலம் வலியார் அரசனுக்கு அஞ்சுதல்.
எலிக்கு இரணம்; பூனைக்குக் கொண்டாட்டம்.
எலிக்குத் திண்டாட்டம்; பூனைக்குக் கொண்டாட்டம்.
எலிக்குப் பயந்து வீட்டைச் சுட்டது போல.
(வீட்டில் தீ வைத்தது போல. வீட்டைக் கொளுத்தியது போல.)
எலிக்குப் பிராணாவஸ்தை பூனைக்குக் கொண்டாட்டம். 5300

எலிக்குப் பூனை பயப்படுமா?
எலிக்கு மணியம், சுவரை அறுக்கிறது.
எலிக்கு வலி, பூனைக்குக் கொண்டாட்டம்.
எலி கடித்தால் சிறுபாலை அடி.
(செருப்பாலே அடி.)
எலி தலையிலே கோடரி விழுந்தது போல. 5305

எலி தலையிலே கோபுரம் இடிந்து விழுந்தது போல.
எலிப் பகை தொலைக்க, இருந்த வீட்டில் தீயிடல் போல.
எலிப் பாழாக இருந்தாலும் தனிப் பாழாக இருக்க வேண்டும்.
எலிப் புழுக்கை இறப்பில் இருந்தென்ன? வரப்பில் இருந்தென்ன?
எலி பூனைக்குச் சலாம் போடுவது போல. 5310

எலி பூனைய வெல்லுமா?
எலி பெருத்தால் பெருச்சாளி ஆகுமா?
எலியாரைப் பூனையார் வாட்டினால் பூனையாரை நாயார் வாட்டுவார்.
எலியின் சிறங்கை சில தானியத்தால் நிரம்பும்.
(சிறங்கை-சிறு அங்கை.)
எலியும் பூனையும் இணைந்து விளையாடினது போல. 5315

எலியும் பூனையும் போல.
எலியைக் கண்டு பூனை ஏக்கம் அடையுமா?
எலியைக் கண்டு பூனை ஏங்கி ஏங்கிக் கிடக்குமோ?
எலியைத் தவற விட்ட பூனை போல.
எலியோ, பூனையோ சர சர என்கிறது: என்னடி சிறுக்கி பயமுறுத்துகிறாய்? 5320

எலி வளை ஆனாலும் தனி வளை வேண்டும்.
எலி வளையில் பாம்பு குடிபுகுந்தாற் போல.
எலி வீட்டைச் சுற்றுகிறது; விருந்தாளி பெண்டுகளைச் சுற்றுகிறான்.
எலி வீடு கட்டப் பாம்பு குடி கொள்ளும்.
எலி வெட்டிச் சோதிக்கிறாற் போல். 5325

எலி வேட்டை ஆடத் தவில் வேணுமா?
(வேட்டைக்குத் தவில் அடிப்பா?)
எலும்பு இல்லா நாக்கு எல்லாம் பேசும்.
(எல்லாப் பக்கமும் பேசும்; எப்படி வேண்டுமானாலும் பேசும்.)
எலும்பு கடிக்கிற நாய் இரும்பைக் கடிக்குமா?
எலும்பு கடிக்கிற நாய்க்குப் பருப்பும் சோறும் ஏன்?
எலும்பு ருசியை நாய்தான் அறியும்? 5330

எலும்பைக் கடிப்பானேன்? சொந்தப் பல்லும் போவானேன்?
(இருந்த பல்லும்.)
எலும்பைத் தின்று சதையைக் கொடுத்து வளர்த்தான்.
எலுமிச்சங் காய்க்குப் புளிப்பு ஏற்றுகிறது போல.
எலுமிச்சஞ் செடிக்கு எருப் போட்டாற் போல.
எலுமிச்சம் பழம் என்றால் தெரியாதா? இஞ்சி போலக் கசக்கும் என்றானாம். 5335

எவ்வளவு தின்றாலும் நாய் வயிறு ஒட்டித்தான் இருக்கும்.
எவ்வளவு புரண்டாலும் ஒட்டுவது தான் ஒட்டும்.
எவர் வைத்த தீயோ, வீடு வெந்து போயிற்று.
எவன் ஆகிலும் தான் சாக மருந்து உண்பானா?
எவன் பெண்டாட்டி எவனோடு போனாலும் லெப்பைக்கு மூன்று பணம். 5340

எவனோ செத்தான்; அவள் ஏன் அழுதாள்?
எவனோ சொல்வானாம் கதை; அதைப் போல இருக்கிறதே!
எவனோ வைத்தான் தோப்பு; அதை இழுத்தடித்ததாம் காற்று.
எழுத்து அறச் சொன்னாலும் பெண் புத்தி பின்புத்தி.
எழுத்து அறிந்த மன்னன் கிழித்தெறிந்தான் ஓலை. 5345
(எறிவான்.)

எழுத்து அறிந்த வண்ணான் குறித்து எறிந்தான் ஓலை.
(கிழித்து.)

எழுத்து அறியாதவன் ஏட்டைச் சுமந்தது போல.
எழுத்து இல்லாதவன் கழுத்து இல்லாதவன்.
எழுத்து எண்ணிப் படித்தவன்.
எழுத்துக்குப் பால் மாறின கணக்கனும் உடுக்கைக்குப் பால் மாறிய தாசியும் கெடுவர். 5350
(உதட்டுக்குப் பால் மாறிய வருத்தம் அடைவர். செட்டி நாட்டு வழக்கு.)

எழுதத் தெரியாதவன் ஏட்டைக் கெடுத்தான்.
எழுத வழங்காத வாழ்க்கை கழுதை புரண்ட களம்.
எழுத வாசிக்கத் தெரியாமற் போனாலும் எடுத்துக் கவிழ்க்கத் தெரியும்.
எழுதாக் கடனுக்கு அழுதால் தீருமா?
எழுதாத ஓலையும் பீற்றல் முறமும் வந்தது போல். 5355

எழுதி அறான் கணக்குக் கழுதை புரண்ட களம்.
எழுதிய விதி அழுதால் தீருமா?
எழுதி வழங்கான் வாழ்க்கை கழுதை புரண்ட களம்.
எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்; படித்தவன் பாட்டைக் கெடுத்தான்.
எழுதுகிற எழுத்தாணி இரட்டைக் கூர்பட்டாற் போல. 5360

எழுதுகிற எழுத்தாணி குத்துகிறது போல.

எழுதுகிறது பெரிது அல்ல; இனம் அறிந்து சேர்க்கிறது பெரிது.

எழுதுவது அருமை; எழுதினதைப் பழுதற வாசிப்பது அதிலும் அருமை.

எழுந்ததும் தொழு; தொழுததும் படு.

எழுந்தருளும் கோவிலுக்கு விளக்குப் பிடிக்க. 5365

எழுந்திருக்கச் சொன்னவர்கள் என் பாவம் கொண்டவர்கள்.

எழுந்திருக்கப் பால் மாறி இல்லை என்றாளாம் பிச்சை.

எழுந்திருப்பான்; கால் இல்லை.

எழுப்பவோ, துஞ்சு புலியைத் துயில்.
(பழமொழி நானூறு.)

எழுபது சொன்னாலும் பறை ஏவினால்தான் செய்யும். 5370

எழுபது பேரைக் கொன்ற படுநீலி.
(நீலி கதை.)

எள் அத்தனையை மலை அத்தனை ஆக்குகிறது.

எள் உருண்டை போல.
(சிறுமை.)

எள் என்கிறதற்கு முன்னே எண்ணெய் கொண்டு வருவான்.

எள் என்பதற்கு முன்னே எண்ணெய் எங்கே என்கிறான். 5375

எள் ஏன் காயுது? எள் எண்ணெய்க்கு; எலிப் புழுக்கை ஏன் காயுது? கூடக் கிடந்த குற்றத்துக்கு.
(யாழ்ப்பாண வழக்கு)

எள் போட்டால் எள் விழாது.

எள் விதைத்த காட்டில் கொள் முளையாது.

எள் விதைத்தால் துவரை விளையுமா?

எள் விழுந்தால் எடுக்க மகா சேனை; இடறி விழுந்தால் எடுக்க மனிதர் இல்லையே! 5380

எள் விழுந்தால் கீழே விழாது.

எள்ளிலும் சின்ன இலை என்ன இலை? விடத்தாரி இலை.

எள்ளுக்காய் பிளந்த விவகாரம்.

எள்ளுக்காய் பிளந்தாற் போலப் பேச வேண்டும்.

எள்ளுக்காய் முள்ளுத் தெறிப்பது போல. 5385

எள்ளுக்கு ஏழு உழவு உழுகிற வேளை, வேளாளா, கொள்ளுக்கு ஓர் உழவு உழுது பயிர் செய்.
எள்ளுக்கு ஏழு உழவு; கொள்ளுக்கு ஓர் உழவு.
எள்ளுக்குத் தக்க எண்ணெய், எண்ணெய்க்குத் தகுந்த பிண்ணாக்கு.
(எள்ளுக்குத் தக்க பிண்ணாக்கு.)

எள்ளுக்குப் புள்ளு வரும்; எச்சிற்கு எறும்பு வரும்.
எள்ளுக்குள் எண்ணெய் போல. 5390

எள்ளுக்குள் எண்ணெய் எங்கும் நிறைந்திருக்கும்.
(எண்ணெய் போல.)

எள்ளுக் குறுணி; எலி முக்குறுணி.
எள்ளுடன் ஏதோ காய்கிறது என்பார்கள்.
எள்ளுத்தான் எண்ணெய்க்குக் காய்கிறது; எலிப் புழுக்கை எதற்குக் காய்கிறது? கூடக் கிடந்த பாவம்.
எள்ளுத் தின்றால் எள்ளளவு பசி தீரும். 5395
(எள்ளைத் தின்றால்.)

எள்ளுப் பயிரானாலும் நெல்லுப் பயிர் செய்.
எள்ளுப் பயிருக்கு எழுபது நாள்.
எள்ளுப் போட்டால் எள் எடுக்கப் போகாது.
(விழாது.)

எள்ளும் அரிசியும் கலந்தாற் போல.
எள்ளும் கரும்பும் இறுக்கினாற் பலன் தரும். 5400

எள்ளும் கரும்பும் எடுக்கும் பயிராம்.
எள்ளும் கொள்ளும் எழுபது நாள்.
எள்ளும் தண்ணீரும் இறைக்க வேண்டியதுதான்.
எள்ளும் தண்ணீரும் கரத்தில் ஏந்திச் செல்கிறான்.
எள்ளும் தண்ணீரும் விட்டுத் தத்தம் பண்ணினேன். 5405
(முகம் கழுவினேன்.)

எள்ளும் தினையும் எழுபது நாளில் பலன் தரும்.
எள்ளும் பச்சரிசியும் கலந்தாற் போல்.
எள்ளும் பச்சரியும்போல் இருக்க வேண்டும்.
எள்ளு விதைக்க எறங்காடு; கொள்ளு விதைக்கக் கல்லங்காடு.
என்ளுள் எண்ணெய் போல். 5410

எள்ளைத் தின்றான், எனக்கு உழைக்கிறான்.
எள்ளை நீக்கிக் கொண்டு வரப்போன பேய் எண்ணெய் கொண்டு வர இசைந்தது போல.
எள்ளைப் பிய்த்து எழுபது பேருக்குக் கொடுப்பது போல.
(பங்கு வைப்பது போல,)
எளியவன் பிள்ளை ஆனாலும் செய்ய வேண்டிய சடங்கு செய்ய வேண்டும்.
எளியவன் பெண்டாட்டி எல்லாருக்கும் மைத்துனி. 5415

எளியவனாய்ப் பிறந்தாலும் இளையவனாய்ப் பிறக்கக் கூடாது.
எளியவனுக்குப் பெண்டாட்டியாய் இருக்கிறதைவிட வலியவனுக்கு அடிமையாகிறது நலம்.
எளியவனைக் கண்டு புளியங்காய் பறிக்கிறான்,
(அடிக்கிறான்,)
எளியவனைக் கண்டு வாயால் ஏய்க்கிறான்.
எளியாரை எதிரிட்டுக் கொண்டால் பிராண ஹானி. 5420
(கொள்ளலாமா?)

எளியாரை வலியார் அடித்தால் வலியாரை வாசற்படி அடிக்கும்.
எளியாரை வலியார் வாட்டினால் வலியாரைத் தெய்வம் வாட்டும்.
(அடித்தால்.)
எற்று சால் எண்ணாயிரம் பொன்.
(விநாயகர் கணக்குப் பிள்ளையாக வந்து மன்னனிடம் சொன்னது,)
எறிகிறது முயலுக்கு; படுகிறது பற்றைக்கு.
எறிச்ச கறி பழையமுது எந்நாளும் கிடைக்குமா? 5425

எறிந்த கல் விழுகிற மட்டும்.
எறிந்த கல்லைக் கவுளிற் கொண்ட களிறு போல.
எறிவார் கையிலே கல்லைக் கொடுக்கிறதா?
எறிவானேன்? சொறிவானேன்?
எறும்பின் கண் அதன் அளவுக்குப் பெரிது; ஆனையின் கண் அதன் அளவுக்குச் சிறிது. 5430

எறும்பு ஆனை ஆகுமா? துரும்பு தூண் ஆகுமா?
எறும்பு இட்டலியைத் தூக்கியது போல.
எறும்பு ஊர்வது போல.

எறும்பு ஊர இடம் கொடுத்தால் எருதும் பொதியும் உள்ளே
செலுத்துவான்.
எறும்பு ஊரக் கல்லும் தேயும். 5435
(கற்குழியும்.)

எறும்பு ஊரில் பெரும்புயல் வரும்.
எறும்பு எடுத்துப் போவதற்குத் தடி எடுத்து நிற்கிறதா?
எறும்பு எண்ணாயிரம், அப்பாற் கழுதையும் கை கடந்தது
என்றபடி.
(தண்டலையார் சதகம்.)
எறும்பு எண்ணாயிரம் கோடிக்கும் தெரியும்.
எறும்புக் கடிக்கு மருந்தா? 5440

எறும்புக்குக் கொட்டாங்கச்சித் தண்ணீர் சமுத்திரம்.
எறும்புக்குத் தெரியாத கரும்பா?
எறும்புக்குத் தன் மூத்திரமே வெள்ளம்.
எறும்பு கட்டிய புற்றில் பாம்பு குடிபுகுந்தாற் போல.
எறும்பு கடிக்கப் பொறுக்காதா?. 5445

எறும்பு சேர்ப்பது போல எல்லோரும் சேர்க்க வேண்டும்.
எறும்பு தின்றால் எண்ணாயிரம் காலம்.
எறும்பு தின்றால் நூறு வயசு.
எறும்பு நுழைந்த ஆனைக் காது போல.
எறும்பு நுழைய இடம் கொடுத்தால் எருதும் பொதியும் உள்ளே
செலுத்துவான். 5450

எறும்புப் புற்றில் பாம்பு குடி கொள்வது போல.
எறும்பும் தன் கையால் எண் சாண்.
எறும்பு முட்டை கொண்டு திட்டை ஏறின் மழை பெய்யும்.
எறும்பு முதல் ஆனை வரையில்.
என் காரியம் எல்லாம் நந்தன் படை வீடாய்ப் போயிற்று. 5455

என் கிண்டி லட்சம் பொன்.
என் குடி கெட்டதும் உன் குடி கெட்டதும் பொழுது விடிந்தால்
தெரியும்.
என் குடுமி அவன் கையில் அகப்பட்டுக் கொண்டது.
என் கை பூப்பறிக்கப் போகுமா?
என் கையிலே எலும்பு இல்லையா? 5460

என் கை வெல்லம் தின்கிறதா?
என் சீட்டுக் கிழிந்து போனால் அல்லவோ சாவு வரும்?
என் தலைக்கு எண்ணெய் ஊற்று; எருமை மாட்டுக்கும் புல் போடு.
என் தோலைச் செருப்பாய்த் தைத்துப் போடுவேன்.
என் பிழைப்புச் சிரிப்பாய்ச் சிரிக்கிறது தெருவிலே. 5465
(என் பவிஷு, என் பேச்சு.)

என் புத்தியைச் செருப்பால் அடிக்க வேணும்.
என் புருஷனுக்கும் அரண்மனையில் வேலை.
என் பெண் பொல்லாது; உன் பிள்ளையை அடக்கிக் கொள்.
என் பேரில் தப்பு இருந்தால் என்னை மொட்டை அடித்துக் கழுதையின்மேல் ஏற்றிக் கொள்.
என்பைத் தின்று சதையைக் கொடுத்து வளர்ந்தார். 5470
(வளர்த்தாள்.)

என் மகள் வாரத்தோட வாரம் முழுகுவாள்? என் மருமகள் தீவிளிக்குத் தீவிளி முழுகுவாள்.
என் மருமகனுக்கு வேப்பெண்ணெயாம் தூக்கெண்ணெய்; விளக்கெண்ணெயாம் தலைக்கு எண்ணெய்.
என் முகத்தில் கரி தடவாதே.
(சாணி பூசாதே.)

என் முகத்தில் கரி பூசினாயே!
என் முகத்திலே பவிஷு இல்லை; கையிலே பணம் இல்லை. 5475

என் முதுத் தோல் உனக்குச் செருப்பாய் இருக்கிறது.
என் முதுகை நீ சொறிந்தால் உன் முதுகை நான் சொறிவேன்.
என் வயிற்றிலே பாலை வார்த்தாய்.
என் வீட்டுக்குப் பூவாயி வரப் பொன்னும் துரும்பாச்சு.
என் வீட்டுக்கு வந்தால் என்ன கொண்டு வருகிறாய்? உன் வீட்டுக்கு வந்தால் என்ன கொடுக்கிறாய்? 5480

என் வீடும் பாழ்; எதிர்த்த வீடும் பாழ்.
என்று நின்றும் பொன்றுவர் ஒரு நாள்.
என்றும் இடி குலைச்சல் எப்பொழுதும் நீங்குவது இல்லை.
என்றும் காய்க்கும் எலுமிச்சை.

என்றும் பயப்படுவதிலும் எதிரே போதல் உத்தமம்.

என்றைக்கு இருந்தாலும் கிணற்றங்கரைப் பிள்ளையார் கிணற்றிலேதான்.

என்றைக்கு இருந்தாலும் கொங்கல் காற்றோடே, குமுமம் ஆற்றோடே.

என்றைக்கு இருந்தாலும் திருடன் பெண்டாட்டி தாலி அறுக்கத்தான் வேண்டும்.

என்றைக்கு இருந்தாலும் திருமழபாடி ஆற்றோடே.

என்றைக்கும் போடாத லட்சுமி இன்றும் போடவில்லை; தினம் போடுகிற தேவடியாளுக்கு இன்றைக்கு என்ன கேடு வந்தது? 5490

(போடுகிறவளுக்கு.)

என்ன, சின்னமலைக் கவுண்டன் அதிகாரம் போல் இருக்கிறதே!

(சின்னமலைக் கவுண்டன் கொங்குநாட்டில் ஆங்கிலேயரை எதிர்த்தவன்.)

என்ன சொன்னாலும் என் புத்தி போகாது.

என்னடா அப்பா என்றானாம்; எலி அம்மணமாய் ஓடுகிறது என்றானாம்.

என்னடா ஒன்று ஒன்றாகக் குருவி போலப் கொரிக்கிறாய்?

என்னடா. குச்சுக் கட்டிப் பேசுகிறாய். 5495

என்னடா கெட்டுப் போனாய் என்றால், இன்னமும் கெட்டுப் போகிறேன், பந்தயம் போடு என்கிறான்.

என்னடா சவுக்கம் கட்டிப் பேசுகிறாய்?

என்னடா தாதா, புரட்டாசி மாசம் முப்பதும் ஒரு கந்தாயம்.

என்னடா பிரம்ம வித்தையோ?

என்னடி அம்மா தெற்கத்தியாள், எந்நேரம் பார்த்தாலும் தொள்ளைக் காது. 5500

என்னடி பெண்ணே கும்மாளம் என்றால் சின்ன மச்சானுக்குக் கல்யாணம்.

என்ன தின்றாலும் அதற்கு மேல் நாலு பேரீச்சம் பழம் தின்றால் எல்லாம் அடிபடும்.

(செரிக்கும்.)

என்னது இல்லை இரவல், மாமியாரது மரவை.

என்ன பிள்ளை? அணிற் பிள்ளை, தென்னம் பிள்ளை.

என்ன பெருமையடி ஏகாலி என்றால் அழுக்குப் பெருமையடி குருநாதா! 5505
(ஆண்டவனே!)

என்னமாய்ச் சொல்லி இதமாய் உரைத்தாலும் கழுதைக்கு உபதேசம் காதில் ஏறாது.

என்ன மாயம் இடைச்சி மாயம்? மோரோடு தண்ணீர் கலந்த மாயம்.

என்ன விலை ஆனாலும் நாய் நாய்தானே?

என்னவோ சொன்னாளாம் பொம்மனாட்டி; அதைக் கேட்டானாம் கம்மனாட்டி.

என்ன ஜன்மம் வேண்டியிருக்கிறது? நாய் ஜன்மம். 5510

என்னால் ஆகாதது என் குசுவாலா ஆகும்?

என்னால் ஆன உப்புத் திருமஞ்சனம்.

என்னிலும் கதி கெட்டவன் என்னை வந்து மாலையிட்டான்.
(கேடு கெட்டவன்.)

என்னிலும் மேல் இல்லை; என் நெல்லிலும் சாவி இல்லை.

என்னுடைய வீட்டுக்குப் பூவாயி வரப் பொன்னும் துரும்பாச்சு. 5515

என்னை ஆட்டுகிறது, உன்னை ஆட்டுகிறது, மன்னி கழுத்துத் தாலி.

என்னை இடுக்கடி; பாயைச் சுருட்டடி.

என்னை ஏண்டா அடிக்கிறாய்? பிள்ளையாண்டிருக்கிறேன்.

என்னைக் கண்டால் சணலுக்குள்ளே ஒளிக்கிறாய்? என் பெண் சாதியைக் கண்டால் சட்டிக்குள்ளே ஒளிக்கிறாய்.

என்னைக் கலந்தவர்கள் என்றாலும் கைநிறையப் பொன் கொடுத்தால் புணர்ந்து விடுவேன். 5520
(விடுவான்.)

என்னைக் கெடுத்தது நரை. என் மகளைக் கொடுத்து முலை.
(அழகு.)

என்னை நம்பாதே, தாலி வாங்காதே.

என்னைப் பவிஷு ஆற்றுகிறான்.

என்னைப் பார் என் மேனி அழகைப் பார்.

என்னைப் போலக் குரலும் என் அக்காளைப் போல ஒயிலும் இல்லை என்கிறதாம் கழுதை. 5525

என்னையும் பார்த்து இரவல் கேட்கிறதா?

என்னை விடைந்தால் உன்னை விடைவேன்; அம்மலாமா?

எனக்கா கல்யாணம் என்றானாம்.

எனக்கு அஷ்டமத்துச் சனி.

எனக்கு ஊணும் இல்லை; உறக்கமும் இல்லை. 5530

எனக்கு என்று ஒரு பெண்டாட்டி இருந்தால் சடக்கென்று ஓர் அடி அடிக்கலாம்.

எனக்குக் கட்டின லிங்கத்தைக் குழிப்பாக்கு விளையாடுவேன்.

எனக்குக் கொடுக்கிறதைக் கொடுத்தால் போகிறேன்.

எனக்குப் பழையது போடு; உனக்குப் பசியா வரம் தருகிறேன்.

எனக்குப் பாக்குப் பிடிக்கப் பார்க்கிறான். 5535

எனக்கு வேண்டாம் பூசணிக்காய்.

எனது நாட்கள் எல்லாம் ஊமை கண்ட கனாப்போல் ஆயின.

# ஏ

ஏஊரையா என்றால் கேழ்வரகு எட்டுப் படி என்றானாம்.
(ஏ ஊர்-எந்த ஊர். தெலுங்கு.)
ஏகமும் செத்தவனே ஏறடா பாடையிலே.
(கெட்டவனே.)
ஏகாத்தே என்றால் பூகாத்தே என்றாள். 5540

ஏகாதசி என்றைக்கு என்றால் அகமுடையாள் புடைவையைப் பார்த்துச் சொல்கிறேன் என்றாளாம்.
ஏகாதசித் திருடியை ஏற்றடா ரதத்தின்மேல்.
ஏகாதசிக்கு மா இடித்தாற் போல.
ஏகாதசி தோசை; இளையாள்மேல் ஆசை.
ஏகாதசி பாஞ்சோத்; துவாதசி அச்சா ஹை. 5545

ஏகாதசி மரணம் என்று நாக்கைப் பிடுங்கிக் கொண்டானாம்.
ஏகாதசி மரணம், துவாதசி தகனம்.
ஏகாதசி மரணம் முக்தி என்று நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகிறதா?
ஏகாதசியார் வீட்டுக்குச் சிவராத்திரியார் வந்து போன கதை.
ஏகாதசி விரதம் என்று நாக்கைப் பிடுங்கிக் கொள்வார்களா? 5550

ஏகாசி வீட்டில் சிவராத்திரி நுழைந்தாற் போல.
ஏகாலி வாகனம் பொதி சுமந்தாற் போல.
ஏகாக்ஷி லோக நாசினி.
ஏகோதிஷ்டக் காரனுக்குச் சபிண்டிக்காரன் சாட்சி.
ஏச்சிலும் பேச்சிலும் வல்லவனே. 5555

ஏச்சுக்கு ஒன்றும் இல்லை என்றால் எருமைக்காரனுக்கு முட்டியில் சிரங்கு.
ஏட்டிக்குப் போட்டி, எகனைக்கு மொகனை.
ஏட்டிக்குப் போட்டி, ஏணிக்குக் கோணி.

ஏட்டில் அடங்காது, எண்ணத் தொலையாது.
ஏட்டில் சர்க்கரை என்று எழுதி நக்கினால் இனிக்குமா? 5560
(தித்திக்குமா?)

ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவுமா?
(கூட்டுக்கு.)

ஏட்டுச் சுரைக்காயோ, வீட்டுச் சுரைக்காயோ?

ஏடா கூடக்காரனுக்கு இடம் எங்கே என்றால் இருக்கிறவன் தலைமேலே என்பான்.
(வழி எங்கே? போகிறவன் தலைமேலே-)

ஏடாகூடம் எப்படி என்றால் போகின்றவன் தலையில் பொத்தென்று அடித்தான்.

ஏடாகூடம் பேசினால் அகப்பைச் சூனியம் வைப்பேன். 5565

ஏடு அறியாதவன் பீடு பெறாதவன்.
(அறியான், பெறான்.)

ஏடு கிடக்கத் தோடு முடைந்தாளாம்.

ஏடைக்கும் கோடைக்கும் இருந்தால் இழி கண்ணி.

ஏண்டா கருடா சுகமா என்றால், இருக்கிற இடத்தில் இருந்தால் சுகந்தான் என்றான்.

ஏண்டா தம்பி குருநாதா, இதற்குள் வந்து புகுந்து கொண்டாய்? 5570

ஏண்டா தென்ன மரத்தில் ஏறுகிறாய் என்றால் கன்றுக்குட்டிக்குப் புல்பிடுங்க என்றான்; தென்ன மரத்தில் ஏதடா புல் என்றால் அதுதானே கீழே இறங்கி வருகிறேன் என்றான்.

ஏண்டா பட்டப்பகலில் திருடினாய் என்றால் என் அவசரம் உனக்குத் தெரியுமா என்கிறான்.

ஏண்டா புளிய மரத்தில் ஏறினாய் என்றால் புளிய மரத்தில் புல் பறிக்க என்கிறான்.

ஏண்டி கிழவி மஞ்சள் குளிக்கிறாய்? பழைய நினைப்படா பேரா.
ஏணிக் கழிக்குக் கோணற் கழி வெட்டலாமா? 5575

ஏணிக்குக் கோணி.
ஏணிக்குக் கோணியும் ஏட்டிக்குப் போட்டியும்.
ஏணிக் கொம்புக்கு எதிர்க் கொம்பு போடலாமா?

ஏணிக் கொம்புக்குக் கோணற் கொம்பு போடலாமா?
(ஏணிக் கழிக்கு.)

ஏணி, தோணி, வாத்தியார், நாரத்தங்காய். 5580
(அண்ணாவி.)

ஏணியைத் தள்ளிவிட்டுப் பரண்மேல் ஏறலாமா?

ஏணி வைத்தாலும் எட்டாது.

ஏணைக் கழிக்குக் கோணற் கழி வெட்டுகிறதா?

ஏதன் போர்க்கு ஆதனாய் அகப்பட்டாற்போல்.
(தேவாரம்.)

ஏது என்று கேட்பாரும் இல்லை; எடுத்துப் பிடிப்பாரும் இல்லை. 5585

ஏதுக்கு வீணும் சாணும்.

ஏதும் அற்றவனுக்கு எரிமுட்டைப் பாளையம் திருவிழா; போக்கற்றவனுக்குப் பொன்னேரித் திருவிழா.

ஏதும் அற்றவனுக்கு ஏன் இரண்டு பெண்டாட்டி?

ஏதும் இல்லை, எக்காந்தமும் இல்லை; பூநாகம்.

ஏந்தாழை என்றால் கோந்தாழை. 5590

ஏப்பம் பரிபூரணம்; சாப்பாடு பூஜ்யம்.

ஏமாந்த சோணகிரி.

ஏமாந்தால் நாமம் போடுவான்; இணைப்பு ஒட்டவில்லை.

ஏய்த்தால் மதனியை ஏய்ப்பேன்; இல்லாவிட்டால் பரதேசம் போவேன்.
(மேய்த்தால்.)

ஏர் அற்றவன் இரப்பாளி. 5595

ஏர் அற்றுப் போனால் சீர் அற்றுப் போகும்.

ஏர் உழுகிறது; கன்னி கரைகிறது.

ஏர் உழுகிற பிள்ளை இளைத்துப் போனால் போகிறது; பரியம் போட்ட பெண்ணைப் பார்த்து வளர்.

ஏர் உழுகிறவன் இளப்பமானால் எருது மைத்துனன் முறை கொண்டாடும்.
(மச்சான் முறை.)

ஏர் உழுகிறவனுக்கு ஏகாதசி விரதமா? 5600

ஏர் ஓட்டுவதிலும் எரு விடுதல் நன்று.

ஏர் நடந்தால் பேர் நடக்கும்.

ஏர் பிடிக்கிறவனுக்கு இடது கையில் மச்சம்; வாழப் புகுந்தவளுக்கு வலது கையில் மச்சம்.

ஏர் பிடித்தவன் என்ன செய்வான்? பானை பிடித்தவள் பாக்கியம்.

ஏர் பிடித்தவன் முன்னேறினால் செங்கோல் பிடித்தவன் செழிப்பான். 5605

ஏர் பூட்டுவதற்குள் பிராணன் போய்விடும்.

ஏரி உடைகிறதற்கு முன்னே அணை போட வேண்டும்.

ஏரி உடைத்தவள் கம்பளியைப் பிடித்துக் கொண்டால் சரியா?

ஏரி எத்தனை ஆள் கண்டிருக்கும்? ஆள் எத்தனை ஏரி கண்டிருப்பான்.
(பிட்டம்.)

ஏரிக்கு ஏற்ற எச்சக்கலை; குலத்துக்கு ஏற்ற குசவன் குட்டை. 5610

ஏரிக்குப் பயந்து கால் கழுவாமல் ஓடினானாம்.

ஏரிக்கும் மடுவுக்கும் ஏற்ற வித்தியாசம்.

ஏரி நிமிர்ந்தால் இடையனையும் பாராது.
(ஏரி-திமில்.)

ஏரி நிரம்பினால் இடைக்கரை பொசியும்.

ஏரி நிறைந்தால் கரை கசியும். 5615
(நீர் கசியும்.)

ஏரி நீரைக் கட்டுவது அரிது; உடைப்பது எளிது.
(கட்டுதல், உடைத்தல்.)

ஏரி பெருகில் எங்கும் பெருக்கு.

ஏரி மடை என்றால் நோரி மழை.

ஏரி மிதந்தால் குடை அணை மிறியாது.
(மதியாது.)

ஏரி மேலே கோபித்துக் கொண்டு கால் கழுவாமல் போனான். 5620
(போனால் ஏரியா நாறும்.)

ஏரியோடு பகை செய்து ஸ்நானம் செய்யாதிருப்பதா?
(ஏரியை மதியாது.)

ஏரியோ தண்ணீர், சூரிய தேவா.
ஏரை அடித்தேனோ, கூழை அடித்தேனோ?
ஏரை இழந்தார் பேரை இழந்தார்.
(இழந்தாயோ, இழந்தாய்.)

ஏலவே தொலைந்தது எங்களை தொட்ட கர்மம். 5625

ஏலாத நாய்க்கு வால் டேங்குவது போல.
ஏலேல சிங்கன் பொருள் ஏழு கடல் போனாலும் திரும்பும்.
(பணம், எங்கே போனாலும்.)
ஏலேலம்! ஏலேலம்! எருமைச் சாணி காய்கிறது.
ஏவற்பேய் கூரையைப் பிடுங்கும்.
ஏவா மக்கள் மூவா மருந்து. 5630

ஏவுகிறவனுக்கு வாய்ச்சொல்; இயற்றுகிறவனுக்குத் தலைச்சுமை.
(செய்கிறவனுக்கு.)

ஏழரை நாட்டுச் சனியனை இரவல் வாங்கின கதை.
ஏழு அறை கட்டி அதிலே வைத்தாலும் ஓர் அறையில் சோரம் போவாள்.
(உள்ளே வைத்தாலும், தாழறை வழியே சோரம் போவாள்.)

ஏழாம் பொருத்தம்.
ஏழாயிரம் பொன் பெற்ற குதிரை இறப்பைப் பிடுங்கையில், குருட்டுக் குதிரை கோதுமை ரொட்டிக்கு வீங்கினதாம். 5635

ஏழு உழவு உழுதால் எருப் போட வேண்டாம்.
ஏழு உழவுக்கு ஓர் எடுப்புழவு சரி என்பது போல்.
ஏழு ஊர் சுற்றிப் பாழூர் மணத்தட்டை.
ஏழு ஊர் லங்கடா, எருமைக்கடா கர்வு, வீட்டுக்கு ஒரு துடைப்பக் கட்டை, உஷார், உஷார்.
ஏழு ஊருக்கு ஒரு கொல்லன். 5640
(குறுந்தொகை.)

ஏழு ஊருக்கு ஒரு தட்டான்.
ஏழு மடிப்பு உழுத புலமும் ஏழு உலர்த்து உலர்த்தின விதையும் எழுபதுநாள் காய்ச்சல் தாளும்.
ஏழுமலை தாண்டலாம்; ஓர் ஆறு தாண்ட முடியாது.

ஏழு வருஷம் மஞ்சள் பயிர் இட்டால் என் நிறம் ஆக்கிடுவேன் என்று
அது சொல்லும்.
ஏழேழு ஜன்மத்துக்கும் போதும். 5645

ஏழை அழுத கண்ணீர் கூரிய வாள் ஒக்கும்.
ஏழை அடித்தானோ? கூழை அடித்தானோ?
ஏழை என்கிற பிராமணனையும் சாது என்கிற பசுவையும் நம்பாதே.
ஏழை என்றால் எவர்க்கும் எளிது.
ஏழை என்றால் மோழையும் பாயும். 5650

ஏழைக்கு இரங்கி வேளைக்கு உதவு.
ஏழைக்கு ஏற்ற எள்ளுருண்டை; பணக்காரனுக்கு ஏற்ற
பருப்புருண்டை.
ஏழைக் குடித்தனம், ராஜவைத்தியம்.
ஏழைக்குத் தெய்வமே துணை.
(தண்டலையார் சதகம்.)
ஏழைக்கும் மோழைக்கும் இடுதேள் பட்டேனே. 5655

ஏழைக்கும் மோழைக்கும் காடுகாள் அம்மை.
(காடுகாள்-துர்க்கை.)
ஏழைக்கு வாழை.
ஏழைக் குறும்பு.
ஏழை கர்வம் சும்மா இருக்கவிடாது.
ஏழைகளின் செல்வம் பிள்ளைகளே. 5660

ஏழை கூழுக்கு உப்பில்லை என்று ஏங்குகிறான்; பணக்காரன்
பாலுக்குச் சக்கரை இல்லை என்று ஏங்குகிறான்.
ஏழை சொல் அம்பலம் ஏறாது.
ஏழை தலையில் கங்கை குதித்தாற் போல்.
ஏழைப் பிள்ளைக்கு எவர்களும் துணை.
ஏழைப் பிள்ளைக்குத் தெய்வமே துணை. 5665
(இறைவனே.)

ஏழை பாக்குத் தின்ன எட்டு வீடு அறிய வேண்டுமா?
(வேண்டும்.)

ஏழை பேச்சு அம்பலம் பாயுமா?
ஏழையைக் கண்டால் மோழையும் பாயும்.
ஏழை வீட்டில் ஆனையைக் கட்டுவது போல.
ஏழை வீட்டில் சனீசுவரன் புகுந்த மாதிரி. 5670

ஏழை வைத்தான் வாழை; மகளை வைத்தான் காவல்.

ஏளிதம் பேசி இவ்வேடம் ஆனேன்.

ஏற்கனவே கோணல் வாய்; அதிலும் கொட்டாவி விட்டால் எப்படி?

ஏற்கனவே துர்ப்பலம்; அதிலும் கர்ப்பிணி.
(துர்ப்பிணி; துர்க்குணி.)

ஏற்கனவே மாமியார் அலங்கோலம்; அதிலே கொஞ்சம் பேய்க் கோலம். 5675

ஏற்கனவே மாமியார் பேய்க் கோலம்; அதிலும் இப்போது கிழக்கோலம்.
(அழகேலம்.)

ஏற்கனவே மாமியார் பேய்க் கோலம்; அதிலும் கொஞ்சம் அக்கிலி, பிக்கிலி.

ஏற்கனவே மாமியார் பேய்க் கோலம்; அதிலும் கொஞ்சம் மாக்கோலம்.

ஏற்கை வாசனை, சேர்க்கை வாசனை.

ஏற்பது இகழ்ச்சி. 5680

ஏற்றக் கோலுக்குப் பிடித்தால் அரிவாள் பிடிக்கு வரும்.

ஏற்றக் கோலுக்கும் அரிவாள் பிடிக்கும் உள்ள தாரதம்யம்.

ஏற்றத்துக்கு மேல் காத்து நிற்பதை விட இரண்டு சால் தண்ணீருக்குக் கஞ்சி குடிக்கலாம்.

ஏற்றப் பறி நிரம்பினால் சோற்றுப் பானை தானே நிரம்பும்.

ஏற்றப் பாட்டுக்கு எதிர்ப் பாட்டு இல்லை; பூசாரி பாட்டுக்குப் பின்பாட்டு இல்லை. 5685

ஏற்றம் உண்டானால் இறக்கமும் உண்டு.
(வேண்டும்.)

ஏற ஆசைப்பட்டால் சாணாரப் பிறவி வேண்டும்.
(சாணானாய்ப் பிறக்க வேண்டும்.)

ஏற ஒன்று, இறங்க ஒன்று, எனக்கு ஒன்று, உனக்கு ஒன்று, இன்னொன்று இருக்குது தந்தால் தா, தாராவிட்டால் போ.

ஏறச் சொன்னால் எருதுக்குக் கோபம்; இறங்கச் சொன்னால் முடவனுக்குக் கோபம்.
(நொண்டிக்குக் கோபம்.)

ஏறச் சொன்னால் குதிரைக்குக் கோபம்; இறங்கச் சொன்னால் ராவுத்தருக்குக் கோபம். 5690

ஏறப் படாத மரத்திலே எண்ணப் படாத மாங்காயாம்.
(முடியாத, எண்ணாயிரங்காய்.)

ஏறப் பார்க்கும் நாய்; இறங்கப் பார்க்கும் பூனை.

ஏற முடியாத மரத்திலே எண்ணாயிரம் மாங்காய்.

ஏற விட்டு ஏணியை வாங்குகிறதா!
(வாங்கினாற் போல்.)

ஏறாத வார்த்தை வசமாகுமா? 5695

ஏறாத வார்த்தை வசையோடு ஒக்கும்.

ஏறா மடைக்கு நீர் பாய்ச்சுவது போல.

ஏறா மேடும் பாயாத் தண்ணீரும்.

ஏறாலக்கமாய்ப் பேசுகிறாய்.

ஏறி அடுத்து வில் போட்டால் மாறி அடித்து மழை பெய்யும். 5700

ஏறி இருந்த கொம்பை வெட்டுபவனைப்போல.

ஏறி இறங்கும் திருமேனி, எங்கும் கண்ட திருமேனி, தட்டிக் கொட்டும் திருமேனி, வெள்ளை வெளுக்கும் திருமேனி.

ஏறிய கொக்கு என்று இருந்தாயோ கொங்கணவா?

ஏறின வரையும் திருப்பணி; கீழே கிடப்பதுகல்.
(செட்டி நாட்டு வழக்கு.)

ஏறினால் எருதுக்குக் கோபம்; இறங்கினால் நொண்டிக்குக் கோபம். 5705
(மொண்டிக்கு.)

ஏறினால் குற்றம்; இறங்கினால் அபராதம்.
(இறங்கினால் குற்றம்.)

ஏறுகிற குதிரைக்கு எருதே மேல்.

ஏறுகிற குதிரையிலும் உழவு மாடு அதிக உத்தமம்.

ஏறுகிறவன் இடுப்பை எத்தனை தூரம் தாங்கலாம்?
(பிட்டத்தை.)

ஏறு நெற்றி ஆறுதலை எதிர்க்க வந்தால் ஆகாது. 5710

ஏறும் தேமல், இறங்கும் தேமல்.

ஏறும் தேமல், இறங்கும் படர் தாமரை, கூடும் புருவம் குடியைக் கெடுக்கும்.

ஏறும் மடைக்கு நீரைப் பாய்ச்சுவது போல.
(ஏறா மடைக்கு.)

ஏறு மாறாய்ப் பேசுகிறதா?

ஏன் அடா இடறி விழுந்தாய் என்றால் இதுவும் ஒரு கெருடி வித்தை என்றானாம். 5715

ஏன் அடா கருடா சுகமா? இருக்கிற இடத்தில் இருந்தால் சுகம் என்கிறது.

ஏன் அடா கிழவா, இளைத்தாய் குதிர் போல?

ஏன் அடா தம்பி இளைத்தாய் என்றால், இதிலும் துரும்பானாலும் உனக்கு என்ன என்ற கதை.

ஏன் அடா தம்பி, ரகுநாதா, இதற்குள் வந்து புகுந்து கொண்டாய்?

ஏன் அடா தென்ன மரத்தில் ஏறினாய் என்றால், கன்றுக்குட்டிக்குப் புல் பிடுங்க, என்கிறான்; தென்ன மரத்தில புல் ஏதடா என்றால், அதுதானே கீழே இறங்குகிறேன் என்கிறான். 5720

ஏன் அடா பட்டப் பகலில் திருடுகிறாய் என்றால் என் அவசரம் உனக்குத் தெரியுமா என்கிறான்.

ஏன் அடா புளிய மரத்தில் ஏறினாய் என்றால் பூனைக் குட்டிக்குப் புல்பறிக்க என்கிறான்.

ஏன் அடா பையா,இடறி விழுந்தாய் என்றால் இதுதான் ஒரு கெருடி வித்தை என்றானாம்.

ஏன் அடா முடிச்சை அவிழ்க்கிறாய்? என் பசி உனக்குத் தெரியுமா?

ஏன் அடா விழுந்தாய் என்றால், கரணம் போட்டேன் என்றானாம். 5725

ஏன் அடி அக்கா இலையாய்ப் பறக்கிறாய்? எங்கள் வீட்டுக்கு வா, காற்றாய்ப் பறக்கலாம்.

ஏன் அடி சிறுக்கி, புல்லு ஆச்சா? ஒரு நொடிக்குமுன் கட்டு ஆச்சே,

ஏன் அடி பாட்டி, மஞ்சள் குளித்தாய்? பழைய நினைப்படா பேராண்டி.

ஏன் அடி பெண்ணே, இளைத்தாய் குதிர் போலே?

ஏன் அடி பெண்ணே, குந்தியிருக்கிறாய்? சோறு பற்றாமல். 5730
(சோர்ந்திருக்கிறாய்.)

ஏன் அயலானைக் கண்டாளாம்; ஏணிப் பந்தம் பிடித்தாளாம்.

ஏன் உதட்டாண்டே என்றால் ஏன் பல்லாண்டே என்ற கதை.

ஏன் என்பாரும் இல்லை; எடுத்து விழிப்பாரும் இல்லை.
(எடுத்துப் பார்ப்பாரும்.)

ஏன் என்று கேட்பாரும் இல்லை; எடுத்துக் கேட்பாரும் இல்லை.
(பார்ப்பாரும்.)

ஏன் கருடா சுகமா? இருக்கிற இடத்தில் இருந்தால் எல்லாரும் சுகந்தான். 5735
(தண்டலையார் சதகம்.)

ஏன் காணும் தாத்ரே, ஆண்டி புகுந்தீர்? இரவும் ஒரு மண்டலம் பார்த்து விடுவோம்.

ஏன் கொழுக்கட்டை சவுக்கிட்டாய்? ஒருகாசு வெல்லம் இல்லாமல் சவுக்கிட்டேன்.

ஏன் கொழுக்கட்டை நட்டுக் கொண்டாய்? வெல்லம் இல்லாமல் பிட்டுக் கொண்டேன்.

ஏன் பறையா என்கிறதைவிட வள்ளுவப் பறையா என்கிறது மேல்.

ஏன வாயனைக் கண்டானாம்; ஏணிப் பந்தம் பிடித்தானாம். 5740
(கண்டாளாம்; பிடித்தாளாம்.)

ஏனானாம் கோத்திரத்துக்குத் தானானாம் தர்ப்பயாமி.

ஏனோ தானோ எவனோ செத்தான்.

ஏனோ தானோ என்றிருத்தல்.



ஐங்கலக் கப்பியில் நழுவின கப்பி.
ஐங்காதம் போவதற்கு அறிமுகம் தேவை. 5745
(ஐங்காதம் போனாலும் அறிமுகம் வேண்டும்.)

ஐங்காதம் போனாலும் அகப்பை அரைக் காசு.
ஐங்காதம் போனாலும் தன் நிழல் தன்னுடன்தானே வரும்?
ஐங்காதம் போனாலும் தன் பாவம் தன்னோடே.
ஐங்காதம் போனாலும் தன் பாவம் தொலையாது.
ஐங்காயம் இட்டு அரைத்துக் கரைத்தாலும் தன் நாற்றம் போகாதாம் பேய்ச் சுரைக்காய்க்கு. 5750
(தன் காரம்.)

ஐங்காயம் இட்டு அவரைப் பருப்பு இட்டாலும் தன் நாற்றம் போகாது பேய்ச் சுரைக்காய்.
ஐதது நெல்லு; அடர்ந்தது சுற்றம்.
ஐதர்அலி என்றால் அழுத பிள்ளையும் வாய் மூடும்;
ஐதர் காலம்.
ஐந்து சிட்டுக்கு இரண்டு காசு விலை. 5755

ஐந்தும் மூன்றும் எட்டு; அத்தை மகளைக் கட்டு.
ஐந்து வயதில் ஆதியை ஓது.
ஐந்து வருஷம் கொஞ்சி வளர்; பத்து வருஷம் அடித்து வளர்; பதினாறு வருஷம் தலைக்கு மேல் பழகி வளர்.
ஐந்து விரலும் ஐந்து கன்னக்கோல்.
ஐந்து விரலும் ஒன்று போல இருக்குமா? 5760

ஐந்தூரான் புஞ்சை போல.
ஐப்பசி அடை மழை; கார்த்திகை கடு மழை.

ஐப்பசி அழுகல் தூற்றல்.
ஐப்பசி அறக் காய்ந்தால் அண்ணன் இட்ட பயிரும் சரி;
தம்பி இட்ட பயிரும் சரி.
ஐப்பசி அறக் காய்ந்தால் ஆடு ஒரு மாடு; மாடு ஒரு மலை. 5765

ஐப்பசிக்கும் கார்த்திகைக்கும் மழை இல்லா விட்டால்
அண்ணனுக்கும் சரி, தம்பிக்கும் சரி.
ஐப்பசி தலை வெள்ளமும் கார்த்திகை கடை வெள்ளமும் கெடுதி.
ஐப்பசி நட்ட கரும்பு ஆனை வால் ஒத்ததாம்.
ஐப்பசி நெல் விதைத்தால் அவலுக்கும் நெல் ஆகாது.
ஐப்பசிப் பிறை கண்ட வேளாளா, கைப்பிடி நாற்றைக் கண்டு
கரையேறு. 5770
(கைப்பாதி கொண்டு.)

ஐப்பசிப் பனி அத்தனையும் மழை.
(அப்போதே மழை.)
ஐப்பசி மருதாணி அரக்காகப் பற்றும்.
ஐப்பசி மாதத்தில் சம்பா நட்டால் ஆனைக் கொம்பு முளைக்கும்.
ஐப்பசி மாதத்து எருமைக் கடாவும் மார்கழி மாதத்து
நம்பியானும் சரி.
ஐப்பசி மாதத்து நடவும் அறுபது பிராயத்திற் பிள்ளையும். 5775
(பயன் இல்லை.)

ஐப்பசி மாதத்து நாற்றை அருகில் சாத்து.
ஐப்பசி மாதத்து வெயிலில் அன்று உரித்த தோல் அன்றே காயும்.
ஐப்பசி மாதம் அடை மழை.
ஐப்பசி மாதம் அழுகைத் தூற்றல்; கார்த்திகை மாதம்
கனத்த மழை.
(அழுகல் தூற்றல்; அடை மழை.)
ஐப்பசி மாதம் பசு கறக்குமுன் பன்னிரண்டு பாட்டம் மழை. 5780

ஐப்பசி மேல்காற்று அப்போதே மழை.
ஐப்பசி விதைப்பாட்டிற்கு ஐயப்பாடு இல்லை.
ஐப்பசி வெள்ளாமை அரை வெள்ளாமை.
ஐ பை சுரைக்காய பக்கா நெய், வெள்ளைக்காரன் கப்பலிலே
தீயைக் கொளுத்தி வை.
(நாஞ்சில் வழக்கு.)

ஐம்பதாம் பிராயத்திலே கருக்கோலை கட்டிச் சாகிற காலத்தில் பிச்சோலை கட்டினாளாம். 5785
(அருக்கோலை கட்டி.)

ஐம்பதிலே அறிவு; அறுபதிலே அடக்கம்; அதற்கு மேல் ஒன்றும் இல்லை.

ஐம்பதுக்கு மேலே மண் பவழம் கட்டுகிறதா?

ஐம்பது வந்தாலும் அவசரம் கூடாது.

ஐம்பது வயசிலே ஆண்பிள்ளைக்கு மறு மகிழ்ச்சி.

ஐம்பது வயசு ஆனவனுக்கு அஞ்சு வயசுப் பெண்ணா? 5790

ஐம்பது வயசு ஆனவனுக்கு அரிவை ஏன்?

ஐயங்கார் அம்மானையில் சறுக்கினார்.
(ஐயங்கார்-பிள்ளைப் பெருமாள் ஐயங்கார்.)

ஐயங்காரும் தத்துக் கொடுப்பார்.
(தொத்து.)

ஐயங்காரைக் கெடுத்தவள் ஐயங்காரிச்சி, தாதச்சியைக் கெடுத்தவன் தாதன்.

ஐயப்பட்டால் பைய நட. 5795

ஐயப்பன் குதிரையை வையாளி விட்டாற் போல.
(விட்ட கதை.)

ஐயப்பா கையை விடு.

ஐயம் ஆன காரியத்தைச் செய்தல் ஆகாது.

ஐயம் உண்டானால் பயம் உண்டு.

ஐயம் ஏற்றும் அறிவே ஓது. 5800

ஐயம் தீர்ந்தும் நெஞ்சு ஆறவில்லை.

ஐயம்பேட்டைத் துலுக்கன் போல்.
(வலுச்சண்டைக்கு வருவான்.)

ஐயர் இடம் கொடுத்தாலும் அடியார்கள் இடம் கொடார்கள்.

ஐயர் உண்டு தீர்ப்பார்; கர்ணன் கொடுத்து அழிப்பான்.

ஐயர் உருள; அம்மை திரள. 5805

ஐயர் என்பவர் துய்யர் ஆவர்.
ஐயர் கொண்டு வருகிற பிச்சைக்கு அறுபத்தாறு பை.
ஐயர் தின்னும் பருப்பு ஐந்து குடி கெடுக்கும்.
ஐயர் பாதி, அரண்மனை பாதி.
(புதுக்கோட்டையில்.)
ஐயர் வரும்வரை அமாவாசை காத்திருக்குமா? 5810

ஐயருக்கு அரை வார்த்தை சொல்; ஆண்டிக்கு அதுவும் சொல்லாதே.
ஐயன் அமைப்பை ஆராலும் தள்ளக் கூடாது.
ஐயன் அளந்த படி.
ஐயன் பாழியில் ஆனை போர்க்கு உதவுமோ?
ஐயனார் கோயில் ஆனையைப் போல. 5815

ஐயனார் கோயில் செங்கல் அத்தனையும் பிடாரி.
(தெய்வம்.)
ஐயனார் கோயில் மண்ணை மிதித்தவர் அத்தனை பேரும் பத்திர காளி.
(அடிமண்ணை மிதித்தவர், அத்தனை பேரும் பிடாரி.)
ஐயனார் கோயிலிலே ஆனை பிடிக்க வேண்டும்.
ஐயனார் படையில் குயவனார் பட்டது போல.
ஐயனாரே வாரும்; கடாவைக் கொள்ளும். 5820

ஐயா, ஐயா, அம்மா குறைக் கேழ்வரகும் அரைக்க வரச் சொன்னாள்.
ஐயா கதிர் போல; அம்மா குதிர் போல.
ஐயாசாமிக்குக் கல்யாணம்; அவரவர் வீட்டிலே சாப்பாடு.
(ஐயாத்துரைக்கு.)
ஐயா சொல்படி காலைக் கிளப்படி.
ஐயாட்டுக் கிடைக்குச் சமம் தை உழவு. 5825

ஐயாத்துரைக்குக் கல்யாணம்; அவரவர் வீட்டிலே சாப்பாடு; கொட்டு மேளம் கோயிலிலே; வெற்றிலை பாக்குக் கடையிலே; சுண்ணாம்பு சூளையிலே.
(கொட்டு முழக்கு.)

ஐயா தாசி கவனம் பண்ண, அஞ்சாளின் சுமையாச்சு.
ஐயா நாளிலே அம்மா மூடு பல்லக்கு ஏறினாள்.
ஐயா நூற்பது அம்பியின் அரைஞாண் கயிற்றுக்கும் ஆகாது.
ஐயா பாட்டுக்கு அஞ்சடியும் ஆறடியும் தாண்டும். 5830

ஐயாவுக்கு வித்தை இல்லை; அம்மாளுக்குக் கர்வம் இல்லை.
ஐயா வீட்டுக் கூழுக்கு அப்பணையங்காரத் தாதாவா?
ஐயாவைத் தவிர ஆனைதாண்டவ புரத்தார் அத்தனை பேரும் அயோக்கியர்கள்.
ஐயா வையர் கூழுக்கு அப்பையங்கார் தாதாவா?
ஐயைந்தில் பிறந்த பிள்ளையும் தை ஐந்தில் நட்ட நடவும். 5835

ஐயோ என்றால் ஆறு மாசத்துப் பாவம் சுற்றும்.
ஐயோ பாவ மென்றால் கையோடே.
ஐவருக்கும் தேவி, அழியாத பத்தினி.



## கி.வா.ஜ.

இவர் 11.4.1906–ம் ஆண்டு பிறந்தார். தந்தை வாசுதேவ ஐயர். தாயார் பார்வதி அம்மாள். இவர் பள்ளியில் படிக்கும்போதே 'விவேக சிந்தாமணி' பாடல்களை மனப்பாடம் செய்து, அதற்கு அர்த்தம் சொல்லுவார். அந்தப் பருவத்திலேயே இவர் மேலும் சில தமிழ்ப் புத்தகங்களை வாங்கி மனப்பாடம் செய்து விட்டு, தானும் அதேபோல பாடல்களை எழுதி விடுவாராம். இந்த ஆற்றலால் ரெயிலில் போய்வரும் போது கூட ரெயில் ஓட்டத்தின் குதியோசைக்கு ஏற்ப ஏதாவது பாடிக் கொண்டே இருப்பாராம். இவரது கன்னி முயற்சியில் உருவானது. 'போற்றிப் பந்து' என்னும் பதிகம். வடுவூர் துரைசாமி ஐயங்கார் நடத்தி வந்த 'ஒற்றுமை' பத்திரிகையில் அது வெளியானது. 1927–ல் இவர் மகாவித்துவான் உ.வே. சுவாமிநாத ஐயரிடம் மாணாக்கராகச் சேர்ந்தார். 1933–ல் இவர் 'வித்துவான்' பட்டம் பெற்றார். 1949–ல் காஞ்சி மஹா சுவாமிகள் இவருக்கு 'திருமுருகாற்றுப்படை அரசு' என்ற பட்டத்தையும், 1951–ல் 'வாகீச கலாநிதி' என்ற பட்டத்தையும் கொடுத்து கௌரவித்தார். 1982–ம் ஆண்டு ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் நினைவுப் பரிசு இவருக்கு வழங்கப்பட்டது. இலக்கியம் சமயம் ஆகிய இரு துறைகளிலும் உரையாற்றுவதில் வல்லவர், நூற்றுக் கணக்கான தமிழ் நூல்களை எழுதிய இவர் 4.11.1988–ம் ஆண்டு தம் வாழ்வை நிறைவு செய்து கொண்டார்.

# தமிழ்ப் பழமொழிகள்

தொகுதி 2

தொகுத்தவர்
கி. வா. ஜகந்நாதன்



ஜெனரல் பப்ளிஷர்ஸ்

ஜெனரல் பப்ளிஷர்ஸ்

முதற் பதிப்பு – 2001
இரண்டாம் பதிப்பு – 2006



விலை ரூ. 100.00



ஜெனரல் பப்ளிஷர்ஸ்
244, ராமகிருஷ்ண மடம் சாலை,
தபால் பெட்டி நெ. 617,
மயிலாப்பூர், சென்னை–600 004.
தொலைபேசி : 494 1314

Jai Ganesh Offset Printers,
Chennai - 600 004.

# முகவுரை

இந்தப் புத்தகத்தில் ஏறத்தாழ25,000 பழமொழிகள் உள்ளன. இவை கடந்த நாற்பது ஆண்டுகளாக நான் சேகரித்தவை. சொற்பொழிவு செய்யும் பொருட்டு வெளியூர்களுக்குச் சென்ற காலங்களில் அங்கே உள்ள ஆடவர்களிடமும் பெண்மணிகளிடமும் கேட்டுப் பழமொழிகளை எழுதி வந்தேன். பெரும்பாலும் முதிய பெண்மணிகளே பல பழமொழிகளைச் சொன்னார்கள். பழமொழியை முதுமொழி என்றும் வசனம் என்றும் கூறுவர். பழமொழிகள் அடங்கிய பாடல்களைப் பெற்ற நூல்கள் பழமொழி நானூறு, கோவிந்தசதகம், தண்டலையார் சதகம், இரத்தின சபாபதி மாலை, அருணாசல கவி இராம நாடகக் கீர்த்தனை முதலியவை.

இந்தப் பழமொழிகளில் பல்வேறு சாதியினரைக் குறை கூறி உள்ளவை பல உண்டு. அவற்றைக் கண்டு அந்தச் சாதியைச் சேர்ந்த அன்பர்கள் சினம் கொள்ள மாட்டார்கள் என்று நம்பு கிறேன். இழித்துக் கூறுவதில் எந்தச் சாதியினரையும் விட்டு வைக்கவில்லை. பார்ப்பனர்களை இழித்துக் கூறும் பழமொழிகள் பல. அத்தகையவற்றை அப்படி அப்படியே காட்டியுள்ளேன். தமிழ் மக்களுடைய எண்ணம் எவ்வாறு படர்ந்தது என்பதை இவை காட்டுகின்றன.

நாடோடி இலக்கியத்தைச் சார்ந்தவை பழமொழிகள். அறிவு தெரிந்த சிறுவர் முதல் முதுமை உடையவர்கள் வரை யாவரும் தாம் பேசும் பொழுது பழமொழிகளை ஆளுவார்கள். அவரவர் களுடைய அனுபவத்துக்கு ஏற்ற வகையில் அவை இருக்கும். உபநிடதம், இலக்கிய இலக்கணங்கள் ஆகியவற்றைப் பற்றிய பழமொழிகளும் உண்டு. விலங்கினங்கள், பறவைகள், நீர்வாழ் பிராணிகள், ஊர்வன, புழுபூச்சிகள் முதலியவற்றைப் பற்றிய பழமொழிகள் பல. இவற்றை ஆராய்ந்து கட்டுரைகளை எழுதலாம். பல பெரியோர்களுடைய வரலாறுகள் சம்பந்தமான பழமொழிகளும்

உண்டு. கம்பன், ஒட்டக்கூத்தர் முதலிய புலவர்களைப் பற்றிய பழமொழிகள் சில உள்ளன.

சில சில ஊர்களைப் பற்றிய பழமொழிகளும் பல உண்டு. அந்த ஊர்களில் எழுந்தருளியிருக்கும் தெய்வங்களைப் பற்றிய பழமொழிகளும் உள்ளன.

இவ்வாறு பல பல துறைகளில் அமைந்த இந்தப் பழமொழிகள் அறிவைத் தூண்டுகின்றவை.

தமிழ் மக்கள் இந்தப் புத்தகத்தில் உள்ள பழமொழிகளைப் படித்து இன்புறுவார்கள் என்று நம்புகிறேன்.

**கி. வா. ஜகந்நாதன்**

'காந்தமலை'
சென்னை—28
4—5—88

# தொகுதி 2

## ஒ

ஒக்கச் சிரித்தார்க்கு வெட்கம் இல்லை.
(சிரித்தால்.)

ஒக்கப் பிறந்த தங்கை ஓலமிட்டு அழுதாளாம்; ஒப்பாரி தங்கைக்குச் சிற்றாடையாம். 5840

ஒக்கலிலே பிள்ளையை வைத்து ஊரெல்லாம் தேடினாளாம்.
(தேடினாற் போல.)

ஒச்சியம் இல்லாத ஊரிலே பெண் வாங்கின கதை.

ஒட்ட உலர்ந்த ஊமத்தங்காய் போல.

ஒட்டக் கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள்.
(கொட்டைத் தாழ்ப்பாள்.)

ஒட்டகத்தின் முதுகுக்குச் கோணல் ஒன்றா இரண்டா? 5845

ஒட்டகத்துக்கு உடம்பெல்லாம் கோணல்.

ஒட்டகத்துக்குக் கல்யாணம், கழுதை கச்சேரி.

ஒட்டகத்துக்குத் தொட்ட இடம் எல்லாம் கோணல்.

ஒட்டகமே, ஒட்டகமே, உனக்கு எவ்விடத்தில் செவ்வை.

ஒட்டத்து அப்பம் தின்பாரைப் போலே. 5850

ஒட்டப் பார்த்து மட்ட நறுக்கு.

ஒட்டன் கண்டானா லட்டுருண்டை? போயன் கண்டானா பொரியுருண்டை?

ஒட்டன் குச்சி வைத்துப் பெருக்குகிற விளக்குமாறும் அல்ல; வீட்டைப் பெருக்குகிற விளக்குமாறும் அல்ல.

ஒட்டன் சுவருக்குச் சுண்ணாம்பு அடித்தாற் போல.

ஒட்டன் வீட்டு நாய் கட்டில் ஏறித் தூங்கிற்றாம். 5855

ஒட்டன் வீட்டு நாய் கூழுக்குக் காத்த மாதிரி.

ஒட்டன் வீட்டு நாய் திட்டையில் இருந்தாற் போல.

ஒட்டனுக்குத் தெரியுமா லட்டுருண்டை?

ஒட்டாது பாவம்; கிட்டாது சேவை.

ஒட்டி உலர்ந்து ஊமத்தங்காயாய்ப் போய்விட்டான். 5860
(உலர்ந்த.)

ஒட்டிய உடம்பும் ஒடுக்கிட்ட வாழ்நாளும்.

ஒட்டிய சீதேவி நெட்டியோடே போம்.
(சீதாதேவி.)

ஒட்டின பேரைத் தொட்டிலும் கொள்ளும்; ஒட்டாத பேரைக் கட்டிலும் கொள்ளாது.
(ஒட்டினால் கொள்ளும். ஒட்டினாரை.)

ஒட்டினாலும் உழக்குப் பீச்சுகிறதா?
(உழக்குப் பீர் செல்கிறதா?)

ஒட்டுக் கதை கேட்பவர் செவிட்டுப் பாம்பாய்ப் பிறப்பார். 5865
(யாழ்ப்பாண வழக்கு.)

ஒட்டுத் திண்ணை நித்திரைக்குக் கேடு.

ஒட்டுத் திண்ணையில் பட்டுப் பாய் போட்டவன்.

ஒட்டு மூத்திரத்துக்கு ரக்ஷாபந்தனம் செய்தாளாம்; பட்டறைப் பீயைப் பாயோடு பிடித்தாளாம்.

ஒட்டைக்குக் கரும்பு மெத்தக் கசப்பு.

ஒட்டைக்குச் சுளுவு பட்டாற் போல. 5870
(அளவு மீட்டர் போல.)

ஒட்டைக்குப் பளுவு ஏற்றுகிறது போல.

ஒடக்கான் முட்டு வைக்காத காடு.

ஒடிந்த கோல் ஆனாலும் ஊன்று கோல் ஆகும்.
(வேண்டும்.)

ஒடுக்கம் சிதம்பரம்.

ஒடுக்கி ஒடுக்கிச் சொன்னாலும் அடங்குமா? 5875

ஒண்ட வந்த எலி உரம் பெற்றது; அண்டியிருந்த பூனை ஆலாய்ப் பறக்கிறது.

ஒண்ட வந்த பிடாரி ஊர்ப் பிடாரியைத் துரத்தியதாம்.
(ஊர்ப் பிடாரி ஆனதாம்.)

ஒண்டாதே, ஒண்டாதே, ஒரிக்கால் மண்டபமே; அண்டாதே, அண்டாதே ஆயிரங்கால் மண்டபமே என்றாற் போல.

ஒண்டிக்காரன் பிழைப்பும் வண்டிக்காரன் பிழைப்பும் ஒன்று.

ஒண்ணாங் குறையாம் வண்ணான் கழுதைக்கு. 5880

ஒண்ணாந் தேதி சீக்கிருப்பவனும் ஒற்றைக் கடையில் சாமான் வாங்குபவனும் உருப்பட மாட்டான்.
(இலங்கை வழக்கு.)

ஒண்ணுக்குள்ளே ஒண்ணு, எள்ளுக்குள்ளே எண்ணெய்.

ஒண்ணுக்குள்ளே ஒண்ணு, கண்ணுக்குள்ளே மண்ணாகியது.

ஒண்ணே ஒண்ணு, கண்ணே கண்ணு.

ஒண்ணைப் பெற்றாலும் கண்ணைப் பெறு. 5885

ஒண்ணோ, கண்ணோ?

ஒத்த இடத்தில் நித்திரை கொள்.

ஒத்த கணவனும் ஒரு நெல்லும் உண்டானால் சித்திரம் போலக் குடிவாழ்க்கை செய்யலாம்.

ஒத்தான் ஓரகத்தாள் ஒரு முற்றம்; நாத்தனார் நடு முற்றம்.

ஒத்தி வெள்ளம் வருமுன்னே அணை கோலிக்கொள்ள வேண்டும். 5890

ஒத்துக்கு ஏற்ற மத்தளம்.

ஒத்தைக்கு ஒரு பிள்ளை என்றால் புத்தி கூடக் கட்டையாகப் போகுமா?
(ஒத்திக்கு.)

ஒதி பெருத்தால் உரல் ஆகுமா?

ஒதி பெருத்தாலும் உத்தரத்துக்கு ஆகாது.

ஒதி பெருத்து என்ன? உபகாரம் இல்லாதவன் வாழ்ந்து என்ன? 5895
(உதவாதவன்.)

ஒதி பெருத்துத் தூண் ஆமா? ஒட்டாங் கிளிஞ்சில் காசாமோ?

ஒதிய மரமும் ஒரு சமயத்துக்கு உதவும்.

ஒப்புக்குச் சப்பாணி, ஊருக்கு மாங்கொட்டை.

ஒப்புக்கு மாங்கொட்டை, ஊருக்குச் சப்பாணி.

ஒய்யாரக் கொண்டையாம், தாழம் பூவாம், உள்ளே இருக்குமாம் ஈரும் பேனும். 5900

ஒயிலாய்ப் பேசுகிறாள்; ஆனால் கனம் அறிந்த கப்பறையும் அல்ல; கண்டறிந்த நாயும் அல்ல.

ஒரு அச்சிலே உருக்கி வார்த்தாற் போல.

ஒரு அடி அடித்தாலும் பட்டுக் கொள்ளலாம்; ஒரு சொல் மட்டும் கேட்க முடியாது.

ஒரு அப்பம் தின்னாலும் நெய்யப்பம் தின்ன வேணும்.

ஒரு இழவு என்றாள் உள்ளபடி ஆகும். 5905
(ஆகும்.)

ஒரு உறையிலே இரண்டு கத்தியா?

ஒரு ஊர் நட்பு, ஒரு ஊருக்குப் பழிப்பு.

ஒரு ஊரில் இரண்டு பைத்தியக்காரர்களா?

ஒரு ஊருக்கு ஒரு வழியா?

ஒரு ஊருக்கு வழி கேட்க ஒன்பது ஊருக்கு வழி காட்டுகிறான். 5910

ஒரு கட்டு வைக்கோலைத் தண்ணீரில் போட்டு ஒன்பது ஆள் கட்டி இழுத்தாற் போல.
(எட்டு ஆள்.)

ஒரு கண்ணிலே புகுந்து மறு கண்ணிலே புறப்படுகிறான்.
(வருகிறவன்.)

ஒரு கண்ணுக்கு வெண்ணெய்; ஒரு கண்ணுக்குச் சுண்ணாம்பு.
(ஏன்?)

ஒரு கண் மூடி ஒரு கண் விழிக்கிறவன்.
(விழித்தல்.)

ஒரு கம்பத்தில் இரண்டு ஆனையைக் கட்டினாற் போல். 5915
(ஆட்களை.)

ஒரு கரண்டி எண்ணெய் கொண்டு பலகாரம் சுட்டுப் பந்தி விசாரித்து வந்த பெண்டுகள் வாரி முடித்துப் பெண்டுகளால் பிடிமானம் இல்லாமல் புறக்கடை வழியாய்ப் போய் விட்டது.

ஒரு கல்லில் இரண்டு மாங்காய்.

ஒரு கல விதையடி உவட்டை மாற்றிட, ஆறு பல வேப்பம்

ஒரு கவளம் சோற்றுக்கு நாய் பல்லை இளிப்பது போல.
ஒரு கழிச்சலில் உட்கார்ந்து மறு கழிச்சலில் மல்லாந்து போக. 5920

ஒரு காசு அகப்படுகிறது குதிரைக் கொம்பு.
ஒரு காசு என்ற இடத்தில் அழுகிறான்.
ஒரு காசுக்கு மூக்கு அரிந்தால் ஒன்பது காசு கொடுத்தால் ஒட்டுமா?
ஒரு காசுக்கு மோர் வாங்கி ஊரெல்லாம் தானம் பண்ணினாளாம்.
ஒரு காசு கொடாதவன் ஒரு வராகன் கொடுப்பானா? 5925

ஒரு காசு பேணின் இரு காசு தேறும்.
ஒரு காதில் வாங்கி ஒரு காதில் விடுவது.
ஒரு கால் செய்தவன் இரு கால் செய்வான்.
ஒரு கால் பார்த்தால் புஞ்சை; இரு கால் பார்த்தால் நஞ்சை.
ஒரு காலிலே நிற்கிறான். 5930

ஒரு காலை செய்த தச்சன் மறு காலும் செய்வான்.
ஒரு குட்டியும் பெட்டையும் போல.
ஒரு குடம் பாலுக்கு ஒரு துளி பிரை.
ஒரு குடம் பாலுக்கு ஒரு துளி விஷம் போதும்.
ஒரு குண்டிலே கோட்டை பிடிக்கலாமா? 5935
(முடியுமா?)

ஒரு குருவி இரை எடுக்க ஒன்பது குருவி வாய் திறக்க.
(திறக்குமாம்.)
ஒரு குலைத் தேங்காய்.
ஒரு குளப்படி நீரைக் கண்டு திரைகடல் ஏங்குமா?
ஒரு கூடை முடைந்தவன் ஒன்பது கூடை முடைவான்.
(கூடு, கூண்டு.)
ஒரு கூடைக் கல்லும் தெய்வமானால் கும்பிடுகிறது எந்தக் கல்லை? 5940

ஒரு கூடைச் செங்கல்லும் பிடாரி.
ஒரு கூன் சர்க்கரையா ஒத்து வாழ்.
ஒரு கை சத்தம் எழுப்புமா?
ஒரு கை தட்டினால் ஓசை கேட்குமா?

ஒரு கை முழம் போடுமா? 5945

ஒரு கோபம் வந்து கிணற்றில் விழுந்தால் ஆயிரம் சந்தோஷம் வந்தாலும் எழும்பலாமா?

ஒரு கோமுட்டியைக் கழுவில் போட்டதற்கு ஒன்பது கல எள் ஆச்சுதே; ஊர்க் கோமுட்டிகளை எல்லாம் கழுவில் போடு என்றானாம்.

ஒரு சந்திப் பானையை நாய் அறியுமா?

ஒரு சாதிக்கு ஏச்சு; ஒரு சாதிக்குப் பேச்சு.

ஒரு சாண் காட்டிலே ஒருமுழத் தடி வெட்டலாமா? 5950

ஒரு சுருட்டைப் பத்து நாள் பிடிப்பான்.

ஒரு சுற்றுச் சுற்றி வயிற்றைத் தடவிப் பார்த்துக் கொண்டது போல.

ஒரு கூடைச் செங்கலில் அத்தனையும் வேகாத செங்கல்.

ஒரு செடியிலே விளைந்தாற் போல்.

ஒரு செவியில் வார்த்தாற் போல. 5955

ஒருத்தர் போன வழி ஒருத்தர் போகிறது இல்லை.
(ஒருத்தர் போக.)

ஒருத்தன் ஜோலிக்குப் போகவும் மாட்டேன்; என் காலை மிதித்தால் விடவும் மாட்டேன்.

ஒருத்திக்கு ஒரு மகன்.
(திருவிளையாடற் புராணம்.)

ஒரு தட்டில் ஓர் ஆனை; மறுதட்டில் ஆயிரம் பூனை.

ஒரு தம்படி மிச்சப்படுத்தியது ஒரு தம்படி சம்பாதித்தது ஆகுமா? 5960

; தாரம் விழுந்தால் தெரியாதா?

; தலைக்கு இரண்டு ஆக்கினையா?

ற் தலை வழக்கு நூலிலும் செவ்வை.
(செம்மை.)

ஒரு தாய் அற்ற பிள்ளைக்கு ஊர் எல்லாம் தாய்.
(அற்றவருக்கு.)

ஒரு தாய்க்கு ஒரு பிள்ளை. 5965

ஒரு துட்டு ஒரு ரூபாயாய் இருக்கிறது.

ஒரு துரும்பு பழுதை ஆகுமா?
(துரும்பும்.)

ஒரு துஷ்டனுக்கும் ஒரு துஷ்டனுக்கும் ஒரே வழி; ஒரு துஷ்டனுக்கும் ஒரு நல்லவனுக்கும் இரண்டு வழி; இரண்டு நல்லவர்களுக்கு மூன்று வழி.

ஒரு தையல் ஒன்பது தையலைத் தவிர்க்கும்.

ஒரு தொழிலும் இல்லாதவர் நாடகக்காரர் ஆனார். 5970

ஒரு தொழுமாடு முட்டிக் கொள்ளவும் செய்யும்; நக்கிக் கொள்ளவும் செய்யும்.

ஒரு நன்றி செய்தாரை உள்ளளவும் நினை.

ஒரு நாக்கா, இரண்டு நாக்கா?

ஒரு நாய் ஊளையிட ஊர் எல்லாம் நாய் ஊளை.

ஒரு நாய்க்குத் தலை வலித்தால் ஒன்பது நாய்க்குத் தலை வலிக்கும். 5975

ஒரு நாய் குரைத்தால் எல்லா நாயும் குரைக்கும்; ஒரு நாய்க்கு வலித்தால் எல்லா நாய்க்கும் வலிக்கும்.

ஒரு நாய் குரைத்தால் பத்து நாய் பதில் கொடுக்கும்.

ஒரு நாய் வீட்டில் இருந்தால் பத்துப் பேர் காவல் காத்தது போல் ஆகும்.

ஒரு நாள் ஆகிலும் திருநாள்.

ஒரு நாள் ஒரு யுகமாக இருக்கிறது. 5980

ஒரு நாள் கூத்துக்கு மீசையைச் சிரைத்தானாம்.
(தலையைச் சிரைத்தானாம்.)

ஒரு நாள் பஞ்சத்தை உற்றாரிடம் காட்டினாளாம்.

ஒரு நாளும் இல்லாத திருநாள்.

ஒரு நாளும் இல்லாமல் திருநாளுக்குப் போனால் திருநாள் எல்லாம் வெறு நாள் ஆச்சு.

ஒரு நாளும் சிரிக்காதவன் திருநாளிலே சிரித்தான்; திருநாளும் வெறு நாள் ஆச்சு. 59[illegible]

ஒரு நாளும் நான் அறியேன், உள்ளே விளக்கெரிந்து.

ஒரு நாளைக்கு இறக்கிறது கோடி; பிறக்கிறது கோடி.

ஒரு பக்கம் பெய்தால் ஒரு பக்கம் காயும்.

ஒரு பசியும் இல்லை என்பாள்; ஒட்டகத்தையும் விழுங்கி விடுவாள்

ஒரு பணம் இரண்டு பாளை; ஒன்று கள்; ஒன்று நுங்கு. 5990

ஒரு பணம் கொடுத்து அழச் சொல்லி ஒன்பது பணம் கொடுத்து ஓயச் சொன்னது போல.

ஒரு பணம் கொடுப்பானாம்; ஓயாமல் அழைப்பானாம்.

ஒரு பானைச் சோற்றுக்கு ஒருசோறு பதம்.
(ஒன்றே மாதிரி.)

ஒரு பிள்ளை என்று ஊட்டி வளர்த்தாளாம்; அது சொரிமாந்த குணம் பிடித்துச் செத்ததாம்.

ஒரு பிள்ளை பிள்ளை ஆகுமா? ஒரு மரம் தோப்பு ஆகுமா? 5995
(பிள்ளையும் பிள்ளை அல்ல.)

ஒரு பிள்ளை பெற்றவளுக்கு உள்ளங்கையில் சோறு; நாலு பிள்ளை பெற்றவளுக்கு நடுச் சந்தியிலே சோறு.

ஒரு பிள்ளை பெற்றவருக்கு உறியிலே சோறு; நாலு பிள்ளை பெற்றவளுக்கு நடுத்தெருவிலே சோறு.
(ஒரு பெண் பெற்றவளுக்கு, நடுத்தெருவிலே ஓடு.)

ஒரு பிள்ளை பேளவும் ஒரு பிள்ளை நக்கவும்.

ஒரு புடலங்காயை நறுக்கிப் பாதி கறிக்கும் பாதி விதைக்கும் வைத்துக் கொள்ள முடியுமா?

ஒரு புத்திரன் ஆனாலும் குருபுத்திரன் ஆவானா? 6000
(குரு புத்திரன் சிலாக்கியம்; புத்திரன் வாக்கியம்,)

ஒரு பூனை மயிர் ஒடிந்தால் ஒன்பது பிராமணனைக் கொன்ற பாவம்.
(யாழ்ப்பாண வழக்கு.)

ஒரு பெட்டை நாய்க்கு ஒன்பது ஆண் நாயா?

ஒரு பெண் என்று ஊட்டி வளர்த்தாள்; அது ஊர்மேலே போச்சுது.

ஒரு பொய்க்கு ஒன்பது பொய்.

ஒரு பொய்யை மறைக்க ஒன்பது பொய் சொல்ல வேண்டும். 6005

ஒரு பொருள் ஆகிலும் எழுதி அறி.
ஒரு பொழுது சட்டி; அதன்மேல் கவிச்சுச் சட்டி.
ஒரு மயிர் போனாலும் கவரிமான் வாழாது.
ஒரு மரத்துக் கொம்பு ஒரு மரத்தில் ஒட்டாது.
ஒரு மரத்துப் பட்டை ஒரு மரத்திலே ஒட்டுமா? 6010

ஒரு மரத்துப் பழம் ஒரு மரத்தில் ஒட்டுமா?
ஒரு மரத்துப் பழமா ஒருமிக்க?
ஒரு மரத்தை அதன் கனியால் அறியலாம்.
ஒரு மரம் இரண்டு பாளை; ஒன்று நுங்கு; ஒன்று கள்; அறிவுடன் பார்க்கும் போது அதுவும் கள்ளே; இதுவும் கள்ளே.
ஒரு மரம் தோப்பு ஆகுமா? 6015

ஒரு மனப்படு; ஓதுவார்க்கு உதவு.
(ஒருவர்க்கு உதவு.)

ஒரு மிளகுக்கு ஆற்றைக் கட்டி இறைத்த செட்டி.
ஒரு மிளகும் நாலு உப்பும் போதும்.
ஒரு மிளகைப் போட்டு விட்டுப் பொதி மிளகு என்னது என்றாற் போல.
ஒரு முத்தும் கண்டறியாதவனைச் சொரிமுத்துப் பிள்ளை என்றானாம். 6020

ஒரு முருங்கையும் ஓர் எருமையும் உண்டானால் வருகிற விருந்துக்கு மனம் களிக்கச் செய்வேன்.
ஒரு முழுக்காய் முழுகிவிட வேண்டும்.
ஒரு முழுக்கிலே மண் எடுக்க முடியுமா?
(முத்து எடுக்க. எடுக்கிறதா?)
ஒரு முறை செய்தவன் ஒன்பது முறை செய்வான்.
ஒருமைப்பாடு இல்லாத குடி ஒருமிக்கக் கெடும். 6025

ஒரு மொழி அறிந்தவன் ஊமை; பல மொழி அறிந்தவன் பண்டிதன்.
ஒரு ரோமம் போனாலும் கவரிமான் வாழாது.
ஒருவர் அறிந்தால் ரகசியம்; இருவர் அறிந்தால் பரசியம்.
(அகசியம்.)

ஒருவர் கூறை எழுவர் உடுக்க.
ஒருவர் துணியை இருவர் உடுத்தினால் இருவரும் அம்மணமாம். 6030
(நிர்வாணம்.)

ஒருவர் படுக்கலாம்; இருவர் இருக்கலாம்; மூவர் நிற்கலாம்.
(ஆழ்வார்கள் கூற்று).
ஒருவர் பொறை, இருவர் நட்பு.
ஒருவராய்ப் பிறந்தால் நன்மை; இருவராய்ப் பிறந்தால் பகைமை.
ஒருவருக்கு இடுக்கண் வந்தால் அடுக்கடுக்காய் வரும்,
ஒருவருக்கு நிறைவும் குறைவும் ஊழ்வினைப் பயன். 6035

ஒருவரும் அறியாத உச்சித ராமன்.
ஒருவன் அறிந்த ரகசியம் உலகத்தில் பரவும்.
ஒருவன் அறிந்தால் ரகசியம்; இருவர் அறிந்தால் அம்பலம்.
ஒருவன் குழியிலே விழுந்தால் எல்லாரும் கூடி அவன் தலையில் கல்லைப் போடுகிறதா?
(மண்ணை அள்ளிப் போடுகிறதா?)
ஒருவன் செய்த தீமை அவன் காலைச் சுற்றி வேரை அறுக்கும். 6040

ஒருவன் தலையில் மாணிக்கம் இருக்கிறதென்று வெட்டலாமா?
ஒருவன் துணையாக மாட்டான்; ஒரு மரம் தோப்பாக மாட்டாது.
ஒருவனாய்ப் பிறந்தால் தனிமை; இருவராய்ப் பிறந்தால் பகைமை.
ஒருவனாய்ப் பிறப்பது-ஒரு பிறப்பாமா? ஒன்றி மரம் தோப்பாமா?
(பிறப்பா? தோப்பா?)
ஒருவனுக்கு இருவர் துணை. 6045

ஒருவனுக்குத் தாரம்; மற்றவனுக்குத் தாய்.
(ஒருவனுடைய தாரம்.)
ஒருவனேனும் உயிருடன் உளனோ?
ஒருவனை அறிய இருவர் வேண்டும்.
ஒருவனைக் கொன்றவன் உடனே சாவான்; பல பேரைக் கொன்றவன் பட்டம் ஆள்வான்.
ஒரு வார்த்தை வெல்லும்; ஒரு வார்த்தை கொல்லும். 6050

ஒரு விரல் நொடி இடாது.

ஒரு விரல் முடி இடாது.

ஒருவிலே இருந்தாலும் இருக்கலாம்; ஒழுக்கிலே இருக்க முடியாது.

ஒரு விளக்கைக் கொண்டு ஓராயிரம் விளக்கை ஏற்றலாம்.

ஒரு வீடு அடங்கலும் பிடாரி. 6055
(பஜாரி.)

ஒரு வேலைக்கு இரு வேலை.
(புத்தி கெட்டவன் வேலை.)

ஒரு வேலைக்கு இரு வேலை, ஓதி வைத்தார் வாத்தியார்.
(பண்டாரம்.)

ஒரு வேளை உண்போன் யோகி; இருவேளை உண்போன் போகி; மூவேளை உண்போன் ரோகி.

ஒரே காலில் நிற்கிறான்.
(இருக்கிறான்.)

ஒரே துறையில் குளித்த உறவு. 6060

ஒல்லி நாய்க்கு ஒட்டியாணம் வேண்டுமாம்.

ஒலி இருந்த சட்டி, இன்ன சட்டி என்று தெரியாது.

ஒவ்வாக் கட்டிலும் தனிமை அழகு.

ஒவ்வாப் பேச்சு வசையோடு ஒக்கும்.

ஒவ்வொரு நாய்க்கும் அதன் நாள் உண்டு. 6065

ஒவ்வொருவனும் தன் தன் பாட்டைத் தானே அனுபவிக்கவேண்டும்.

ஒவ்வொன்றாய் நூறா? ஒரேயடியாய் நூறா?

ஒழிந்த இடம் பார்க்கிறதா?

ஒழிந்த இடமும் தாவாரமும் தேடுகிறதா?

ஒழுக்கத்தைக் காட்டிலும் உயர்வில்லை. 6070
(பழமொழி நானூறு.)

ஒழுக்கம் உயர் குலத்தில் நன்று.
(உயர்குலம்.)

ஒழுக்கிலே முக்காடா?

ஒழுக்குக்கு வைத்த சட்டி போல.

ஒழுக்குக்கு வீட்டிலே வெள்ளம் வந்தது போல.
(ஒழுக்கு வீட்டிலே.)

ஒழுகாத வீடு உள்ளங்கையத்தனை போதும். 6075

ஒழுகுகிற வீட்டில் ஒன்றுக்கு இருந்தால் வெள்ளத்தோடு வெள்ளம்.

ஒழுங்கு ஒரு பணம்; சளுக்கு முக்காற் பணம்.
(சழுக்கு.)

ஒழுங்கு கணக்கப்பிள்ளை; இடுப்பு இறக்கவில்லை.

ஒள்ளியர் தெள்ளியராயினும் ஊழ்வினை பைய நுழைந்து விடும்.

ஒளி இல்லா விட்டால் இருளையும் இருள் இல்லா விட்டால் ஒளியையும் காணலாம். 6080

ஒளிக்கத் தெரியாமல் விதானையார் வீட்டில் ஒளித்துக் கொண்டானாம்.
(யாழ்ப்பாண வழக்கு.)

ஒளிக்கப் போயும் இடம் இடைஞ்சலா?

ஒளிக்கப் போயும் தலையாரி வீட்டில் ஒளிந்தது போல்.
(வீட்டிலா ஒளிப்பது?)

ஒளிக்கும் சேவகனுக்கு முகத்தில் ஏன் மீசை?

ஒளிகிற சேவகனுக்கு மீசை எதற்கு? 6085

ஒற்றியும் சீதனமும் பற்றி ஆள வேண்டும்.

ஒற்றுமை இல்லாத குடி ஒருமிக்கக் கெடும்.
(குடும்பம். ஒரு சேரக் கெடும்.)

ஒற்றுமையே வலிமை.

ஒற்றை ஆளுக்கு விளையாட்டு இல்லை.

ஒற்றைக் காலில் நிற்கிறான். 6090

ஒற்றைக் காலும் ஓரியுமாய்ச் சம்சாரம் செய்கிறான்.

ஒற்றைப் பாக்கு எடுத்தால் உறவு முறியும்.

ஒன்றரைக் கண்ணன் ஓரைக் கண்ணனைப் பழித்தானாம்.

ஒன்றாம் குறைவு வண்ணான் கழுதைக்கு.

ஒன்றால் ஒன்று குறைவு இல்லை; முன்னாலே கட்டத் துணி இல்லை. 6095

ஒன்றான தெய்வம் உறங்கிக் கிடக்கும் போது பிச்சைக்கு வந்த தெய்வம் ததியோதனத்துக்கு அழுகிறதாம்.

ஒன்றான தெய்வம் ஒதுங்கிக் கிடக்கச்சே, மூலை வீட்டுத் தெய்வம் குங்கிலியம் கேட்குமாம்.
(குங்கிலியத்துக்கு அழுததாம்.)

ஒன்றான தெய்வம் ஒதுங்கிக் கிடக்க ஹனுமந்தராயனுக்குத் தெப்பத் திருநாளாம்.

ஒன்றான தெய்வம் ஒதுங்கி நிற்கிறதாம்; சுற்றுப்பட்ட தெய்வம் ததியோதனத்துக்கு அழுகிறதாம்.

ஒன்றான பிரபு உறங்கிக் கிடக்கையில் பிச்சைக்கு வந்தவன் ததியோதனத்துக்கு அழுகிறானாம். 6100

ஒன்று இருந்தால் இன்னொன்று இல்லை.

ஒன்று ஒன்றாய் நூறோ? ஒருமிக்க நூறோ?

ஒன்றுக்கு இரண்டாம் வாணிபம் இல்லை.

ஒன்றுக்கு இரண்டு; உபத்திரவத்துக்கு மூன்று.

ஒன்றுக்குப் பத்து; உரைக்குப் பதினாறு.

ஒன்றுக்கும் அற்ற தங்காளுக்குக் களாக்காய்ப் புல்லாக்கு. 6105

ஒன்றுக்கும் ஆகாத ஊர்ப்பறை.

ஒன்றுக்கும் ஆகாதவன் உபாத்தியாயன் ஆகட்டும்.

ஒன்றுக்கு வாங்கி எட்டுக்கு விற்றால் லாபம்.

ஒன்று கட்டி விதை; ஒன்று வெட்டி விதை.

ஒன்று குறைந்தது கார்த்திகை; ஒக்கப் பிறந்தது மார்கழி. 6110
(ஒக்கப் பிறந்தது சங்கராந்தி.)

ஒன்று செய்தாலும் உருப்படியாகச் செய்ய வேண்டும்.

ஒன்று தெரிந்தவனுக்கு எல்லாம் தெரியாது.

ஒன்று நினைக்க ஒன்று ஆயிற்று.

ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு.
(பாரதியார்.)

ஒன்றும் அற்ற தங்காளுக்கு ஒன்பது நாள் சடங்கா? 6115

ஒன்றும் அற்ற நாரிக்கு ஒன்பது நாள் சடங்கு; அதுவும் அற்ற நாரிக்கு ஐந்து நாள் சடங்கு.

ஒன்றும் அறியாத கன்னி, அவளைப் பிடித்தது சனி.

ஒன்றும் அறியாளாம் கன்னி; ஓடிப் பிடித்ததாம் ஆறு மாத ஜன்னி. (அவளைப் பிடித்ததாம்.)

ஒன்றும் இல்லாத தங்கைக்கு ஒன்பது நாள் சடங்காம்.

ஒன்றும் இல்லாததற்கு ஒரு பெண்ணையாவது பெற்றாளாம். 6120

ஒன்றும் இல்லாத தாசனுக்கு ஒன்றரைத் தோசை. (ஒன்றரை முழத் தோசை.)

ஒன்றும் இல்லாவிட்டால் அத்தை மகள் இருக்கிறாள்.

ஒன்றும் இல்லை என்று ஊதினான்; அதுதானும் இல்லை என்று கொட்டினான்.

ஒன்றும் தெரியாத சின்னக் கண்ணு, பானை தின்னுவாள் பன்றிக் கறி.

ஒன்றும் தெரியாத பாப்பா, போட்டுக் கொண்டாளாம் தாழ்ப்பாள். 6125

ஒன்றும் தெரியாதவனுக்கு எதிலும் சந்தேகம் இல்லை.

ஒன்றே ஆயினும் நன்றாய் அறி.

ஒன்றே குதிரை; ஒருவனே ராவுத்தன்.

ஒன்றே குலமும்; ஒருவனே தேவனும். (திருமந்திரம்)

ஒன்றே செய்க; இன்றே செய்க; இன்னே செய்க. (கபிலர் அகவல்.) 6130

ஒன்றே செயினும் நன்றே செய்.

ஒன்றே பிறப்பு, ஒன்றே சிறப்பு.

ஒன்றே ராசா, ஒன்றே குதிரை.

ஒன்றைத் தொடினும் நன்றைத் தொடு.

ஒன்றைப் பத்தாக்கு. 6135

ஒன்றைப் பத்தாகவும், பத்தை ஒன்றாகவும் சாதிக்கிறான்.

ஒன்றைப் பிடித்தால் உடனே சாதிக்க வேண்டும்.

ஒன்றைப் பெற்றால் நன்றே பெற வேண்டும்.

ஒன்றைப் பெற்றாலும் கடுகப் பெறு.

ஒன்றைப் பெற்றாலும் கன்றைப் பெறு. 6140

ஓ கெடுவானுக்கு வாழ்க்கைப்பட்டு ஓட்டமே ஒழிய நடை இல்லை.
(ஓ கெடுப்பானுக்கு, ஓ கொடுப்பானுக்கு.)

ஓங்கி அறைந்தால் ஏங்கி அழச் சீவன் இல்லை.

ஓங்கில் அறியும் உயர்கடலின் ஆழம்; பாங்கி அறிவாள் தன் பர்த்தாவின் வலிமை.

ஓங்கின கை நிற்காது.

ஓங்கின கோடரி நிற்காது. 614

ஓங்கு ஒன்று; அடி இரண்டு.

ஓசிக்கு அகப்பட்டால் எனக்கு ஒன்று; எங்கள் அண்ணனுக்கு ஒன்று

ஓசை காட்டிப் பூசை செய்.

ஓசை பெறும் வெண்கலம்; ஓசை பெறாது மண்கலம்.

ஓட்டத்துக்குப் பாக்குப் பிடிக்கிறான். 6150

ஓட்டம் உள்ளவரை ஆட்டமும் அதிகம்.

ஓட்டமும் ஆட்டமும் உடம்புக்கு நல்லது.

ஓட்டி ஓட்டி மிளகு அரைக்கப் பாட்டி வந்தாளாம்; பையனுக்குச் சோறு போடக் குட்டி வந்தாளாம்.

ஓட்டின சீமான் ஓட்டினான்; பழமுள்ள காட்டில் ஓட்டினான்.

ஓட்டுகிறவன் சரியாய் இருந்தால் எருது மச்சான் முறை கொண்டாடாது. 6155

ஓட்டைக் கப்பலுக்கு ஒன்பது மாலுமி.

ஓட்டைக் குடத்திலும் சர்க்கரை நிற்கும்; கருப்பட்டியிலும் கல் இருக்கும்.

ஓட்டைக் குடத்திலேதான் சர்க்கரை இருக்கும்.

ஓட்டைக் கோயிலுக்குச் சர்க்கரை கசக்குமா?
(ஓட்டைக் கோதிலுக்கு.)

ஒட்டைச் சங்கு ஊது பரியாது. 6160
(சங்கால் ஊத முடியாது.)

ஒட்டைச் சட்டி ஆனாலும் கொழுக்கட்டை வெந்தால் சரி.
(வேக உதவும்.)

ஒட்டைத் தோண்டியும் அறுந்து போன தாம்புக் கயிறும் சரி.
(தோண்டிக்கு.)

ஒட்டை நாழிக்குப் பூண் கட்டுவது போல.
(கட்டி ஆவதென்ன?)

ஒட்டைப் பானைச் சர்க்கரை கசக்குமா?

ஒட்டைப் பானையில் உலையிட்டாற் போல். 6165

ஒட்டைப் பானையில் கொழுக்கட்டை வேகுமா?

ஒட்டைப் பானையில் சர்க்கரை இருக்கும்.

ஒட்டைப் பானையில் நண்டை விட்டாற் போல.

ஒட்டைப் பானையில் விட்ட தண்ணீர் போல,

ஒட்டை மணி ஆனாலும் ஓசை நீங்குமா? 6170

ஒட்டை மதகிலே தண்ணீர் போனால் தோட்டிக்கு என்ன வாட்டம்?

ஒட்டை வீட்டிலே மூத்திரம் பெய்தால் ஒழுக்கோடு ஒழுக்கு.

ஓடக்காரனிடம் கோபித்துக் கொண்டு ஆற்றோடு போன மாதிரி.

ஓடம் கட்டின தூலம்.

ஓடம் கடந்தால் ஓடக்காரனுக்கு ஒரு சொட்டு. 6175

ஓடம் கவிழ்த்த பிரமசாரியைப் போல.

ஓடம் வண்டியிலே; வண்டி ஓடத்திலே.
(வண்டிமேலே, ஓடத்து மேலே.)

ஓடம் விட்ட ஆற்றிலும் அடி சுடும்.
(ஆறும்.)

ஓடம் விட்ட ஆறே அடி சுடும் என்பது அறியாயா?

ஓடம் விட்ட இடம் அடி சுடும்; அடி சுட்ட இடத்தில் ஓடப்படும். 6180

ஓடம் விட்டு இறங்கினால் ஓடக்காரனுக்கு ஒரு சொட்டு.

ஓட மாட்டாதவன் திரும்பிப் பார்த்தானாம்.

ஓடமும் ஒருநாள் வண்டியில் ஏறியே ஆக வேண்டும்.

ஓடவும் மாட்டேன்; பிடிக்கவும் மாட்டேன்.
ஓடவும் முடியவில்லை; ஒதுங்கவும் முடியவில்லை. 6185

ஓடி ஆடி உள்ளங்காலும் வெளுத்தது.
ஓடி உழக்கு அரிசி சாப்பிடுவதைவிட உட்கார்ந்து ஆழாக்கு அரிசி சாப்பிடலாம்.
ஓடி ஒரு கோடி தேடுவதிலும் இருந்து ஒரு காசு தேடுவது நலம்.
ஓடி ஒன்பது பணம் சம்பாதிப்பதிலும் உட்கார்ந்து ஒரு பணம் சம்பாதிப்பது மேல்.
ஓடி ஓடி உடையவன் வீட்டில் ஒளிந்தாற் போல். 6190

ஓடி ஓடி உள்ளங்கால் வெளுத்தது.
ஓடி ஓடி நூறு குழி உழுவதைவிட அமர்ந்து அமர்ந்து ஆறு குழி உழுவதே நன்று.
ஓடி ஓடிப் பறந்தாலும் ஓடக்காரன் தாமசம்.
ஓடி ஓடி வேலை செய்தாலும் நாய் உட்காரப் போவதில்லை.
ஓடிப் போகிறவன் பாடிப் போகிறான். 6195
(போனவன்.)

ஓடிப் போன ஊரில் ஆதரித்தவன் கவுண்டன்.
ஓடிப் போன புருஷன் வந்து கூடிக் கொண்டானாம்; உடைமைமேல் உடைமை போட்டு மினுக்கிக் கொண்டாளாம்.
ஓடிப் போன முயல் எல்லாம் ஒரே முயல்.
ஓடிப் போன முயல் பெரிய முயல்.
ஓடிப் போனவனுக்கு ஒன்பதாம் இடத்தில் ராஜா; அகப்பட்டவனுக்கு அஷ்டமத்தில் சனி. 6200
(ராஜா-குரு.)

ஓடிப் போனால் உமிக்காந்தல்; உள்ளே வந்தால் செந்தணல்.
ஓடி மேய்ந்த சிறுக்கிக்கு ஒன்றியிருக்க மனம் வருமா?
ஓடியம் ஆகிலும் ஊடுருவக் கேள்.
ஓடிய முயல் பெரிய முயல் அல்லவோ?
ஓடியும் கிழவிக்குப் பிறகேயா? 6205

ஓடி வந்து உமிக்காந்தலை மிதித்தாளாம்; திரும்பி வந்து தீக்காந்தலை மிதித்தாளாம்.
ஓடி வரும் பூனை; ஆடி வரும் ஆனை.

ஓடி வரும் போது தேடி வருமாம் பொருள்.

ஓடின மாட்டைத் தேடுவாரும் இல்லை; மேய்த்த கூலி கொடுப்பாரும் இல்லை.

ஓடினால் மூச்சு, நின்றால் போச்சு. 6210

ஓடு இருக்கிறது, நான் இருக்கிறேன்.

ஓடுக ஊர் ஓடுமாறு.
(பழமொழி நானூறு.)

ஓடுகள் விதையைக் கேடறக் காக்கும்.

ஓடுகாலிக்கு வீடு மரம்.

ஓடுகாலி வீடு மறந்தாள். 6215

ஓடுகிற ஆறு ஓடிக் கொண்டே இருக்குமா?

ஓடுகிற கழுதையை வாலைப் பிடித்தால் உடனே கொடுக்கும் உதை.
(பலன்.)

ஓடுகிற தண்ணீரை ஓங்கி அடித்தாலும் அது கூடுகிற பக்கம்தான் கூடும்.

ஓடுகிறது பஞ்சையாய் இருந்தாலும் சிமிட்டுவது இரண்டு முழம்.

ஓடுகிற நாய்க்கு ஒரு முழம் விட்டுக் கல் எறி. 6220

ஓடுகிற நாயைக் கண்டால் துரத்துகிற நாய்க்கு எளிது.

ஓடுகிற நீரில் எழுதிய எழுத்தைப் போல.

ஓடுகிற பாம்புக்குக் கால் எண்ணுகிறவன் சாமர்த்தியசாலி.

ஓடுகிற பாம்பைக் கையால் பிடிக்கிற பருவம்.
(வயசு.)

ஓடுகிற பாம்பைக் கையினால் பிடித்து, உண்ணுகிற வாயில் மண்ணைப் போட்டுக் கொள்கிற காலம். 6225

ஓடுகிற பாம்பை மிதிக்கிற பருவம்.
(வயசு.)

ஓடுகிற மாட்டைக் கண்டால் துரத்துகிற மாட்டுக்கு எளிது.

ஓடுகிற மாடு விழுந்து விடும்.

ஓடுகிற முயலுக்கு ஒரு முழம் தள்ளி எறிய வேண்டும்.

ஓடுகிறவனைக் கண்டால் துரத்துகிறவனுக்கு எளிது. 6230
(லேசு, இன்பம்.)

ஓடுகிறவனை விரட்டுகிறது எளிது.
ஓடுகிற வெள்ளம் அணையில் நிற்குமா?
ஓடுபவனும் அம்மணம்; துரத்துகிறவனும் அம்மணம்.
ஓடும் இருக்கிறது; நாடும் இருக்கிறது.
ஓடும் நாயைக் கண்டால் குரைக்கும் நாய்க்கு இளக்காரம். 6235

ஓடோடிப் போனாலும் ஓடக்காரன் தாமசம்.
ஓணத்து மழை நாணத்தைக் கெடுக்கும்.
ஓணான் ஓட்டம் எவ்வளவு தூரம்?
ஓணான் கடித்தால் ஒரு நாழிகையில் சாவு; அரணை கடித்தால் அரை நாழிகையில் சாவு.
ஓணான் தலை அசைத்தால் ஒன்பது கலம் நெல் மசியும். 6240

ஓணான் விழுங்கிய கதை போல.
ஓணான் வேலிக்கு இழுக்கிறது; தவளை தண்ணீருக்கு இழுக்கிறது.
ஓணானுக்கு வேலி சாட்சி; வேலிக்கு ஓணான் சாட்சி.
ஓணானை அடித்தால் உழக்குப் புண்ணியம்.
(ஓணானைக் கொன்றால்.)
ஓதப் பணம் இல்லை; உட்காரப் பாய் இல்லை; உனக்கு என்ன வாய்? 6245

ஓதாதார்க்கு இல்லை உணர்வொடு ஒழுக்கம்.
ஓதின மஞ்சள் உறியிலே இருக்கும் போது வேதனை என்ன செய்யும்?
ஓதும் வேதம் பேதம் அகற்றும்.
ஓதுவார் எல்லாம் உழுவார் தலைக்கடையில்.
(+ உழுவார் எல்லாம் கருமான் தலைக் கடையில்.)
ஓதுவார்க்கு உதவு. 6250

ஓதுவானுக்கு ஊரும் உழுவானுக்கு நிலமும் இல்லையா?
(நிலமுமா கிடையாது?)
ஓந்தி வேலிக்கு இழுக்கிறது; தவளை தண்ணீருக்கு இழுக்கிறது.
ஓநாய்க்கு அதிகாரம் வந்தால் கிடைக்கு இரண்டு ஆடு கேட்கும்.

ஓம் என்ற தோஷம் வயிற்றில் அடைத்தது.
ஓம பிண்டத்தை நாய் இச்சித்தாற் போல். 6255

ஓமல் இட்ட பண்டம் உள்ளே வந்து சேரவில்லை.
ஓமனுக்குப் பிள்ளை அன்றி உறுதிக்குப் பிள்ளை இல்லை.
ஓய்ச்சலும் இல்லை; ஒழிவும் இல்லை.
ஓய்ந்ததடி பனங்காடு; உட்கார்ந்தாளடி சாணாத்தி.
ஓய்ந்ததாம் பானை; உட்கார்ந்தாளாம் சாணாத்தி. 6260

ஓய்ந்த முழுக்கு ஒரே முழுக்கு.
ஓய்ந்த வேளையில் அவிசாரி ஆடினால் உப்புப் புளிக்கு ஆகும்.
ஓய்வு இலா நேசமே, ஓலமே சரணம்.
ஓயாக் கவலை தீரா வியாதி.
ஓயாது சிரிப்பவள் உன்னையே கெடுப்பாள். 6265

ஓயாமல் அழு, நோவாமல் அடிக்கிறேன் என்ற கதை.
ஓயா மழையும் ஒழியாக் காற்றும்.
ஓர் ஆடு நீர் விட்டால் எல்லா ஆடும் நீர் விடும்.
ஓர் ஆடு மேய்த்தவனே என்றாலும் அதுவும் கெட்டவனே என்றானாம்.
ஓர் ஆண்டி பசித்திருக்க உலகமெல்லாம் கிறுகிறு என்று சுழலுகிறது. 6270
(சுற்றுகிறது.)

ஓர் ஆறு தாண்டமாட்டாதவன் ஒன்பது ஆறு தாண்டுவானா?
ஓர் உறையில் இரண்டு கத்தியா?
ஓர் ஊர் நடப்பு; ஒரூர் பழிப்பு.
ஓர் ஊர்ப் பேச்சு ஒரூருக்கு ஏச்சு.
ஓர் ஊருக்கு ஒரு பேர் இட்டுக் கொள்ளலாமா? 6275

ஓர் ஊருக்கு ஒரு வழியா?
ஓர் எருமை, ஒரு முருங்கமரம், கால் காணி இருந்தால் பஞ்சம் போகும்.
(வட ஆர்க்காட்டு வழக்கு.)

ஓர் ஏர்க்காரன் உழுது கெட்டான்; நாலு ஏர்க்காரன் நிறுத்திக் கெட்டான், பத்து ஏர்க்காரன் பார்த்துக் கெட்டான்.

ஓர் ஏரை விரைவில் மறி.

ஓர்ப்படியாள் பிள்ளை பெற்றாள் என்று ஒக்கப் பிள்ளை பெறலாமா? 6280

ஓரக் கண்ணனைப் பழிக்கிறான் ஒன்றரைக் கண்ணன்.
(ஒற்றைக் கண்ணன்.)

ஓரக் கண்ணும் காகக் கண்ணும் ஆகா.

ஓரண்டைக் காடும் காடு அல்ல; ஓரேர் உழவு உழவும் அல்ல.

ஓரம் சொன்னவன் ஆருக்கும் ஆகான்.

ஓரம் வெளுத்து ஒரு பக்கம் செல் அரிக்க. 6285

ஓராம் கண்ணியா, ஒருத்தன் ஆள?

ஓலை டப்பாசு உதறிக் கடாசு.

ஓலைப் பாயில் நாய் மோண்டாற்போல.
(பேண்டாற் போல.)

ஓலைப் பாயில் பேண்ட நாயைப்போல ஏன் சள சள என்கிறாய்?

கக்கரிக்குப் பந்தல், கத்தரிக்குக் கொத்து.
(கொத்துதல்.)
கக்கித் தின்னும் குக்கல்.
(குக்கல்-நாய்.)
கக்கின பிள்ளை தக்கும். 6300

கங்கணம் கட்டிக் கொள்ளுதல்.
கங்கா ஸ்நானம், துங்கா பானம்.
(துங்கா-துங்கபத்திரை.)
கங்கை ஆடப் போன கடாவைக் கட்டி உழுதானாம்.
கங்கை ஆடப் போனவன் கடாவைக் கட்டி அழுதானாம்.
கங்கை ஆடி மங்கை பார். 6305
(மங்கை-திருக்கண்ண மங்கை.)

கங்கைக் கரையில் காராம் பசுவைக் கொன்ற பாவத்தில் போவேனாக.
கங்கைக்கு நிகரான நதியும் இல்லை; காசிக்கு நிகரான பதியும் இல்லை.
கங்கைக்குப் போன கடாவைப் போல.
கங்கைக்குப் போனாலும் கர்மம் தொலையாது.
கங்கையில் ஆடினாலும் கணமும் விடாமல் செய்த பாவம் தீராது. 6310

கங்கையில் ஆடினாலும் கர்மம் தொலையாது.
(முழுகினாலும் செய்த கர்மம்.)
கங்கையில் ஆடினாலும் பாவம் தீராது.
கங்கையில் நீராடுபவன் குட்டையில் முழுக வேணுமோ?
கங்கையில் படர்ந்தாலும் பேய்ச் சுரைக்காய் நல்ல சுரைக்காய் ஆகாது.
(படிந்தாலும் ஆகிவிடுமா?)
கங்கையில் பிறந்த நத்தை சாளக்கிராமம் ஆகாது. 6315

க்கரிக்குப் பந்தல், கத்தரிக்குக் கொத்து.
(கொத்துதல்.)
க்கித் தின்னும் குக்கல்.
(குக்கல்-நாய்.)
க்கின பிள்ளை தக்கும். 6300

ங்கணம் கட்டிக் கொள்ளுதல்.
ங்கா ஸ்நானம், துங்கா பானம்.
(துங்கா-துங்கபத்திரை.)
ங்கை ஆடப் போன கடாவைக் கட்டி உழுதானாம்.
ங்கை ஆடப் போனவன் கடாவைக் கட்டி அழுதானாம்.
ங்கை ஆடி மங்கை பார். 6305
(மங்கை-திருக்கண்ண மங்கை.)

கங்கைக் கரையில் காராம் பசுவைக் கொன்ற பாவத்தில் போவேனாக.
கங்கைக்கு நிகரான நதியும் இல்லை; காசிக்கு நிகரான பதியும் இல்லை.
கங்கைக்குப் போன கடாவைப் போல.
கங்கைக்குப் போனாலும் கர்மம் தொலையாது.
கங்கையில் ஆடினாலும் கணமும் விடாமல் செய்த பாவம் தீராது. 6310

கங்கையில் ஆடினாலும் கர்மம் தொலையாது.
(முழுகினாலும் செய்த கர்மம்.)
கங்கையில் ஆடினாலும் பாவம் தீராது.
கங்கையில் நீராடுபவன் குட்டையில் முழுக வேணுமோ?
கங்கையில் படர்ந்தாலும் பேய்ச் சுரைக்காய் நல்ல சுரைக்காய் ஆகாது.
(படிந்தாலும் ஆகிவிடுமா?)
கங்கையில் பிறந்த நத்தை சாளக்கிராமம் ஆகாது. 6315

கங்கையில் முழுகினாலும் கடன்காரன் விடான்.
கங்கையில் முழுகினாலும் பாவம் போகாது.
கங்கையில் முளைத்தாலும் பேய்ச் சுரைக்காய் நல்ல சுரைக்காய் ஆகாது.
கங்கையில் மூழ்கினாலும் கறுப்புக் காக்கை வெள்ளை ஆகுமா?
கங்கையில் மூழ்கினாலும் காக்கை அன்னம் ஆகுமா? 6320

கச்ச நிலமானாலும் கை சேர்க்கை.
கச்சல் கருவாடு மோட்சத்துக்குப் போனாலும் பிச்சைக்காரன் மோட்சத்துக்குப் போக மாட்டான்.
கச்சான் பெண்களுக்கு மச்சான்.
(மட்டக்களப்பு வழக்கு.) (கச்சான்-ஆனி ஆடி ஆவணியில் வீசும் வறண்ட காற்று.)
கச்சினம் குளப்பாடு கண்டவர்க்கெல்லாம் சாப்பாடு.
(கச்சினம்-திருக்கைச்சினம் என்ற தலம், குளப்பாடு-அதன் அருகில் உள்ள ஊர்.)
கச்சேரிக்கு முன்னே போகாதே; கழுதைக்குப் பின்னே போகாதே. 6325

கசக்கி மோந்து பார்க்கலாமா?
கசடருக்கு இல்லை கற்றோர் உறவு.
கசடருக்கு யோகம் வந்தால் கண்ணும் மண்ணும் தெரியாது; காதும் கேளாது.
கசடான கல்வியிலும் கல்வியீனம் நலம்.
கசடு அறக் கல்லார்க்கு இசை உறல் இல்லை. 6330

கசந்தாலும் பாகற்காய்; காறினாலும் கருணைக் கிழங்கு.
கசந்து வந்தவன் கண்ணைத் துடை.
(கசிந்து வந்தவன்.)
கசாப்புக் கடைக்காரன் தர்ம சாஸ்திரம் பேசுவது போல.
கசாப்புக் கடைக்காரனைக் கண்ட நாய் போல.
கசாப்புக் கடையில் ஈ மொய்த்தது போல. 6335

கசாப்புக் கடையை நாய் காத்த மாதிரி.
கஞ்சனுக்குக் காசு பெரிது; கம்மாளனுக்கு மானம் பெரிது.
(கஞ்சன்-உலோபி.)

கஞ்சனுக்குக் கொள்ளை பஞ்சம் இல்லை.

கஞ்சி ஊற்ற ஆள் இல்லை என்றாலும் கச்சை கட்ட ஆள் உண்டு.

கஞ்சிக் கவலை, கடன்காரர் தொல்லை சொல்லத் தொலையுமோ? 6340

கஞ்சிக்குக் காணம் கொண்டாட்டம்.
(காணம்-கொள்ளுத் துவையல்.)

கஞ்சிக்குப் பயறு போட்டாற் போல.
(கலந்தாற்போல. கொஞ்சமாகப் போடுவார்.)

கஞ்சிக்கு லாட்டரி, கைக்குப் பாட்டரியா?

கஞ்சி கண்ட இடம் கைலாசம்; சோறு கண்ட இடம் சொர்க்கம்.

கஞ்சி காமாட்சி, மதுரை மீனாட்சி, காசி விசாலாட்சி. 6345

கஞ்சி குடித்தது கழுக்காணி; கூழ் குடித்தது குந்தாணி.

கஞ்சி குடித்த மலையாளி சோற்றைக் கண்டால் விடுவானா?
(நாஞ்சில் நாட்டு வழக்கு.)

கஞ்சி குடித்தாலும் கடன் இல்லாமல் குடிக்க வேணும்.

கஞ்சித் தண்ணீருக்குக் காற்றாய்ப் பறக்கிறான்.

கஞ்சியைக் காலில் கொட்டிக் கொள்ளும் அவசரம். 6350

கஞ்சி வரதப்பா என்றால் எங்கே வரதப்பா என்றானாம்.

கஞ்சி வார்க்க ஆள் இல்லாமல் போனாலும் கச்சை கட்ட ஆள் இருக்கிறது.

கட்கத்தில் நிமிண்டுகிற கை நமன் கை.
(அல்லவா?)

கட்கத்தில் வைப்பார்; கருத்தில் வையார்.

கட்டக் கருகுமணி இல்லாமற் போனாலும் பேர் என்னவோ பொன்னம்மாள். 6355
(கரி மணி, பொன்னம்பலம், முத்து மாலை.)

கட்டச் சங்கிலி வாங்கியாகிவிட்டது; ஆனைதான் பாக்கி.

கட்டத் துணி இல்லை; கூத்தியார் இரண்டு பேர்.

கட்டத் துணியும் இல்லை; நக்கத் தவிடும் இல்லை.

கட்டப்பாரை பறக்கச்சே எச்சிற்கலை எனக்கு என்னகதி என்கிறதாம்.

கட்டப்பாறையை விழுங்கிவிட்டுச் சுக்குக் கஷாயம் குடிப்பதா? 6360

கட்டப்பாலை முற்றப் பழுக்குமோ?

கட்டாணித் தனமாய்க் கல்யாணம் செய்தான்.

கட்டாந்தரை அட்டை போல.

கட்டாந்தரை அட்டை போலக் கட்டிக்கொண்டு புரளுகிறதா? (இராம நாடகம்.)

கட்டாந்தரையில் தேள் கொட்டக் குட்டிச்சுவரில் நெறி கட்டினதாம். 6365

கட்டாந்தரையில் முக்குளிக்கிறது.

கட்டி அடித்தால் என்ன? விட்டு அடித்தால் என்ன?

கட்டி அழுகிற போது கையும் துழாவுகிறதே! (துழாவுமாம்.)

கட்டி அழுகையிலே, என்மகளே, உனக்குப் பெட்டியிலே கை என்ன?

கட்டி இடமானால் வெட்டி அரசாளலாம். 6370

கட்டிக் கறக்கிற மாட்டைக் கட்டிக் கறக்க வேண்டும்; கொட்டிக் கறக்கிற மாட்டைக் கொட்டிக் கறக்க வேண்டும்.

கட்டிக் கிடந்தால்தான் உள் காய்ச்சல் தெரியும்.

கட்டிக் கொடுத்த சோறும் கற்றுக் கொடுத்த வார்த்தையும் எவ்வளவு நாளைக்கு? (சொல்லிக் கொடுத்த. நாளைக்குச் செல்லும்.)

கட்டிடம் கட்டச் சங்கீதம் பாடு.

கட்டிடம் கட்டியவன் முட்டாள்; வாழுகிறவன் சமர்த்தன். 6375

கட்டித் தங்கம் ஆனால் கலீர் என்று ஒலிக்குமா? (கல என்று.)

கட்டிப் படுத்தால் அல்லவோ உட்காய்ச்சல் தெரியும்?

கட்டிப் பீ எல்லாம் கூழ்ப் பீயாய்க் கரைந்தது.

கட்டிப் பீ எல்லாம் தண்ணீர்ப் பீ ஆச்சுது.

கட்டிமகள் பேச்சு, கல்லுக்குக்கல் அண்டை கொடுத்தது போல். 6380

கட்டிய கட்டிலிருந்து கின்னரி வாசிக்கிறது போல.

கட்டில் உள்ள இடத்தில் பிள்ளை பெற்று சுக்குக் கண்ட இடத்தில் காயம் தின்பாள்.
(கஷாயம் குடிப்பாள்.)

கட்டிலின்மேல் ஏறியும் முறைபார்க்கிறது உண்டா?
(முறையா?)

கட்டிலைத் திருப்பிப் போட்டால் தலைவலி போகுமா?
(போகும்.)

கட்டி வழி விட்டால் வெட்டி அரசாளலாம். 6385

கட்டி விதை, வெட்டி விதை.

கட்டி வைத்த பணத்தைத் தட்டிப் பறித்தாற் போல.

கட்டி வைத்த பூனையை அவிழ்த்துவிட்டு, வாபூஸ் வாபூஸ் என்றால் வருமா?

கட்டிவைத்த முதல் அழியக் கச்சவடம் பண்ணாதே.
(கச்சவடம்-வியாபாரம். குமரி வழக்கு.)

கட்டின கோவணத்தைக் காற்றில் விட்டவன். 6390

கட்டின பசுப் போல்.

கட்டின பெண்சாதி இருக்கக் காத்தாயியைக் கண் அடித்தானாம்.

கட்டின பெண்டாட்டி பட்டி மாடு மாதிரி.

கட்டின பெண்டாட்டியையும் உடுத்தின துணியையும் நம்பாதவன்.

கட்டின மாட்டை அவிழ்ப்பாரும் இல்லை; மேய்த்த கூலியைக் கொடுப்பாரும் இல்லை. 6395

கட்டினவனுக்கு ஒரு வீடு; கட்டாதவனுக்கு ஆயிரம் வீடு.
(பல வீடு.)

கட்டினவனுக்கு ஒரு வீடு; கட்டாதவனுக்கு ஊரெல்லாம் வீடு.

கட்டின விதை வெட்டின விதை.

கட்டின வீட்டுக்கு எட்டு வக்கணை.

கட்டின வீட்டுக்குக் கருத்துக் கருத்துச் சொல்லுவார். 6400
(வாய்க்குச் சுளுவு.)

கட்டின வீட்டுக்குப் பணிக்கை சொல்லாதவர் இல்லை.

கட்டின வீட்டுக்குப் பழுது சொல்வது எளிது.
(வக்கணை சொல்வார் பலர்.)

கட்டினான் தாலி; காட்டினாள் கோலம்.

கட்டு அறிந்த நாயும் அல்ல; கனம் அறிந்த கப்பரையும் அல்ல.

கட்டுக் கட்டு விளக்குமாறு கப்பலிலே வருகிறது என்றால் ஒரு காசு விளக்குமாறு இரண்டு காசு. 6405

கட்டுக் கலம் காணும்; கதிர் உழக்கு நெல் காணும்.
(முக்கலம்.)

கட்டுக் காடை இடமானால் குட்டிச் சுவரும் பொன் ஆகும்.

கட்டுக்கு அடங்காக் காளை போல.

கட்டுக்கு அடங்காப் பிடாரியைப் போல.

கட்டுக்குக் கட்டு மாற்றிக் கட்ட வேண்டும். 6410

கட்டுக் குலைந்தால் கனம் குலையும்.

கட்டுச் சோற்று மூட்டையில் எலியை வைத்துக் கட்டினது போல.
(கட்டுச் சாதத்தில்.)

கட்டுச் சோற்று மூட்டையில் பெருச்சாளியை வைத்துக் கட்டின மாதிரி.

கட்டுச் சோற்று மூட்டையையும் கைக்குழந்தையையும் எடுக்கல் ஆகாது.
(கைப் பிள்ளையையும்.)

கட்டுச் சோறு எத்தனை நாளைக்கு? 6415

கட்டுத் தறியை விட்டு மேய்ச்சற் காட்டில் பிடிப்பது.

கட்டுத் துறை சரியாக இருந்தால் கன்றுக்குட்டி துள்ளி விளையாடும்.

கட்டுப் பட்டாலும் கவரிமான் மயிரால் கட்டுப்பட வேண்டும்; குட்டுப் பட்டாலும் மோதிரக் கையால் குட்டுப்பட வேண்டும்.

கட்டுப் படாத பெண் சொட்டுக் கொண்டு போயிற்று.
(கொட்டு.)

கட்டுப் பானை ஊற்று எட்டு நாளைக்கே. 6420
(பனை.)

கட்டு மரத்தைச் சென்னாக்குனி அரிக்கிறது போல.
(சென்னக் குன்னி.)

கட்டுருட்டிக் காளை போல.

கட்டெறும்பு இட்டலியைத் தூக்கினது போல.

கட்டை இருக்கிற மட்டும் கஷ்டம் உண்டு.
(கவலை உண்டு.)

கட்டைக் கலப்பையும் மொட்டைக் காளையும் காணிக்கு உதவாது. 6425

கட்டைக்குப் போகும்போது காலாழி பீலாழியா?

கட்டைக் கோணல் அடுப்பில் நிமிர்ந்தது.

கட்டை கிடக்கிற கிடையைப் பார்; கழுதை குதிக்கிற குதியைப் பார்.

கட்டை போனால் அடுப்போடு.

கட்டை போனால் வெட்டை. 6430

கட்டையிலே வைக்க.
(கட்டையிலே போவான்.)

கட்டையைச் சுட்டால் கரி ஆகுமா? மயிரைச் சுட்டால் கரி ஆகுமா?

கட்டை விளக்கு மாற்றுக்குப் பட்டுக் குஞ்சலம் கட்டினாற் போல.
(பட்டுக் கச்சு.)

கட்டோடே போனால் கனத்தோடே வரலாம்.

கடகச் சந்திர மழை கல்லையும் துளைக்கும். 6435

கடந்த நாள் கருதினால் வருமா?

கடந்தவர்க்குச் சாதி இல்லை.
(சாதி ஏது?)

கடந்து போன காலம் கதறினாலும் வராது.

கடந்து போனது கரணம் போட்டாலும் வராது.
(வருமா?)

கடப்பாரையை விழுங்கிவிட்டுச் சுக்குக் கஷாயம் குடிக்கலாமா? 6440

கடல் உப்பும் மலை நாரத்தங்காயும் போலே.

கடல் உப்பையும் மலை நெல்லையும் கலந்தாற் போல.

கடல் கொதித்தால் விளாவ நீர் எங்கே?
(நீர் ஏது?)

கடல் தண்ணீர் வற்றினாலும் பள்ளிச்சி தாலி வற்றாது.

கடல் தாண்ட மனம் உண்டு; கால்வாய் தாண்டக் கால் இல்லை. 6445
(ஆசை இல்லை, மனம் இல்லை.)

கடல் திடல் ஆகும்; திடல் கடல் ஆகும்.

கடல் நீர் நிறைந்து ஆவதென்ன? காஞ்சிரை பழுத்து ஆவதென்ன?

கடல் பாதி, கடம்பாக்குளம் பாதி.
(கடம்பாக்குளம் - திருநெல்வேலி மாவட்டத்தில் சச்சனாவிளைக்கு அருகில் உள்ளதோர் ஊர்.)

கடல் பெருகினால் கரை ஏது?

கடல் பெருகினால் கரையும் பெருகுமா? 6450

கடல் போயும் ஒன்று இரண்டாம் வாணிகம் இல்.
(பழமொழி நானூறு.)

கடல் மடை திறந்தது போல.

கடல் மணலை எண்ணக் கூடுமா?

கடல் மீனுக்கு நீச்சம் பழக்க வேணுமா?

கடல் மீனுக்கு நுளையன் இட்டதே பேர். 6455
(சட்டம்.)

கடல் முழுவதும் கவிழ்ந்து குடிக்கலாமா?

கடல் வற்றினால் கருவாடு தின்னலாம் என்று உடல் வற்றிச் செத்ததாம் கொக்கு.

கடலில் அகப்பட்ட மரத்துண்டு போல.

கடலில் அலையும் துரும்பு போல.

கட்லில் இருக்கும் கள்ளியைக் கொள். 6460

கடலில் ஏற்றம் போட்ட கதை.

கடலில் கரைத்த புளி போல.

கடலில் கரைத்த பெருங்காயம் போல.
(இட்ட பெருங்காயம் மணக்குமா?)

கடலில் கிடக்கும் துரும்புகளை அலைகளோடு தூக்கித் தரையில் தள்ளுகிறது போல.

கடலில் கையைக் கழுவி விடுகிறதா? 6465

கடலில் துரும்பு கிடந்தாலும் கிடக்கும்; மனசிலே ஒரு சொல் கிடவாது.

கடலில் பிறக்கும் உப்புக்கும் மலையில் விளையும் நாரத்தங் காய்க்கும் தொந்தம்.
(உறவுண்டு.)

கடலில் பெருங்காயம் கரைத்தது போல.
(உரசிய காயம் போல.)

கடலில் போட்டு விட்டுச் சாக்கடையில் தேடுகிறதா?

கடலில் மூழ்கிப் போனாலும் கடனில் மூழ்கிப் போகாதே 6470

கடலிலும் பாதி கடம்பாக்குளம்.

கடலின் ஆழத்தை அளந்தாலும் மனசின் ஆழத்தை அளக்க முடியாது.

கடலினுள் நா வற்றினது போல.
(திருவாசகம்.)

கடலுக்குக் கரை போடுவார் உண்டா?
(போட்டவர்கள்.)

கடலை அடைக்கக் கரை போடலாமா? 6475

கடலைக்காய்ப் பானையிலே கையை விட்டாற்போல.

கடலைத் தாண்ட ஆசை உண்டு; கால்வாயைத் தாண்டக் கால் இல்லை.
(கடலைத் தாண்டக் கால் உண்டு.)

கடலைத் தாண்டினவனுக்கு வாய்க்கால் தாண்டுகிறது அரிதா?

கடலைத் தூர்த்தாலும் காரியம் முடியாது.

கடலைத் தூர்த்தும் காரியத்தை முடிக்க வேண்டும். 6480

கடலை விதைத்தால் கடுத்த உரம்.

கடலை விதைப்பது கரிசல் நிலத்தில்.
(கரிசல் காட்டில்.)

கடவுள் இருக்கிறார்.

கடவுள் சித்தத்துக்கு அளவேது?

கடவுளுக்குத்தான் வெளிச்சம். 6485

கடவுளை நம்பினோர் கைவிடப் படார்.

கடற்கரைத் தாழங்காய் கீழே தொங்கி என்ன? மேலே தொங்கி என்ன?

கடற்கரையில் தாழங்காய் அக்கரையில் கிடந்தால் என்ன? இக்கரையில் கிடந்தால் என்ன?

கடன் ஆச்சு; உடன் ஆச்சு; வீட்டு மேலே சீட்டு ஆச்சு; அடித்து விடடா தேவடியாள் தெருவிலே பல்லக்கை.

கடன் இல்லாத கஞ்சி கால் வயிறு போதும். 6490

கடன் இல்லாத சோறு கால் வயிறு போதும்.

கடன் இல்லாவிட்டால் காற்றுப் போல.

கடன் இழவுக்கு அழுகிறாய்.

கடன்காரனுக்குக் கடனும் உடன்பிறந்தானுக்குப் பங்கும் கொடுக்க வேண்டும்.

கடன்காரனுக்குக் கடனும் பழிகாரனுக்குப் பழியும் கொடுத்துத் தீர வேணும். 6495

(கொடுக்க வேண்டும்.)

கடன்காரனுக்கு மயிரும் எமனுக்கு உயிரும்.

கடன்காரனை வைத்த கழு உண்டா?

(வதைத்த.)

கடன், காலச் சனியன்.

கடன் கேட்காமல் கெட்டது; வழி நடக்காமல் கெட்டது.

கடன் கொடுத்துப் பொல்லாப்பு அடைவதைவிடக் கடன் கொடுக்காமல் பொல்லாப்பு அடையலாம். 6500

கடன் கொண்டார் நெஞ்சம் போலக் கலங்கினான் இலங்கை வேந்தன்.

(தனிப்பாடல்.)

கடன் கொண்டும் செய்வன செய்.

கடன் கொண்டும் செய்வார் கடன்.
(பழமொழி நானூறு.)

கடன் சிறிது ஆனாலும் கடமை பெரிது.
கடன் நெஞ்சைக் கலக்கும். 6505

கடன் பட்ட சோறு கால் வயிறு நிரம்பாது.
கடன் பட்டவன் சோறு காற் சோறு.
கடன் பட்டார் நெஞ்சம் போல.
கடன் பட்டாயோ, கடை கெட்டாயோ?
(பட்டையோ, கடைபட்டையோ?)

கடன் பட்டு உடன் பட்டு அம்மை கும்பிட, நீயார் கூத்தி கும்பிட. 6510
(கடன் வாங்கி.)

கடன் பட்டு உடன் பட்டு உடம்பைத் தேற்று மகனே, கடன்காரன் வந்தால் தடியைத் தூக்கு மகனே!

கடன் பட்டும் பட்டினியா?
(கடன் கொண்டும் பட்டினி கிடப்பதா?)

கடன் படுகிறவன் எப்போதும் சஞ்சலப் படுகிறவனே.

கடன் வாங்கி உடன் வாங்கிச் சாமி கும்பிட, நீயாரடா கூத்திமகன் விழுந்து கும்பிட?

கடன் வாங்கிக் கடன் கொடாதவனும் கெட்டான்; வட்டியிலே சாப்பிடாதவனும் கெட்டான். 6515

கடன் வாங்கிக் கடன் கொடுத்தவனும் கெட்டான்; மரம் ஏறிக் கை விட்டவனும் கெட்டான்.

கடன் வாங்கிச் செலவு செய்தவனும் மரம் ஏறிக் கைவிட்டவனும் சரி.

கடன் வாங்கித் தின்றவன் கடைத்தேற மாட்டான்.

கடன் வாங்கிப் பயிர் இட்டவனும் மரம் ஏறிக் கைவிட்டவனும் ஒன்று.

கடன் வாங்கியும் கல்யாணம் செய். 6520

கடன் வாங்கியும் பட்டினி; கல்யாணம் ஆகியும் பிரமசாரி.
(சந்நியாசி.)

கடன் வாங்கினவன் மடியில் கல நெருப்பு.

கடன் வாங்குகிறபோது இனிப்பு; கடன் கொடுக்கிறதென்றால் கசப்பு.

கடன் வாங்குகிறவன் கடைத்தேற மாட்டான்.

கடனாகக் கிடைக்கிறதானாலும் ஆனையை வாங்கிக் கட்டிக் கொள்வதா? 6525

கடனா உடனா வாங்கிக் காரியத்தை முடி.

கடனோடு கடன் ஆகிறது; அண்டை வீட்டில் மேல் சீட்டு ஆகிறது; பிள்ளைக்குக் கல்யாணம் பண்ணு.

கடனோடு கடன் கந்தப் பொடி காற்பணம்.
(கதம்பப் பொடி.)

கடனோடே கடன்; உடனோடே உடன்.

கடா ஆனாலும் உழக்குப் பால் கறக்காதா என்கிறான். 6530

கடா இடுக்கில் புல் தின்கிறது போல.

கடா கடா என்றால் கால் ஆழாக்குப் பீச்சு என்கிறாயே!

கடா கடா என்றால் உழக்குப் பால் என்று கேட்கிறாயே!

கடா கடா என்றால் கன்றுக்கு உழக்குப் பாலா என்கிறான்.

கடா கடா என்றால் மருந்துக்கு ஒரு பீர் என்கிறான். 6535

கடா கன்று போட்டது; கொட்டகையிலே பிடித்துக் கட்டு.

கடாச் சண்டையில் உண்ணி நசுங்கின கதை.

கடா பின் வாங்குவது எல்லாம் பாய்ச்சலுக்கு இடம்.
(அடையாளம்.)

கடா பொலிகிறது வண்டி பால் குடிக்கவா?

கடா மிடுக்கிலே புல்லுத் தின்கிறதா? 6540

கடா மேய்க்கிறவன் அறிவானோ, கொழுப் போன இடம்?

கடாரங் கொண்டான் கிணற்றில் கல்லைப் போட்டது போல.
(கடாரங் கொண்டான், செம்பொன்னார் கோயிலுக்கு அருகில் கிழக்கே உள்ள ஊர்.)

கடாவின் சந்தில் புல்லைத் தின்னுகிறது போல.

கடாவும் கடாவும் சண்டை போடுகிறபோது உண்ணி நசுங்கினாற் போல.

கடிக்க ஓர் எலும்பும் இல்லை. 6545

கடிக்க மாட்டாத பாக்கு உத்தம தானம்.

கடிக்க வந்த நாய்க்குத் தேங்காய்க் கீற்றுப் போட்டாற் போல.

கடிக்கிற நாகம் கலந்து உறவாகுமா?
(கடித்த நாகம்.)

கடிக்கிற நாய்க்குக் கழுத்திற் குறுங்கயிறு.

கடிக்கிற பாம்பை நல்ல பாம்பு என்ற கதை. 6550

கடிகோலிலே கட்டின நாய்.

கடித்த நாய்க்குக் காடியைக் கொடு.

கடித்த நாயைக் கொன்றாலும் பயன் உண்டாகாது.

கடித்த நாயை வெறி நாய் என்பது போல.

கடித்த நாயைப் பைத்தியம் கொண்டது என்பார்கள். 6555

கடித்த பாக்குக் கொடாத சிற்றன்னை கடற்கரை மட்டும் வழியனுப்பினாளாம்.

கடித்த பாக்கும் கொடாத சிற்றப்பன் கடைத்தெரு வரையில் வழி விட்டானாம்.
(காத வழி வந்தானாம்.)

கடித்த பாம்புக்குப் பால் வார்த்தால் அது விஷத்தைத்தான் தரும்.
(கக்கும்.)

கடித்த பாம்புக்குப் பால் வார்த்தால் கடித்தே தீரும்.

கடித்த மூட்டை, கடியாத மூட்டை, எல்லா மூட்டையும் சரிதான். 6560

கடித்த மூட்டையும் சரி, கடியாத மூட்டையும் சரி.

கடித்த வாய் துடைத்தாற் போல.
(வாய் துடித்தாற் போல.)

கடித்தால் நாய்; மிதிபட்டால் வாய் இல்லா ஜந்து.

கடித்தாலும் கடிக்கட்டும்; நீ சொல்லாதிரு.
(சும்மாயிரு.)

கடித்த பாக்குக் கொடுக்காத சிற்றப்பன் கடைத்தெரு வரையில் வழித்துக் கொண்டு வழிவிடுவான். 6565
(சிற்றன்னை; வழிவிடுவாள்.)

கடிதான சொல் அடியிலும் வலிது.
(பெரிது.)

கடிதான பிள்ளை பெற்றோருக்கு உதவுமா?
கடிந்த சொல்லினும் கனிந்த சொல்லே நன்மை.
கடி நாய் எலும்புக்குப் பறந்தாற் போல.
கடிப்பதற்கு ஓர் எலும்பும் இல்லை; காதில் மினுக்க ஓலையும் இல்லை. 6570

கடிய மாட்டுக்குக் கம்பு உடையும், கொடிய மாட்டுக்குக் கொம்பு உடையும்.
கடியாத மூட்டை என்று விட்டு விடுவார்களா?
கடியும் சுருக்குத்தான்; அடியும் சுருக்குத்தான்.
கடிவாளம் இல்லாத குதிரை போல.
கடுக்கன் இட்ட நேற்றுக்குள் காது அறுந்த சுருக்கு. 6575

கடுக்கன் ஜோடியும் காளைமாட்டு ஜோடியும் அமைவது கடினம்.
கடுக்காய்க்கு அகணி நஞ்சு; சுக்கிற்குப் புறணி நஞ்சு.
கடுகிலும் கால் திட்டம் கரண்டி; அதிலும் கால் முட்டை எண்ணெய் கடன் வாங்கி என் தலை சீவிக் கட்டி, மகள் தலை வாரிக் கட்டி, மருமகன் தலை கோதிக் கட்டி, குறை எண்ணெய் வைத்த இடத்தில் அயல் வீட்டுக்காரி வந்து இடறி விட்டாள்; அது ஏரி பெருகினாற் போலப் போயிற்று.
(என்றான்.)
கடுகிற்று, முடுகிற்று, வடுகச்சி கல்யாணம்.
கடுகு அத்தனை நெருப்பு ஆனாலும் போரைக் கொளுத்தி விடும். 6580

கடுகு அளவும் களவுதான்; கர்ப்பூரக் களவும் களவுதான்.
(கடுகு அளவு எடுத்தாலும், கர்ப்பூரம் எடுத்தாலும்.)
கடுகு சிந்தினால் கலகம் வரும்.
கடுகு சிறுத்தாலும் காரம் போகாது.
(போகுமா?)
கடுகு செத்தாலும் கறுப்புப் போகாது.
கடுகு செத்தும் காரம் போகாது. 6585
(செங்கற்பட்டு வழக்கு.)

கடுகு போகிற இடத்தில் தடி எடுத்துக் கொண்டு திரிவான்; பூசணிக்காய் போவது தெரியாது.

கடுகு மலை ஆச்சு; மலை கடுகு ஆச்சு.
கடுகைத் துளைத்து ஏழ் கடலைப் புகட்டினது போல.
(திருவள்ளுவ மாலை.)
கடுஞ் சிநேகிதம் கண்ணுக்குப் பொல்லாதது.
(கடும் நட்பு, பகை.)
கடு நட்பும் பகை விளைப்பு. 6590

கடும் காற்று மழை காட்டும்; கடு நட்புப் பகை காட்டும்.
(கடும் சிநேகம்.)
கடும் கோபம் கண்ணைக் கெடுக்கும்.
கடும் சிநேகம் கண்ணைக் கெடுக்கும்.
(நட்பு. கண்ணுக்குப் பகை. கண்ணுக்கு-பொல்லாப்பு.)
கடும் செட்டுக் கண்ணைக் கெடுக்கும்.
(கடும் தேட்டு.)
கடும் செட்டுக் காரியக் கேடாம். 6595

கடும் செட்டுத் தயவைக் கெடுக்கும்.
கடும் சொல் கேட்டால் காதுக்குக் கொப்புளம்.
கடும் பசி கல்மதில் உடைத்தும் களவு செய்யச் சொல்லும்.
(உடைத்தாவது.)
கடும் போரில் கைவிடலாமா?
கடு முடுக்கடா சேவகா, கம்பரிசியடா சம்பளம். 6600

கடுவெளியைக் கானல் ஜலமாய்க் கண்டது போல.
கடை அரிசி கஞ்சிக்கு உதவுமா?
கடை ஓடித் தாவும் நிலத்துக்குக் கரையடி மேட்டு நிலம் எளிது.
கடைக்குக் கடை ஆதாயம்.
கடைக்குக் கடை ஆள் இருப்பார்கள். 6605

கடைக்குக் கடை ஆள் தாவியென.
(ஆள்தான்.)
கடைக்குட்டி கட்டி மாம்பழம்.
கடைக்குப் போகக் கண்ணிக்குப் போக.
கடை காத்தவனும் காடு காத்தவனும் பலன் அடைவார்.
கடை கெட்ட நாய் கல்யாணத்துக்குப் போனதாம்; எச்சில் இலை
கிடைக்காமல் எட்டி எட்டிப் பார்த்ததாம். 6610

கடை கெட்ட மூளிக்குக் கோபம் கொண்டாட்டம்.
கடை கெட்ட மூளி சூல் ஆனாலும் காற்பணத்துக் காசு செல்லும்.
கடை கெட்ட வாழ்வு, தலை கட்ட நேரம் இல்லை.
கடைச் சோற்றுக்கு மோரும் கால் மாட்டுக்கு அணையும்.
கடைசிச் சோற்றுக்கு மோரும் கால் மாட்டிற்குப் பாயும் வேண்டும். 6615

கடைசிப் பிடி கட்டி மாம்பழம்.
கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைத்தானாம்.
கடைத் தேங்காயை எடுத்து விநாயக பூஜை செய்த கதை.
கடைந்த மோரிலே குடைந்து வெண்ணெய் எடுப்பாள். (எடுக்கிறது.)
கடைந்து எடுத்த பேர் வழி. 6620

கடைப் பிறப்பு கழுதைப் பிறப்பு.
கடையச்சே வாராத வெண்ணெய் குடையச்சே வரப் போகிறதா?
கடையில் அரிசி கஞ்சிக்கு உதவுமா? அண்டை வீட்டுக்காரி புருஷன் ஆபத்துக்கு உதவுவானா?
கடையில் அரிசி கஞ்சிக்கு உதவுமா? அவிசாரி புருஷன் ஆபத்துக்கு உதவுவானா?
கடையில் இருக்கும் கன்னியைக் கொள். 6625

கடையில் வந்ததும் அரிசியோ? நடையில் வெந்ததும் சாதமோ?
கடையிலே கட்டித் தூக்கினாலும் அழுகற் பூசணிக்காய் அழுகலே.
கடையிலே கொண்டு மனையிலே வைக்கிறான்.
கடையிலே தேளைக் கண்டு கை அசக்கினால் நிற்குமா?
கடையும் போது வராத வெண்ணெய் குடையும் போது திரண்டு விடுமா? 6630

கடைவாயில் ஆனை ஒதுக்கினாற் போல.
கடைவாயில் ஒட்டின பீயைப் போல.
கண் அளக்காததைக் கை அளந்து விடுமா?
கண் அறிந்தும் அயல் மனையில் இருக்கிறதா?
கண் இமை, கை நொடி அளவே மாத்திரை. 6635

கண் இமை போலக் காக்கிறான் கடவுள்.
கண் இமை போலே கரிசனமாய்க் காக்கிறது.

கண் இமையா முன்னே பறந்து போனான்.
கண் இரண்டும் இல்லாதவன் வீட்டுக்கு வைத்த விளக்கு.
கண் இருக்கிற போதே காக்கை பிடுங்குகிறது போல. 6640

கண் இருந்தும் கண்டமங்கலத்தில் பெண் கொடுப்பார்களா?
கண் இருந்தும் கிணற்றில் விழுந்ததுபோல.
கண் இருந்தும் குழியில் விழலாமா?
கண் இல்லாக் குருடனுக்கு மூக்குக் கண்ணாடி ஏன்?
கண் உள்ள போதே காட்சி; கரும்புள்ள போதே ஆலை. 6645

கண் ஊனன் கைப் பொருள் இழப்பான்.
கண் ஒளி பெரிதா? கதிர் ஒளி பெரிதா?
கண் கட்டி மந்திரமா காட்ட வந்தாய்?
கண் கட்டி வித்தை காட்ட வந்தாயோ?
கண் கட்டின புழுவைப் போல. 6650

கண் கண்ட தெய்வம்.
கண் கண்டது கை செய்யும்.
கண் கண்டு வழி நட.
கண் காணாமல் கடும் பழி சொல்கிறதா?
கண்குத்திப் பாம்பு போல் இருந்தாலும் கண்ணில் மண்ணைப் போடுகிறான். 6655
(பாம்பு போல் கண்ணில். கண் மூடிப் பார்த்திருந்தேன்.)

கண் குருட்டுக்கு மருந்து இட்டால் தெரியுமா?
கண் குருடு ஆனாலும் நித்திரையிலே குறைவில்லை.
(குறையா?)
கண் குற்றம் கண்ணுக்குத் தெரியுமா?
கண் கெட்ட பிறகு சூரிய நமஸ்காரமா?
கண் கெடுத்த தெய்வம் கோலைக் கொடுத்தது. 6660
(சுந்தர மூர்த்தி நாயனார் வரலாறு.)

கண் கொண்டு அல்லவோ வழி நடக்க வேண்டும்?
கண்ட இடத்தில் கத்தரி போடுவான்.
கண்ட இடத்தில் திருடன் கண் போகிறது.

கண்ட இடம் கைலாசம்.
கண்ட கண்ட கோயிலெல்லாம் கையெடுத்துக் கும்பிட்டேன்.
*காணாத கோயிலுக்குச் காணிக்கை நேர்ந்து வைத்தேன்.* 6665

கண்ட தண்ணீருக்கு நிறை வேளாண்மை.
கண்டது எல்லாம் ஓடித் தின்னும் ஆடு; நின்று நின்று மேய்ந்து போகும் மாடு.
கண்டதில் பாதி சவுசிகம்; சீமையில் பாதி ஸ்ரீவத்ஸம்; பாதியில் பாதி பாரத்துவாஜம்.
(இவை அந்தணர்களினுடைய கோத்திரங்கள்.)
கண்டது கற்கப் பண்டிதன் ஆவான்.
(கேட்கப் பண்டிதன் ஆவான்.)
கண்டது காட்சி; பெற்றது பேறு. 6670

கண்டது கை அளவு, காணாதது உலகளவு.
(கைம் மண் அளவு)
கண்டது சொன்னால் கொண்டிடும் பகை.
(மூள்வது பகை.)
கண்டது பாம்பு; கடித்தது கருக்குமட்டை.
கண்டது பாம்பு; கடித்தது சோளத்தட்டை
கண்டது பாம்பு; கடித்தது மாங்கொட்டை. 6675

கண்டதும் மருதாணியைக் காலில் இட்டுக் கொண்டால் கொண்டவனுக்கு முன்னால் குதித்தோடிப் போகலாம்.
கண்டதே காட்சி, கொண்டதே கோலம்.
(கொண்டதே கொள்கை, உண்டதே மிச்சம்.)
கண்டதைக் காலை வாரி அடிக்கிறதா?
(கண்டதைக் கொண்டு.)
கண்டதைக் கேட்டதைச் சொல்லாதே; காட்டு மரத்திலே நில்லாதே.
கண்டதைக் கேளா விட்டால் கொண்டவன் அடிப்பான். 6680

கண்டதைக் கொண்டு கரை ஏற வேண்டும்.
கண்ட பாவனையா கொண்டை முடிக்கிறது?
கண்டம் இல்லாத எருமை தண்டம்.
கண்டம் ஒருத்தன்; கழுத்து ஒருத்தன்; துண்டம் ஒருத்தன்; துடை ஒருத்தன்.

கண்ட மங்கலத்து அஞ்சு பெண்களும் ஒருத்தர் போன வழி ஒருத்தர் போகார். 6685

கண்ட மாப்பிள்ளையை நம்பிக் கொண்ட மாப்பிள்ளையைக் கைவிட்டாற் போல.

கண்டர மாணிக்கத்துக் கட்டுத் தறியும் வேதம் சொல்லும்.

கண்டவர் விண்டிலர்; விண்டவர் கண்டிலர்.

கண்டவன் எடுக்கானா?

கண்டவன் எடுத்தால் கொடுப்பானா? 6690

கண்டவன் கொள்ளையும் கணியாகுளப் போரும்.
(கணியாகுளம் குமரிமாவட்டம்; 1635 நாயக்கர் படைதங்கிப் போரிட்டது.)

கண்டவன் விலை சொன்னால் கொண்டவன் கோடி உடான்.
(யாழ்ப்பாண வழக்கு.)

கண்டார் கண்டபடி பேசுகிறது.
(பேசுகிறார்கள்.)

கண்டாரைக் கேட்டாரைச் சொல்லாதே.

கண்டால் அல்லவோ பேசுவார் தொண்டைமான்? 6695

கண்டால் ஆயம்; காணா விட்டால் மாயம்.
(ஆயம்-வரி.)

கண்டால் ஒரு பேச்சு; காணா விட்டால் ஒரு பேச்சு.

கண்டால் ஒன்று; காணா விட்டால் ஒன்று.

கண்டால் கரிச்சிருக்கும்; காணா விட்டால் இனித்திருக்கும்.

கண்டால் காமாட்சி நாயக்கர்; காணா விட்டால் காமாட்டி நாயக்கன். 6700
(கவரை வடுகன். காணா விட்டால் மீனாச்சி நாயக்கன்.)

கண்டால் காயம்; காணாவிடில் மாயம்.

கண்டால் சரக்கறியேன்; காணாமல் குருக்கறியேன்.

கண்டால் கீச்சுக் கீச்சு; காணா விட்டால் பேச்சுப் பேச்சு.
(கிளி.)

கண்டால் தண்டம்; வந்தால் பிண்டம்.
(சந்நியாசிகளுக்கு.)

கண்டால் துணை; காணா விட்டால் மலை. 6705

கண்டால் தெரியாதா, கம்பளி ஆட்டு மயிரை?

கண்டால் முறை சொல்கிறது; காணா விட்டால் பெயர் சொல்கிறது.

கண்டால் ரங்கசாமி; காணா விட்டால் வடுகப்பயல்.

கண்டால் வத்தி; காணா விட்டால் கொள்ளி.

கண்டி ஆயிரம், கப்பல் ஆயிரம், சிறு கம்பை ஆயிரம். 6710
(சிறு கம்பை-தேவகோட்டையிலிருந்து கிழக்கே 12 மைல்; கப்பலூர், சிறு கம்பையூருக்கு அருகில் உள்ளது. கண்டியூர் நிலம் மாவில் ஆயிரம் கலம் விளையும். பிற ஊர் நிலப்பரப்பு அதிகம்.)

கண்டிப்பு இருந்தால் காரியம்.

கண்டியிலே ஆனைகுட்டி போட்டால் உனக்காச்சா? எனக்காச்சா?

கண்டிருந்தும் மலத்தைக் கவிழ்ந்திருந்து தின்பார்களா?

கண்டு அறிந்த நாயும் அல்ல; கனம் அறிந்த பேயும் அல்ல.

கண்டு அறிய வேண்டும் கரும்பின் சுகம்; உண்டு அறிய வேண்டும் உடல். 6715

கண்டு அறியாதவன் பெண்டு படைத்தால் காடு மேடு எல்லாம் இழுத்துத் திரிவானாம்.
(கட்டி இழுப்பானாம்; விட்டடிப்பான், காடு மேடெல்லாம் தவிடு பொடி.)

கண்டு எடுத்தவன் கொடுப்பானா?
(கொடான்.)

கண்டு எடுத்தானாம், ஒரு சுண்டு முத்தை.

கண்டு கழித்ததைக் கொண்டு குலாவினான்.

கண்டு செத்த பிணமானால் சுடுகாட்டுக்கு வழி தெரியும். 6720
(சுடுகாட்டில் எரியும்.)

கண்டு நூல் சிடுக்கெடுத்தாச்சு; வண்டி நூல் இருக்கிறது.

கண்டு பேசக் காரியம் இருக்கிறது; முகத்தில் விழிக்க வெட்கமாய் இருக்கிறது.

கண்டும் காணவில்லை, கேட்டும் கேட்கவில்லை என்று இருக்க வேண்டும்.

கண்டும் காணாதது போல் விட்டுவிட வேண்டும்.

கண்டும் காணாமலும் கேட்டும் கேட்காமலும் இருக்க வேண்டும். 6725

கண்டும் காணவில்லை, கேட்டும் கேட்கவில்லை என்று இருக்க வேண்டும்.

கண்டும் காணாததுபோல் விட்டுவிட வேண்டும்.

கண்டு முட்டு; கேட்டு முட்டு.
(முட்டு-தீட்டு.)

கண்டேன் சீதையை என்றாற் போல.

கண்ணாடி, பித்தன், கருங்குரங்கு, காட்டானை, மண்ணாளும் வேந்தனோடு ஐந்தும் பித்து. 6730

கண்ணாடியில் கண்ட பணம் கடன் தீர்க்க உதவுமா?
(கண்ணாடி நிழலில்.)

கண்ணாரக் கண்டதற்கு ஏன் அகப்பைக் குறி?

கண்ணாரக் காணாதது மூன்றில் ஒரு பங்கு.
(மூன்று பங்கு.)

கண்ணால் கண்டதற்குச் சாட்சியா?
(சாட்சி ஏன்?)

கண்ணால் கண்டது பொய்; அகப்பைக்குறி மெய். 6735
(கண்ணாரக் கண்டது. அகப்பைக்கூறு பார்த்தது.)

கண்ணாலே கண்டது பொய்; கருதி விசாரித்தது மெய்.

கண்ணாலே கண்டது பொய்; காதாலே கேட்டது மெய்.

கண்ணாலே கண்டதும் பொய்; காதாலே கேட்டதும் பொய்; ஆராய்ந்து பார்ப்பது மெய்.
(தீர விசாரித்தது மெய்.)

கண்ணாலே கண்டதை எள்ளுக்காய் பிளந்ததுபோல் சொல்ல வேண்டும்.

கண்ணாலே கண்டதைக் கையாலே செய்வான். 6740

கண்ணாலே கண்டாலும் மண்ணாலே மறைக்க வேண்டும்.

கண்ணாலே சீவன் கடகடவென்று போனாலும் வண்ணானுக்கு மழை நஞ்சு.

கண்ணாலேயும் கண்டதில்லை. காதாலேயும் கேட்டதில்லை.

கண்ணான பேர்களை மண் ஆக்குகிறான்.

கண்ணான பேரை எல்லாம் புண் ஆக்கிக் கொண்டு, கரும்பான பேரை எல்லாம் வேம்பாக்கிக் கொண்டான். 6745

கண்ணான மனசைப் புண் ஆக்குகிறான்.

கண்ணுக்கு ஆனால் புண்ணுக்கு ஆகாது.

கண்ணுக்கு இமை காதமா?
(புருவம் காதமா?)

கண்ணுக்கு இமை; பெண்ணுக்கு நாணம்,

கண்ணுக்கு என்ன கரிப்பு? 6750

கண்ணுக்குக் கண் அருகே காணலாம்.

கண்ணுக்குக் கண்ணாய் இருந்தும் கடைப் பெண்ணுக்கு வழி பார்க்கிறதா?
(பார்க்கிறான்.)

கண்ணுக்குக் கலம் தண்ணீர் விடுகிறது.

கண்ணுக்குப் புண்ணும் அல்ல; காண்பார்க்கு நோவும் அல்ல.
(நோயும்.)

கண்ணுக்கு மூக்குக் காத தூரம் இல்லை. 6755

கண்ணுக்கும் மூக்குக்கும் காலம் இப்படி வந்ததே!

கண்ணுக்கும் மூக்குக்கும் நேராகப் பார்.

கண்ணுக்குள் சம்மணம் கொட்டுவான்; கம்பத்தில் ஐந்தானை கட்டுவான்.

கண்ணும் கருத்தும் உள்ள போது இல்லாமல், கண் பஞ்சு அடைந்த பின் என்ன கிடைக்கும்?
(கிடைக்காத போது.)

கண்ணும் கலத் தண்ணீர் விடும். 6760

கண்ணும் கருத்தும் உள்ள போதே காணோம்; அவை போனபின் என்ன கிடைக்கும்?

கண்ணும் நமது; விரலும் நமது; கண்ணைக் குத்துவதா?

கண்ணும் புண்ணும் உண்ணத் தீரும்.

கண்ணும் மூக்கும் வைத்தான்; காரமும் கொஞ்சம் சேர்த்தான்.
கண்ணே. கண்ணே என்றால் உச்சி குளிருமா? 6765

கண்ணே, காதே, நமஸ்காரம்; கண்டதைக் கேட்டதைச் சொல்லாதே.

கண்ணை அலம்பி விட்டுப் பார்க்க வேண்டும்.
(கண்ணைக் கழுவி.)

கண்ணை இமை காப்பது போல.

கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போல.

கண்ணைக் கண்ணைக் காட்டுது, அண்ணி கழுத்துக் கருகுமணி. 6770

கண்ணைக் காட்டினால் வராதவள் கையைப் பிடித்து இழுத்தால் வருவாளா?
(காட்டி அழைத்தால்.)

கண்ணைக் குத்திய விரலைக் களைந்து எறிவார் உண்டோ?

கண்ணைக் கெடுத்த தெய்வம் கோலைக் கொடுத்தது.
(சுந்தரர் வரலாறு.)

கண்ணைக் கெடுத்த தெய்வம் மதியைக் கொடுத்தது.
(கழுத்தைக் கொடுத்தது.)

கண்ணைக் கொசு மொய்க்கக் கடை வாயை ஈ மொய்க்கப் புண்ணைப் புழு அரிக்கப் பெண்ணைப் போக விட்டாள் புங்காத்தை. 6775

கண்ணைக் கொண்டு நடந்தது போல உன்னைக் கண்டு நடந்தேன்.

கண்ணைத் தின்ற குருடனும் நியாயத்தை ஒத்துக் கொள்ள வேணும்.

கண்ணைப் பிடுங்கி முன்னே எறிந்தாலும் கண்கட்டு வித்தை என்பார்கள்.

கண்ணைப் பிதுக்கிக் காட்டியும் வித்தையா?

கண்ணை மூடிக் குட்டுகிறதா? 6780

கண்ணை மூடிக் கொண்டு காட்டில் நடப்பது போல.

கண்ணை விறைச்சுக் கொண்டு எங்கே போனாய்? கவுண்டன் செத்தான்; இழவுக்குப் போனேன்.

கண்ணோடே பிறந்த காவேரி ஆனாலும் உதட்டைச் சுட்டு உறவாடுவேன்.
கண்ணோடே பிறந்த காவேரி ஆனாலும் நம் எண்ணம் சரி ஆகுமா?
கண்ணோ, புண்ணோ? 6785

கண்ணோ புண்ணோ என்று கலங்கி மனம் திடுக்கிடுகிறது.
கண் தெரிந்து நடப்பவர்கள் பள்ளத்தில் விழ மாட்டார்கள்.
கண் தெரிந்து வழி நடக்கும்படி நினை.
கண் தெரியாமல் வழி நடக்கிறது போல.
கண் படைத்தும் குழியில் விழலாமா? 6790
(கண் படைத்தும் குழியில் விழக் கணக்கும் உண்டோ?-திருவருட்பா.)

கண் பறிகொடுத்துக் கலங்கினாற் போல.
கண் பார்த்தால் கை செய்யும்
(பார்த்ததை.)
கண் பார்த்துக் கையால் எழுதாதவன் கசடனாவான்.
கண் புண்ணிலே கோல் இட்டது போல.
கண் பெருவிரலைப் பார்க்கும் போதே கடைக்கண் உலகமெல்லாம் சுற்றும். 6795

கண் மூடர் கைப் பொருளை அழிப்பர்.
கண் மூடித் துரைத்தனம் ஆச்சே?
கண் மூடிப் பழக்கம் மண் மூடிப் போகும்.
(போக வேணும்.)
கணக்கதிகாரத்தைப் பிளக்கும் கோடாலி.
கணக்கப் பிள்ளை எல்லாம் எழுத்துப் பிள்ளையா? 6800
(எழுத்துப் பிள்ளை அல்ல.)

கணக்கப் பிள்ளை கொடுக்கைத் தூக்கி, கண்டவளெல்லாம் செருப்பைத் தூக்கி,
கணக்கப் பிள்ளை பெண்சாதி கடுக்கன் போட்டுக் கொண்டாள் என்று காரியக்காரன் பெண்சாதி காதை அறுத்துக் கொண்டாளாம்.
(மனைவி கம்மல் போட்டுக் கொண்டாள்.)
கணக்கப் பிள்ளை பெண்டாட்டி குணுக்கைப் போட்டு ஆடினாளாம்.
கணக்கன் கண் வைத்தால் கால் காணி பொட்டை.

கணக்கன் கணக்கு அறிவான்; தன் கணக்கைத் தான் அறியான். 6805

கணக்கன் கணக்கைத் தின்னா விட்டாலும் கணக்கனைக் கணக்குத் தின்று விடும்.
கணக்கன் கெட்டால் பள்ளிக்கூடம்.
கணக்கன் கணக்கைத் தூக்கி; கண்டவனெல்லாம் செருப்பைத் தூக்கி.
கணக்கன் மனைவி கடுக்கன் அணிந்தாளென்று காரியக்காரன் மனைவி காதை அறுத்துக் கொண்டாளாம்.
கணக்கன் வீட்டுக் கல்யாணம் விளக்கெண்ணெய்க்குக் கேடு. 6810

கணக்கனுக்குக் கைக் கூலி கட்டிக் குடியிருக்கக் கடன் என்றாராம்.
கணக்கனுக்குப் பட்டினி உடன் பிறப்பு.
கணக்கனுக்கு மோட்சம் இல்லை; ஒட்டனுக்கு நரகம் இல்லை.
கணக்கனைக் கண்ட இடத்தில் கண்ணைக் குத்து.
கணக்கனைப் பகைத்தாயோ? காணியை இழந்தாயோ? 6815

கணக்கனோ, குணக்கனோ?
கணக்கிலே கயிறு கோத்திருக்கிறது.
கணக்கு அதிகாரத்தைப் பிளக்கும் கோடாலி.
கணக்கு அரைக்கால், முக்காலே அரைக்கால், கணக்கன் பெண்டாட்டி தாலி அறுத்தாள்.
(கணக்கன் முக்காலே அரைக்கால்.)
கணக்கு அறிந்த பிள்ளை வீட்டில் இருந்தால் வழக்கு அறாது. 6820

கணக்கு அறிவான், காலம் அறிவான்.
கணக்குக் குஞ்சையும் காக்கைக் குஞ்சையும் கண்ட இடத்திலே கண்ணைக் குத்து.
கணக்கிலே கயிறா கோத்திருக்கிறது?
கணக்கைப் பார்த்தால் பிணக்கு வரும்.
கணபதி பூஜை கைமேலே பலன். 6825

கணவன் இல்லாத கற்புடைய பெண்ணின் கட்டழகு பயன் படாதது போல.
கணவனுக்கு மிஞ்சித் தெய்வம் இல்லை.

கணவனுக்கு மிஞ்சின கடவுள் இல்லை; கடலுக்கு மிஞ்சின ஆழம் இல்லை.

கணவனைப் பிரிந்து அயல் வீட்டில் இருக்கிறதா?

கணவனை வைத்துக் கொண்டு அல்லவோ கள்ள மாப்பிள்ளையைக் கொள்ள வேண்டும்? 6830

கணிகாலங்காரம் போல.
(கணிகா - தேவடியாள்.)

கணிசத்துக்கு இவள்; காரியத்துக்கு அவள்.

கணுக் கணுவாகக் கரும்பானாலும் ஆனைக்கு என்னவோ கடைவாய்க்குத்தான்.

கணுக்கால் பெருத்தால் கணவனைத் தின்பாள்.

கணை முற்றினால் கட்டையிலே. 6835

கணையாழி கண்டான் ஆறு கொண்டது பாதி; தூறு கொண்டது பாதி.
(கணையாழி கண்டான்-ஓரூர்.)

கத்தரிக்காய் என்று சொன்னால் பத்தியம் முறிந்து போகுமா?

கத்தரிக்காய்க்குக் காம்பு ருசி; வெள்ளரிக்காய்க்கு விதை ருசி.

கத்தரிக்காய்க்குக் கால் முளைத்தால் கடைத்தெருவுக்கு வந்தால் தெரிகிறது.

கத்தரிக்காய்க்குக் கையும் காலும் முளைத்தாற் போல். 6840

கத்தரிக்காய் சொத்தை என்றால் அரிவாள் மனை குற்றம் என்கிறாள்
(குற்றமா?)

கத்தரிக்காய் நறுக்குகிற கையும் காலும் பார்த்தால் பூசணிக்காய் வழி போகாதே, போகாதே என்கிறதாம்.

கத்தரிக்காய் வாங்கப் பூசணிக்காய் கொசுரா?

கத்தரிக்காய் விதை சுரைக்காயாய் முளைக்காது.

கத்தரிக்காய்க்குக் காலும் தலையும் முளைத்தது போல். 6845

கத்தரிக்காய் விற்ற பெட்டி காசுப் பெட்டி; வெள்ளரிக்காய் விற்ற பெட்டி வெறும் பெட்டி.

கத்தரிக்காயை நறுக்கிக் காலும் கையும் வெட்டிக் கொண்ட பெண்ணே, நீ பூசணிக்காய்ப் பக்கம் போகாதே.

கத்தரிக் கொல்லையிலே கூத்து வேடிக்கை பார்த்தது போல,

கத்தரித் தோட்டக்காரனுக்குக் கண் தெரியாது;வெள்ளரித்தோட்டக் காரனுக்குக் காது கேளாது.

கத்தரித் தோட்டத்துக் களை பிடுங்கினாற் போலும் இருக்க வேண்டும்; கன்றுக் குட்டிக்குப் புல் பிடுங்கினாற் போலும் இருக்க வேண்டும். 6850

கத்தி இருக்கும் இடத்துக்கு மறை காவுகிறதா?

கத்தி எட்டின மட்டும் வெட்டும்; பணம் எட்டாத மட்டும் வெட்டும்.
(பாயும்; பணம் பாதாளம் மட்டும் பாயும்.)

கத்தி கட்டி பெண்சாதி எப்போதும் கைம்பெண்டாட்டி.

கத்தி கூர் மழுங்கத் தீட்டுகையில் அது இரட்டைக் கூர் பட்டது போல.

கத்திப் பிடிக்குப் பிடித்தால் அரிவாள் பிடிக்கு ஆகட்டும். 6855

கத்தியும் கடாவும் போல.

கத்தியும் வெண்ணெயும் காய்ச்சித் துவைத்துக் கடை.

கத்தியைப் பார்க்கிலும் கனகோபம் கொலை செய்யும்.

கத்து, கத்து என்றால் கழுதையும் கத்தாது; சொல் சொல் என்றால் புலவனும் சொல்லான்.
(பாடு பாடு என்றால் பாடான்.)

கத்துகிற மட்டும் கத்திவிட்டுப் போகச்சே கதவைச் சாத்திக் கொண்டு போ. 6860

கதலீனாம் முதலீனாம் பலகாலே வக்ர கதி.

கதவின் கீழே நின்று கொண்டு காலைக் காலைக் காட்டினாளாம்.

கதவைச் சாத்தினால் நிலை புறம்பு.

கதி இருவர் கன்னித் தமிழுக்கு.
(கதிகம்பரும் திருவள்ளுவரும்.)

கதி கெட்ட மாப்பிள்ளைக்கு எரு முட்டை பணியாரம். 6865
(கணவனுக்கு.)

கதிர் களைந்தும் களை எடு.

கதிர் நூல் குறைந்தாலும் கள்ளச்சி கழுத்து நூல் குறையாது.

கதிர் போல இளைத்துக் குதிர் போல் பெருப்பது

கதிர் முகத்தில் என்ன ராசி முழக்கம் வேணும்?

கதிரவன் சிலரைக் காயேன் என்னுமோ? 6870
(கபிலர். அகவல்.)

கதிரிலே ஒடிக்காதே என்றால் கணுவிலே ஒடித்துப் போடுகிறாயே!
கதிருக்கு முந்நூறு நெல் இருந்தால் முழு வெள்ளாண்மை.
(விளைச்சல்.)

கதிரைக் களைந்தும் களையைப் பிடுங்கு.
கதிரைப் பார்க்கிறதா? குதிரைப் பார்க்கிறதா?
கதை அளக்கிறான். 6875

கதைக்குக் கண் இல்லை; காமத்திற்கு முறை இல்லை.
கதைக்குக் கால் இல்லை; கண்ட புருஷனுக்கு முறை இல்லை.
கதைக்குக் கால் இல்லை; கொழுக்கட்டைக்குத் தலை இல்லை; கூத்தாடிக்கு முறை இல்லை.
கதைக்குக் கால் இல்லை, பேய்க்குப் பாதம் இல்லை.
(பிட்டம் இல்லை.)

கதைக்குக் காலும் இல்லை; கத்தரிக்காய்க்கு வாலும் இல்லை. 6880

கதைக்குக் காலும் இல்லை; தலையும் இல்லை.
கதை கதையாம் காரணமாம்; காரணத்தில் ஒரு தோரணமாம்.
கதை கேட்ட நாயைச் செருப்பால் அடி.
கதை பண்ணுகிறான்.
கதை முடிந்தது; கத்தரிக்காய் காய்த்தது. 6885

கதையை நிறுத்திக் காரியத்தைப் பேசு.
கதையோ பிராமணா, கந்தையோ பொத்துகிறாய்? அல்லடி பேய் முண்டை, சீலைப்பேன் குத்துகிறேன்.
கந்தப்பூர் சிற்றப்பா நமஸ்காரம்; பாதி பொச்சை மூடிக்கொண்டு பாக்கியசாலியாய் இரு.
கந்தப் பொடிக் கடைக்காரனுக்குக் கடுகு வாசனை தெரியுமா?
கந்த புராணத்தில் இல்லாதது எந்தப் புராணத்திலும் இல்லை. 6890

கந்த புராணம், நம் சொந்தப் புராணம்.
கந்தர் அந்தாதியைப் பாராதே; கழுக்குன்ற மாலையை நினையாதே.
(கழுக்குன்றம் மலை வழி போகாதே, தொடாதே.)
கந்தலில் கால் இட்டது போல,

கந்தன் களவுக் கல்யாணத்துக்குக் கணபதி சாட்சி.
கந்தனுக்குப் புத்தி கவட்டிலே. 6895

கந்தை ஆனாலும் கசக்கிக் கட்டு; கூழ் ஆனாலும் குளித்துக் குடி.
கந்தை உடுத்துக் கடைவீதி போனாலும் கண்ணாடி கண்ணாடியே.
கந்தைக்கு ஏற்ற பொந்தை; கழுவுக்கு ஏற்ற கோமுட்டி.
(தகுந்த.)
கந்தைக்குச் சரடு ஏறுகிறது எல்லாம் பலம்.
(சரடு ஓட்டுகிறது.)
கந்தைத் துணி கண்டால் களிப்பாள்; எண்ணெய்த் தலை கண்டால் எரிவாள். 6900

கந்தைத் துணியும் கரி வேஷமும் ஆனான்.
(கரிக் கோலமும்.)
கந்தையை அவிழ்த்தால் குட்டி வெளிச்சம் தெரியும்.
கந்தையை அவிழ்த்தால் சிந்தை கலங்கும்.
கந்தையைக் கட்டி வெளியே வந்தால் கண்ணாட்டி; வெள்ளையைக் கட்டி வெளியே வந்தால் வெள்ளாட்டி.
கப்பரையிலே கல் விழுகிறது. 6905
(இடுவார் உண்டோ?)

கப்பல் அடிப்பாரத்துக்குக் கடற்கரை மண்ணுக்குத் தாவு கெட்டாற் போல.
கப்பல் உடைந்தாலும் கன்னத்தில் கை வைக்காதே.
(கவிழ்ந்தாலும்.)
கப்பல் ஏற்றிக் கடலில் கவிழ்த்தது போல.
கப்பல் ஏறிப் பட்ட கடன் கொட்டை நூற்றுப் போகுமா?
(ஓடிப்பட்ட.)
கப்பல் ஏறிய காகம் போலக் கலங்குகிறது. 6910

கப்பல் ஏறிவிட்ட காகம் கலங்குமா?
கப்பல் ஓட்டிய வாழ்வு காற்று அடித்தால் போச்சு.
கப்பல் போம்; துறை கிடக்கும்.
(நிற்கும்.)

கப்பலில் ஏற்றிக் கடலில் கவிழ்த்தது போல.
கப்பலில் ஏறிய காகம் போல. 6915

கப்பலில் பாதிப் பாக்கு.
(இட்டது போல, திருமங்கையாழ்வார் வரலாறு.)

கப்பலில் பாதிப் பாக்கைப் போட்டுவிட்டுத் தேடுவது போல.
கப்பலில் பெண் வருகிறது என்றானாம்; அப்படியானால் எனக்கு ஒன்று என்றானாம்.
கப்பலை விற்றுக் கப்பல் விற்றான், கொட்டை வாங்கித் தின்றானாம்.
கப்பற்காரன் பெண்டாட்டி தொப்பைக்காரி; கப்பல் உடைந்தால் பிச்சைக்காரி. 6920

கப்பற்காரன் வாழ்வு காற்றடித்தால் போச்சு.
(கப்பற்காரன் பேச்சு.)

கப்பி என்றால் வாயைத் திறக்கிறது குதிரை; கடிவாளம் என்றால் வாயை மூடிக் கொள்கிறது.
கபடச் சொல்லிலும் கடிய சொல்லே மேல்.
(கபடன் சொல்லிலும்.)

கபடாவும் இல்லை; வெட்டுக் கத்தியும் இல்லை.
கபடு இருந்த நெஞ்சும் களை இருந்த பயிரும் உருப்படா. 6925

கபடு சூது கடுகாகிலும் தெரியாது.
கபாலக் குத்துக் கண்ணைச் சுழிக்கும்.
கம்பங் கொல்லையில் மாடு புகுந்தது போல.
கம்ப சூத்திரமோ? கம்ப சித்திரமோ?
கம்பத்தில் ஏறி ஆடினாலும் கீழ் வந்துதான் தியாகம் வாங்க வேணும். 6930

கம்பத்தில் கொடுத்த பெண்ணும் வாணியனுக்குக் கொடுத்த பாரும், விளங்கா. (கம்பத்தில் நெடுந்தூரம் சென்று தண்ணீர் கொண்டு வர வேண்டும்.)
கம்பப் பிச்சையோ? கடைப் பிச்சையோ?
கம்பமே காவேரி; ரங்கனே தெய்வம்.
கம்பர் போன வழி.
கம்பர் போன வழி கண்டு கழித்தது. 6935

கம்பராமாயணம் போல்.
கம்பளி மூட்டை என்று கரடி மூட்டையை அவிழ்த்தானாம்.
(கரடியைப் பிடித்தாற் போல்.)
கம்பளி மேல் பிசின்.
கம்பளியிலே ஒட்டின கூழைப் போல.
கம்பளியிலே ஒட்டின பீ மாதிரி. 6940
(விடாது.)

கம்பளியிலே சோற்றைப் போட்டு மயிர் மயிர் என்கிறதா?
கம்பளி வேஷம்,
கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவிபாடும்.
(அடுப்புக் கட்டியும்.)
கம்பன் வீட்டு வெள்ளாட்டியும் கவி பாடுவாள்.
(வெள்ளாட்டி-வேலைக்காரி.)
கம்பனோ, வம்பனோ? 6945

கம்பி நீட்டினான்.
கம்புக்குக் களை பிடுங்கினாற் போலவும் தம்பிக்குப் பெண் பார்த்தாற் போலவும் ஆகும்.
கம்புக்குக் கால் உழவு.
கம்பு கொண்டு வந்து நாயை அடிப்பதா? கம்பு கிடக்கும் இடத்துக்கு நாயைத் தூக்கிக்கொண்டு போவதா?
கம்பு மாவு கும்பினால் களிக்கு ஆகுமா? 6950
(கூழுக்கு ஆகுமா?)

கம்மரீகமோ, ராஜரீகமோ?
கம்மாளப் பிணம் விறைத்தாற் போல.
கம்மாளன் இருந்த இடமும் கழுதை இருந்த இடமும் சரி.
கம்மாளன் எடுக்காத சிக்கலை வாணியன் எடுப்பான்.
கம்மாளன் குடித்தனம் பண்ணாதே. 6955

கம்மாளன் துணி வாங்கினால் கால்மயிர் தெரிய வாங்குவான்.
அதைச் சலவைக்கும் போடும் போது அடுப்பிலே போட்டாலும் வேகாது.
(சலவைக்குப் போட்டாலும் வேகாது.)
கம்மாளன் நாய் பட்டி ஒலிக்கு அஞ்சுமா?
(தொனிக்கு.)

கம்மாளன் பசுவைக் காது அறுத்துக் கொண்டாலும் உள்ளே செவ் வரக்குப் பாய்ச்சியிருப்பான்.

கம்மாளன் பசுவை காதறுத்துக் கொள்.

கம்மாளன் பசுவைக் காது அறுத்து வாங்கு. 6960

(கொள்வானாம்.)

கம்மாளன் பசுவைக் காது அறுத்துக் கொள்ள வேண்டும்.

கம்மாளன் பணம் கரியும் பொறியுமாய்ப் போய் விட்டது.

கம்மாளன் பல்லக்கு ஏறினால் கண்டவர்க்கு எல்லாம் இறங்க வேண்டும்.

கம்மாளன் பிணத்தைக் காது அறுத்தாலும் ரத்தம் வராது.

கம்மாளன் வீட்டிற் பிள்ளை பிறந்தால் தேவடியாள் வீட்டில் சர்க்கரை வழங்குவாள். 6965

(விலை மகள் தெருவில்.)

கம்மாளன் வீட்டு நாய் சம்மட்டிக்கு அஞ்சுமா?

கம்மாளன் வீட்டுப் பசுவை காதறுத்துப் பார்த்தாலும் அங்கும் செவ் வரக்குப் பாய்ந்திருக்கும்.

கமரில் ஊற்றிய பால்.

கமரில் கவிழ்த்த பால், அமரர்க்கு அளித்த அன்னம். 6970

கயா கயா.

கயிற்றுப் பிள்ளை, கைப்பிள்ளை.

(கயிற்றுப் பிள்ளை-மனைவி.)

கயிற்றைப் பாம்பு என்று எண்ணிக் கலங்குகிறது போல.

கயிறு அறுந்த பட்டம் போல.

கயிறு இல்லாப் பம்பரம் போல. 6975

கயிறு திரிக்கிறான்.

கர்ணன் கொடை பாதி, காவேரி பாதி.

கர்ணனுக்குப் பட்டினி உடன் பிறப்பு.

(கர்ணன்-கணக்கப்பிள்ளை.)

கர்த்தனைக் குருடன் கண்தான் வேண்டுவான்.

கர்த்தா, போக்தா, ஜனார்த்தனா. 6980

கர்த்தாவின் செயல் உள்ளபடி.

கர்த்தாவைக் குருடன் வேண்டுவது கண் பெறத்தானே?
கர்ப்பத்துக்குச் சுகம் உண்டானால் சிசுவுக்குச் சுகம்.
கர்ப்பிணியின் பேரில் துர்ப்பலம்.
கர்ப்பூர மலையில் ஆக்நேயாஸ்திரம் பிரயோகித்தது போல.
கர்மத்தினாலே வந்தது தர்மத்தினாலே போக வேண்டும். 6985
(தொலைக்க.)

கர்மம் முந்தியா? ஜன்மம் முந்தியா?
கர்விக்கு மானம் இல்லை; கோபிக்குப் பாபம் இல்லை.
கரகத்துத் தண்ணீர் காத வழி.
கரகத்து நீர் காதம் காக்கும்.
(கரகத்துக்கு நீர் காகம் காக்கும்.)
கரட்டுக் காட்டுக்கு முரட்டு மண் வெட்டி. 6990

கரடிக்கு உடம்பெல்லாம் மயிர்.
கரடிக்குப் பயந்து ஆனையிடம் தஞ்சம் புகுந்தாற் போல.
கரடிக்குப் பிடித்த இடம் எல்லாம் மயிர்.
கரடி கையில் அகப்பட்டவனுக்கு கம்பளிக்காரனைக் கண்டாலும் பயம்.
(உதை பட்டவனுக்கு.)
கரடி துரத்தினாலும் கைக்கோளத் தெருவில் போக இடம் இராது. 6995
(வழி இராது, இருக்குமா?)

கரடி பிறையைக் கண்டது போல.
கரடியைக் கைவிட்டாலும் கரடி கையை விடவில்லை.
கரண்டி ஆபீஸ்காரனுக்குக் காதிலே கடுக்கன் என்ன?
கரண்டி பிடித்த கையும் கன்னக்கோல் பிடித்த கையும் சும்மா இருக்குமா?
கரணம் தப்பினால் மரணம். 7000
(கரணம்-திருமணம்.)

கரதலாமலகம் போல் காண்கிறது.
கரம் கொண்டவன் அறம் வழுவலாகாது.
கரம் பற்றிய கன்னியைக் கதற அடிக்கக் கூடாது.
கரம் மாறிக் கட்டினால் கனம் குறையாது.
கரிக்காலி முகத்தில் விழித்தால் கஞ்சியும் கிடையாது. 7005

கரிக்குருவியார் கண்ணுக்குக் காக்கையார் பொன்னொத்துத் தோன்றும்.
(சீவக சிந்தாமணி.)

கரிச்சுக் கொட்டினால் எரிச்சல் வராதா?
கரிசனப்பட்ட மாமியார் மருமகளைப் பார்த்து ஏக்கம் உற்றாளாம்.
கரிசனம் உள்ள கட்டியம்மா, கதவைத் திற பீப்பெய்ய.
கரிசனம் உற்ற சிற்றாத்தே, நீ கம்பங்கொல்லையில் வாடி கட்டி அழ. 7010

கரிசனம் எல்லாம் கண்ணுக்குள்ளே; வஞ்சனை எல்லாம் நெஞ்சுக்குள்ளே.
கரியாய் உமியாய்க் கட்டை விளக்குமாறாய்.
கரியை வழித்து முகத்தில் தடவினாள்.
கரி விற்ற பணம் கறுப்பாய் இருக்குமா?
(விற்ற காசு கரியாய் இருக்குமா? கறுக்குமா?)
கரு இல்லாத முட்டையும் குரு இல்லாத வித்தையும். 7015
(சிஷ்யனும்.)

கருக்கலில் எழுந்தாலும் நறுக்கென்று சமைக்க மாட்டாள்.
கருக்கலில் கயிற்றைப் பாம்பு என்ற கதை.
கருக்கி உருக்கி நெய் வார்த்தாலும் கண்ட நியாயந்தான் சொல்லுவான்.
கருங்கண்ணி பட்டாலும் கரையான் கண்ணாலும் திரும்பிப் பாரான்.
கருங்கல்லில் ஈரம் ஏறாத் தன்மை போல. 7020

கருங்கல்லில் எழுதிய எழுத்தைப் போல.
கருங்கல்லிலே நார் உரிப்பான்.
கருங்காலி உலக்கைக்கு வெள்ளிப் பூண் கட்டினது போல.
கருங்காலிக் கட்டைக்கு வாய் நாணாத கோடாலி இளவாழைத் தண்டுக்கு வாய் நாணும்.
(கோணாத கோடாலி, கதலித்தண்டுக்குக் கோணி விடும்.)
கருங்குரங்கு போல மலங்க விழிக்காதே. 7025

கருங்கொல்லன் உலைக்களத்தில் நாய்க்கு என்ன வேலை?
கருடன் இடம் போனால் எவன் கையில் பொருளும் தன் கையில் சேரும்.
(பிறன் கைப்பொருள், தன் கைப்பொருள்.)

கருடன் காலில் கெச்சை கட்டினது போல.
(சதங்கை.)
கருடன் பறக்க ஒரு கொசு பறந்தாற் போல.
கருடனுக்கு முன் ஈ ஆகுமா? 7030

கருடன் முன்னே கொசு பறந்த கதை.
கருடனுடன் ஊர்க்குருவி பறந்தது போல.
கருடனைக் கண்ட பாம்பு போல.
(சர்ப்பம்.)
கருடி கற்றவன் இடறி விழுந்தால் அதுவும் ஒரு வித்தை.
கருப்பங்கட்டி ஆதாயத்தை எறும்பு இழுத்துக் கொண்டு போச்சுதாம். 7035

கருப்பங்கட்டியிலும் கல் இருக்கும்.
கருப்பங் கொல்லையிலே நெருப்புப் பொறி விழுந்தாற்போல்.
கருப்பட்டி என்றவுடனே சளப்பட்டி என்று நக்கக் கூடாது.
(என்றவன் வாயைக் கருப்பட்டி என்று.)
கருப்பட்டியிலும் கல் இருக்கும்.
(உண்டு.)
கருப்பட்டியைக் கொடுத்துக் கட்டிக்கொண்டு அழுதாலும் கசக்குது என்று சொல்கிறான். 7040

கருப்பட்டி லாபம் என்று புழுத்துப் போன கதை.
கருப்பிலே பிள்ளை விற்றாற்போல.
(விற்ற கதை. கருப்பு-பஞ்சம்.)
கருப்புக் கட்டி ஆதாயத்தை எறும்பு இழுத்துக் கொண்டு போயிற்றாம்.
கருப்புக் கட்டிக்கு எறும்பு தானே வரும்.
கருப்புக் கட்டியிலும் கல் கிடக்கும். 7045

கருப்புக்கு இருந்து பிழை; கலகத்துக்கு ஓடிப் பிழை.
கருப்பூர் மத்யஸ்தம் போல.

கருப்பூர் வழக்குப் போல.
கரும்பில் எறும்பு இருந்தால் ஆனைக்கு என்ன?
கரும்பிலும் தேன் இருக்கும். 7050

கரும்பிலும் தேன் இருக்கும்; கள்ளியிலும் பால் இருக்கும்.
கரும்பு ஆலையில் பட்ட எறும்பு போல.
(அகப்பட்ட.)
கரும்பு இருக்க இரும்பு கடித்து எய்த்தாற்போல்.
(தேவாரம்.)
கரும்பு உள்ள போதே ஆலை ஆட்டிக்கொள்.
(ஆலையிடு. ஆட்டவேணும்.)
கரும்புக் கட்டாலே கழுதையை அடித்தால் கழுதைக்குத் தெரியுமா கரும்பு ருசி? 7055

கரும்புக் கட்டுக்கு எறும்பு தானே வரும்.
கரும்புக்கு உழுத புழுதி காயச்சின பாலுக்குச் சர்க்கரை ஆகுமா?
கரும்புக்குக் கணு இருந்தாலும் கசக்குமா?
கரும்புக்குப் பழமும் கற்றவருக்குப் பணமும் பொன்னுக்கு மணமும் இல்லை.
கரும்புக் கொல்லையைக் காக்க ஆனையை விட்டது போல. 7060

கரும்பு கட்டோடு இருந்தால் எறும்பு தன்னோடு வரும்.
கரும்பு கசத்தல் வாய்க் குற்றம்.
கரும்பு கசந்தால் வாய்க்குப் பொல்லாப்பு.
கரும்பு கசந்தது காலத்தோடே; வேம்பு தித்தித்தது வேளையோடே.
கரும்பும் எள்ளும் கசக்கினால்தான் பலன். 7065

கரும்பு முறித்துக் கழுதையை அடித்த கதை.
கரும்பும் வேம்பு ஆகும் காதல் போதையிலே.
கரும்பும் வேம்பு ஆச்சே.
கரும்பு ருசி என்று வேரோடு பிடுங்கலாமா?

கரும்பு லாபம் எறும்பு கொண்டு போகும். 7070

கரும்பு வைப்பது காணி நிலத்தில்.
கரும்பைக் கழுதை முன் போட்டால் அதற்குத் தெரியுமோ கரும்பு ருசி?
கரும்பைக் கையில் பிடித்தவன் எல்லாம் மன்மதன் ஆகிவிடுவானா?
கரும்பை நறுக்கிப் பிழிந்தாற் போல.
கரும்பை முறித்தாற் போல. 7075

கரும்பை முறித்துக் கழுதையை அடித்த கதை.
கரும்பை விரும்ப அது வேம்பு ஆயிற்று.
கரும்பை விரும்ப விரும்ப வேம்பு.
கரும்பை வேம்பு ஆக்கினாற் போல.
கரும ஒழுங்கு பெருமைக்கு அளவு. 7080
(அழகு.)

கருமத்தை முடிக்கிறவன் அருமை பாரான்.
(ஒன்றும் பாரான்.)
கருமத்தை முடிக்கிறவன் கடலை ஆராய்வான்.
கருமம் தொலையாது.
கருமான் இருந்த இடமும் கழுதை புரண்ட களமும் சரி.
கருமான் உலைக்களத்தில் நாய்க்கு என்ன வேலை? 7085

கருமான் வீட்டு நாய் சம்மட்டித் தொனிக்கு அஞ்சுமா?
கருவளையும் கையுமாய்.
கருவேல மரத்திற்கு நிழல் இல்லை; கன்னானுக்கு முறை இல்லை.
கருவை உரு அறியான், கண்டாரைப் பேரறியான்.
கரைக்கும் கரைக்கும் சங்கிலி; நடுவிலே இருக்கிறவன் நாய் விட்டை. 7090

கரை காணாத தோணிபோலத் தவிக்கிறது.
(கப்பலைப் போல.)
கரை தட்டின கப்பலைப் போல.
(கப்பற்காரன் போல.)

கரைப் பக்கம் பாதை இருக்கக் கப்பல் ஏறினவனும், சொல்லாததை மனையாளுக்குச் சொன்னவனும் பட்ட பாடுபோல.
கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும்.
(கலைப்பார்.)
கல் அடிச் சித்தன் போனவழி (காடு) வீடெல்லாம் தவிடு பொடி. 7095

கல் அடி பட்டாலும் கண் அடி படக் கூடாது.
கல் ஆனாலும் கணவன்; புல் ஆனாலும் புருஷன்.
கல் ஆனாலும் தடி ஆனாலும் பல் போகிறது ஒன்று.
கல் உள்ளதே கிணறு; கரை உள்ளதே தோட்டம்.
கல் எடுத்தால் நாய் ஓடும்; கம்பு எடுத்தால் பேய் ஓடும். 7100

கல் எல்லாம் மாணிக்கக் கல் ஆமோ?
கல் எறிக்குத் தப்பினாலும் கண் எறிக்குத் தப்பிக்க முடியாது.
(கூடாது.)
கல் என்றாலும் கணவன்; புல் என்றாலும் புருஷன்.
கல் ஒன்று, கணக்கு ஒன்று, குதிரை ஒன்று, கூத்தியாள் ஒன்று.
(கொங்கு நாட்டுக் குருக்களுக்கு உள்ளவை.)
கல் கிணற்றுக்கு ஏற்ற இரும்புத் தோண்டி. 7105

கல் கிள்ளிக் கை உய்ந்தார் இல்.
(பழமொழி நானூறு.)
கல் பிறவாத காடே உழு.
கல்மேல் எழுத்துக் கலைமான்.
கல்மேல் எழுத்துப் போல.
கல்மேல் நெல் விளையும் கல்யாணம் முடி. 7110

கல்யாணச் சந்தடியில் தாலி கட்ட மறந்த கதை போல.
கல்யாணத்தில் பஞ்சம் இல்லை.
கல்யாணத்திலும் பஞ்சம் இல்லை; களத்திலும் பஞ்சம் இல்லை.
கல்யாணத்துக்கு உதவாத பூசணிக்காய் பந்தலிலே கட்டி ஆடுகிறது.
கல்யாணத்துக்கு வந்த பெண்டுகளிடத்தில் போனால் போவேன்; இல்லாவிட்டால் கல்லிலே வைத்து நறுக்குவேன். 7115

கல்யாணத்தை நிறுத்தச் சீப்பை ஒளித்து வைத்தது போல.
கல்யாணப் பஞ்சமும் களப்பஞ்சமும் இல்லை.
(கல்யாணப் பஞ்சம் உண்டு.)
கல்யாணப் பந்தலிலே கட்டின ஆடு போல.
கல்யாணப் பந்தலிலே தாலி கட்ட மறந்தது போல்.
கல்யாணம் ஆகாதவனுக்கு ஒரு கவலை; கல்யாணம் ஆனவனுக்கு ஆயிரம் கவலை. 7120

கல்யாணம் எங்கே? காசுப் பையிலே.
கல்யாணம் என்றால் கிள்ளுக் கீரையா?
கல்யாணம் கழிந்தால் கைச்சிமிழ் கிட்டாது.
கல்யாணம், கார்த்திகை, சீர், செனத்தி.
கல்யாணம் செய்கிறதும் கதவைச் சாத்துகிறதும். 7125

கல்யாணம் செய்தும் சந்நியாசியா?
கல்யாணம் பண்ணவில்லையென்று களிப்பு; ஊர்வலம் வரவில்லையென்று உளப்பு.
(ஒளப்பு.)
கல்யாணம் பண்ணாமல் பைத்தியம் தீராது; பைத்தியம் தீராமல் கல்யாணம் ஆகாது.
கல்யாணம் பண்ணிக்கொள் என்றால், நீயே பெண்டாட்டியாய் இரு என்றது போல.
கல்யாணம் பண்ணியும் சந்நியாசி; கடன் வாங்கியும் பட்டினி. 7130

கல்யாணம் பண்ணின வீட்டில் ஆறு மாசம் கருப்பு;
(கருப்பு-பஞ்சம்.)
கலயாணம் பண்ணும் வரையில் பிள்ளை; கண்ணை மூடும் வரையில் பெண்.
கல்யாணம் போவதும் கட்டி அழுவதும் வட்டியில்லாக் கடன்.
கல்யாணம் முடிந்த பிறகு பந்தலில் வேலை என்ன?
கல்யாணமும் வேண்டாம்; கல்லெடுப்பும் வேண்டாம். 7135

கல்யாண வீட்டில் ஆறு மாதம் கருப்பு.
கல்யாண வீட்டில் கட்டி அழுகிறவள் இழவு வீட்டில் விட்டுக் கொடுப்பாளா?
கல்யாண வீட்டிலே கட்டி அழலாமா?
கல்யாண வீட்டிலே பந்தற்காலைக் கட்டி அழுகிறவள் செத்த வீட்டில் சும்மா இருப்பாளா?
கல்யாண வீட்டிலே பிள்ளை வளர்த்தாற்போல். 7140

கல்யாண வீட்டிற்குப் போய் அறியான்; மேளச்சத்தம் கேட்டு அறியான்.
கல்யாண வீட்டுக் கறி அகப்பை; சாவு வீட்டுச் சோற்று அகப்பை.
கல்யாணி என்கிற பெண்ணுக்குக் கல்யாணமும் வேண்டுமோ?
கல்லடி சித்தன் போன வழி காடு மேடு எல்லாம் தவிடுபொடி.
கல்லன் கரியும் கொல்லன் குசுவுமாய்ப் போச்சு. 7145

கல்லா ஒருவன் குல நலம் பேசுதல் நெல்லுடன் பிறந்த பதராகும்மே!
(வெற்றி வேற்கை.)
கல்லாடம் படித்தவனோடு சொல்லாடாதே.
(மல்லாடாதே.)
கல்லாதவரே கண் இல்லாதார்.
கல்லாதார் செல்வத்திலும் கற்றார் வறுமை நலம்.
கல்லாமல் குல வித்தை பாதி வரும். 7150

கல்லார் உறவிலும் கற்றார் பகை நலம்.
கல்லார் உறவு அகல்; காமக் கடல் கட.
கல்லாலே கட்டிச் சாந்தாலே பூசியிருக்கிறதா?
கல்லில் நார் உரிப்பவன்.
கல்லில் நெல் முளைத்தாற்போல. 7155
(அருமைப்பாடு.)

கல்லிலும் வன்மை கனமூடர் நெஞ்சு.
கல்லிலே நார் உரிக்கிறது போல.

கல்லிலே வெட்டி நாட்டினது போல.
கல்லின்மேல் இட்ட அம்புகளைப் போல.
கல்லின்மேல் இட்ட கலம் 7160

கல்லினுள் தேரையையும் முட்டைக்குள் குஞ்சையும் ஊட்டி வளர்ப்பது யார்?
கல்லுக் கிணற்றுக்கு ஏற்ற இருப்புத் தோண்டி.
கல்லுக்கும் முள்ளுக்கும் அசையாது வெள்ளிக்கிழமைப் பிள்ளையார்.
கல்லுக்குள் இருக்கிற தேரையையும் முட்டைக்குள் இருக்கிற பறவைக் குஞ்சையும் ஊட்டி வளர்க்கிறவர் யார்?
கல்லுக்குள் தேரையைக் காப்பாற்றவில்லையா? 7165

கல்லுப் பிள்ளையாரைக் கடித்தால் பல்லுப் போம்.
கல்லும் கரியும் கொல்லன் குசுவுமாய்ப் போச்சு.
கல்லும் கரைய மண்ணும் உருக அழுதாள்.
கல்லும் கரையுமே, கற்றாணும் இற்றுப் போமே!
கல்லும் காவேரியும் உள்ள மட்டும் வாழ்க! 7170

கல்லும் தேங்காயும் சந்தித்தது போலப் பேசுகிறான்.
கல்லுளிச் சித்தன் போன வழி காடு மேடெல்லாம் தவிடுபொடி.
கல்லுளி மங்கா, கதவைத் திற.
கல்லே தலையணை, கானலே பஞ்சு மெத்தை.
கல்லை ஆகிலும் கரைக்கலாம்; கல்மனத்தைக் கரைக்கலாகாது. 7175
(மூர்க்கன் மனத்தை.)

கல்லை இடறினாலும் கணக்கனை இடறாதே.
(கல்லோடு, கணக்கனோடு.)
கல்லை எதிர்த்தாலும் கணக்கனை எதிர்க்காதே.
கல்லைக் கட்டிக் கொண்டு கசத்தில் இறங்குவது போல.
கல்லைக் கட்டி முத்தம் கொடுத்தாற்போல.
கல்லைக் கண்டால் நாயைக் காணோம்; நாயைக் கண்டால் கல்லைக் காணோம். 7180

கல்லைக் கிள்ளிக் கை இழந்தது போலாம்.
கல்லைக் கிள்ளினால் கை நோகும்.
கல்லைக் குத்துவானேன்? கைநோகுதென்று அழுவானேன்?

கல்லைப் பிளக்கக் காணத்தை விதை.
(பிளந்து.)
கல்லைப்போல் அகமுடையான் இருக்கக் கஞ்சிக்கு
அழுவானேன்? 7185

கல்லைப் போலக் கணவன் இருக்க நெற்சோற்றுக்கு அழுவானேன்?
கல்லைப் போலப் பெண்டாட்டி இருக்கக் கடப்பை அரிசிச்
சோற்றுக்கு நிற்பானேன்?
கல்லோடு இடறினாலும் கணக்கனோடு இடறாதே.
(முரணினாலும்.)
கல் வருகிற விசையைக் கண்டால் பல்லைச் சிக்கென மூட
வேண்டும்.
கல்வி அழகே அழகு. 7190
(நாலடியார்.)

கல்வி இல்லாச் செல்வம் கற்பில்லா அழகு.
(அழகி. கடுகளவும்பிரகாசிக்கா.)
கல்வி உள்ள வாலிபன் கன கிழவனே.
(கற்றவன் கன கிழவன்.)
கல்வி என்ற பயிருக்குக் கண்ணீர் என்ற மழை வேண்டும்.
கல்வி ஒன்றே அழியாச் செல்வம்.
கல்விக்காரப் பெண்ணாள் களைவெட்டப் போனாள்; களைக்கொட்டு
இல்லையென்று மெனக்கெட்டுப் போச்சு. 7195

கல்விக்கு அழகு கசடு அற மொழிதல்.
கல்விக்கு இருவர், களவுக்கு ஒருவர்.
கல்வி கரை இல; கற்பவர் நாட் சில.
(நாலடியார்.)
கல்வி கற்கிறதைவிடக் கருத்தை ஆராய்கிறது நன்மை.
(தன் கருத்தை.)
கல்வி கற்றும் கழுநீர்ப் பானையில் கை இடுகிறது. 7200
(விடுவது போல.)

கல் விதைத்து நெல் அறுத்தவர் யார்?
கல்வியிற் பெரியவன் கம்பன்.
கல்வியும் குலமும் வெல்வது வினவின்.
கல் விழுந்தாலும் விழும்; காய் விழுந்தாலும் விழும்.

கல் வீட்டில் இருக்கும் கடனும் தெரியாதாம்; கறுப்புப் புடைவையில்
இருக்கும் அழுக்கும் தெரியாதாம். 7205
கல்வீட்டுக்காரி போனால் கமுக்கம்; கூரை வீட்டுக்காரி
போனால் கூச்சம்.
கல உமி நின்றால் ஓர் அரிசி தட்டாதா?
(ஓர் அவிழ்.)
கல உமி தின்றால் ஓர் அவல் கிடைக்காதா?
கலக்கத்தில் கலக்கம் கடன் கொண்டார் நெஞ்சக் கலக்கம்.
கலக்கந்தை கட்டிக் காணப் போனால் இருகலக் கந்தை கட்டி
எதிரே வந்தாள். 7210
கலக்கம் இல்லா நெஞ்சுக்கு இனக்காப்பு என்ன?
கலக்கம்பு தின்றாலும் காடை காட்டிலே.
கலக்கம்பு போட்டு வளர்த்தாலும் காடை காட்டிலே.
கலக்க விதைத்தால் களஞ்சியம் நிறையும்; அடர விதைத்தால்
போர் உயரும்.
கலக்கிய தண்ணீரில் கெளிற்று மீன் வாய் திறந்து தவிப்பது
போல. 7215
கலக்கினும் தண் கடல் சேறு ஆகாது.
கலத்தில் இட்டாயோ, வயிற்றில் இட்டாயோ?
கலத்தில் சாதம் போட்டதும் காசிக்குப் போனவனும் வருவான்.
கலகத்திலே புளுகாதவன் நரகத்திலே போவானாம்.
(புகாதவன்.)
கலகத்திலே புளுகாதவர் இல்லை. 7220
கலகத்திலே போயும் கால்மாடு தலைமாடா?
(போன பிற்பாடு.)
கலகம் கலந்தால் உலகம் கலங்கும்.
கலகம் பிறந்தால் நியாயம் பிறக்கும்.
கலகமே மெய்யானால் புளுகாதவன் பாவம்.
கலத்தில் இட்டுக் கையைப் பிடிக்காதே. 7225
(பிடிக்கிறதா.)

கலத்தில் சோற்றை இட்டுக் கையைப் பிடித்தாற்போல.
கலத்துக்குத் தெரியுமா, கர்ப்பூர வாசனை?
கலந்த விதைப்புச் சிறந்த பலனைத் தரும்.
கலப் பணத்தைக் காட்டிலும் ஒரு கிழப் பிணம் நல்லது.
கலப் பயறு விதைத்து உழக்குப் பயிர் விளைந்தாலும் புதுப் பயறு
புதுப் பயறுதான். 7230

கலப் பால் கறக்கலாம்; துளிப் பால் முலைக்கு ஏற்றலாமா?
(உழக்குப் பால் ஏற்ற முடியுமா?)
கலப் பால் கறந்தாலும் கன்று முதலாகுமா?
கலப் பால் குடித்த பூனை ஆழாக்குப் பால் குடியாதா?
(உழக்குப் பால்)
கலப் பால் குடித்த பூனை ஓர் உழக்காகிலும் கறக்கத் தருமா?
கலப் பால் கூடி ஒரு கன்று ஆகுமா? 7235

கலப் பாலில் ஒரு துளி விஷம் கலந்தாற் போல.
கலப் பாலுக்குத் துளி பிரை.
கலப் பாலை ஒருமிக்கக் குடித்த பூனையை உழக்காகிலும்
கறக்கச் சொன்னால் கறக்குமா?
கலப் பாலைக் காலால் உதைத்துவிட்டு விலை மோருக்கு
வெளியே அலைகிறதா?
(விலை மோருக்கும் கூழுக்கும் வெளியே தவிக்கிறதா?)
கலப்பு ஆனாலும் பூசப் பூசப் பொன் நிறம். 7240

கலப்புல் தின்றாலும் காடை காட்டுக்குள்ளே.
கலப்புழுவை நீக்கின கர்ணன்.
கலம் கந்தை கொண்டு காண வந்தாள்; இருகலக் கந்தை கொண்டு
எதிரே வந்தாள்.
கலம் கலந்தால் குலம் கலக்கும்.
கலம் கிடக்கிறது கழுவாமல்; கல நெல் கிடக்கிறது
குத்தாமல். 7245

கலம் குத்தினாலும் பதர் அரிசி ஆகாது.
கலம் குத்துகிறவள் காமாட்டி; கப்பி குத்துகிறவள் சீமாட்டி.
கலம் பதரைக் குத்தினாலும் அரிசி ஆகாது.

கலம் பாலுக்குத் துளிப் பிரை.
கலம் போனதும் அல்லாமல் கண்ணுக்கும் மூக்குக்கும் வந்ததுபோல. 7250

கலம் மா இடித்தவள் பாவி; கப்பி இடித்தவள் புண்ணியவதியா?
கலவன் கீரை பறிப்பது போலப் பேசுகிறாள்.
(கலவைக்கீரை.)
கலிக்குப் புதுமையான காரியம் இருக்கிறது.
கலிக்கும் கிலிக்கும் கந்தனை எண்ணு.
கலி காம தேனு. 7255

கலி காலத்திலே கண்ணுக்கு முன் காட்டும்.
கலியன் பாற்சோறு கண்டது போல.
கலெக்டரோடு வழக்குக்குப் போனாலும் கணக்கனோடு வம்புக்குப் போகக் கூடாது.
கலை பல கற்றாலும் மலைப்பது போல இருக்கும்.
கலையும் மப்பைக் கண்டு கட்டி இருந்த விதையை வட்டிக்கு விட்டானாம். 7260

கலையும் மப்பைக் கண்டு கரைத்த மாவை வட்டிக்கு விட்டதுபோல.
கவ்வை சொல்லின் எவ்வர்க்கும் பகை.
கவடு இருந்த நெஞ்சும் களை இருந்த பயிரும் கடைத்தேறா.
கவண் எறி நிலை நில்லாது; கண்டவன் தலையை உடைக்கும்.
கவண் எறி நெறியில் நில்லாதே; கண்டவன் தலையை உடைக்கும்? 7265

கவரைச் செட்டி மேலே கழுதை புரண்டு ஏறினாற் போல.
கவலை இல்லாக் கஞ்சி கால் வயிற்றுக்குப் போதும்.
கவலை உடையாருக்குக் கண் உறக்கம் வராது.
(இல்லை.)
கவி அறியாவிடில் ரவியும் அறியான்.
கவி கண் காட்டும். 7270

கவி கொண்டாருக்குக் கீர்த்தி; அதைச் செவி கொள்ளாருக்கு அபகீர்த்தி.
கவி கொண்டாருக்கும் கீர்த்தி; கலைப்பாருக்கும் கீர்த்தியா?

கவிதை எழுதின கை கணக்கு எழுதுகிறது.
கவிழ்ந்த பால் கலம் ஏறாது.
கவீந்திராணாம் கஜேந்திராணாம் ராஜாவே நிர்பயோகி. 7275

கவுண்டன் கல்யாணம் ஒன்று இரண்டாய் முடிந்து போச்சு.
கவுண்டன் வீட்டு எச்சில் இலைக்கு கம்பன் வீட்டு நாய்கள் எல்லாம் அடித்துக் கொள்கின்றன.
கவைக்கு உதவாத காரியம்.
கவைக்குக் கழுதையையும் காலைப் பிடி.
கவைக்குத் தகாத காரியம் சீமைக்குத் தகுமா? 7280

கவையை ஓங்கினால் அடி இரண்டு.
கவையைப் பற்றிக் கழுதையின் காலைப் பிடி.
கழனிக்கு அண்டை வெட்டிப் பார்; கண்ணுக்கு மை இட்டுப் பார்.
கழனியில் விழுந்த கழுதைக்கு அதுவே கைலாசம்.
(புரண்ட.)
கழி இருந்தால் கழுதையை மேய்த்துக் கொள்ளலாம். 7285

கழிச்சலும் விக்கலும் சேர்ந்தால் நம்பப் படாது.
கழித்த பாக்குக் கொடுக்காத பெரியாத்தாள் கடற்கரை வரை வந்து வழி விட்டாளாம்.
(செட்டிநாட்டு வழக்கு.)
கழு ஏறத் துணிந்த நீலி கையில் மை இட்டதற்குக் கரிக்கிறது என்றாளாம்.
(கண்ணில் மை கரிக்கிறது என்றாளாம்.)
கழு ஒன்று, களவு ஆயிரம்.
கழுக்கு மொழுக்கு என்று இருக்கிறான். 7290

கழுக்கு மொழுக்கு என்று கட்டுருக் காளை போல.
கழுகாய்ப் பிடுங்குகிறான்.
(கழுகுபோல்.)
கழுகுக்கு மூக்கிலே வேர்த்தாற் போல.
கழுத்தில் இருக்கிறது ருத்திராட்சம்; கையிலே இருக்கிறது கொடிய நகம்.
கழுத்தில் இருக்கிறது ருத்திராட்சம்; மடியில் இருப்பது கன்னக் கோல். 7295
(கட்கத்தில். கையில்.)

கழுத்திலே கரிமணி இல்லை; பெயர் முத்துமாலை.
கழுத்திலே குத்துகிறது கண் கெட்டவனுக்குத் தெரியாதா?
கழுத்திலே தாலி ஏறினால் நாய்மாதிரி வீட்டில் கிடக்க வேண்டியது தானே?
கழுத்துக்குக் கருகுமணி இல்லை; பெயர் முத்தாபரணம்.
கழுத்திலே தாழி வடம்; மனத்திலே கரவடம். 7300
(அவகடம்.)

கழுத்து அறுக்கக் கத்தி கையில் கொடுத்தது போல.
கழுத்துக்குக் கீழே போனால் கஷ்டம்.
கழுத்துக்குமேல் கத்தி வந்திருக்கச்சே செய்ய வேண்டியது என்ன?
கழுத்துக்குமேல் சாண் போனால் என்ன? முழம் போனால் என்ன?
கழுத்து மாப்பிள்ளைக்குப் பயப்படாவிட்டாலும் வயிற்றுப் பிள்ளைக்குப் பயப்பட வேண்டும். 7305

கழுத்து வெளுத்தாலும் காக்கை கருடன் ஆகுமா?
கழுத்தைக் கொடுத்தாச்சு; கைவிலங்கு போட்டாச்சு; பத்து நாள் சிறையில் பதுங்கிக் கிடக்க வேணும்.
கழுத்தைக் கொடுத்தாலும் எழுத்தைக் கொடாதே.
கழுதை அறியுமா, கந்தப்பொடி வாசனை?
(கர்ப்பூர வாசனை.)
கழுதை உழவுக்கு வராது. 7310

கழுதை உழுகிறவன் குடியானவனா?
கழுதை உழுது கம்பு விளையுமா? கண்டியான் உழுது நெல் விளையுமா?
கழுதை உழுது குறவன் குடி ஆனானா?
கழுதை உழுது வண்ணான் குடி ஆனானா?
கழுதைக் காமம் கத்தினால் தீரும்; நாய்க் காமம் அலைந்தால் தீரும். 7315

கழுதைக்கு உபதேசம் காதில் ஏறுமா?
(உபதேசம் செய்தால்.)
கழுதைக்கு உபதேசம் காதிலே ஓதினாலும் காள் காள் என்ற புத்தியை விடாது.

கழுதைக்கு உபதேசம் காதிலே சொன்னாலும் அபயக் குரலன்றி அங்கொன்றும் இல்லை.
(அங்கேதும்.)

கழுதைக்கு உபதேசம் காதிலே சொன்னாலும் அவயக் குரலே ஒழியச் சவைக்குரல் இல்லையாம்.
(உரைத்தாலும்.)

கழுதைக்கு உபதேசம் பண்ணினால் அபத்தக் குரலைத் தவிர நல்ல குரல் இல்லை. 7320

கழுதைக்கு ஏன் கடிவாளம்?
(ஏன் கலினம்?)

கழுதைக்குக் காது அறுந்து, நாய்க்கு வால் அறுந்தது போல.

கழுதைக்குச் சேணம் கட்டினால் குதிரை ஆகுமா?
(ஜீனி கட்டினால்.)

கழுதைக்குத் தெரியுமா கரும்பு ருசி?
(கஸ்தூரி வாசனை.)

கழுதைக்குப் பரதேசம் குட்டிச் சுவர். 7325

கழுதைக்குப் பின்னால் போகாதே; எஜமானுக்கு முன்னால் போகாதே.

கழுதைக்கு வரி கட்டினால் குதிரை ஆகுமா?

கழுதைக்கு வாழ்க்கைப்பட்டு உதைக்கு அஞ்சலாமா?

கழுதை கத்து என்றால் கத்தாதாம்; தானாகக் கத்துமாம்.

கழுதை கெட்டால் குட்டிச் சுவர்; நாய் கெட்டால் குப்பைத் தொட்டி. 7330

கழுதை தப்பினால் குட்டிச் சுவர்.

கழுதை தேய்ந்து கட்டெறும்பு ஆனது போல.

கழுதை நினைத்ததாம் கந்தலும் கதக்கலும்.

கழுதை நினைத்ததாம் கெண்டை போட்ட முண்டாசு.

கழுதைப் பாரம் வண்ணானுக்கு என்ன தெரியும்? 7335

கழுதைப் பால் குடித்தவன் போல் இருக்கிறான்.

கழுதைப் புட்டை ஆனாலும் கைநிறைய வேண்டும்.
(விட்டை. லத்தி.)
கழுதைப் புண்ணுக்குத் தெருப்புழுதி மருந்து.
கழுதைப் பொதியில் உறை மோசமா?
(மாறாட்டமா?)
கழுதைப் பொதியில் ஐங்கலம் மாறாட்டமா? 7340

கழுதை புரண்ட களம் போல.
கழுதை புரண்டால் காடு கொள்ளாது.
கழுதை புவியில் இருந்தால் என்ன? பாதாளத்தில் இருந்தால் என்ன?
கழுதை மயிர் பிடுங்கித் தேசம் கட்டி ஆள்கிறதா?
கழுதை மூத்திரத்தை நம்பிக் கட்டுச் சோற்றை அவிழ்க்கிறதா? 7345

கழுதைமேல் ஏறி என்ன? இறங்கி என்ன?
கழுதைமேல் ஏறியும் பெருமை இல்லை; இறங்கியும் சிறுமை இல்லை.
கழுதையாகப் போய்க் கட்டெறும்பாய்த் திரும்பி வந்தது.
கழுதையாய்ப் பிறந்தாலும் காஞ்சீபுரத்திலே பிறக்க வேணும்.
கழுதையின் எறியைக் கழுதைதான் தாங்க வேணும். 7350

கழுதையின் காதிலே கட்டெறும்பை விட்டாற் போல.
(பிட்டத்தில்.)
கழுதையும் குதிரையும் சரி ஆகுமா?
கழுதையும் நாயும் சேர்ந்து கத்தினாற்போல.
கழுதையும் பணமும் சேர்ந்து வந்தால் பணத்தை வாங்கிக் கொண்டு கழுதையைத் துரத்தி விடு.
கழுதையைக் கட்டி ஓமம் வளர்த்தது போல. 7355
(வளர்க்கலாமா?)

கழுதையைக் கொண்டு உழுது குறவன் உழவன் ஆனான்.
கழுதையையும் குதிரையையும் பிணைத்தாற் போல.
கழுதை லத்தி கை நிறைய.

கழுதை வளையற்காரன் கிட்டப் போயும் கெட்டது; வண்ணான் கிட்டப் போயும் கெட்டது.
கழுதை வாலைப் பிடித்துக் கரை ஏறுகிறதா? 7360

கழுதை விட்டை ஆனாலும் கைநிறைய வேண்டும்.
கழுதை விட்டை கை நிரம்பினால் போதும் என்ற கதை.
கழுதை விட்டையிலே மேல் விட்டை வேறே; அடி விட்டை வேறேயா?
(முன் விட்டை, பின் விட்டை.)
கழுதை விட்டையைக் கைநிறையப் பொறுக்கினது போல.
கழுநீர்த் தொட்டி நாய் போல. 7365

கழுநீர்ப் பானையில் விழுந்த பல்லியைப் போல.
கழுநீருக்கு அண்டை வீட்டைப் பார்; கண்ணுக்கு மையிட்டுப் பார்.
கழுவிக் கழுவி ஊற்றினாலும் கவிச்சு நாற்றம் போகாது.
கழுவிக் கழுவிப் பின்னும் சேற்றை மிதிக்கிறதா?
கழுவிக் குளித்தாலும் காக்கை நிறம் மாறாது; உருவிக் குளித்தாலும் ஊத்தை நாற்றம் போகாது. 7370

கழுவிய காலைச் சேற்றில் வைக்கிறதா?
கழுவில் இருந்து கை காட்டுவான்.
கழுவிலே நெய் உருக்குகிற கள்ளி முண்டை.
கழுவுக்கு ஏற்ற கோமுட்டி.
கழுவுகிற மீனிலும் நழுவுகிற மீன். 7375

கழைக் கூத்து ஆடினாலும் காசுக்குக் கீழேதான் வரவேணும்.
கழைமேல் ஏறி ஆடினாலும் கீழே வந்துதான் பிச்சை கேட்க வேணும்.
(இறங்கித்தான் காசு.)
கள் உண்ட குரங்கு போல.
கள் உண்ட நாய் போல.
கள் கலப்பணத்திலும் கர்ப்பூரம் கால் பணத்திலும். 7380

கள் குடித்தவன் பேச்சு, பொழுது விடிந்தால் போச்சு.
கள் குடித்தவனுக்குக் கள் ஏப்பம்.
கள் விற்ற காற்காசிலும் அமிர்தம் விற்ற அரைக் காசு நேர்த்தி.

கள் விற்றுக் கலப்பணம் சம்பாதிப்பதை விடக் கர்ப்பூரம் விற்றுக் கால் பணம் சம்பாதிப்பது மேல்.
(ஆயிரம் பணம் சம்பாதிப்பதை விட, கஸ்தூரி விற்று.)
கள்ளத்தனம் எல்லாம் சொல்லத்தானே போகிறேன்? 7385

கள்ள நெஞ்சம் துள்ளிக் குதிக்கும்.
கள்ள நெஞ்சு காடு கொள்ளாது.
கள்ளப் பிள்ளையிலும் செல்லப் பிள்ளை உண்டா?
கள்ளப் பிள்ளையும் செல்லப் பிள்ளையும் ஒன்றா?
கள்ளப் புருஷனை நம்பிக் கணவனைக் கைவிடலாமா? 7390

கள்ளம் பெரிதா? காப்புப் பெரிதா?
கள்ளம் போனால் உள்ளது காணும்.
கள்ள மனம் துள்ளும்.
(துள்ளிப் பாயும்; துள்ளி யடிக்கும்.)
கள்ள மாடு சந்தை ஏறாது.
கள்ள மாடு துள்ளும். 7395

கள்ள மாப்பிள்ளைக்குக் கண்ணீர் முந்தும்.
கள்ள வாசலைக் காப்பானைப் போல.
கள்ள விசுவாசம், கழுத்தெல்லாம் செபமாலை.
கள்ளன் அச்சும் காடு கொள்ளாது.
கள்ளன் ஆனால் கட்டு; வெள்ளன் ஆனால் வெட்டு, 7400

கள்ளன் உறவு உறவு அல்ல; காசா விறகு விறகு அல்ல.
கள்ளன் கொண்ட மாடு எத்துறை போய் என்ன?
கள்ளன் செய்த சகாயம் காதை அறுக்காமல் கடுக்கனைக் கழற்றிக் கொண்டான்.
கள்ளன் பிள்ளைக்குக் கள்ளப் புத்தி.
(பிள்ளைக்கும்.)
கள்ளன் பின் போனாலும் குள்ளன் பின் போகக் கூடாது. 7405

கள்ளன் புத்தி கன்னக் கோலிலே,
(புத்தி திருட்டு மேலே.)
கள்ளன் பெண்சாதி கைம்பெண்டாட்டி.
(பெண்.)
கள்ளன் பெரியவனா? காப்பான் பெரியவனா?
கள்ளன் போன மூன்றாம் நாள் கதவை இழுத்துச் சாத்தினானாம். 7410

கள்ளன் மறவன் கலந்த அகம்படியான், மெல்ல மெல்ல வந்த வெள்ளாளன்.
(கனத்ததோர் அகம்படியன், வெள்ளாளன் ஆனான்.)
கள்ளன் மனையாளைக் களவுப் பொருளைக் குறி கேட்கலாமா?
கள்ளன் மனைவி கைம்பெண் என்றும்.
கள்ளனுக்கு ஊர் எல்லாம் பகை.
கள்ளனுக்குக் களவிலே சாவு. 7415

கள்ளனுக்குக் காண்பித்தவன் பகை.
கள்ளனுக்குக் கூ என்றவன் பேரிலே பழி.
கள்ளனுக்குத் தெரியும் களவு முறை.
கள்ளனுக்குத் தோன்றும் திருட்டுப் புத்தி.
கள்ளனுக்குப் பாதி, கறிக்குப் பாதி. 7420

கள்ளனுக்கும் பாதி, வெள்ளனுக்கும் பாதி.
கள்ளனுக்குள் குள்ளன் பாய்ந்தது போல.
கள்ளனும் ஆகி விளக்கும் பிடிக்கிறான்,
(கள்ளனாயிருந்து பிடிக்கிறதா?)
கள்ளனும் உண்டு, பயமும் இல்லை என்கிறது போல.
கள்ளனும் தோட்டக்காரனும் ஒன்று கூடினால் விடியுமட்டும் திருடலாம். 7425
(சேர்ந்தால்.)

கள்ளனும் வெள்ளனும் ஒன்று.
கள்ளனை ஆரும் நள்ளார் என்றும்.
கள்ளனை உள்ளே விட்டுக் கதவைச் சாத்தினாற் போல.
(உள்ளே வைத்து.)
கள்ளனைக் காட்டிக் கொடுத்தவன் பகை.
கள்ளனைக் காவல் வைத்தது போல. 7430

கள்ளனைக் குள்ளன் கிள்ளியது போல.
கள்ளனைக் குள்ளன் பிடித்தான்.
கள்ளனைக் கொண்டுதான் கள்ளனைப் பிடிக்க வேணும்.
கள்ளனைத் தேடிய கள்ளப் பசுப் போல.
கள்ளனை நம்பினாலும் நம்பலாம்; குள்ளனை நம்பக் கூடாது. 7435

கள்ளனையும் தண்ணீரையும் கட்டி விட வேணும்,
கள்ளனையும் புகையிலையையும் கட்டித் தீர்.
கள்ளனையும் வெள்ளனையும் கட்டி விடு.
கள்ளா வா, புலியைக் குத்து.
கள்ளி என்னடி கல் இழைப்பது? காதில் இருப்பது பித்தளை. 7440

கள்ளிக்கு ஏன் முள் வேலி? கழுதைக்கு ஏன் கடிவாளம்?
கள்ளிக்குக் கண்ணீர் முந்தும்; கொள்ளிக்கு வாய் முந்தும்.
கள்ளிக்குக் கண்ணீர் முந்தும்; அவள் கணவனுக்குக் கை முந்தும்.
கள்ளிக்குக் கல நீர் கண்ணிலே.
கள்ளிக்குத் தண்ணீர் கண்ணீர்; நீலிக்குத் தண்ணீர் நிமையிலே. 7445

கள்ளிக்கு நாடு எல்லாம் காடு.
கள்ளிக்கும் கற்றாழைக்கும் களை வெட்டுவதா?
கள்ளிக்கு முள்வேலி இடுவானேன்?
கள்ளிக்கு வேலி ஏன்? சுள்ளிக்குக் கோடாலி ஏன்?
கள்ளிக் கொம்புக்கு வெள்ளிப்பூண் கட்டினது போல. 7450
(கட்டினானாம்.)

கள்ளிகள் எல்லாம் வெள்ளிகள் ஆவார்; காசு பணத்தாலே;
வெள்ளிகள் எல்லாம் கள்ளிகள் ஆவார், விதியின் வசத்தாலே.
கள்ளிச் செடிக்கு மகாவிருட்சம் என்று பெயர் வைத்தது போல.
கள்ளி நீண்டு வளர்ந்தால் காய் உண்டோ? கனி உண்டோ?
(வளர்ந்தால் என்ன?)

கள்ளிப் பூவைக் கட்டிச் சூட்டினது போல.
கள்ளி பெருத்து என்ன? காய் ஏது? பழம் ஏது? 7455
(காய் உண்டா? நிழல் உண்டா?)

கள்ளியிலும் சோறு; கற்றாழையிலும் சோறு.
கள்ளி வயிற்றில் அகில் பிறக்கும்.
கள்ளி வேலியே வேலி; கரிசல் நிலமே நிலம்.
கள்ளுக் குடித்தவன் கொள்ளுப் பொறுக்கான்.
கள்ளுக் குடியனுக்கு வாய் என்றும் பிட்டம் என்றும்
தெரியாது. 7460

கள்ளுக் கொள்ளா வயிறும் இல்லை; முள்ளுக் கொள்ளா வேலியும்
இல்லை.
(யாழ்ப்பாண வழக்கு.)

கள்ளும் சூதும் இருக்கும் இடத்தில் விலை மகளும் கள்ளனும்
கண்டிப்பாய் இருப்பார்கள்.
கள்ளை ஊற்றி உள்ளதைக் கேள்.
கள்ளைக் காலால் உதைத்தது தவறா?
கள்ளைக் குடித்தவன் உள்ளதைக் கக்குவான். 7465

கள்ளைக் குடித்தவனுக்குக் கள் ஏப்பம்;பாலைக் குடித்தவனுக்குப்
பால் ஏப்பம்.
கள்ளைக் குடித்தால் உள்ளதைச் சொல்வான்.
கள்ளைக் கொடுத்துக் காரியத்தை அறி.
கள்ளை விட்டுக் காட்டுத் தேனைக் குடித்தது போல.
களக்காடு. 7470
(-பைத்தியம்.)

களக்காடு மடக்ராமம், அன்ன வஸ்த்ரம் ஜலம் நாஸ்தி; நித்யம் கலக மேவச.
களஞ்சியத்தில் பெருச்சாளி சாப்பிடுவது போல.
களம் காக்கிறவனை மிரட்டுவானாம், போர் பிடுங்குகிறவன்.
களர் உழுது கடலை விதை.
களர் கெடப் பிரண்டை இடு. 7475

களர் நிலத்தில் கரும்பு வை.
களர் நிலத்திலே சம்பா விளையுமோ?
களர் முறிக்க வேப்பந் தழை.
களரை ஒழிக்கக் காணம் விதை.
(காணம்-கொள்.)
களரை நம்பிக் கெட்டவனும் இல்லை; மணலை நம்பி வாழ்ந்தவனும் இல்லை. 7480

களவாண்டு பிழைப்பதிலும் கச்சட்டம் கழுவிப் பிழைக்கலாம்.
களவு ஆயிரம் ஆனாலும் கழு ஒன்று,
களவுக்கு ஒருவர்; கல்விக்கு இருவர்.
களவு கற்றாலும் தன்னைக் காக்க வேண்டும்.
களவு கொண்டு ஆபரணம் பூண்டாற் போல. 7485

களவும் கற்று மற.
(கத்து மற.)
களி கிளறிக் கல்யாணம் செய்தாலும் காளியண்ணப் புலவனுக்குப் பத்துப் பணம்.
(பூந்துறைப் பகுதி வழக்கு.)
களியப் பேட்டை களக்ராமம்.
(செட்டிபாளையத்துக்கு அக்கரை.)
களிறு பிளறினால் கரும்பைக் கொடு.
களிறு வாயில் அகப்பட்ட கரும்பு மீளுமா? 7490

களை எடாப் பயிர் கால் பயிர்.
களை எடாப் பயிரும் கவடுள்ள நெஞ்சும் கடைத்தேறா.

களை எடாதவன் விளைவு எடான்.
களை எடுக்காதவன் கபோதி.
களை எடுத்தவன் கைமுடி உள்ளான். 7495

களை கிளைத்தால் போச்சு; பயிர் கிளைத்தால் ஆச்சு.
களைத்தவன் கம்பைத் தின்ன வேண்டும்.
களைந்த பழம் தானே விழும்.
(கனிந்த பழம்.)
களை பிடுங்காப் பயிர் கால் பயிர்.
களை முடிக்கொண்டது போல, 7500

களையக் கூடாததைக் கண்டால் அடிபெயர்ந்து அப்புறம் போ.
களையக் கூடாததைக் கண்டியாமல் சகித்துக் கொள்.
களையை முளையிலே கிள்ளு.
கற்க கசடு அறக் கற்க.
கற்க கசடு அற; கற்றபின் அதுவே இனிப்பு. 7505

கற்கண்டால் செய்த எட்டிக் கனியும் கசக்குமா?
கற்கையில் கல்வி கசப்பு; கற்றபின் அதுவே இனிப்பு.
கற்பகத் தருவைச் சார்ந்த காகமும் அமுதம் உண்ணும்.
கற்பகத்தைச் சார்ந்தும் காஞ்சிரங்காய் கேட்கலாமா?
கற்பக விருட்சத்தண்டை போயும் காஞ்சிரங்காய் வாங்கினாற் போல். 7510

கற்பனை கல்லைப் பிளக்கும்.
கற்பாறையில் அடிக்கும் முளைக் கச்சானது அப்பாறையில் இறங்காதது போல.
கற்பித்தவன் கண்ணைக் கொடுத்தவன்.
கற்பித்தவன் காப்பாற்றுவான்.
(உயிரை.)
கற்பித்தவனுக்குக் காக்கக் கடன். 7515

கற்பித்தவனுக்குக் காக்க வல்லமை இல்லையா?
கற்பு இல்லா அழகு வாசனை இல்லாப் பூ.
கற்பு எனப்படுவது சொல் தவறாமை.
(திறம்பாமை.)
கற்ற இடத்திலா வித்தையைக் காட்டுகிறது?
கற்றது எல்லாம் வித்தை அல்ல; பெற்றது எல்லாம் பிள்ளை அல்ல. நட்டது எல்லாம் பயிர் அல்ல. 7520
(மரம் அல்ல.)

கற்றது கடுகளவு; கல்லாதது கடல் அளவு.
(கற்றது கை அளவு.)
கற்றது கை மண் அளவு; கல்லாதது உலகளவு.
கற்றது சொல்வான்; மற்று என்ன செய்வான்?
கற்றதைக் காய்ச்சியா குடிக்கப் போகிறாய்?
(பார்க்கிறாய்.)
கற்றலிற் கேட்டலே நன்று. 7525
(பழமொழி நானூறு.)

கற்றவர் கோபம் நீர்ப்பிளவு போல் மாறும்.
கற்றவன் உண்பான்; பெற்றவளும் உண்பாள்.
கற்றவனிடத்திலா வித்தையைக் காட்டுவது?
கற்றவனுக்கு எந்த வித்தையும் கால் நாழிகையில் வரும்.
(கற்றவனுக்கு வித்தை கால் நாழிகை.)
கற்றவனுக்கு மயிர் அத்தனை; கல்லாதவனுக்கு மலை அத்தனை. 7530

கற்றவனும் உண்பான்; பெற்றவனும் உண்பான்.
(பெற்றவளும்.)
கற்ற வித்தையைக் காய்ச்சிக் குடிக்கிறவன் போல.
கற்ற வித்தையைப் பெற்ற தாயிடம் காட்டுவதா?
(காட்டாதே.)
கற்றறி மூடன்.
(மோழை.)

கற்றறிவு இல்லாத மாந்தர் கதிகெட்ட மடையர் ஆவார். 7535

கற்றாழை காய்ச்சியா குடிக்கப் பார்க்கிறாய்?

கற்றாழைச் சோறும் வெண்டைக்காய்க் குழம்பும் விளக்கெண்ணெய்த் தாளிதமும் சேர்ந்தாற் போல.

கற்றாழை சிறுத்தாலும் ஆனை அடி வைக்காது.

கற்றாழை நாற்றமும் பித்தளை வீச்சும் போகா.

கற்றது அறிந்தார் கண்டது அடக்கம். 7540

கற்றுக் கற்றுச் சொல்லியும் காரியத்தின்மேல் கண்.

கற்றுக் கற்றுப் பேசாதே.

(கத்திக் கத்திப் பேசாதே.)

கற்றுக் கொடுத்த சொல்லும் கட்டிக் கொடுத்த சோறும் எத்தனை நாள் நிற்கும்?

(நிலையா?)

கற்றும் கற்றறி மோழை; கண் இருந்தும் குருடு.

கற்றோர் அருமை கற்றோர் அறிவர். 7545

(பெற்றோர் அறிவர்.)

கற்றோர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு.

(புகழ் உண்டு.)

கறக்க ஊறும் ஆவின் பால். கற்க ஊறும் மெய்ஞ்ஞானம்.

(கறக்கக் கறக்க ஊறும் பசுவின்பால், படிக்கப் படிக்க ஊறும் மெய்ஞ் ஞானம்.)

கறக்கிறது நாழிப் பால்; உதைக்கிறது பல்லுப் போக.

(உழக்குப் பால்.)

கறக்கிற பசுவையும் கைக் குழந்தையையும் கண்ணாரப் பார்க்க வேண்டும்.

கறக்கிற மாட்டைக் கள்ளன் கொண்டு போனால் வறட்டு மாடு மகாலட்சுமி ஆகும். 7550

கறந்த பால் கறந்த படியே பேசு.

கறந்த பால்போல் பேசுகிறான்.

கறந்த பால் முலைக்கு ஏறுமா?
(காம்புக்கு ஏறுமா? முலைப் புகா.)

கறந்த பாலும் எச்சில்; பிறந்த பிள்ளையும் எச்சில்.
கறந்த பாலைக் காக்கையும் தொடாது. 7555

கறந்த பாலைக் காய்ச்சாமல் குடித்தால் காச வியாதி தானே வரும்.
(காச நோய்.)

கறந்த மேனியாய்ப் பேசுகிறது.
கறவை உள்ளான் விருந்துக்கு அஞ்சான்.
கறவை மாடு கண்ணுக்குச் சமானம்.
கறிக்கு அலைந்தவன் பீர்க்குப் போடு. 7560

கறிக்கு இல்லாத வாழைக்காய் கட்டித் தொங்குகிறதாம்.
கறிக்கு இல்லாத வாழைக்காய் பந்தலிலே கட்டித் தொங்கிற்றாம்.
(தொங்கவோ? பந்தலில் தோரணம் கட்டினானாம்.)

கறிக்கு உழக்கு நெய் வார்த்தாலும் கண்ணாரக் கண்டதைச் சொல்.
கறிக்குக் கலநெய் வார்த்தாலும் கணக்கோடே வார்க்க வேண்டும்.
கறிக்குக் கறி நெய் விட்டாலும் கணக்குக் கணக்காய் இருக்க வேணும். 7565

கறி மீனுக்காகக் குளத்தை வெட்டி விடுவதா?
கறியிலே உயர்த்தி கத்தரிக்காய்; உறவிலே உயர்த்தி சின்னாயி.
கறியிலே கத்தரிக்காய்; உறவிலே சிற்றம்மை.
கறி வேப்பிலை கண்போல்.
(கறி வேப்பிலை கன்று போல்.)

கறுத்தது எல்லாம் தண்ணீர்; வெளுத்தது எல்லாம் பால். 7570

கறுத்த பார்ப்பானையும் வெளுத்த பறையனையும் நம்பாதே.
கறுத்த மூஞ்சியும் வெளுத்த சோறும்.
கறுப்பாய் இருந்தாலும் சந்திரன் சந்திரன்தான்.
(கறை இருந்தாலும்.)

கறுப்பிலும் குறிப்பு அழகு.
கறுப்புக்கு நகை பூட்டிக் கண்ணாலே பார். 7575

கறுப்புக்கு நகை போட்டுக் காதவழி நின்று பார்; சிவப்புக்கு நகை போட்டுச் செருப்பால் அடி.
கறுப்பு நாய் வெள்ளை நாய் ஆகுமா?
கறுப்புப் பார்ப்பானையும் சிவப்புப் பறையனையும் நம்பக் கூடாது. (வெளுத்த பறையனையும்.)
கறுப்பும் வெள்ளையும் கண்ணுக்குத் தெரியாவா?
கறுப்பு மாடு கால் மாடு. 7580

கறுப்பு வெளுப்பு ஆகாது; கசப்பு இனிப்பு ஆகாது.
கறுப்பே ஓர் அழகு; காந்தலே ஒரு ருசி.
கறுப்பைக் கண்டு சிரிக்காதே.
கறுமுறு காந்தப்படலம் வாசிக்கிறார் கவிராயர்.
கறையான் புற்றில் அரவம் குடிகொண்டது போல. 7585
(பாம்பு புகுந்தது போல.)

கறையான் புற்று எடுக்கப் பாம்பு குடி புகுகிறது போல.
கறையான் புற்றுப் பாம்புக்கு உதவாது.
கறையானும் வாய் ஈரம் கொண்டு பிழைப்பது போல.
கன்மத்தினால் சாதியன்றிச் சன்மத்தினால் இல்லை.
(சாதியா?)
கன்மத்தினால் வந்தது தன்மத்தினால் போக வேண்டும். 7590

கன்யாகுமரி முதல் கருக்கரை வரை.
கன்றின் கீழேயும் கடன்காரன் கீழேயும் நிற்காதே.
கன்றும் ஆடும் களத்தில் படுத்தால் வைக்கோலும் இல்லை; செத்தையும் இல்லை.
கன்று இருக்கக் காசு அத்தனை பால் கறவாப் பசு, கன்று செத்த பிறகு கலப்பால் கறக்குமா?
கன்று இருக்கச்சே கரண்டிப் பால் இல்லை; கன்று செத்த பிறகா கலப் பால் கறக்கும்? 7595

கன்று இருக்கையில் கறவாத பசு கன்று செத்த பிறகு கறக்குமா?
கன்று உள்ளபோதே காணோம்; செத்த பிறகா கொட்டப் போகிறது?
கன்றுக் குட்டி களம் படுக்குமா?
கன்றுக்குட்டி கிட்டவும் கடன்காரன் கிட்டவும் இருக்கக் கூடாது.
கன்றுக் குட்டி பயம் அறியாது. 7600

கன்றுக்குட்டி மன்றைத் தின்று மன்று மன்றாய்ப் பேன்றது.
கன்றுக் குட்டியை அவிழ்க்கச் சொன்னார்களா? கட்டுத் தறியைப் பிடுங்கச் சொன்னார்களா?
(பிரிக்க.)

கன்றுக்குப் புல் பிடுங்கியது போலவும் தென்னைக்குக் களை எடுத்தது போலவும்.
கன்றுகளாய்க் கூடிக் களம் பறிக்கப் போனால் வைக்கோல் ஆகுமா? செத்தை ஆகுமா?
கன்று கூடிக் களம் அடித்தால் வைக்கோலும் ஆகாது; கற்றையும் ஆகாது. 7605
(செத்தையும் ஆகாது, களை பறிக்க )

கன்று கெட்டால் காணலாம் தாய் அருகே.
கன்று செத்தது கமலம்; மாடு செத்தது நிமிளம்
கன்று செத்துக் கைமேலே கறக்கலாமா?
கன்றும் தாயும் காடு ஏறி மேய்ந்தால் கன்று ஒரு பக்கம், தாய் ஒரு பக்கம்.
கன்று தின்னப் போரும் பசங்கள் தின்னப் பந்தியும். 7610

கன்றும் பசுவும் காடு ஏறி மேய்ந்தால் கன்று கன்று வழியே; பசு பசு வழியே.
(கன்று வார்க்கும் பசு வயிற்றுக்கு.)
கன்றை இழந்த பசுவைப் போல.
கன்றைக் கண்டு ஓடிவரும் பசுவைப் போல.
(நாடி வரும்.)
கன்றைத் தேடிப் பசு தவிக்கிறது போல.
கன்றைப் பார்த்துப் பசுவைக் கொள். 7615

கன்றைப் பிரிந்த பசுவைப் போல.
கன்றை விட்டுக் கட்டுத்தறியைப் பிடித்தது போல.
கன்றை விட்டுக் கல்யாணம் போவதா?
கன்றை விட்டு மாட்டை முட்ட விடுகிறது.
கன்னக் கோலை மறைத்துக் கொண்டு கைச் செபமணியைச் செபிக்கிறது போல. 7620

கன்னத்தில் அடித்தாலும் கதறி அழச் சீவன் இல்லை.
கன்னவாசல் கரிப் பானை போல்.

கன்னா பின்னா என்று பிதற்றுகிறான்.
கன்னான் கொண்டது கடை கொண்டது.
கன்னான் நடமாடக் குயவன் குடிபோவான். 7625

கன்னானுக்கும் குயவனுக்கும் ஜன்மப் பகை.
கன்னானுக்கு முன்னே கழுதை பரதேசம் போனாற் போல.
கன்னி அறிவாளோ காம ரசம்?
கன்னி இருக்கும் பொழுது காளை மணை ஏறக் கூடாது.
(மணம் பேசலாமா? கன்னி இருக்க.)
கன்னிக் காற்றுக் கடலும் வற்றும். 7630

கன்னிச் செவ்வாய் கடலும் வற்றும்.
கன்னிச் சேற்றைக் காய விடாதே; கண்ட மாட்டைக் கட்டி உழு.
(கன்னி-புரட்டாசி. புரட்டாசியில் வெயில் கொடூரம்; மழையும் உண்டு. வயலில் சேறாக உழுதாலும் உடனுக்குடன் காய ஆரம்பிக்கும். அம் மாதங்கள் வெயில் மழை இரண்டும் தாங்கிக் கடினமான வேலை செய்ய எருமைக் கடாவே தகுதி. அதைக் கட்டித்தான் ஏர் ஓட்டுவார்கள்.)
கன்னி நிலவிலே கட்டி ஓட்டடா கடா மாட்டை.
கன்னிப் பூ மலரவில்லை.
கன்னியாகுமரிக் கடலறியார்; சுசீந்திரம் தேரறியார். 7635
(விருந்தினர்களைக் கவனிப்பதனால்.)

கன்னியும் துக்கமும் தனிவழிப் போகா.
கன்னி வளரக் காடு எரிய.
கன ஆசை, கன நஷ்டம்.
கன எலி வளை எடாது.
கன எலி விளையாடாது. 7640

கனக மாரி பொழிந்தது போல.
கனத்த உடைமைக்கு அனர்த்தம் இல்லை.
கனத்தால் இனம் ஆகும்; மனத்தால் ஜனம் ஆகும்.
கனத்திற்கு நற்குணம் சுமைதாங்கி.
கனத்தைக் கனம் அறியும்; கருவாட்டுப் பொடியை நாய் அறியும். 7645

கனத்தைக் கனம் காக்கும்; கருவாட்டுச் சட்டியைப் பூனை காக்கும்.
(பார்க்கும்.)

கனத்தைக் கனம் காக்கும்; கருவாட்டை ஈ காக்கும்.
(கருவாட்டுப் பானையைப் பூனை காக்கும்.)

கனத்தைக் கனம் காக்கும்; கறிச் சட்டியை நாய் காக்கும்.

கனத்தைக் கனம் தேடும்; கருவாட்டுத் தலையை நாய் தேடும்.
(யாழ்ப்பாண வழக்கு.)

கனதாராளம்; மனசு குறுகல். 7650

கனபாடிகள் வீட்டுக் கட்டுத்தறியும் வேதம் சொல்லும்.

கன நேசம் கண்ணைக் கெடுக்கும்.

கனம் கனத்தைப் பார்க்கும்; கருவாட்டுப் பானையைப் பூனை பார்க்கும்.

கனம் செய்தால் இஷ்டம்; கன ஈனத்தால் நஷ்டம்.

கன மழை பெய்தாலும் கருங்கல் கரையுமா? 7655

கனமழை பெய்து காடு தளிர்த்தது போல.

கனமூடன் கைப் பொருள் இழப்பான்.

கனவில் உண்ட சோறு பசி தீர்க்குமா?
(கண்ட சோறு.)

கனவில் கண்ட கத்தரிக்காய் கறிக்கு ஆகுமா?

கனவில் கண்ட பணம் கைச் செலவுக்கு உதவுமா? 7660
(கடன் தீர்க்க.)

கனவில் கண்ட பணம் கடனைத் தீர்க்குமா?

கனவில் கண்ட பொருள் கானில் கண்ட புல்.
(கானலில் கண்ட புனல்.)

கனவில் கண்ட பொருள் கைக்கு எட்டுமா?

கனவில் கண்டவனுக்குப் பெண் கொடுத்த கதை.
(பெண் போன.)

கனவிலும் காக்கைக்கு மலம் தின்கிறதே நினைப்பு. 7665

கனவோ, நனவோ என்று ஐயுற்றான்.

கனா முந்துறாத வினை இல்லை.
(பழமொழி நானூறு.)

கனி இருக்கக் காய் கவர்வது போல.
(தேவாரம்.)

கனிந்த பழம் தானே விழும்.
கனிந்த பழம் நீர் தின்றீர்; காயை உலுக்கி விட்டீர். 7670

கனிந்த பொங்கலில் கரும்புச் சாறும் கலந்ததாம்.
கனிந்த மரத்தில் கல்லடி கில்லடி.
கனியாத கனியை அடித்துப் பழமாக.
கனியிலே முள் ஏறினது போல.
கனியை விட்டுக் காயைத் தின்கிறதா? 7675

கஜ கரணம்.
கஜ கரணம் கோ கரணம் போட்டுப் பார்க்கிறான்.
கஜ கர்ப்பம்.
கஜப் புளுகு.
கஷ்கம் தெரியாமல் நெல்லுக் குத்தலாமா? 7680

கஷ்டத்திற்கு நஷ்டம் அதிகம்.
கஷ்டத்தின் அந்தியத்தில் சுகம்.
கஷ்டப் படலாம்; துக்கப்படல் ஆகாது.
கஷ்டப் படாவிட்டால் லாபம் இல்லை.

காக்கனுக்கும் பூக்கனுக்கும் பூத்தாயோ புன்னை? கண்ணாளன் வரும் வரையில் பொறுக்கவில்லையே புன்னை? 7685

காக்கனும் பூக்கனும் சேர்ந்து ராக்கன் வீட்டு நெல்லுக்கு வினை வைத்தார்கள்.

காக்கை இருந்த கொம்பு அசையாது.

காக்கை ஏறப் பனம்பழம் விழுந்தது போல.

(காகதாளிக நியாயம்.)

காக்கை ஏறின கொம்பு அசையாதா?

காக்கைக் கழுத்தில் சீட்டுக் கட்டினது போல. 7690

காக்கைக்கு இருட்டில் கண் தெரியாது.

காக்கைக்கு ஐந்து குணம்.

காக்கைக்கு ஒரு கீர்த்தி; நரிக்கு ஓர் அபகீர்த்தி.

காக்கைக்குக் கொண்டாட்டம்; எருதுக்குத் திண்டாட்டம்.

காக்கைக் குஞ்சையும் கணக்கன் குஞ்சையும் கண்ட இடத்தில் குத்தவேண்டும். 7695

காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு.

காக்கைக்குப் பயந்திருப்பாள்; கழுகுக்குத் துணிந்திருப்பாள்.

காக்கைக்குப் பயந்து அழுவாள்; கழுகுக்குத் துணிந்து எழுவாள்.

காக்கைக்குப் புடுக்கு உண்டானால் பறக்கிற போது தெரியாதா?

காக்கைக்குப் போடு என்றால் நாய்க்குப் போட்டாற் போல. 7700

காக்கைக்கும் காக்கையிலும் கன சிறப்பு.

காக்கைக் கூட்டம் போலக் கட்டுக் கோப்பு.

காக்கைக் கூட்டில் குயிற் குஞ்சு வளர்வது போல.
காக்கை கண்ணுக்குப் பீர்க்கம் பூப் பொன் நிறம்.
காக்கை கதறப் பயந்து கணவனைக் கட்டிக் கொண்டாளாம். 7705

காக்கை கர் என்றதாம்; அகமுடையானை இறுகக் கட்டிக் கொண்டாளாம்.
(அப்பா என்று போய்க் கட்டிக் கொண்டாளாம்.)
காக்கை கரிச் சட்டியைப் பழித்ததாம்.
காக்கை கரைந்தால் ஆரோ வருவார்.
காக்கை கரைந்து உண்ணும்.
காக்கை குசுவினாற் போல் இருக்கிறது. 7710

காக்கை குருவி மூக்காலே கொரிக்கிறது போல.
காக்கை குளிக்கிறது போல.
காக்கை நோக்கு அறியும்; கொக்கு உப்பு அறியும்.
காக்கை பிடிக்கி போல் இருக்கிறான்.
காக்கை பிடிக்கிறவருக்குக் காலம். 7715
(கால் கை பிடிக்கிறவருக்கு.)

காக்கை பிடிக்கிறவனை நம்பாதே.
காக்கை பிடித்தல்.
(கால் கை பிடித்தல்.)
காக்கை மிளகாய்ப்பழம் கொத்தினாற் போல்.
காக்கை மூக்கு நிழலிலே கண்டாலும் கம்மாளன் கண்ணிலே எழுபது கோடி பசும் பொன் படும்.
காக்கையிற் கரிது களம் பழம். 7720

காக்கையின் கண்ணுக்குப் பீர்க்கம்பூப் பொன் நிறம்.
காக்கையின் கழுத்தில் பனம்பழம் கட்டினது போல.
(பனங்காயை,)
காக்கையினும் கன சிவப்பு.
காக்கையும் கத்திப் போகிறது; கருவாடும் உலர்ந்து போகிறது.

காக்கையும் காற்றும் போக்கு உண்டானால் வரும். 7725

காக்கையும் குயிற்குஞ்சைத் தன் குஞ்சு போல் வளர்க்கும்.
(காக்கும்.)

காக்கையைக் கண்டு அஞ்சுவான்; கரடியைப் பிடித்துக் கட்டுவான்.
(அஞ்சுவான்.)

காக்கையைக் கண்டு அஞ்சுவான்; காவேரி ஆற்றை நீந்துவான்.
காக்கையைக் கண்டு பயப்படுவான்; கள்ளன் கூடப் புறப்படுவான்.
காக்கையை விடக் கரியது களாப்பழம். 7730

காக்கை விரும்பும் கனி வேம்பு.
காகத்திலே வெள்ளை உண்டா?
காகத்தின் கழுத்துக் கறுத்தென்ன? வெளுத்தென்ன?
காகம் இருக்கப் பனம்பழம் விழுந்தது போல.
காகம் இல்லாத ஊர் சோனகன் இல்லாத ஊர். 7735
(சோனகன்-முகம்மதியன்.)

காகம் இல்லாத ஊர் பாவி இல்லாத ஊர்.
(பாவம் இல்லாத ஊர்.)
காகம் உட்கார்ந்த கிளை ஆடாமல் இருக்குமா?
(ஆடாமலா?)

காகம் ஏறிப் பனங்காய் உதிருமா?
(பனம்பழம் விழுமா?)

காசா லேசா?
காசி இரண்டு எழுத்துத்தான்; காண எத்தனை நாள் செல்லும்? 7740

காசிக்குத் திருவையாறு அதிகம்.
காசிக்குப் போய்த் தயிர் கொண்டு வந்ததைப் போல்.
காசிக்குப் போயும் கருமம் தொலையவில்லை.
காசிக்குப் போயும் மூடத் தவசி காலில் விழுகிறதா?
காசிக்குப் போன கடா மாடு போல. 7745
(அங்கும் உழுவான்.)

காசிக்குப் போனால் கால் ஆட்டலாம்; கால் ஆட்டக் கால் ஆட்டத் தோள் ஆட்டலாம்.

காசிக்குப் போனாலும் அகப்பை அரைக்காசு.

காசிக்குப் போனாலும் கட்கத்தில் மூட்டையா?
(கம்பளி மூட்டையா?)

காசிக்குப் போனாலும் கதி பெற வழி இல்லை.

காசிக்குப் போனாலும் கருமம் தொலையாது. 7750

காசிக்குப் போனாலும் தன் பாவம் தன்னோடே.

காசிக்குப் போனான்; கங்கை கொணர்ந்தான்.

காசிக்குப் போனான்; காவடி கொண்டு வந்தான்.

காசிக்கு வீசம் அதிகம் திருப்பூவணம்.

காசி முதல் ராமேசுவரம் வரையில். 7755
(+ தெரிந்தவன்.)

காசியில் இருக்கிறவன் கண்ணைக் குத்தக் காஞ்சீபுரத்திலிருந்து கையை நீட்டிக் கொண்டு போகிறதா?
(போனானாம்.)

காசியில் இறக்க முக்தி; கமலையில் பிறக்க முக்தி.
(கமலை-திருவாரூர்.)

காசியில் தண்டம்; பிரயாகையில் முண்டம்; கயையில் பிண்டம்.

காசியில் பாதி கல்பாத்தி.

காசியில் வாசி அவிநாசி. 7760

காசியிலே கலமானால் நமக்கு என்ன?

காசி வாசி கண்ணைக் குத்தக் காஞ்சியிலிருந்து கை நீட்டிப் போனானாம்.

காசி விசாலாட்சி, கஞ்சி காமாட்சி, மதுரை மீனாட்சி.

காசு இருந்தால் பெட்டியிலே; பவிசு இருந்தால் மூஞ்சியிலே; எனக்கு என்ன ஆச்சு?

காசு இல்லாதவன் முழுவதும் போட்டது போல. 7765

காசு இல்லாதவனுக்கு வராகன் பேச்சு என்ன?

காசு இல்லாதவனை வேசியும் துப்பமாட்டாள்.

காசுக்கு இரண்டு ஆனை வேணும்; காற்றைப் போல் பறக்கவும் வேணும்.

காசுக்கு இரண்டு: பீசுக்கு நான்கு.
(பீசுக்கு இரண்டு.)

காசுக்கு இரண்டும் பீசுக்கு ஒன்றும். 7770

காசுக்கு எட்டுச் சட்டி வாங்கிச் சட்டி எட்டுக் காசுக்கு விற்றாலும் வட்டிக்குக் கட்டாது.

காசுக்கு ஒரு குஞ்சு விற்றாலும் கணக்கன் குஞ்சு ஆகாது.

காசுக்கு ஒரு குஞ்சு விற்றாலும் கம்மாளன் குஞ்சு ஆகாது.

காசுக்கு ஒரு குட்டி ஆனாலும் கரூர்க் குட்டி ஆகாது.

காசுக்கு ஒரு குதிரையும் வேண்டும்; அது காற்றைப் போல் பறக்கவும் வேண்டும். 7775

காசுக்கு ஒரு தம்பி ஆனாலும் கள்ளத் தம்பி ஆகாது.

காசுக்கு ஒரு படி என்றால் பணத்துக்குப் பத்துப் படி என்கிறாயே!

காசுக்கு ஒரு புடைவை விற்றாலும் நாய்க்கு லாபம் என்ன?

காசுக்கு ஒரு முழம் விற்றாலும் நாய் அம்மணந்தான்.
(ஒரு புடைவை.)

காசுக்குக் கம்பன். 7780
(காசுக்குப் பாடுவான் கம்பன்.)

காசுக்குப் பத்துப் பெண்டாட்டி; கொசுவுக்கு ஒரு குத்து.

காசுக்குப் போன மானம் கோடி கொடுத்தாலும் வராது.

காசுக் கூடு கரிக் கூடாய்ப் போயிற்று.

காசுக்கு லோபி கழுதையினிடத்தில் போனாற் போல.

காசு கண்ட இடம் கைலாசம்; சோறு கண்ட இடம் சொர்க்கம். 7785

காசு கிடைப்பது குதிரைக் கொம்பாய் இருக்கிறது.

காசு கொடுத்தவனே கணவன்.

காசு கொடுத்தால் வேசி வருவாள்; கலம் நெல் கொடுத்தால் அவள் ஆத்தாளும் வருவாள்.

காசுப் பையோடே களவு போனால் கடையிலே செட்டிக்குக் காரியம் என்ன?

காசைக் கரி ஆக்காமல் சீனி வெடி வாங்கிச் சுடு. 7790
(வாணம் வாங்கி.)

காசைக் கொடுத்தால் தாசி வருவாள்; கலம் நெல்லைக் கொடுத்தால் அவள் தாயும் வருவாள்.

காசைக் கொடுத்து நோயை விலைக்கு வாங்காதே.

காசைக் கொடுத்துக் குத்து மாடு தேடுகிறதா?

காசைப் பார்த்தால் ஆசையாய் இருக்கிறது; கண்ணைப் பார்த்தால் போதையாய் இருக்கிறது.

காசையும் கொடுத்து தேளையும் கொட்டிக் கொண்டதுபோல். 7795

காஞ்சிக்குப் போனாலும் மஞ்சத்தின் கால் நான்கு.

காஞ்சி காமாட்சி, மதுரை மீனாட்சி, காசி விசாலாட்சி.

காஞ்சிரங் கனி கடுஞ்சிவப்பாய் இருந்தால் கடிதாக உயிர் மாய்க்கும்.
(மாய்க்க.)

காஞ்சீபுரத்து உபசாரம்.

காஞ்சீபுரத்துக்குப் போனால் காலை ஆட்டிக் கொண்டு சாப்பிடலாம். 7800
(நெசவு செய்து. தின்னலாம், பிழைக்கலாம்.)

காஞ்சீபுரம் குடை அழகு.

காஞ்சீபுரம் குடை, திருப்பதி வடை, சீரங்கத்து நடை.

காட்சிகள் காணக் கண்ணுக்கு அலுப்பா?

காட்டக் கொடுத்த பணத்தை எடுத்துக் கொண்டு குமர கண்ட வலிப்பு வருகிறது.

காட்ட முடியுமே தவிர ஊட்ட முடியுமா? 7805

காட்டாளுக்கு ஒரு நீட்டாள்; நீட்டாளுக்கு ஒரு முடக்கான்; முடக்காளுக்கு ஒரு நொண்டிக் குதிரை.
(செங்கற்பட்டு வழக்கு.)

காட்டாளுக்கு ஒரு மோட்டாள்; மோட்டாளுக்கு ஒரு மொண்டி ஆள்.
(ஒரு துடைப்பைக் கட்டை.)

காட்டாற்றுச் சரசரப்புக் காட்டானைக்குப் பரபரப்பா?

காட்டாற்று வெள்ளம் போலே,

காட்டான் மோட்டான் சண்டைக்கு இளைச்சான். 7810

காட்டானை உண்ட கனி போல் இருக்கும், தேட்டாளன் திரவியம்.

காட்டானை தின்ற கனிபோலே.

காட்டானைக்கு வீட்டு ஆனையைக் கண்டால் இளப்பம்.

காட்டானை கனவில் நாட்டுச் சிங்கம் வந்தது போல.

காட்டானையைக் காட்டி வீட்டுப் பெண்ணைத் தள்ளுகிறது. 7815

காட்டானையைப் பிடிக்க வீட்டானை வேண்டும்.

காட்டானை ராஜாவுக்கு எலிக்குஞ்சு மந்திரியாம்.

காட்டானை விட்டாலும் கவியானை விடாது.

காட்டிக் கொடுத்தாலும் கூட்டிக் கொடுக்காதே.

காட்டிக் கொடுத்துக் கடக்கப்போய் நிற்கலாமா? 7820

காட்டில் அழுத குரல்.

காட்டில் ஆனையைக் காட்டி வீட்டில் பெண்ணைக் கொடுக்கிறது போல.

காட்டில் உள்ள ஆனையைக் காட்டி வீட்டில் உள்ள பெண்ணைக் கடத்து.

காட்டில் எரித்த நிலாவும் கசட்டுக்குச் செய்த நன்றியும் வீண்.

காட்டில் எரித்த நிலாவும் கானலில் பெய்த மழையும். 7825

காட்டில் கடுவாய்; கடலில் கொடுவாய்.

காட்டில் செத்தாலும் வீட்டில்தான் தீட்டு.

காட்டில் செய்த சபதம் வீட்டில் மறந்தது போல.

காட்டில் புதைத்த கனதனமும் பாட்டில் புதைத்த பழம் பொருளும் வீட்டில் மனையாள் மனமும் நாட்டில் அறிவது அரிது.

காட்டில் புலி கொல்லும்; நாட்டில் புளி கொல்லும். 7830

காட்டில் யானையைக் காட்டி வீட்டில் பெண்ணைக் கொடுப்பது போல.

காட்டிலே மேயுதடி காடை; அவன் காட்டுகிறானடி பெண்ணை ஜாடை.

காட்டு எரு முட்டை பொறுக்கி மட்கலம் சுட்ட புகை போய் மேற்கே மேகம் கிளம்ப, மின்னிக் குமுறி மழை பொழிய, ஆற்றில் வெள்ளம் பெருகி அடித்துப் போன பலசரக்கை ஊரார் இழுப்பது வழக்கு; குயவன் இழுப்பது கணக்கு.

காட்டுக் கட்டைக்கு ஏற்ற முரட்டுக் கோடாலி.

காட்டுக் களாக்காயும் கண்கெட்ட தயவு இல்லாத ஓணானும் கோத்துக் குலாவுவது போல. 7835
(சேர்ந்து குலாவுவது.)

காட்டுக் காடையைப் பிடிக்க வீட்டுக் காடை வேணும்.

காட்டுக்காரன் சும்மா இருந்தாலும் பூட்டைப் பிடுங்கி சும்மா இருக்க மாட்டானாம்.

காட்டுக்கு எறித்த நிலாவும் கசட்டுக்குச் செய்த நன்றியும் வீண். (கசத்துக்கு.)

காட்டுக்கு எறித்த நிலாவும் கானலுக்குப் பெய்த மழையும். (கானல்-கடற்கரை.)

காட்டுக்கு ஒரு தெய்வம்; வீட்டுக்கு ஒரு தெய்வமா? 7840

காட்டுக்குப் புலி ஆதரவு; புலிக்குக் காடு ஆதரவு.

காட்டுக்குப் பெய்த மழை, கானலுக்கு எறித்த நிலா.

காட்டேரி உடைமை இராத் தங்காது.

காட்டேரிக்கும் கணக்கனுச்கும் அடிக்கடி கொடுக்க வேணும்.

காட்டைக் காத்த நரியும் வீட்டைக் காத்த நாயும் வீண் போகா. 7845

காட்டைக் காத்தவனும் கடையைக் காத்தவனும் வீண் போவது இல்லை.

காட்டை வெட்டிச் சாய்த்தவனுக்குக் கம்பு பிடுங்கப் பயமா?

காட்டை வைத்துக் கொண்டு அல்லவோ வேட்டை ஆட வேணும்?

காடிக் கஞ்சி ஆனாலும் மூடிக் குடி.

காடிக்குப் போய்த் தயிர் கொண்டு வந்தது போல. 7850

காடு அழிந்தால் நாடு அழியும்.

காடு அறியாதவன் கல்லாங் காட்டை உழுவான். (உழ வேண்டும்.)

காடு ஆறு மாசம்; நாடு ஆறு மாசம்.

காடு எரியும் பொழுது வீடு எரியக் கூடாது.

காடுகள் இருப்பின் நாடுகள் செழிக்கும். 7855

காடு காத்த நாயும் வீடு காத்த நாயும் வீண் போகுமா?

காடு காத்தவனும் கச்சேரி காத்தவனும் பலன் அடைவான்.

காடு கெட ஆட்டை விடு.

காடு கெட வீடு கெடு.

காடு திருத்திப் பருத்தி விதைக்கப் போகிறேன் என்றானாம் அப்பன்; அதற்குள் மகன் அந்த நூலில் தனக்குத் துப்பட்டி நெய்து தர வேணும் என்றானாம். 7860

காடும் செடியும் அவளாகத் தோன்றுகின்றன என் கண்களுக்கே.

காடும் செடியும் இல்லாத ஊருக்குக் கழுதை முள்ளி கற்பக விருட்சம்.
(ஊரில்.)

காடு வளம் குண்டை வளம், குண்டை வளம் குடி வளம், குடி வளம், கோல் வளம், கோல் வளம் கோன் வளம்.
(குடிவளம் கோயில் வளம்.)

காடு வா வா என்கிறது; வீடு போ போ என்கிறது.

காடு விளைந்தாலும் ஒரு மேடு விளைந்தாலும் கடன் கழிந்துவிடும். 7865

காடு விளைந்து என்ன மச்சானே, நம் கையும் காலுந்தானே மிச்சம்?

காடு விளையாவிட்டாலும் கடமை போகுமா?

காடு வெட்டிச் சாய்த்தவனுக்குக் கம்பு வெட்டப் பயமா?

காடு வெட்டி நஞ்சை பண்ணு; மாடு கட்டி வைக்கோல் போடு.

காடு வெந்தால் சந்தன மரமும் வேகாதோ? 7870

காடை இடம் ஆனால் நாட்டை ஆளலாம்.

காடை கத்தினால் பாடை கட்டும்.
(காடை கட்டினால்.)

காண்பாரைக் கண்டு கழுதையும் பரதேசம் போயிற்றாம்.

காண ஒரு தரம், கும்பிட ஒரு தரமா?

காணக் கிடைக்காத தங்கம். 7875

காணக் கிடைக்குமோ? காண என்றால் கிட்டுமோ?

காணக் கிடைத்தது, கார்த்திகைப் பிறை போல.

காணப் பட்டன எல்லாம் அழியப் பட்டன.
(அழியத் தக்கன.)

காணம் என்றால் வாயைத் திறக்கிறது; கடிவாளம் என்றால் வாயை மூடிக் கொள்கிறது.

காணம் விற்று ஓணம் கொண்டாட வேண்டும். 7880

காணலாம், கேட்கக் கூடாது; கேட்கலாம், காணக்கூடாது;
காணவும் காணலாம், கேட்கவும் கேட்கலாம்.
(சகுன வகை.)

காண வேண்டி இருப்பாரைக் கிள்ள வேண்டி இருக்குமாம்.

காணாத கனவு கண்டால் ஒருவரோடும் சொல்லாதே.

காணாததை எல்லாம் காணலாம் கந்த புராணத்திலே.
(பொருளெல்லாம், புளுகெல்லாம்.)

காணாத நாயைக் கண்ட மனிதன் போல. 7885

காணாத மூளி கஞ்சியைக் கண்டால் ஓயாமல் கூட்டரைப்பாளாம்.

காணாதவன் கஞ்சியைக் கண்டானாம்; ஓயாமே ஓயாமே
ஊதிக் குடித்தானாம்.

காணாதவன் கண்டால் கண்டதெல்லாம் கைலாசம்.

காணாது கண்ட கம்பங் கூழைச் சிந்தாது குடியடா சில்லி மூக்கா.
(குடியடி சில்லி மூக்கி.)

காணாது கண்டாற் போல. 7890
(கண்டார்.)

காணாப் பால் கலப் பால்.
(காணாப் பால் மாடு அடக்கும் பால்.)

காணாப் பீ கழுவாமல் போம்.

காணாமல் கண்டேனே கம்பங்கதிரை.

காணாமல் கோணாமல் கண்டு கொடு.
(சந்தியா வந்தன அர்க்கியம்.)

காணாமல் போன முயல் பெரிய முயல். 7895

காணார் என மாணாவினை செய்யார்.
(பழமொழி நானூறு.)

காணி அறுத்தாலும் கோணி கொள்ளவில்லை.

காணி ஆசை கோடி கேடு.

காணி ஏறக் கோடி அழியும்.

காணிக்கு ஒத்தது கோடிக்கு. 7900
(ஏற்றது.)

காணிக்குச் சோம்பல், கோடிக்கு வருத்தம்,
காணி கவிழ்ந்து போகிறதா?
காணி காணியாய்ச் சம்பாதித்துக் கோடி கோடியாய்ச் செலவழிக்கிறது.
(கோணி கோணியாய்.)
காணிச் சோம்பல் கோடி கேடு.
(கோடி வருத்தம். காணி- 1/64.)
காணி தேடிக் கோடி அழிப்பதா? 7905
(அழிக்கிறது.)

காணி தேடினும் கரிசல் தேடு.
காணி நாணம், ஊன் நாணம் உயிர்க்கே சேதம்.
காணி மந்தம், கோடி துக்கம்.
காணியாளன் வீடு வேகும் போது காலைப் பிடித்து இழுத்த கதை.
காணியில் இல்லாததா கோடியில் வரப் போகிறது? 7910

காணியை நட்டபின் களத்தில் நிற்பதே நன்மை.
காணி லாபம், கோடி நஷ்டம்.
காத்திருந்த நாய்க்குக் கல்லெறிதான் மிச்சம்.
காத்திருந்தவன் பெண்டாட்டியை நேற்று வந்தவன் கொண்டு போனான்.
காதம் ஓடினும் முயலுக்குக் கைத்தூக்கு. 7915

காதம் கொடுத்து இரு காதம் வாங்குகிறது போல.
காதம் போனாலும் கண்ணுக்கு உரியவர் வேண்டும்.
காதம் விட்டு இரு காதம் சுற்றுவது போல.
காதலரோடு ஆடார் கவறு.
காத வழிதான் குத்தும் வெட்டும்; அப்புறம் ராமராஜ்யம். 7920

காத வழி பேர் இல்லாதவன் கழுதைக்குச் சமானம்.
(தண்டலையார் சதகம்.)
காத வழி போய் அறியாதவன் மாதம் எல்லாம் நடந்தானாம்.
காத வழி போய் அறியான் கழுதைப் பிறப்பு.
காதில் கடுக்கன் இட்டால் முகத்தினுக்கு அழகு.
காதில் கேட்டதும் பொய்; கண்ணில் கண்டதும் பொய்; தீர விசாரிப்பதே மெய். 7925

காதில் சிலந்தி, ஓதடி ஆனந்தி.

காதில் நாராசம் காய்ச்சி விட்டது போல.

காது அற்ற ஊசியும் வாராது காணும் கடை வழிக்கே.
(கூட வராது, பட்டினத்தார் பாடல்.)

காது அறுத்த கூலி கை மேலே.

காது அறுத்தாலும் அறுக்கும், பேன் எடுத்தாலும் எடுக்கும்
குரங்கு. 7930

காதுக்கு இட்டால் முகத்துக்கு அழகு.

காதுக்குக் கடுக்கன் இட்டு ஆட்டிக் கொண்டு திரிகிறான்.

காதுக்குக் கடுக்கன் முகத்துக்கு அழகு.

காதுக்குக் கம்மல் அழகு.

காது காது என்றால் செவிடு செவிடு என்கிறான். 7935

காது காது என்றால் நாதி நாதி என்கிறான்.
(நாதி-என்னுடையது. தெலுங்கு.)

காது காது என்றால் வேது வேது என்கிறான்.
(வேது வேது.)

காது குத்த மனம் பொறுக்காதா?

காது குத்துகிறான்.

காதும் காதும் வைத்தாற் போல. 7940
(காதோடு காதோடு.)

காதுரா காதுரா என்றால் நாதிரா நாதிரா என்கிறான்.
(இரு பொருள்.)

காதை அறுத்தவன் கண்ணைக் குத்தாமல் விட்டானே!

காதை அறுத்தவன் கண்ணைக் குத்தினாலும் குத்துவான்.

காதை அறுத்தவன் கண்ணையும் குத்துவானா?

காதை அறுத்தாலும் அறுக்கும்; பேனை எடுத்தாலும் எடுக்கும்
குரங்கு. 7945

காதை அறுத்தாலும் அறுத்தது; பேனைப் பார்.

காதைக் கடிக்கிறான்.

காதோடு காது வைத்தாற்போல் இருக்க வேண்டும்.

காந்தத்தின்முன் ஊசி கம்பித்தாற் போல.
காந்தம் இழுத்த ஊசியைப் போல. 7950

காந்தமும் இரும்பும் போல.
காந்தமும் ஊசியும் போல.
காந்தலே ருசி; கறுப்பே அழகு.
காந்தாரி கண் பட்டால் கல்லும் கரிந்து விடும்.
காந்தூர் நாயும் களத்தூர்ப் பேயும். 7955
(மிகுதி. செங்கற்பட்டுப் பகுதி.)

காப்பானுக்குக் கள்ளம் இல்லை.
காப்புச் சொல்லும் கை மெலிவை.
காப்பு இட அத்தை இல்லை; கலகமிட அத்தை உண்டு; தண்டை இட அத்தை இல்லை; சண்டை இட அத்தை உண்டு.
காப் பொன்னிலும் மாப் பொன் திருடுவான்.
காமத்துக்குக் கண் இல்லை. 7960
(கண் தெரியாது.)

காமனுக்குக் கண் இல்லை.
(திருவாலவாய்ப் புராணம், 45:7.)
காமாட்டிப் பையனுக்கு ஒரு சீமாட்டி கிடைத்தது போல.
காமாலைக் கண்ணனுக்குக் கண்டது எல்லாம் மஞ்சள்.
கா மாறிக் கட்டினால் கனம் குறையுமா?
(யாழ்ப்பாண வழக்கு.)
காமிக்கு முறை இல்லை. 7965

காமுகனுக்குக் கண்ட இடத்தில் கண்.
காய்க்கு அலைந்தவன் பீர்க்குப் போடு.
காய்க்குக் கொடி இளைக்குமா?
காய் கொடிக்குக் கனமா?
காய்ச்சல் இல்லா நிலம் கடுகளவும் பயன் கொடாது. 7970

காய்ச்சலும் கழிச்சலும் சேர்ந்து விட்டால் நம்பப் படாது.
காய்ச்சிக் காய்ச்சித்தானே நீட்ட வேண்டும்?

காய்ச்சிக் குடிக்கிறதையும் கெடுத்தான், கன்னாரப் பட்டு விழுவான்.
(கன்னாரச் சொட்டன்.)
காய்ச்சித் தோய்த்த தயிரைக் கண்ணை மூடிக்கொண்டு சாப்பிட்டாயே!
காய்ச்சி வார்த்த பெண்ணுக்குப் பேச்சு மூச்சு அற்றது. 7975

காய்ச்சின கஞ்சி வார்க்க ஆள் இல்லாமல் போனாலும், கச்சை கட்ட ஆள் இருக்கிறது.
காய்ச்சினவள் காய்ச்சினால் கழுதை மூத்திரமும் ருசியாய் இருக்கும்
காய்த்த கொம்பு பணியும்.
காய்த்த மரத்தில் கல் எறிபடும்; காயாத மரத்தில் எறிபடுமா?
காய்த்த மரத்திலே கல் எறியும் சில் எறியும். 7980
(கல்லடியும் சில்லடியும்.)

காய்த்த மரம் கல் அடிபடும்.
காய்த்த மரம் வளைந்து நிற்கும்; நற்குணமுடையவர் தணிந்து நிற்பார்.
(பணிந்து.)
காய்த்த மரம் வளையாத கணக்கும் உண்டோ?
(அருட்பா.)
காய்த்த மரம் வளையும்.
காய்த்த இரும்பு குடித்த நீரை விடாது. 7985

காய்ந்த ஓட்டிலே தண்ணீரை ஊட்டினாற் போல.
காய்ந்த ஓட்டுக்குச் சேதம் இல்லை.
காய்ந்த கொம்பு பணியும்.
காய்ந்த சுண்ணாம்பையும் வதங்கின வெற்றிலையையும் இளைத்த ராஜாவையும் விடக் கூடாது.
காய்ந்த புலி ஆட்டு மந்தையில் விழுந்தது போல. 7990

காய்ந்த புலி ஆவிலே விழுகிறது.
காய்ந்த மரம் தளிர்க்குமா?
காய்ந்த மாடு கம்பில் புகுந்தாற் போல.
(கம்பங் கதிரில்.)

காய்ந்த வானம் பெய்தால் விடாது.
காய்ந்த வித்துக்குப் பழுது இல்லை. 7995

காய்ந்த வெள்ளத்தில் விழுந்த பூனை பச்சை வெள்ளத்தைக் கண்டாலும் பேடிக்கும்.
(வெள்ளம்-நீர், பேடிக்கும்-அஞ்சும்.)
காய்ந்த வெற்றிலையையும் மெலிந்த ராஜாவையும் கைவிடாதே.
காய்ந்தால் காயும் கார்த்திகை.
காய்ந்தாலும் கவலை; பேய்ந்தாலும் கவலை.
காய்ந்தாலும் வெந்நீர் அவம் போமோ? 8000

காய்ந்து கெட்டது பிசானம்; காயாமல் கெட்டது கார்.
காய்ந்து போன கார்த்திகை வந்தால் என்ன? தீய்ந்து போன தீபாவளி வந்தால் என்ன? மகாராஜன் பொங்கல் வந்தால் மார்பு முட்டும் சோறு.
காய்ந்தும் கெடுத்தது வெயில்; பேய்ந்தும் கெடுத்தது மழை.
காய்ப் பாரத்தைக் கொடி தாங்காதா?
(தாங்கும்.)
காய் பறிக்கக் கத்தரி நடு. 8005

காய் மகாரன் நெஞ்சிலே கொள்ளிக் கட்டையால் சுடவேண்டும்.
காய சித்தி பெற்றோர் சட்டை கழற்றுவது போல.
காயத்திரி ஜபத்துக்குச் சமர்த்தியும் சமைக்க மாட்டாள்.
காயம் என்ன கற்கண்டா? உயிர் என்ன தித்திப்பா?
(உயிர் என்ன வெல்லமா?)
காயாகக் காய்த்துப் பூவாகப் பூத்ததாம். 8010

காயா? பழமா?
காயிலே கெட்டது கத்தரிக்காய்.
காயும் கனியும் உண்டானால் கார்த்திகை மாதம் கல்யாணம்.
(காயும் கறியும்.)
காயும் பயிருக்குப் பெய்யும் மழை போல.
காயும் பழமும் கலந்தது போல். 8015

காயும் புழுவுக்குச் சாயும் நிழல் போல
காயேனவாசா-கறி என்ன சமைச்சாள்?
கார் அரிசிச் சாதம், கருணைக் கிழங்குத் துவையல். அத்தையைச் சமைக்கச் சொன்னாளாம்: அகப்பையை எடுத்துக் காட்டினாளாம்.
கார் அறுக்கட்டும்; கத்தரி பூக்கட்டும்.
கார்த்திகை அகத்தி கரம்பெல்லாம் நெல்-வழியும். 8020

கார்த்திகை ஆத்தி காம்பு எல்லாம் ருசி.
கார்த்திகை எண்ணெயும் கனுவுப் பழையதும் ஆர் இடுவார் அம்மா என்று அழுதாளாம்.
கார்த்திகைக் கார் கடை விலை; தைச் சம்பா தலை விலை.
கார்த்திகைக் கீரை கணவனுக்குக் கொடாதே.
கார்த்திகைக்குப் பின் மழை இல்லை: கர்ணனுக்குப் பின் கொடை இல்லை. 8025

கார்த்திகை கண்டு களம் இடு.
கார்த்திகை கன மழை.
கார்த்திகை கார்த்திகை என்று கழுத்தறுத்த பிராமணா, கார்த்திகைக்குப் பின் இந்த அகமுடையாள்தானா?
(நீ தானா அகமுடையாள்?)
கார்த்திகை கால் கோடை.
கார்த்திகை நண்டுக்குக் கரண்டி நெய். 8030

கார்த்திகைப் பனியைப் பாராதே; கட்டி ஓட்டடா ஏர் மாட்டை.
கார்த்திகைப் பிறை போல.
(பிறை கண்டவன் போல.)
கார்த்திகைப் பிறையைக் கண்ட கண்ணால் கைப்பிடி நாற்றைப் போட்டுக் கரை ஏறு.
(பிறகு மழை இல்லை என்றபடி.)
கார்த்திகைப் பொரியும் கனுவுப் பழஞ் சோறும்.
கார்த்திகை மழை கல்லை உடைக்கும். 8035

கார்த்திகை மாசத்தில் உழுதால் கடுகு மிளகு காணாது.
கார்த்திகை மாசத்தில் கடு மழை பெய்தால் கல்லின் கீழ் இருக்கிற புல்லும் கதிர் விடும்.

கார்த்திகை மாசத்தில் கால் கொள்ளு விதைத்தால் மேல் கொள்ளு
முதலாகாது.
கார்த்திகை மாசத்தில் தண்ணீர்ப் பந்தல் வைத்தது போல.
கார்த்திகை மாசத்துக் கர்க்கட சந்திர யோகம் கல்லைத்
துளைக்கும். 8040

கார்த்திகை மாசத்து நாய் படும் பாடு போல.
கார்த்திகை மாசத்துப் பூமா தேவியைப் போல.
கார்த்திகை மாசத்து மழை கலம் கழுவுகிறதற்கு முன்னே
வந்து போகும்.
கார்த்திகை மாசம் கல்லுக்குள் இருக்கும் நெல்லும் கதிராகும்.
கார்த்திகை மாசம் கலம் கழுவப் போது இல்லை. 8045

கார்த்திகை மாசம் கலம் கழுவ மழை விடாது.
கார்த்திகை மாசம் கையிலே; மார்கழி மாசம் மடியிலே.
(அவரைக் காய்.)
கார்த்திகையில் கருக்கல் கண்ட இடத்தில் மழை.
கார் நடவைக் கலக்க நட்டது போல.
கார்ப் பயிர் கலந்து கெட்டது; பிசானப் பயிர் நெருங்கிக்
கெட்டது. 8050

கார்ப்பயிரைக் கண்ணைக் கட்டி அறு.
கார் மின்னிக் கெட்டது; பருவம் மின்னாமல் கெட்டது.
கார் மேக மழையில் காற்றடித்தால் போச்சு.
காரண குருவே காரிய குரு.
காரணம் அடா கல்லுக் கொத்தா; சாகிற கிழவி பிள்ளை
பெற்றாள், 8055

காரணம் இல்லாமல் நாய் குரைக்காதே.
காரணம் இன்றிக் காரியம் இல்லை.
காராம் பசுவுக்குப் புல் ஆனால் நந்தவனத்துக்குக் களையும் ஆம்.
(நந்தவனத்துக்குக் காளையும் ஆம்; மழையும் ஆம்.)
காரிகை கற்றுக் கவி பாடுவதிலும் பேரிகை அடித்துப் பிழைப்பது
நன்று.
(பேரிகை கொட்டி.)

காரியக்காரன் கொல்லையிலே கழுதை வந்து மேய்கிறது. 8060

காரியத்தில் வருகிற போதுதான் மாடு படுத்துக் கொள்கிறது.

காரியத்திலே கண் அல்லாமல் வீரியத்திலே இல்லை.

காரியத்திலே கப்பல்.

காரியத்துக்குக் கழுதையின் காலைப் பிடி.

காரியத்துக்குச் சோம்பினவர்களுக்குக் கைக் குழந்தை ஒரு சாக்கு. 8065

காரியத்துக்கு வாசுதேவர் கழுதையின் காலைப் பிடித்தார்.

காரியத்தைப் பற்றிக் கழுதையையும் காலைப் பிடி.
(காரியத்தை வேண்டிக் கழுதையின்.)

காரியப் பைத்தியம்.

காரியம் ஆகிற வரையில் கழுதையையும் காலைப் பிடி.
(கழுதைக் காலையும் பிடி, கும்பிடு.)

காரியம் ஆகிறவரையில் காலைப் பிடி; பின்னே கழுத்தைப் பிடி. 8070
(மென்னியை.)

காரியம் ஆகுமட்டும் காலைப் பிடி; காரியம் ஆன பிறகு குடுமியைப் பிடி.
(கழுத்தைப் பிடி.)

காரியம் ஆகுமானால் தலையைப் பிடி; காரியம் ஆகாவிட்டால் காலைப் பிடி.

காரியம் இல்லாத மாமியாருக்குக் கல்லும் நெல்லும் கலந்து வைத்தாள்.
(மாமியார் வைத்தாளாம்.)

காரியம் உண்டானால் கழுதையையும் காலைப் பிடி.

காரியம் உள்ளவரை காலைப் பிடி; இல்லாவிட்டால் பல்லைப் பிடி. 8075

காரியம் செய்துவிட்டுக் கழுநீர்ப் பானையில் கைவிட்டாளாம்.

காரியம் பெரிதா? வீரியம் பெரிதா?
(பிரதானமா?)

காரியம் முடிந்தால் கம்மாளன் புறத்தே.

காரியும் வெள்ளையும் கருதிப் பயிரிடு.
(காரி-எள். வெள்ளை-பருத்தி.)

காருக்கு ஒன்று; சம்பாவுக்கு ஒன்று. 8080

காருக்குக் களை எடுத்தாற் போல்.

காருக்குப் பட்டம் இல்லை.

காருக்குப் பின் பட்டம் இல்லை; கார்த்திகைக்குப் பின் மழையும் இல்லை.

காருக்கும் கத்தரிக்கும் காலம் இல்லை.

காருக்கு வயலும் மோருக்குச் சாதமும் அதிகமாக வைக்கக் கூடாது. 8085

காரும் கம்பும் கதிரிலே.

காரைக்காட்டானோ? ஊரைச் சுட்டானோ?

காரைக் கிள்ளி நடு; சம்பாவை அள்ளி நடு.

காரையும் எள்ளையும் கருதிப் பயிர் இடு.

காரையை வெட்டிக் கரணை போட்டால் எடையும் பணமும் காணும். 8090

கால் அடிபட்ட நாயும் காது அறுந்த செருப்பும் கவைக்கு உதவுமா?

கால் அடி வைக்கச்சே நீச்சானால் கரை ஏறுகிறது எப்படி?
(வைக்கச்சே நீரானால்,)

கால் அணாக் கொடுக்கிறேன் என்றால் காத வழி நடப்பான்.
(கால் அரை கொடுக்கிறேன்.)

கால் அளவே ஆகுமாம் கப்பலின் ஓட்டம்; நூல் அளவே ஆகுமாம் நுண் சீலை.
(நூற் சீலை.)

கால் ஆட்டக் கால் ஆட்டத் தூணாட்டம் வீங்கிப் போயிற்று. 8095

கால் ஆட்டி வீட்டில் வாலாட்டி இருக்காது.

கால் ஆட்டுகிறவர் வீட்டில் வாலாட்டி நாய் தங்காது.

கால் ஆடக் கோல் ஆடும்; கோல் ஆடக் குரங்கு ஆடும்.
(கால் ஆடப் பாம்பு ஆடும்.)

கால் இல்லா முடவன் கடலைத் தாண்டுவானா?

கால் எட்டினால் காகுழியில் போடு. 8100
(நெசவாளர் வழக்கு.)

கால் ஒடிந்த கோழிக்கு உரற்குழியே கைலாசம்.

கால் காசுக்குக் குதிரை வாங்க வேணும்; அது காற்றாகவும் பறக்க வேணும்.
(கால் துட்டுக்கு.)

கால் காசு தாலி கட்டாதவனும் காலில் விழாத பிள்ளையும் பிரயோசனம் இல்லை.

கால் காசுப் பூனை முக்காற் காசுத் தயிரைக் குடித்தது.

கால் காசு பெறாது. 8105

கால் சிறிது ஆகில் கண் ஊறும்; கன்னியர்மேல் மால் சிறிது ஆகில் மனம் ஊறும்.
(ஊறும்.)

கால் துட்டுக்குப் பசு வாங்க வேணும்; அது கால்படி பால் கறக்க வேணும்.

கால் தூக்குகிற கணக்கப் பிள்ளைக்கு மாசம் பத்து ரூபாய்.

கால் தூசு பெற மாட்டார்கள்.

கால் நடைக்கு இரண்டு காசு; கைவீச்சுக்கு ஐந்து காசு. 8110

கால் படி அரிசி இருந்தால் கஞ்சி; அரைப் படி அரிசி இருந்தால் அன்னம்.

கால் படி அரிசிக்காரன் உள்ள மட்டுந்தான்.

கால் பணத்துக் குரங்கு முக்கால் பணத்து வாழைப்பழம் தின்றதாம்.

கால் பாடகம் கழன்று விடுமோ?

கால் போகா இடத்தில் தலையிட்டுக் கொள்ளாதே. 8115
(கொள்ளுகிறதா?)

கால்மாடு, தலைமாடு தெரியாதவன்.

கால் மாறிக் கட்டினால் கனம் குறையுமா?

கால் வந்து சூழக் கரி வந்து சூழ்ந்தது.

கால்வாயைத் தாண்டாதவன் கடலைத் தாண்டுவானா?

கால கதியை ஆரும் கடக்க மாட்டார்கள். 8120

கால சக்கரம் சுழல்கிறது.

காலத்தில் ஓட்டை அடைக்கப்படாவிட்டால் கப்பலும் முழுகிவிடும்.

காலத்தில் பயிர் செய்தால் கடன் வாங்க வேண்டாம்.

காலத்தில் பிறந்த பிள்ளை கைக்கு உதவும்.
காலத்தில் பெய்த மழை போல. 8125

காலத்தில் போனாலும் சூலத்தில் போகாதே.
காலத்தினால் செய்த நன்றி.
(குறள்.)
காலத்துக்கு ஏற்ற கோலம்.
(தக்க கோலம்.)
காலத்துக்கு ஏற்றபடி பெருச்சாளி காவடி எடுத்து ஆடிற்றாம்.
காலத்துப் பயிர் கரம்பிலே. 8130

காலத்து விதை கரம்பிலே.
காலத்தே பயிர் செய்.
கால தாமதம் காரியம் நஷ்டம்.
காலப் பயிர் கடக்க நிற்கும்.
காலப் புழுதி இல்லாதவன் கைம்முதல் இழப்பான். 8135

காலம் அல்லாத காலத்தில் கடல் ஏறிக் கதிர்காமா, கதிர்காமா என்றால் கைகொடுக்குமா?
காலம் அல்லாத காலத்தில் கப்பல் ஓட்டி.
காலம் அல்லாத காலத்தில் காய்த்ததாம் பேய்ச் சுரைக்காய்.
காலம் அறிந்து ஞாலம் ஒழுகு.
காலம் அறிந்து பிழையாதவன் வாலறுந்த குரங்கு ஆவான். 8140

காலம் அறிந்து பெய்யாத மழையும், நேரம் அறிந்து உண்ணாத உணவும் வீண்.
காலம் எவருக்காகவும் காத்திருப்பதில்லை.
காலம் கண்ட கூனி.
காலம் கலி காலம் அல்லவா?
காலம் கலி காலம்; கறுப்புக் கோழி வெள்ளை முட்டை இடும். 8145
(இடுகிறதாம்.)

காலம் கெட்ட கேட்டிற்குக் கருத்தான் என்ன செய்வான்?
காலம் கெட்டுக் கிடக்கிறது; ஜாக்கிரதையாய் இரு.
காலம் கெட்டுக் கைப்பிச்சை எடுத்தாற் போல.
காலம் செய்கிறது ஞாலம் செய்யாது.
(செய்வதைக் கோலம் செய்யாது.)
காலம் செய்த கோலத்துக்கு ஆரை வெறுப்பது? 8150

காலம் செய்வதைக் காலன் செய்வான்.
காலம் செய்வதைக் கோலம் செய்யாது.
(செய்யுமா?)
காலம் துக்கத்தை மாற்றும்.
காலம் போம்; வார்த்தை நிற்கும். கப்பல் போம்; துறை நிற்கும்.
காலம் போன காலத்தில் மூலம் வந்து குறுக்கிட்டது போல. 8155

காலம் வரும் வரைக்கும் யமன் காத்திருப்பான்.
(பழமொழி நானூறு.)
காலமே எழுந்திருந்து காக்கை பார்க்கிறது ஆகாது.
காலமே எழுந்திருந்து காக்கை முகத்தில் விழித்தல் ஆகாது.
காலனுக்கு விளைச்சல் கூடுதல்.
(நாஞ்சில் நாட்டு வழக்கு.)
கால க்ஷேபத்துக்குக் கூலிக்குக் குத்தினாலும் கழுக்கட்டு மயிர் வெளியே தெரியக் கூடாதாம். 8160

காலா காலத்தில் செபம் பண்ணினால் மேல் ஒரு பாவமும் இல்லை.
காலால் இடுவதைத் தலையால் செய்கிறான்.
(இட்ட வேலையை.)
காலால் காட்டினதைக் கையால் செய்கிறது.
(காலால் ஏவியதை.)
காலால் நடக்காமல் காற்றாய்ப் பறக்கிறது.
காலால் நடந்தால் காத வழி? தலையால் நடந்தால் எவ்வளவு தூரம்? 8165

காலால் முடிந்ததைக் கையால் அவிழ்க்கக் கூடாது.
(தள்ள முடியாது. அவிழ்க்கப்படாது.)
காலில் அழுக்கு இருந்தால் தலையில் அமேத்தியம் என்பார்.
காலில் கட்டினால் விருது; குப்பையில் கிடந்தால் துணி.
காலில் தைத்தது கண்ணிலே தைத்தது போல.
காலில் நகம் முளைத்த நாள் முதலாக. 8170

காலில் பட்டது கண்ணில் பட்டது போல.
(தைத்தது போல.)
காலில் பட்டது கையிலும் படும்; மூக்கிலும் படும்.
காலில் பட்ட பிறகு கிரகசாரம் போய் விடாது.
(போகாது.)

காலில் பட்ட பீ மூஞ்சிக்கு வந்தாற் போலே.
காலில் விழுகிறது நல்லது; மேலில் விழுகிறது கெட்டது. 8175

காலுக்கு ஆகாத செருப்பைக் கழற்றி எறி.
(உதவாத செருப்பை.)
காலுக்கு ஆகிற செருப்புத் தலைக்கு ஆகுமா?
காலுக்கு என்றால் தலைக்கு இடுவான்.
காலுக்குக் கடுப்பே தவிரக் கண்ட பலன் ஒன்றும் இல்லை.
காலுக்குக் கண் வேண்டுமா? 8180

காலுக்குக் கை உதவி; கைக்குக் கால் உதவி.
காலுக்குச் சேராத செருப்பைக் கழற்றி எறிய வேண்டும்.
காலுக்குத் தக்க செருப்பும் கூலிக்குத் தக்க உழைப்பும்.
காலுக்குப் போட்டால் தலைக்குப் போடுகிறான்.
காலும் இல்லாமல் தலையும் இல்லாமல் பேசுகிறான். 8185

காலும் தலையும் சாமி குடுமியும் போல.
காலை இஞ்சி, கடும் பகல் சுக்கு, மாலை கடுக்காய் மண்டலம் தின்றால் கோலை ஊன்றிக் குறுகி நடந்தவர் கோலை விட்டுக் குலாவி நடப்பரே.
காலை உப்பலும் கடும்பகல் வெயிலும் மாலை மேகமும் மழைதனில் உண்டு.
காலைக் கடம்பர், மத்தியான்னச் சொக்கர், அந்தித் திருவேங்கி நாதர், அர்த்தஜாமம் சிம்மபுரீசுவரர்.
(கருப்பத்தூர்.)
காலைக் கல், மாலைப் புல். 8190

காலைக் குளி மாதம் தாங்கும்; நடுப்பகல் குளி வாரம் தாங்கும்; அந்திக் குளி அன்றைக் குளி.
(எண்ணெய் தேய்த்துக் கொள்ள.)
காலைக் கடன் வாங்கச் சொல்லும்; அந்தி ஆனை கட்டச் சொல்லும்.
(பயிரின் நிலை. காலையில் வாட்டம். மாலையில் செழிப்பு.)
காலைக் கூழைத் தள்ளாதே; கம்மாளன் வரவைக் கொள்ளாதே.
(காயைலக் குழையது. காலைப் பழையது.)
காலைக் கேட்டுக் கொண்டா நடக்கிறது?
காலைச் சுற்றிய பாம்பு கடிக்காமல் ஒழிய விடாது. 8195
(கடியாமல் விடாது.)

காலைச் செவ்வானம் கடலுக்குப் பெய்யும்.

காலைச் செவ்வானம் கரம்பில் கட்டு; அந்திச் செவ்வானம் ஆற்றில் கட்டு.

காலைச் செவ்வானம் காலத்திலும் மழை இல்லை; அந்திச் செவ்வானம் அப்பொழுதே மழை.

காலைச் செல் பூத்தால் அடுத்த மழை அடங்கும்.
(அடர்த்த மழை.)

காலைத் தூக்குகிற கணக்கப்பிள்ளைக்கு மாசம் பத்து ரூபாய். 8200

காலைத் தென்றல் மழையைக் காட்டும்; மாலைத் தென்றல் மழையை விலக்கும்.

காலை துயில்வானும் மாலை இருப்பானும் பதர்.

காலைப் பனிக்கும் கண் விழிக்கும் ஒத்தது செல்வம்.

காலைப் பிடி என்றால் கழுத்தைப் பிடித்தாளாம்.

காலைப் பிடித்த சனி நடந்தால் ஒழிய விடாது. 8205

காலைப் பிடித்த சனியன் ஊரைச் சுற்றியடிக்கும்.

காலைப் புல்லும் மாலைக் கல்லும் ஆளைக் கொல்லும்.

காலை மிதித்தால் தலையை மிதிப்பான்.

காலை மேகமும் கருந்தனி வெயிலும் மாலை உப்பலும் மழைதனில் இல்லையே.

காலை மோட்சமும் வாலை ஞானமும் நிலைக்காது. 8210
(ஆகாது.)

காலையில் எழுந்து காக்கை முகத்தில் விழிக்காதே.

காலையில் தயிர், கடும் பகலில் மோர், மாலையில் பால்.

காலையில் பூத்த மலர் மாலையில் வாடுவதைப் போல.

காலை வாடை, மாலை உப்பு, மழை அப்புறம்.

காலை விருந்தைத் தட்டாதே; கசடருடன் கூடித் திரியாதே. 8215

காவடிப்பாரம் சுமக்கிறவனுக்குத்தான் தெரியும்.

காவல் காக்க வந்த குரங்கு கைத்துப்பாக்கி கேட்டதாம்.

காவல்தானே பாவையர்க்கு அழகு.

காவேட்டி ரங்கனுக்கு மேல் வெட்டி இரண்டாம்.

காவேட்டி ரங்கனுக்கு மேல் வேட்டி வெள்ளை. 8220

காவேட்டி ரங்கனுக்கு வைப்பாட்டி இரண்டாம்.
காவேரிக் கரைப் பசுப் போல் அலைகிறான்.
காவேரி கடவாக் கந்தாடை அண்ணன்.
(காவிரி.)
காவேரித் தண்ணீர் குடித்தவனுக்குச் சாவேரி ராகம் கஷ்டமா?
காவேரி ஆறு கரை புரண்டு போனாலும் வீராணத் தேரி விதை முதலுக்குக் கட்டாது. 8225

காவேரி ஆற்றை மறிப்பாய்; கார்த்திகை மாதத்துக் கர்க்கடகச் சந்திரனையும் மறிப்பாயா?
காவேரி கஞ்சியாய்ப் போனாலும் நாய் நக்கித்தான் குடிக்க வேண்டும்.
காவேரி பாதி, கர்ணன் பாதி.
காவேரியைப் போல நதி இல்லை; சாவேரியைப் போல ராகம் இல்லை.
காவோலை விழுந்ததென்று குருத்தோலை சிரித்ததாம். 8230

காழி பாதி, வீழி பாதி
(தேவாரம் வீடு திருவீடுமிழலை)
காளை தேட, சோமன் அழிக்க, சுந்தரன் சுகிக்க.
(காளையார் கோயிலில் 3 கோயில்கள். காமேசுவரர், சொர்ணவல்லி இவர் மேல், சோமேசுவரர் சௌந்தரிய நாயகி அலங்கார விசேஷம். சுந்தரேசர், மீனாட்சி நிவேதன விசேஷம்.)

காளவாய்க்கு மழையும் கைம்பெண்டாட்டிக்குப் பிள்ளையும்.
காளி தோட்டத்துக் கற்பக விருட்சம் ஆருக்கும் உதவாது.
காளிப் பட்டம் போனாலும் மூளிப் பட்டம் போகாது. 8235

காளியோடு பிறந்த மூளி, மூளியோடு பிறந்த காளி.
காளை ஈன்றதென்று கேட்குமுன்னே கயிறு எடு என்றானாம்.
காளை கட்டிக் கார் உழவை ஓட்டு.
காளை போன வழியே கன்று போகும்.
(கயிறு போகும்.)
காளை மாடு ஆனாலும் கன்றுக்கு உழக்குப் பால் தா என்றானாம். 8240

காளையைக் கட்டுத் தறியில் விட்டுவிட்டு மேயும் இடத்தில் பிடிக்க முடியுமா?
காற்றில் அகப்பட்ட இலவம் பஞ்சு போல.

காற்றில் அகப்பட்ட கப்பல் போல அலைகிறது மனம்.

காற்றின் இடைப்பட்ட கயவர் மனம் போல.

காற்று அடிக்கக் காற்று அடிக்க நாற்று முடி தூக்குகிறாயா?
வேர்த்து வேர்த்துவிட உம்மாச்சி பண்ணுகிறாயா? 8245

காற்றில் ஆடினதாம் கம்பங்கதிர்; அதற்குப் பயந்ததாம் சிட்டுக்குருவி.

காற்றிலே கருப்பிலே கண்டதில்லை.

காற்றடிக்கக் காற்றடிக்க நாற்றுக் கட்டு சுமக்கிறாயா?
கரிவடியக் கரிவடியச் சிவபூஜை செய்கிறாயா?
(காற்றடிக்கக் கலம் நெல்லுக் குத்துகிறாயா? கரிவடியக் கரிவடியச் சமையல் செய்கிறாயா?)

காற்றடிக்கத் தாழை பூத்தது போல். 8250

காற்று உள்ள போதே தூற்றிக்கொள்.

காற்றுக்கா, மழைக்கா, போர்த்துக் கொள்ளத் துணிக்கா?

காற்றுக் காற்றோடே போயிற்று.

காற்றுக்கு எதிர் ஏற்றிய விளக்குப் போல.

காற்றுக்கு எதிரில் துப்பினால் முகத்தில் விழும். 8255
(எதிரே. முகத்துக்கு நேரே.)

காற்றிலே அகப்பட்ட கப்பல் போல் அலைகிறது மனம்.

காற்றுக்கு எதிரே ஏற்றின விளக்கைப் போல.

காற்றிலே கருப்பிலே கண்டது இல்லை.

காற்று இல்லாமல் தூசி பறக்குமா?

காற்றுக்கு எதிரே சுற்றினால் முகத்துக்கு நேரே விழும். 8260

காற்றுக்குத் தகுந்தாற் போல் பாயை மாற்றிக் கட்டு.

காற்றுக்குத் தோணி எதிர்த்து ஓடாது.

காற்றுக்கோ மழைக்கோ போர்த்திக் கொள்ளத் துணி இருக்கிறதா?

காற்று காற்றோடு போயிற்று.

காற்றுப் படாமல் காப்பாற்றுகிறேன். 8265

காற்றும் சிலரை நீக்கி வீசுமோ?
(கபிலர் அகவல்.)

காற்றும் மழையும் கலந்து அடித்தது போல்.
காற்றைப் பார்த்துக் கப்பல் நாட்டு.
காற்றைப் பிடித்துக் கரகத்தில் அடைத்த கதை.
(அடைத்துக் கொள்ளலாமா? அடைத்தது போல.)
காற்றைப் பிடித்துக் கையினில் அடக்க முடியுமா? 8270

கானகத்து உக்க நிலா.
(பழமொழி நானூறு.)
கானல் நீர் போல.
கானலைத் தண்ணீராய்க் கண்டதைப் போல.
கானலை நீர் என்று எண்ணும் மான் போலே.
கானலைச் சலமாய்க் கண்டது போல. 8275

காஷ்மீர்க் கண்டமோ?
காஷ்மீரம் முதல் கன்யாகுமரிவரை.
காஷ்மீருக்குப் போனால் காசு மீறாது.

கிங்கிணிக்குக் கிங்கிணியும், மங்கிணிக்கு மங்கிணியும் கெட்டது.
கிட்ட உறவு முட்டப் பகை.
(+ தூர இருந்தால் நீள உறவு.)
கிட்டக் கிட்ட வந்தாலும் எட்ட எட்டப் போகிறான். 8280

கிட்ட நெருங்க முட்டப் பகை.
கிட்ட வா நாயே, என்றால் எட்டி மூஞ்சியை நக்க வந்தாற் போல.
கிட்டாதாயின் வெட்டென மற.
(கிட்டாத ஒன்றை.)
கிட்டிற்று, முட்டிற்று, வடுகச்சி கல்யாணம்.
கிட்டினால் ராமா, கோவிந்தா; கிட்டாவிட்டால் ஒன்றும் இல்லை. 8285

கிடக்கிறது எல்லாம் கிடக்கட்டும்; கிழவனைத் தூக்கி மணையில் வை.
(கிழவியை, கிழவனை எடுத்து மடியில் வைத்துக்கொள்.)
கிடக்கிறது எல்லாம் கிடக்கக் கிழவியைத் தூக்கி மணையில் வைத்தாளாம்.
கிடக்கறது ஒட்டுத் திண்ணை; கனவு காண்கிறது மச்சு வீடு.
கிடக்கிறது கிடக்கட்டும்; கிழவனையும் கிழவியையும் உள்ளே விடுங்கள்.
கிடக்கிறது குட்டிச்சுவர்; கனாக் காண்கிறது மச்சு வீடு. 8290
(மச்சு மாளிகை.)

கிடந்த கிடைக்கு நடந்த நடை மேல்.
கிடந்த பசியைக் கிள்ளிக் கிளப்பினானாம்.
கிடாக் கன்று போட்டது என்றால் பிடித்துக் கட்டு என்றானாம்.
கிடாரம் உடைந்தால் கிண்ணிக்கு ஆகும்; கிண்ணி உடைந்தால் என்னத்துக்கு ஆகும்?
கிடாவும் காளையும் பிணைத்தாற் போல. 8295

கிடைக்காத சரக்குக் கிடைத்ததைப் போல.
(கிடையா.)
கிடைக்குத் கிடை ஆடுதான்.
கிடை கிடந்த இடத்தில் மயிர் கூடக் கிடையாது.
கிடைப்பது குதிரைக் கொம்பு.
கிண்ட்யாய நம: 8300

கிண்டக் கிண்ட அம்பட்டன் குப்பையிலே மயிரே புறப்படும்.
கிண்டக் கிண்டக் கீரையும் மயிரும்.
கிண்டி விட்டுக் கிளறி வைக்கிறது.
(கிளறி விடு.)
கிண்டி விட்டு வேடிக்கை பார்க்கிறது.
கிண்ணி பட்டாலும் பட்டது; கிடாரம் பட்டாலும் பட்டது. 8305

கிண்ணி வைத்துக் கிண்ணி மாற்றுகிறது.
கிணற்றில் அகப்பட்டது போல.
கிணற்றில் இருக்கும் ஆமைபோல் இருப்பவனுக்கு உலகம் தெரியுமோ?
கிணற்றில் கல்லைப் போட்டது போல.
(கிணற்றில் தள்ளிக் கல்லையும் போட்டான்.)
கிணற்றில் தண்ணீர் உதித்தது. 8310

கிணற்றில் போட்ட கல் மாதிரி.
கிணற்றில் போட்டாலும் எண்ணிப் போடு.
கிணற்றில் விழுந்தவன் மறுபடியும் விழுவானா?
கிணற்றின் ஆழமும் கயிற்றின் நீளமும் பார்க்க வேண்டும்.
கிணற்று ஆழத்தைக் கண்டாலும் காணலாம்; நெஞ்சு ஆழத்தைக் காண முடியுமா? 8315

கிணற்றுக்குத் தப்பித் தீயில் பாய்ந்தான்.
(விழுந்தது போல.)
கிணற்றுக்குள் இருந்து பேசுகிறவனைப் போல் பேசுகிறான்.
கிணற்றுக்குள் இருப்பவனை விளக்கிட்டுத் தேடினாற்போல.
கிணற்றுக்குள்ளே கங்கை குதித்தாற் போல.
கிணற்றுத் தண்ணீரை வெள்ளமா கொண்டு போகும்? 8320

கிணற்றுத் தவளைக்குக் கிணறுதான் சமுத்திரம்.
கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பம் ஏன்?
கிணற்றுத் தவளை தண்ணீர் குடித்ததைக் கண்டது யார்? கேட்டது யார்?
(குடியாததை.)
கிணற்று நீரை வெள்ளம் கொண்டு போகுமா?
கிணற்றைக் கண்டு கடல் ஒதுங்கிப் போகுமா? 8325

கிணற்றைக் காத்தால் வயிற்றைக் காக்கும்.
கிணற்றைத் தூர்த்தால் வயிற்றைத் தூர்க்கும்.
கிணறு இருக்க மலை தோண்டாதே.
(கிடக்க மலை கல்லாதே.)
கிணறு இறைக்க இறைக்கச் சுரக்கும்.
கிணறு தப்பித் துரவில் விழலாமா? 8330

கிணறு மெத்தினால் கீழ்வரை பொசியும்.
கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டாற் போல.
கிணறு வெட்டித் தவளையையும் பிடித்து விடுகிறதா?
கிணறு வெட்டித் தாகம் தீர்க்கலாமா?
கிரக சாந்திக்கு க்ஷவரம் செய்து கொள்கிறதா? 8335

கிராக்கி மொச்சைக் கொட்டை; வராகனுக்கு இரண்டு கொட்டை.
(பத்துக் கொட்டை.)
கிராம சாந்திக்காகத் தலையைச் சிரைத்துக் கொண்டானாம்.
கிராமத்தைப் பார்க்கச் சொன்னால் சேரியைப் பார்க்கிறான்.
கிராம தேவதை முதல் க்ஷாம தேவதை வரை ராம தேவனுக்குச் சரியாமோ?
கிரிசை கெட்டு வரிசை மாறுகிறது. 8340

கிரியை அற்றோன் மறை சாற்றுவது ஏன்?
கிரியை அறிந்து சொன்னால் கிழித்துக் கொள்கிறதா?
கிருக சாந்திக்கு க்ஷவரம் பண்ணுவதா?
கிருபா நிதியே கருணாநிதி.
(சருவா நிதி.)
கிருஷ்ண பட்சத்துச் சந்திரனைப் போல். 8345

கிருஷ்ண வாத்தியார் திவசம் பண்ணுகிறதற்கும் கிழக்கு வெளுக்கிறதற்கும் சரியாய்ப் போகும்.
கிருஷ்ணா, ராமா, கோவிந்தா, கிழக்கு எப்போது வெளுக்குமடா?
கிலி பிடித்ததோ? புலி பிடித்ததோ?
கிழ ஓணான் மரம் ஏறாதா?
கிழக் கிடாவைப் புகழ்கிறது இகழ்ச்சி அல்லவா? 8350

கிழக்கிலும் மேற்கிலும் கருவிலும் கடன் படாதே.
(கொடாதே.)
கிழக் குடலுக்குச் சோறும் இடி சுவருக்கு மண்ணும் இடு.
கிழக் குரங்கு குட்டி போட்டாற் போல.
கிழக் குரங்குபோல விழிக்கிறதைப் பார்.
கிழக்கே கடன் கொடாதே. 8355
(செங்கற்பட்டு வழக்கு.)

கிழட்டுக் குதிரைக்குச் சவுக்கடி கொடுத்து போல்.
கிழத்துக்குச் சாதமும் முறத்துக்குச் சாணியும்.
கிழ நாய் குரைப்பதற்கும் காரணம் உண்டோ?
கிழப் பேச்சுக் கவைக்கு உதவுமா?
கிழம் ஆனாலும் கெட்டு ஆனாலும் கட்டிக் கொண்டவன் பிழைப்பான். 8360

கிழமைக்கு வைத்து அழுவது.
(8ஆம் நாளில் திருநெல்வேலி வேளாளர் இறந்தவன் விரும்பிய பொருள்களை வைத்து அழுவார்கள்.)
கிழவன் கொடுத்த பணத்துக்கு நரை உண்டா?
கிழவன்தான் நரை; கிழவன் கொடுத்த பணமுமா நரை?
கிழவன் பேச்சுக் கிண்ணாரக்காரனுக்கு ஏற்குமா?
(கிழவி பேச்சு. கேட்குமா?)
கிழவனுக்கு வாழ்க்கைப் படுவதிலும் கிணற்றில் விழலாம். 8365

கிழவனைக் கல்யாணம் பண்ணிக் கொண்டால் கடைசி வரையில் சாப்பாடு.
கிழவி இருந்த வீடும், கிளி இருந்த காடும் ஈடேற முடியா.
கிழவி கிண்ணாரம் போடுகிறாள்.
கிழவி சொல்லக் குமரி கேளாள்.
(யாழ்ப்பாண வழக்கு.)

கிழவி தலை நரைத்தது என்ன? அதை மழுங்கச் சிரைத்தது என்ன? 8370

கிழவி திரண்டாளாம்; பஞ்சாங்கக்காரன் பிட்டுக்கு அழுதானாம்.
கிழவி பாட்டைக் கிண்ணாக்காரன் கேட்பானா?
(கிழவி பேச்சைக் கின்னரக்காரன்.)
கிழவி போன போது சுவர் இடிந்து விழுந்ததாம்.
கிழவியும் காதம் குதிரையும் காதம்.
(ஔவையார் கூற்று.)
கிழவியும் காலை மடக்க மாட்டாள். 8375

கிழவியை அடித்தால் வழியிலே பேளுவாள்.
கிழவியை எடுத்து மணையிலே வைத்தாற் போல.
கிழவியைப் பாட்டி என்பதற்குக் கேட்க வேண்டுமா?
கிழிஞ்சாப்பிள்ளை மணியத்திலே நீட்டின விரல் அற்றுப் போம்.
கிழித்த கோட்டைத் தாண்ட மாட்டான். 8380

கிழிந்த சேலை காசுக்கு இரண்டு.
கிழிந்த சேலையும் பேச்சுக் கற்ற வாயும் சும்மா இரா.
கிழிந்தது கிருஷ்ணன் வேட்டி; தைத்தது தாசன் வேட்டி.
கிழிந்த பம்பரம் காசுக்கு இரண்டு,
(கிழிந்த பட்டு.)
கிள்ளப் பழுக்குமாம்; கிளி இருந்து கொஞ்சுமாம். 8385

கிள்ளாவுக்குச் செல்லும் கெடி மன்னர் போல.
கிள்ளி எடுக்கச் சதை இல்லை; பேர் தொந்தியா பிள்ளை.
கிள்ளுக் கீரை போல் உள்ளத்தில் எண்ணாதே.
கிள்ளுக் கீரையா?
கிள்ளுகிறவனிடத்தில் இருந்தாலும் அள்ளுகிறவனிடத்தில் இருக்கக் கூடாது. 8390

கிள்ளுவார் கீழே இருந்தாலும் இருக்கலாம்; அள்ளுவார் கீழே இருக்க முடியாது.
கிள்ளை பழுக்குமாம்; கிளி வந்து கொஞ்சுமாம்.
கிளர்த்தும் கல்வி தளர்ச்சி படாது.
கிளி அருமையைப் பூனை அறியுமா?
கிளி அழுதால் பூனை விடுமா? 8395

கிளி போலப் பெண்டாட்டி இருந்தாலுல் குரங்குபோலக் கூத்தியாள் வேணுமாம்.
கிளியைப் போலப் பேச்சும் மயிலைப் போல நடையும்,
கிளியை வளர்த்துக் குரங்கு கையில் கொடுத்தது போல.

கீர்த்தி பெற்றும் கிலேசம் என்ன?
கீர்த்தியால் பசி தீருமா? 8400

கீர்த்தியும் அபகீர்த்தியும் வந்தால் போகா.
கீரிக்கும் பாம்புக்கும் தீராப் பகை.
கீரி கடித்த பாம்பு போல.
கீரி கீரி நண்டு பிடி, வாய்க்கால் கீரி நண்டு பிடி, வயலுக் கீரி நண்டு பிடி.
(கையை மூடித் திறக்கும் விளையாட்டு.)
கீரியும் பாம்பும் போல: 8405

கீரி வாய்ப் பாம்பு போல.
கீரை இல்லாச் சோறும் கிழவன் இல்லா பட்டணமும் பாழ்.
கீரைக் கட்டை வெட்டச் சொன்னால் தோரணம் கட்டுவதற்கா?
(கட்டுகிறதா?)
கீரைக் கடைக்கும் எதிர்க்கடை வேண்டும்.
(வைப்பது போல.)
கீரைக்குக் கழுவின தண்ணீர் கிண்டி அவிக்கப் போதும். 8410

கீரைக்குப் புல்லுருவி கீழே முளைத்தாற் போல்.
கீரைக்குப் புழு வேரில்.
கீரை, கீரைத்தண்டு, கீரைப் புளிக் குழம்பு என்றானாம்.
கீரைத்தண்டு பிடுங்க ஏலேலப் பாட்டு ஏன்?
(பாட்டா?)
கீரை நல்லதானால் கழுவின தண்ணீரே போதாதா? 8415
(கழுவின தண்ணீரிலே வெந்துவிடும்.)

கீரை மசித்த வாணாயில் ரசம் வைத்த உறவு.
கீரையும் இரண்டு கறி பண்ணாதே.
கீரையும் மயிரும் விரவியது போல.

கீரையும் மாவும் கெட்ட புளிச்சாறும்.
(கட்ட.)
கீரை விற்ற தானியம் போல. 8420

கீழ் அகத்து மன்னி குளித்தால் கிழக்கு வெளுக்கும்.
கீழ் எலி போலத் தோண்டிக் கிளறுகிறது.
கீழ் ஏழ் உலகமும் மேல் ஏழ் உலகமும் பார்த்தவன் போல் பேசுகிறான்.
கீழ் ஏழு லோகமும் மேல் ஏழு லோகமும் கண்ட காட்சியா?
கீழ்க்காது மூளி, மேற்காது மூளி, சண்டைக்கு ரணபத்திர காளி. 8425

கீழ்க்குலத்தான் ஆனாலும் கற்றவன் கற்றவன்தான்.
கீழ்க் குலத்தான் ஆனாலும் கற்றவன் மேற்குலத்தான்.
கீழக் கரை நாய் அடிபட்டாற் போல் அடிபடுகிறாயே.
கீழே பாம்பு என்றால் மேலே பார்க்கின்றான்.
கீழே போட்டு உதைக்கச்சே மீசையில் மண் படவில்லை என்ற கதை. 8430

கீழே போனால் பிணம்; மேலே வந்தால் பணம்.
(கோலார் தங்க வயலில்.)
கீழே விழுகிற மாப்பிள்ளைக்கு அரிவாள் மணையை முட்டுக் கொடுத்தது போல.
கீழே விழுந்தாலும் மீசையில் மண் படவில்லை என்றானாம்.
கீழைத்தெருக் கிழவி அவிசாரி போனாள் என்று மேலைத் தெருக் கிழவன் கோவணத்தில் கிட்டியைக் கட்டி அடித்தானாம்.
கீழைத் தெருவிலே பல்லக்குக் கொடுத்து மேலைத் தெருவிலே பிடுங்கிக் கொள்கிறது. 8435
(கீழைத் தெருவிலே கொடுத்து.)

கீழோர் ஆயினும் தாழ உரை.
கீற்றிலே கனவிலே தெரியுமா?
கீற்றிலே வேண்டாம்; காற்றிலே வாரு.
கீறி ஆற்றினால் புண் ஆறும்.

குங்குலியத் தூபம் காட்டிச் சன்னதமும் குலைந்தால் கும்பிடு எங்கே? 8440

(காட்டியும்.)

குங்குமக் கோதைக்கும் அஞ்சு பணம்; குருட்டுக் கண்ணிக்கும் அஞ்சு பணமா?

குங்குமம் இட்ட நெற்றியும் குசு விட்ட குண்டியும் சரியாகுமா?

குங்குமம் சுமந்த கழுதை வாசனை அறியுமா?

(பரிமளம்.)

குச்சத்திரம் குசுவாகப் போக.

குச்சத்திரம் குடியைக் கெடுக்கும். 8445

குச்சு நாய்க்கு மச்சு வீடா?

குச்சு வீடு கட்டி அல்லவா மச்சு வீடு கட்ட வேண்டும்?

குசத்தாதனும் இடை ஆண்டியும் இல்லை.

குசத்தி நாக்கை அறுத்தாலும் குண்டு மூன்று காசு என்பாள்.

குசத்தி நாக்கைக் குட்டம் போட்டு நறுக்கினாலும் குடம் தோண்டி இரண்டு காசு என்பாள் 8450

(கூழ் கூழாய் அறுத்தாலும் கூழையாய் அறுத்தாலும்.)

குசவனுக்கு ஆறு மாதம் வேலை; தடிகாரனுக்கு அரை நாழிகை.

(தடியனுக்கு ஆறு நாழிகை வேலை.)

குசவனுக்குப் பல நாள் வேலை; தடிகாரனுக்கு ஒரு நிமிஷ வேலை.

(ஒரு க்ஷண வேலை, அரை நாழிகை வேலை.)

குசு கும்பிடப் போனால் தெய்வம் திருடுக்கென்றதாம்.

குசு கொண்டு வந்திருக்கிறேன், கதவைத் திற, கொட்டி வைக்க இடம் இல்லை.

குசு புடைக்க வெறும் முறம் ஆச்சு. 8455

குசும்புக்கும் கவுண்டிக்கும் மருந்து ஏது?
(பொறாமைக்கும் வழுக்கைக்கும். நாஞ்சில் நாட்டு வழக்கு.)
குசு விடாமல் இருந்தால் குங்கிலியம் மணக்கும்.
குசுவுக்குப் பயந்து குடி ஓடிப் போனாளாம்.
குஞ்சிரிப்புக்கு மருந்து சாப்பிட உள்ள சிரிப்பும் போனாற் போல.
குஞ்சு செத்த காக்கை சிறகு அடித்துக் கொள்வது போல. 8460

குஞ்சுடன் மேய்ந்த கோழியைப் போல.
குட்டக் குட்டக் குனிகிறவனும் முட்டாள்; குனியக் குனியக் குட்டுகிறவனும் முட்டாள்.
(மடையன்.)
குட்டங்கோனி தட்டான் குறைக்கும் வரி வைத்தான்.
குட்ட நாடு கெட்டால் எட்டு நாடும் கெட்டன.
குட்டி ஆடு கொழுத்தாலும் வழுவழுப்புப் போகாது. 8465
(குறையாது.)

குட்டி ஆடு செத்ததென்று கோனாய் குந்தி அழுததாம்.
குட்டி ஆனைக்குக் கொம்பு முளைத்தது; பட்டணமெல்லாம் பறந்தோடிப் போச்சு.
குட்டி ஆனையும் குளத்தைக் கலக்கும்.
குட்டி இட்ட நாய்க்குக் குப்பை மேடு கோபுரம்.
குட்டிக் கரணம் போட்டாலும் கொடுப்பது அரிது. 8470

குட்டிக் கரணம் போட்டாலும் மட்டி புத்தி போகாது.
(மட்ட.)
குட்டிக் கரணம் போட்டாலும் லோபி கொடான்.
(காசு கொடான்.)
குட்டிக் கரணம் போட்டாலும் வட்டில் சோற்றுக்கு வழி இல்லை.
குட்டிக் கலகம் பண்ணுகிறவன் குட்டுப்பட்டுச் சாவான்.
(செய்பவன்.)
குட்டிக் கிடையிலே ஓநாய் புகுந்தது போல. 8475

குட்டிக்கும் பட்டிக்கும் குடிபோகச் சந்தோஷம்.
(குட்டிக்கும் நாய்க்கும், பட்டி-நாய். குடிபோகக் கொண்டாட்டம்.)
குட்டிக குரங்கானாலும் கெட்டிப் பிடி.
குட்டிக் கொழுந்தனும் கோள் சொல்லி நாத்தனாரும்.
குட்டிக் கொள்ளும் போதே கண்ணில் குட்டிக் கொண்டான்.
(கொண்டால்.)
குட்டிக் கொள்ளும் போதே முட்டிக் கொண்டானாம். 8480

குட்டி குரைத்து நாயின் தலையிலே வைத்தது போல.
குட்டி கொழுத்தாலும் வழுக்கை வழுக்கைதான்.
குட்டிச் சுவரில் முட்டிக் கொள்ள வெள்ளெழுத்தா?
குட்டிச் சுவரிலே தேள் கொட்டக் கட்டுத் தறியிலே நெறி ஏறுமா?
(இடுமா?)
குட்டிச் சுவரிலே தேள் கொட்டத் தண்ணீர் மிடாவிலே
நெறி கட்டினது போல. 8485

குட்டிச் சுவரிலே தேள் கொட்ட நெடுஞ் சுவரிலே நெறி கட்டியதாம்.
குட்டிச் சுவரும் குரங்கு இருந்த மாளிகையும் பாழ்.
(மாளிகையும் போல.)
குட்டிச் சுவரே; கூறை இல்லா வீடே!
குட்டி செத்ததுமல்லாமல் குழி தோண்ட இரண்டு பணம்.
குட்டி செத்தாலும் குரங்கு விடாது. 8490

குட்டி நரை குடியைக் கெடுக்கும்.
குட்டி நாய்க்குப் பல் முளைத்தது போல.
குட்டி நாய்க்கும் குழந்தைப் பிள்ளைக்கும் இடம்
கொடுக்கக் கூடாது.
குட்டி நாய் குரைக்கிறது போல.
குட்டி நாய் குரைத்துப் பட்டி நாய்க்குக் கேடு வந்தது. 8495
(உதை வந்தது.)

குட்டி நாய் கொண்டு வேட்டை ஆடினது போல.
(நாயை.)
குட்டி நாய் வேட்டை நாயை விரட்டினாற் போல.
குட்டி நாயும் குழந்தைப் பிள்ளையும் இட்ட கையைப் பார்க்கும்.
குட்டி நாயை விட்டு வேட்டை ஆடினாற்போல.
குட்டிப் பாம்பை அடித்தாலும் குற்றுயிராக விடக்கூடாது. 8500
(விடாதே.)

குட்டி பெருத்தாலும் வழுக்கை வழுக்கைதான்.
குட்டி போட்ட நாய் கூனி உட்கார்ந்தது போல.
குட்டி போட்ட நாய் போலக் குரைக்கிறது.
குட்டி போட்ட நாய் போல வள்ளென்று விழுகிறான்.
குட்டி போட்ட நாய் முடங்கினாற் போல. 8505

குட்டி போட்ட நாய் முணுமுணுத்தாற் போல.
குட்டி போட்ட நாயைப் போல் ஏன் உறுமுகிறாய்?

குட்டி போட்ட பூனைபோல அலைகிறான்.
குட்டி மானம் விட்டுக் குசவனோடு பேசினால் சட்டையும் பண்ணான்; சட்டியும் கொடான்.
(சட்டியும் கொடான், சட்டையும் பண்ணான் மானம் தப்பி.)
குட்டியின் கையைப் பிடித்துக் குரங்கு கொள்ளிக் கட்டைச் சூடு பார்த்தாற் போல. 8510

குட்டி வேதாந்தம் குடியைக் கெடுக்கும்.
குட்டின குட்டும் குண்டிற் பாய்ந்த தண்ணீரும் வருமா?
(குழியிற் பாய்ந்த.)
குட்டுப்பட்டாலும் மோதிரக் கையால் குட்டுப்பட வேண்டும்.
குட்டை ஏறிக் குரைத்த நாயே, சதை வீங்கிச் செத்த நாயே!
குட்டை குழப்பினால் சேறுதான் மிஞ்சும். 8515

குட்டை குழப்புகிறான்.
குட்டைத் தாதன் குட்டையிலே விழுந்தான்.
குட்டைத் தாதன் மகன் மட்டைத்தாதன் குளத்திலே விழுந்து செத்தான்.
குட்டை மரம் குலை குலையாய்க் காய்த்திருக்கிறது.
குட்டையில் ஊறிய மட்டை. 8520

குட்டையைக் கலக்கிப் பருந்து இரை இட்டதுபோல.
(இரை தேடுவது.)
குட்டையைக் குழப்பி மீனைப் பிடிக்கிறது போல.
குட்டை வால் நாய்க்கு நெஞ்சில் அறிவு.
குடத்தில் பாக்குப் போடு; மிளகாய்ப் பொடிக்கு உப்புப் போடாதே.
குடத்தில் பொன் கூத்தாடுமா? 8525

குடத்தில் விளக்கை இட்டுக் கோபுரத்தின் மேல் வைத்தாற் போல.
குடத்து விளக்குக்கும் குன்றி மணிச் சாதத்துக்கும் இருக்கிறேன்.
குடத்துள் ஏற்றிய விளக்குப் போல.
(குடத்தில்.)
குடத்தைக் கவிழ்த்துப் பழத்தைச் சொரிந்த கதை.
குடப் பாம்பினிடைச் சிறு தேரை. 8530

குடப்பால் கறந்தாலும் குதிரை யோட்டம் ஓட மாட்டாது.
குடப்பால் கறந்தாலும் கூரை பிடுங்குகிற மாடு ஆகாது.
(கூரைபிடுங்கித் தின்னுமாம் மாடு.)
குடப்பாலில் கையைவிட்டுச் சத்தியம் செய்.

குடம் தண்ணீரில் கொள்ளி வைத்தாற் போல.
குடல் அறுந்த கோழி எங்கே போகும்? 8535

குடல் அறுந்த நரி எவ்வளவு தூரம் ஓடும்?
(எந்த மட்டும்.)
குடல் ஏற்றத்துக்குக் கோடி வைத்தியம்.
குடல் காய்ந்தால் குதிரையும் வைக்கோல் தின்னும்.
குடல் காய்ந்தால் நாய்க்கு நாற்றம் நறுமணம்.
குடல் காய உண்டால் உடல் காயம் ஆகும். 8540

குடல் கூழுக்கு அழுகிறதாம்; கொண்டை பூவுக்கு அழுகிறதாம்.
குடலில் கண்ட தினவு போல்.
குடலும் கூந்தலும் கொண்டது மட்டும் கொள்க.
(கொள்கை.)
குடலைப் பிடுங்கிக் காட்டினாலும் அதுவும் கஜகர்ண வித்தை என்கிறான்.
குடலைப் பிடுங்கிக் காட்டினாலும் வாழைநார் என்பார். 8545
(உருவிக் காட்டினாலும்.)

குடலைப் பிடுங்கி மாலையாய்ப் போட்டுக் கொள்வேன்.
குடலைப் பிடுங்குகிறது ஓக்காளம்.
குடி இருக்க வந்தாயோ? கொள்ளி வைக்க வந்தாயோ?
குடி இருந்த வீட்டிலே கொள்ளி வைக்கிறவன்.
(வீட்டுக்கே வைப்பதா?)
குடி இருந்து அறி; வழி நடந்து அறி. 8550

குடி இருந்து பார்; கூட்டுப் பயிர் இட்டுப் பார்.
குடி இருப்பது குச்சு வீடு; கனாக் காண்பது மச்சு மாளிகை.
(மச்சு வீடு.)
குடி இல்லா ஊரிலே அடியிடல் ஆகாது.
குடி இல்லா ஊரிலே ஒற்றைப் பணக்காரன்.
(ஒற்றை விர்த்தகன்.)
குடி இல்லா ஊரிலே குருவியும் பறக்காது. 8555

குடி இல்லா ஊருக்குக் குள்ள நரியே அரசன்.
குடி இல்லா விட்டால் குண்டுப் பெருச்சாளி உலவும்.
(குடியில்லா வீட்டில்.)
குடி உடையானே முடி உடையான்.

குடி உயரக் கோல் உயரும்.
குடி உயர முடி உயரும். 8560

குடிக்கக் கஞ்சி இல்லை; கொப்புளிக்கப் பன்னீராம்.
குடிக்கச் செம்பும் எரிக்க விளக்கும் வேண்டாமா?
குடிக்கச்சேகுமட்டினால் எடுக்கும்.
குடிக்கத் தண்ணீர் கேட்டால் குளிப்பாட்டக் கொண்டு வருவான்.
குடிக்கத் தெரியாதவன் கவிழ்த்துக் கொட்டினானாம். 8565

குடிக்கா விட்டால் கொட்டிக் கவிழ்.
(குடிக்கத் தெரியாவிட்டால்.)
குடிப்பது எருமை மூத்திரம்; கடித்துக் கொள்வது இஞ்சிப் பச்சடி.
குடிக்கிறது காடி நீர்; அதற்குத் தங்க வட்டிலா?
குடிக்கிறது கூழ; இருக்கிறது சிங்காசனம்.
குடிக்கிறது கூழ்; கொப்புளிக்கிறது பன்னீர். 8570
(குடிக்கிறது நீர்.)

குடிக்கிறது பழங் கஞ்சி; கொப்புளிக்கிறது பன்னீர்.
குடிக்கிறது வெந்நீர்; கொப்புளிப்பது பன்னீர்.
குடிக்கிற பாலை வெடிப்பிலே வார்க்கிறதா?
குடிக்கிற முலையும் சரி, பிடிக்கிற முலையும் சரியா?
(ஒன்றுதானா?)
குடிக்கிறவன் கையைச் சுற்றிச் சூடு போட்டாலும் குடியை விடான். 8575

குடிக்கிற வீடு விடியுமா?
குடிக்குச் சகுனியும் கொல்லைக்குப் பல்லியும் கூடா.
குடிகாரன் புத்தி விடிந்தால் தெரியும்.
குடிகாரன் பேச்சு விடிந்தால் போச்சு.
(பொழுது விடிந்தால்.)
குடிகாரன் வீட்டில் விடிய விடியச் சண்டை. 8580

குடி கெடுத்த குஷியிலே குரங்கைக் கட்டிக்கொண்டு அழுதானாம்.
குடி, சூது, விபசாரம் குடியைக் கெடுக்கும்.
குடித்த மருந்து குடித்தாற் போல எடுத்தால் பரிகாரி வாயிலே மண்ணுதான்.
(பரிகாரி- வைத்தியன்.)
குடித்த மறி கூட்டில் கிடைக்காது.

குடித்தனம் என்று பண்ணினால் நன்மையும் வரும்; தீமையும் வரும். 8585

குடித்தனம் செழித்தால் துரைத்தனம் செழிக்கும்.
குடித்தனம் மேலிட வேண்டிப் பிடாரியைப் பெண்டு வைத்துக் கொண்டான்.
குடித்தனமே துரைத் தனம்.
(குடித்தனமோ, துரைத்தனமோ?)
குடிப்பது கூழ்; ஏறுவது தந்தப் பல்லக்கு.
குடிப்பது கூழ்; கொப்புளிப்பது பன்னீராம். 8590

குடிப்பது மல ஜலம்; கொப்புளிப்பது பன்னீர்.
குடிப் பெண் வயிறு எரிய, கொடிச் சீலை நின்றெரிய.
குடி போகிற வீட்டுக்கு வரச் சொன்ன கதை.
குடி போன வீட்டிலே வறட்டு நாய் காத்தது போல.
குடி மக்கள் துரைத்தனம் செய்கிறது போல். 8595

குடி மதம் அடிபடத் தீரும்.
(அடிபட்டால்.)
குடியனும் வெறியனும் அடிபடாமல் குணப்பட மாட்டார்கள்.
குடியனும் வெறியனும் சரி.
குடியாத வீடு விடியாது.
குடியில் பிறந்து குரங்காட்டம் ஆடுகிறான். 8600

குடியில் பிறந்து செடியில் விழுந்தான்.
குடியில் பெண் வயிறு எரிந்தால் கொடியிற் சேலை நின்று எரியும்.
குடியில்லா ஊரில் ஒற்றைப் பணக்காரன் வர்த்தகன்,
குடியிலே குரங்கானாலும் கொள்.
குடியும் கெட்டுக் குடிக்கிற ஓடும் கெட்டது. 8605

குடியும் சூதும் குடியைக் கெடுக்கும்.
குடியே குடியைக் கெடுக்கும்.
குடி வரி உயர்த்திக் கொள்ளை அடிக்காதே.
குடி வைத்த வீட்டில் கொள்ளி வைக்கலாமா?
குடி வைத்துக் கொண்டாயோ? கொள்ளி வைத்துக் கொண்டாயோ? 8610

குடு குடு என்று ஓடிக் குடுமியைச் சிரைத்தானாம்.
(ஓடி வந்தானாம்.)

குடும்பத்தில் இளையவனும், கூத்தாடியில் மூத்தவனும் உதவார்.
(கூத்தாடியில் சோம்பேறியும்.)
குடும்பா என்றால் கொத்து வேண்டாம்.
குடுமிக்கு ஏற்ற கொண்டை.
(தக்க.)
குடுமித் தலையின் வீறாப்பைக் கொண்டைத் தலையா பாரடா. 8615
(பார்த்தாயா?)

குடுமித் தலையும் மொட்டைத் தலையும் கூடுமா?
குடுமித் தலையும் மொட்டைத் தலையுமாய்க் கட்டுகிறது.
குடுமியானுக்குக் குறுணி கொடுக்கிறதா என்று புற்றின்மேல் படுத்த கதை.
குண்டன் கூடினால் சண்டை வரும்;குமரி கூடினால் நகர் பாழாகும்.
குண்டா கரணம் போட்டாலும் பிண்டச் சோற்றுக்கு வழி இல்லை. 8620

குண்டி அறுந்த பருந்து போல.
குண்டி எத்தனை கோணல் கோணினாலும் சுமை வீட்டில் போய்ச் சேர்ந்தால் சரி.
குண்டி எத்தனையோ குளம்; குளம் எத்தனையோ குண்டி.
குண்டி எத்தனையோ துணிகளைக் கண்டது; குந்தாணி எத்தனையோ உரலைக் கண்டது.
குண்டி காய்ந்தால் குதிரையும் வைக்கோல் தின்னும். 8625

குண்டித் துணியும் குடிக்கக் கூழும் இன்றிக் கண்டிக்குச் சென்றும் கவலையே கொண்டாற் போல்.
குண்டி மறைக்கத் துணி இல்லை; கொண்டை பூவுக்கு அழுகிறதாம்.
குண்டி மினுக்கி அரிவாள் தீட்டுமுன் உள்ள பதநீர் கள் ஆகிவிடும்,
குண்டி வற்றினால் குதிரையும் வைக்கோல் தின்னும்.
குண்டு குண்டு என்று ஓடினாலும் குட்டி ஆனை குதிரை ஆகுமா? 8630

குண்டு சட்டிக்குள்ளே குட்டி யானை நுழைந்தாற் போல்.
குண்டு சட்டியிலே குதிரை ஓட்டுகிறான்.
(ஓட்டுகிறது.)

குண்டுணிக் குப்பன்.
குண்டுணி சொல்கிறவர்களுக்கு இரு நாக்கு; கட்டு விரியனுக்கும் இரு நாக்கு.
(கடு நாக்கு.)
குண்டுப் பெருச்சாளியும் வண்டும் போல. 8635

குண்டு பட்டுச் சாகாதவன் வண்டு கடித்துச் செத்தானாம்.
குண்டு போன இடத்தில் குருவி நேர்ந்தது.
குண்டும் இல்லாமல் மருந்தும் இல்லாமல் குருவி சுடலாமா?
குண்டு மாற்று, குழி மாற்று.
(கச்சிதமான அளவு.)
குண்டை இணைத்தால் குடி இளைக்கும். 8640

குண்டை சாவு கொடுத்தவனும் பெண்டைச் சாவு கொடுத்தவனும் ஒன்று.
குண்டை பலத்தால் குடி பலக்கும்.
குண்டை பலமோ, குடி பலமோ?
குண்டை பெருத்தால் குடி பெருக்கும்.
(விளங்கினால் விளங்கும்.)
குண்டோட்டம் குதிரை ஓட்டம். 8645

குணக்கு எடுக்க நாய் வால் நிமிருமா?
(குணக்கெடுக்க நாய் வாலைக் கூடுமா?)
குணச்சிறப்பைக் குலத்தில் பார்.
குணத்திற்கு அழுகிறதா? பிணத்திற்கு அழுகிறதா?
குணத்தைச் சொல்; குலத்தைச் சொல்லாதே.
குணத்தை மாற்றக் குரு இல்லை. 8650

குணம் இல்லாக் கல்வி பாழ்.
குணம் இல்லா வித்தை எல்லாம் அவித்தை.
குணம் உள்ள இடத்திலே மணம் உண்டு.
(நிறைவு உண்டு.)
குணம் உற்றவன் மணம் உற்றவன்; குணம் அற்றவன் மணம் அற்றவன்.
குணம் கெட்ட இடத்திலே குன்றியும் இராது. 8655

குணம் கெட்ட மாப்பிள்ளைக்கு மணம் கெட்ட பணியாரம்.
குணம் கெட்டால் குரங்கு,

குணம் பாதி; கொண்ட நோவு பாதி.
குணம் பெரிதே அன்றிக் குலம் பெரிதல்ல.
குணம் போல வாழ்வு. 8660

குத்தக் கூலியும் கொடுத்து எதிர் மூச்சும் போட்டானாம்.
(போடுகிறது.)

குத்தாக் குறும்பி, குடுமி இல்லாப் பத்தங்கி.
(குறும்பி, பத்தங்கி என வைணவர்களில் இரு வம்சம். குறும்பியர் உபநயனத்தில் காது குத்துவர்;பத்தங்கி சாமகர் மொட்டையடிப்பர்.)

குத்தாத காதுக்கு ஊனம் இல்லை; குரைக்காத நாய்க்கு உதையும் இல்லை.

குத்திக் கெட்டது பல்; குடைந்து கெட்டது காது.

குத்திக் கொண்டு வா என்றால் வெட்டிக் கொண்டு வருகிறான். 8665

குத்திரம் குடியைக் கெடுக்கும்.

குத்தி வடித்தாலும் சம்பா; குப்பையிலே போட்டாலும் தங்கம்.
(மாணிக்கம்.)

குத்தி விட்டு வேடிக்கை பார்க்கிறது.

குத்தின அரிசி கொழியலோடு இருக்க, இந்தாடா மாமா என் தாலி என்றாளாம்.

குத்துக்கு முன்னே குடுமியைப் பிடி. 8670

குத்துகிற உரல் பஞ்சம் அறியுமா?

குத்துப் பட்டவனும் தூங்க மாட்டான். குறை வயிற்றுக்காரனும் தூங்க மாட்டான்.

குத்துப்பட்டுப் பொறுத்தாலும் குறை வயிறு பொறுக்காது.
(பொறுக்குமா?)

குதிக்கும் முன் பார்த்துக் குதி.

குதி குதி என்பார்கள் எல்லாரும் கூடக் குதிப்பார்களா? 8675

குதித்துக் குதித்து மா இடித்தாலும் குண்டனுக்கு ஒரு கொழுக் கட்டை.

குதித்துக் குதித்து மா இடித்தாலும் குந்தாணிக்கு ஒரு கொழுக்கட்டையும் கிடையாது.

குதித்துக் குதித்து மா இடித்தாலும் புழுக்கைக்கு ஒரு கொழுக்கட்டையே.

(கூழைச்சிக்கு இரண்டு கொழுக்கட்டையே.)
குதிரை இருப்பு அறியும்; கொண்ட பெண்டாட்டி குணம் அறிவாள்.
(கொண்டவன் குணம் அறிவாள் பெண்டாட்டி.)
குதிரை இல்லாத ஊருக்குக் கழுதை தம்பிரான். 8680

குதிரை உதைத்தாலும் உதைக்கலாம்; கழுதையா உதைக்கிறது?
(கழுதை உதைக்கலாமா?)
குதிரை எட்டடி பாய்ந்தால் குட்டி பதினாறடி பாயும்.
குதிரை ஏற அதிருஷ்டம் இருந்தால் கொண்டு ஏற வேண்டுமா?
(குண்டை ஏறவேண்டுமா?)
குதிரை ஏறாமல் கெட்டது; கடன் கேளாமல் கெட்டது.
குதிரை ஏறி என்ன? கோணல் கொம்பு ஊதி என்ன?
வீணர்க்கும் கீர்த்திக்கும் வெகு தூரம். 8685

குதிரைக்குக் குர்ரம் என்றால் ஆனைக்கு அர்ரம் என்கிறான்.
(குர்ரம்- குதிரை; தெலுங்கு.)
குதிரைக்குக் குளம்பு கொடுத்தவன் கொம்பு கொடுக்கவில்லை.
குதிரைக்குக் கொம்பு முளைத்தாலும் நாய்க்கு வால் நிமிராது.
குதிரைக் குணம் அறிந்தல்லவோ தம்பிரான்
கொம்பு கொடுக்கவில்லை.
குதிரைக்குப் படை கட்டினாற் போல. 8690
(பட்டை.)

குதிரைக்கும் நாய்க்கும் குடி போகச் சந்தோஷம்.
குதிரைக்கு வால் இருந்தால் குண்டி மட்டும்.
குதிரைக் கொம்பு
(+ ஆகிவிட்டது.)
குதிரை கீழே தள்ளியதோடு குழியையும் பறித்ததாம்.
குதிரை குட்டி போடுகிறது, குட்டி போடுகிறது என்று
லத்தி போட்டதாம். 8695
(ஆனை குட்டி போடுகிறது.)

குதிரை குருடாக இருந்தாலும் கொள்ளுத் தின்கிறதில்
குறைச்சல் இல்லை.
(தின்னும் கொள் முக்குறுணி.)
குதிரை குருடாக இருந்தாலும் நித்திரையிலே குறை இல்லை.
குதிரை செத்ததும் அல்லாமல் குழி தோண்ட மூன்று பணம்.
(பத்துப் பணம்.)

குதிரை செத்ததும் அல்லாமல் சேணம் சுமக்க வேலை ஆயிற்று.
குதிரை தூக்கிப் போட்டதன்றியும் குழியும் பறித்ததாம். 8700
(தோண்டுகிறதாம்.)

குதிரை நடக்காவிட்டால் ராவுத்தர் கொக்காய்ப் பறப்பாரோ?
குதிரை நடந்தால் அல்லவா ராவுத்தன் கொக்காய்ப் பறக்கலாம்?
குதிரை நடைவராமல் கொக்காய்ப் பறப்பானாம் ராவுத்தன்.
குதிரை நல்லது தான்; சுழி கெட்டது.
குதிரை நொண்டி ஆனாலும் கொள்ளுத் தின்ன ராஜா. 8705

குதிரை பிடிக்கச் சம்மட்டி அடிக்கக் கூப்பிட்டுக் குரலுக்கு ஏனென்று கேட்க
குதிரை முட்டை.
(அவிவேக பூரண கதை.)
குதிரையான குதிரையெல்லாம் கூரையைப் பறித்துத் தின்கிற போது, குருட்டுக் குதிரை கோதுமை மாவுக்கு அழுததாம்.
குதிரையின் குணம் அறிந்தல்லவோ தம்பிரான் கொம்பு கொடுக்கவில்லை?
குதிரையின் கொழுப்பு அறிந்து சுவாமி கொம்பு கொடாமற் போனார். 8710

குதிரையும் ஏறிக் குதிரைக் குட்டியும் ஏறுவதா?
குதிரையும் கழுதையும் ஒன்றாகுமா?
குதிரையும் காதம், கிழவியும் காதம்.
(ஔவையார் பாடல்.)
குதிரையைத் தண்ணீரண்டை இழுத்துச் செல்லலாமே தவிரக் குடிக்கச் செய்ய முடியாது.
குதிரையைப் போல நாயை வளர்த்து ரெட்டிச்சி, நீ குரை. 8715

குதிரை ராவுத்தனைத் தள்ளினதும் அல்லாமல் குழியும் தோண்டுகிறதாம்.
(பாகனை, பறிக்கிறதாம்.)
குதிரை வாங்கியபின் லகானுக்கு வழக்கா?
(வழக்கு.)
குதிரை வால் இருந்தால் எட்டின மட்டுந்தானே வீசும்?

குதிரை வால் படைத்தால் தன் மட்டும் வீசுகிறது.
குதிரை வால் வீச்சுக் குதிரை மட்டும். 8720

குதிரை விற்ற குச்சிலியன் போல.
குந்திக் கொண்டு தின்றால் குன்றும் கரையும்.
(குந்தியிருந்து.)
குந்தினால் எழுந்திருக்க மாட்டேன்; குஞ்சு பொரித்தால் பேர் பாதி.
குந்தினாயே குரங்கே, உன் சந்தடி அடங்கே.
குப்புற விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை என்றானாம். 8725

குப்புற விழுந்து தவம் செய்தாலும் குருக்களுக்கு மோட்சம் இல்லை,
குப்புற் விழுந்தும் முதுகில் மண் படவில்லை என்றானாம்.
குப்பை யில்லா வேளாண்மை சப்பை.
(இல்லாப் பயிர்.)
குப்பையின்றிப் பயிர் விளையாது.
குப்பை உயர்ந்தது; கோபுரம் தாழ்ந்தது. 8730

குப்பை உயர்ந்தால் குடி உயரும்.
(குப்பை உயர.)
குப்பை உயர்ந்தால் கோபுரம் ஆகுமா?
குப்பை உயர்ந்து என்ன? கோபுரம் தாழ்ந்து என்ன?
குப்பை ஏறிக் குடை பிடிக்க மாட்டாதவன் வானம் ஏறி வைகுந்தம் பார்த்தானாம்.
குப்பை ஏறிக் கூவாத கோழி, கோபுரம் ஏறி வைகுண்டம் காட்டுமா? 8735

குப்பை ஏறிக் கோணற் சுரைக்காய் அறுக்காதவன் வானில் ஏறி வைகுண்டம் பார்த்தானாம்.
குப்பைக் கீரை.
குப்பைக் கீரைத் தண்டு கப்பலுக்குப் பாய்மரம் ஆகுமா?
(காலாகுமா?)
குப்பைக்குள் இருந்தாலும் குன்றிமணி குன்றாது.
குப்பை கொட்ட முடியாது. 8740

குப்பை சீக்கும் நாயே, உனக்குக் கொற்றத் தவிசும் உண்டோ?
குப்பைத் தொட்டி தாய் எருக்கிடங்கு நாயை ஏளனம் செய்ததாம்.

குப்பைத் தொட்டியாய் இருந்தாலும் நாய்க்குத் தன் தொட்டி பொன் தொட்டியே.
குப்பை நாய்க்குச் சுவர்க்க ஞாபகம்.
குப்பை மேட்டில் இருக்கும் நாய் பூர்வோத்தரங்களை எண்ணியது போல. 8745

குப்பை மேடு உயர்ந்தது; கோபுரம் தாழ்ந்தது.
குப்பையில் இருந்தாலும் குன்றிமணி; செப்பிலே இருந்தாலும் மாணிக்கம்.
குப்பையில் கிடந்தாலும் குன்றிமணி நிறம் மாறாது.
(கிடந்த குன்றிமணி போல, நிறம் குன்றாது, மாறாது.)
குப்பையில் கிடந்தாலும் மாணிக்கம் மாணிக்கந்தான்.
(இருந்தாலும்.)
குப்பையில் கீரை முளைத்தால் கப்பலுக்குக் கால் ஆகுமா? 8750

குப்பையில் கோடி தனம்.
குப்பையில் புதைத்தாலும் குன்றிமணியின் நிறம் மாறாது.
குப்பையில் போட்டாலும் குண்றிமணி குண்றிமணிதான்.
குப்பையில் போட்டாலும் குறிப் பேட்டில் பதிந்து விட்டுப் போடு.
(செட்டி நாட்டு வழக்கு.)
குப்பையில் முளைத்த கீரை கப்பலுக்குக் கால் ஆகுமா? 8755

குப்பையில் முளைத்த கொடி கூரையில் ஏறினது போல.
(ஏறும்.)
குப்பையும் கோழியும் போலக் குருவும் சீடனும்.
குபேரப் பட்டணம் கொள்ளை போகிறதா?
குபேரன் பட்டணத்தில் கொள்ளை போயிற்றாம்; ஒருவனுக்கு ஊசி கிடைத்ததாம்.
குபேரன் பட்டணத்திலும் கோவணாண்டி உண்டு. 8760

குபேரன் பட்டணத்திலும் விறகு சுமக்கிறவன் உண்டு.
(பதியிலும் விறகு தலையன்.)
குபேரன் பட்டணம் கொள்ளை போனாலும் கொடுத்து வையாத பாவிக்கு ஒன்றும் இல்லை.
கும்பகோணத்தில் காவேரி தாண்டக் கொட்டையூரில் கச்சம் கட்டினானாம்.
கும்பகோணத்தில் மூட்டையைத் தூக்கக் குத்தாலத்தில் முண்டாசு கட்டினானாம்.

கும்பகோணத்துக்கு வழி என்ன என்றால் கொட்டைப் பாக்குக்கு விலை சொன்னானாம். 8765

கும்பகோணத்துப் பள்ளன் கொள்ளை கொண்டு போகத் தஞ்சாவூர்ப் பார்ப்பான் தண்டம் கொடுத்தான்.
கும்பகோணம் கோபுரத் தழகு; தஞ்சாவூர் தடி அழகு.
கும்பகோணம் கோயில் அழகு.
கும்பகோணே க்ரதம்பாபம் கும்பகோணே விநக்யதி.
கும்பகோணே க்ரதம்பாபம், கொட்டையூரே விநக்யதி; கொட்டையூரே க்ரதம்பாபம் கும்பகோணே விநக்யதி. 8770

கும்பத்தில் மழை பெய்தால் குப்பை மேடு எல்லாம் நெல்.
கும்பத்து வெள்ளி குடம் கொண்டு சாய்க்கும்.
கும்பலிலே கோவிந்தா போடுகிறான்.
கும்பி கூழுக்கு அழுகிறது; கொண்டை பூவுக்கு அழுகிறது.
(எண்ணெய்க்கு.)
கும்பிட்ட கையை வெட்டியது போல. 8775

கும்பிட்ட கோயில் தலை மேல் இடிந்து விழுந்தது போல.
கும்பிட்ட தெய்வம் குல தெய்வம்.
கும்பிட்டுக் கடன் கொடாதே; கும்பிட்டுக் கடன் வாங்காதே.
(கும்பிட்டு.)
கும்பிட்டுக் கடன் வாங்குகிறதா?
கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது போல. 8780

கும்பிடுகிறவனைத் தான் கேட்குமாம் கோழிக் குஞ்சுக் காவு.
கும்பிடு கொடுத்துக் கும்பிடு வாங்கு.
(வாங்க வேண்டும்.)
கும்பிடு போட்டுக் குடியைக் கெடுக்காதே.
கும்பிடும் கள்ளர், குழைந்திடும் கள்ளர்.
கும்பியிலே கல்லை விட்டு எறிந்தால் கூடத் தெறிக்கும். 8785
(மேலே தெறிக்கும்.)

கும்பினிக் கோழி முட்டை அம்மிக் கல்லையும் உடைக்கும்.
(கும்பினி-ஈஸ்ட் இந்தியா கம்பெனி.)
குமர் முற்றிக் குரங்காகிறது.
(யாழ்ப்பாண வழக்கு.)
குமரிக்கு ஒரு பிள்ளை; கோடிக்கு ஒரு வெள்ளை.

குகரிக்குக் கொண்டாட்டம்; கிழவனுக்குத் திண்டாட்டம்.
குமரிக்கும் நாய்க்கும் குடிபோகக் கொண்டாட்டம். 8790

குமரிக்கு முதுகில் பிள்ளை.
குமரிக்குள்ள தளுக்கு, குட்டி போட்டால் லொடக்கு.
குமரி தனியாகப் போனாலும் கொட்டாவி தனியாகப் போகாது.
(தனி வழி.)
குமரிப் பால் குமட்டுமா?
குமரிப் பெண்ணைத் தாசி வீட்டில் அடகு வைத்தது போல. 8795

குமரியாக இருக்கையில் கொண்டாட்டம்; கிழவியாக இருக்கையில் திண்டாட்டம்.
குமரியைக் கொண்டவனை விட்டுக் கூட வந்தவனோடு கூட்டி அனுப்புவது போல.
குமரீசுவரரே, குமரீசுவரரே, கொட்டு மேளம் முழங்குவதேன்? அக்கினீசுவரரே, அக்கினீசுவரரே அவரவர் தலைவிதி.
(குமரீசுவரர்-மோகனூர்ச் சிவபெருமான்-அக்கினீசுவரர் -நெரூர்ச் சிவபெருமான்.)
குயத்தி நாக்கை அறுத்தாலும் குண்டு சட்டி இரண்டு காசுதான் என்பாள்.
குயத்தி நாக்கைக் குட்டம் போட்டாலும் குடம் மூன்று காசுதான் என்பாள். 8800

குயவன் வீட்டில் பானை இருந்தால் வர மாட்டார்களா? பெண் இருந்தால் கேட்க மாட்டார்களா?
குயவனில் தாதன் இல்லை; ஆயரில் ஆண்டி இல்லை.
குயவனுக்கு ஆறு மாதம்; தடிகாரனுக்கு அரை நாழிகை.
(குயவனுக்கு ஒரு நாள்.)
குயவனுக்கு ஒரு மாச வேலை; தடியனுக்கு ஒரு நாழிகை வேலை.
குயவனுக்குப் பல நாள் வேலை; தடியடிக்காரனுக்கு ஒரு நாள் வேலை. 8805
(அரை நாழிகை வேலை.)

குயவா கலசம் கொண்டு வா, இடையா பால் கொடு என்றாற் போல.
குயில் குரலும் மயில் அழகும் போல.
குயில் கூவிக் கெடுகிறதாம்; மயில் ஆடிக் கெடுகிறதாம்.
குயில் கூவினாற் போல.

குயில் போலப் பெண்டாட்டி இருந்தாலும் குரங்கு போல் ஒரு
வைப்பாட்டி வேணும். 8810

குயில் முட்டை இடக் காகம் கண்டு களிக்க.
குயிலைப் போலக் கூவுகிறான்.
குரங்காட்டிக்கு அவன் குரங்குதான் பெரிது.
குரங்கின் கைக் கொள்ளி கொடுத்து விடல்.
(பழமொழி நானூறு.)
குரங்கின் கைப் பூமாலை. 8815

குரங்கின் கையில் கொள்ளி அகப்பட்டது.
(கொடுக்கலாமா?)
குரங்கின் கையில் சிக்கிய பாம்பு போல.
குரங்கின் தலையில் கரகம் வைத்துக் காளி கும்பிட்டது போல
குரங்கின் மலத்தை மருந்துக்குக் கேட்டால் சொப்புக்களை
யெல்லாம் தத்திப் பாயும்.
குரங்கின் மூத்திரம் துளி ஆயிரம் பொன். 8820

குரங்கின் வயிற்றில் குஞ்சரம் பிறக்குமா?
குரங்கின் வாயில் அடக்கம் போட்டாற் போல.
குரங்கினிடம் பேன் அகப்பட்டாற் போல.
குரங்கினுள் நன் முகத்த இல்.
(பழமொழி நானூறு.)
குரங்கு ஆடினாலும் ஆடாவிட்டாலும் குரங்காட்டி ஆடுவான். 8825

குரங்கு ஆனாலும் குலத்திலே கொள்ள வேண்டும்.
குரங்கு உடம்பில் புண் வந்தால் கோவிந்தாதான்.
குரங்கு எல்லாம் கூட்டம் கூட்டமாக இருக்கும்.
குரங்கு எறி விளங்காய்.
குரங்கு என்றாலும் குலத்திலே கொள். 8830

குரங்கு ஏறாத கொம்பு உண்டோ?
குரங்கு ஓடம் கவிழ்த்த கதை ஆகி விட்டது.
குரங்குக்கு ஏணி வைத்துக் கொடுத்தது போல,
குரங்குக்குக் கள் வார்த்தாற் போல.
குரங்குக்குக் குல்லாய் போட்டு அழகு பார்த்ததுபோல. 8835

குரங்குக்குச் சாவு சிரங்கிலே.
குரல்குக் குட்டிக்குத் தாவக் கற்றுக் கொடுக்க வேண்டுமா?
குரங்குக் குட்டிக்கு மரம் ஏறக் கற்றுக் கொடுத்தானாம்.
குரங்குக் குட்டி கையைத் தேய்க்கிறது போல.
குரங்குக்குத் தன் மணம் நறுமணமாம். 8840

குரங்குக்குத் தேள் கொட்டினாற் போல.
குரங்குக்குத் தேள் கொட்டினால் மரத்துக்கு மரம் தாவுமாம்.
குரங்குக்குப் பிய்க்கத் தெரியும்; கட்டத் தெரியாது.
குரங்குக்குப் புண் வந்த கதை.
குரங்குக்குப் புண் வந்தால் தொட்டுத் தொட்டுப் பார்த்துக்
கொண்டே இருக்குமாம். 8845

குரங்குக்குப் புத்தி சொல்லித் தூக்கணாங்குருவி கூண்டு அறுந்தது.
(தன் கூண்டை இழந்தது.)
குரங்குக்குப் புத்தி சொன்னால் குடியிருப்புப் பாழ்தான்.
குரங்குக்குப் பொரி போட்டுத் தடி வெட்டிக் கொடுத்தது போல.
குரங்குக்கும் தன் குட்டி பொன் குட்டி.
குரங்குக்கு வால் வைப்பதற்குள் விடிந்து விட்டது. 8850

குரங்கு கள்ளும் குடித்துப் பேயும் பிடித்துத் தேளும் கொட்டினால்
என்ன கதி ஆகும்?
குரங்கு காது அறுத்தாலும் அறுக்கும்; பேன் எடுத்தாலும் எடுக்கும்.
குரங்கு கால் பணம்; விலங்கு முக்காற் பணம்.
குரங்கு குட்டி கையை நெருப்பில் தோய்க்கிறது போல.
குரங்கு கைப் பூனை போல. 8855

குரங்கு கையில் குட்டிக்குக் கள் வார்த்தாற் போல.
குரங்கு கையில் கொடுத்த கொள்ளி போல.
(கொள்ளி அகப்பட்ட கதை.)
குரங்கு கையில் பூமாலை அகப்பட்டது போல.
குரங்குச் சேஷ்டை.
குரங்கு சாகக் கொடுத்த ஆண்டி போல. 8860

குரங்கு செத்த குறவன்.
(மலையாள வழக்கு.)
குரங்கு செய்கிற தொல்லை அப்பப்பா, அது செத்தால் சமாதி
கட்ட வேணும்.

குரங்கு சொறிந்தால் புண் ஆகும்.
குரங்கு தன் அழகைப் பார்க்கக் கண்ணாடி தேடியதாம்.
குரங்கு தன் குட்டியின் கையைக் கொண்டு பதம் பார்க்கிறது போல. 8865
(அடுப்பின் தீயைச் சோதித்தது போல.)

குரங்கு தாவுகிற தாவிலே குட்டியை மறக்குமா?
குரங்கு தீவட்டி பிடித்தாற் போல.
குரங்கு நியாயம்.
குரங்குப் பிடி, கரும்புப் பிடி.
குரங்குப் பிடிபோல் பிடிக்க வேண்டும். 8870
(குரங்குப் பிடியாய்ப் பிடிக்கிறது.)

குரங்குப் பிடி போன்ற பிடிவாதம் பிடிக்காதே.
குரங்குப் பிடியும் குழந்தைப் பிடியும்.
குரங்குப் பிணமும் குறப்பிணமும் கண்டவர் இல்லை.
(குறவன் சுடுகாடும்.)
குரங்குப் பீயை மருந்துக்குக் கேட்டால் கொம்புக்குக் கொம்பு தாவுமாம்.
குரங்குப் புண் ஆறாது. 8875
(பிரம்மாண்டம்.)

குரங்குப் புத்தி.
குரங்கு பிடித்த பிடியை விடாது; நாய் கடித்த கடியை விடாது.
குரங்கு பேன் பார்த்தாலும் பார்க்கும்; காதைப் பிய்த்தாலும் பிய்க்கும்.
குரங்கும் உடும்பும் பிடித்தது விடா.
குரங்கு மரத்தில் ஏறும்; குழந்தை இடுப்பில் ஏறும். 8880

குரங்கு மழையில் நனைந்தாலும் நனையும்; குடிசையில் போய் ஒண்டாது.
குரங்கு முகத்துக்குப் பொட்டு எதற்கு?
குரங்கு முகம் எல்லாம் ஒரு முகம்; கூத்தாடி பேச்செல்லாம் ஒரு பேச்சு.
குரங்கு வாழைப்பழத்தை கண்டால் சும்மா விடுமா?
குரங்கு விழுந்தால் கூட்டத்துடன் சேராது. 8885

குரங்கை அழைத்துக் கொண்டு கூத்துப் பார்க்கப் போனானாம்!
குரங்கைக் கண்ட நாயைப் போல.
குரங்கைத் தாங்காத கொம்பு உண்டா?
குரங்கைப் பறி கொடுத்த ஆண்டி போல.
குரங்கைப் பிடித்தாலும் பிடித்து விடலாம்; காக்கையைப் பிடிக்க முடியாது. 8890

குரப்பம் இட்டுத் தேய்த்தாலும் கழுதை குதிரை ஆகுமா?
குரல் இல்லாதவனுக்கு விரல்.
குரு இல்லாச் சிக்ஷையும், கரு இல்லா வித்தும் பாழ்.
குரு இல்லாச் சீடன் உண்டா?
குரு இல்லார்க்கு வித்தையும் இல்லை; முதல் இல்லார்க்கு லாபமும் இல்லை. 8895
(ஊதியமும்.)

குரு இல்லா வித்தை பயன் இல்லை.
குரு இல்லா வித்தையும் முதல் இல்லா வாணிகமும்.
குரு என வந்தான்; திருஉரை தந்தான்.
(சிறு உரை.)
குருக்கள் குசு விட்டால் குற்றம் இல்லை.
(யாழ்ப்பாண வழக்கு.)
குருக்கள் நின்று பெய்தால் சிஷ்யன் ஓடிப் பெய்வான். 8900

குருக்கள் பிழைத்தது மறு பிறப்பு.
குருக்கள் பீயை அரைப்பென்று தேய்த்துக் கொள்கிறதா?
குருக்கள்மேல் ஆணை; இந்தக் கழியை விழுங்கு.
குருக்கள் வீட்டுச் சோமன் கொடி கண்டதே ஒழிய அரை கண்டதில்லை.
குருக்களைக் கடித்த நாய் சொர்க்கத்துக்குப் போகுமா, நரகத்துக்குப் போகுமா என்றது போல. 8905

குருக்களைக் கடித்த நாய் புழுத்துச் சாகும்.
குருக்களைக் கடித்த நாய் புழுத்துச் செத்தாலும் குருக்கள் வலிக்கு என்ன செய்வது?
குரு கடாட்சம் கூட்டுவிக்கும்.
குருட்டுக் கண்ணுக்குக் குறுணி மை எதற்கு?
(மை இட்டு ஆவதென்ன?)
குருட்டுக் கண் தூங்கி என்ன? விழித்து என்ன? 8910

குருட்டுக் குதிரைக்குச் சறுக்கினது சாக்கு.
குருட்டுக் கொக்குக்கு ஊர்க்குளமே சாட்சி.
குருட்டுக் கோழி தவிட்டுக்கு வீங்கினது போல்.
குருட்டு நாய்க்கு அதிருஷ்டம் வந்த மாதிரி.
குருட்டு நாய்க்கு இருட்டுள் வறட்டுப் பீ அகப்பட்டாற் போல. 8915

குருட்டு நாய்க்குத் திருட்டுப் புத்தி எதற்கு?
குருட்டு நாய்க்கு வறட்டு மலம் கிடைத்தது போல.
குருட்டுப் பூனை விட்டத்தில் தாவினாற் போல.
குருட்டுப் பெண்ணுக்கு வறட்டு ஜம்பம்.
குருட்டு மாட்டைத் தெய்வம் காக்கும். 8920

குருடர்கள் ஊரிலே ஒற்றைக் கண்ணன் ராஜா.
குருடன் கூடி ஆனையைக் கண்ட கதை.
குருடன் அளந்ததும் கோணியில் கொண்டதும் போல.
குருடன் ஆடு மேய்க்க எட்டு ஆளுக்கு வேலையா?
குருடன் ஆனையைப் பார்த்தாற் போல. 8925

குருடன் கூட வழி போனாலும் செவிடன் கூடப் போகக் கூடாது.
குருடன் கூத்துப் பார்க்கப் போனால் பயன் என்ன?
(பார்த்தது போல.)
குருடன் கைக் கோலைப் பிடுங்கினாற் போல.
குருடன் கையில் விலாங்கு அகப்பட்டது போல.
(விலாங்கு-ஒருவகை மீன்.)
குருடன் சந்தைக்குப் போக எட்டாள் மெனக்கிடு. 8930
(வினைக் கேடு.)

குருடன் தண்ணீருக்குப் போனால் பின்னோடு எட்டாள் மெனக்கீடு.
குருடன் தூங்குவதும் ஒன்றுதான்; விழித்திருப்பது ஒன்றுதான்.
குருடன் பரத நாட்டியம் ஆடினது போல.
குருடன் பழுதை திரித்தது போல.
குருடன் பெண்டாட்டி கூனனோடு உறவாடினாள். 8935

குருடன் பெண்டிரை அடித்தாற் போல.
குருடன் மாங்காய் எறிந்தாற் போல.
குருடன் ராஜ விழி விழித்தாற் போல.
(விழித்த கதை.)

குருடன் வேண்டுவது கண் பெறத்தானே?
(வேண்டுவதெல்லாம் கண்தான்.)
குருடனுக்கு என்ன, கோல்தான் வேண்டும். 8940

குருடனுக்குக் கண்ணாடி காட்டின கதை.
குருடனுக்குக் கண் வேண்டுமென்றுதான் சொல்லுவான்;
வேண்டாமென்று சொல்லுவானா?
குருடனுக்குக் குருடன் கோல் பிடிக்க முடியுமா?
குருடனுக்குக் குருடன் வழி காட்டினால் இருவரும் குழியில்
விழுவார்கள்.
குருடனுக்குக் கோல் கொடுத்தாற் போல. 8945

குருடனுக்குக் கோல் பிடிக்க முடியுமா?
குருடனுக்குத் தெய்வம் கண் கொடுத்தாற் போல.
குருடனுக்குத் தொட்டால் கோபம்; முடவனுக்கு விட்டால்
கோபம்.
குருடனுக்குப் பால் கொக்குப் போன்றது.
குருடனுக்குப் பால் சோறு இட்டது போல? 8950

குருடனுக்கு விட்ட இடத்தில் கோபம்.
(பகை.)
குருடனுக்கு வேண்டியது கண்.
குருடனும் செவிடனும் கூத்துப் பார்க்கப் போய்க் குருடன்
கூத்தைப் பழித்தான்; செவிடன் பாட்டைப் பழித்தான்.
குருடனும் செவிடனும் கூத்துப் பார்த்தது போல.
(பார்த்த கதை.)
குருடனை நோட்டம் பார்க்கச் சொன்னாற் போல, 8955

குருடனை ராஜவிழி விழிக்கச் சொன்னால் விழிப்பானா?
குருடா சுகமா என்றாற் போல.
குருடி தண்ணீருக்குப் போனால் எட்டாள் மெனக்கீடு.
(வினைக் கேடு.)
குருடி மை இட்டாலும் குருடு குருடே.
குருடி வயிற்றிலே குஞ்சரம் பிறந்தது போல். 8960

குருடு ஆனாலும் குதிரை சிமிட்டுகிறதில் தா [illegible] ில்லை.
குருடு குருடு என்றால் செவிடு செவிடு என்கிறா ய.
(குடுகுடு என்கிறாய்.)

குருடும் செவிடும் கூத்துப் பார்த்தாற் போல்.
குருத் துரோகம் குல நாசம்.
குரு நின்ற நிலையில் நின்றால் சீடன் ஓடுகிற ஓட்டத்தில் இருக்கிறான். 8965

குரு நின்று கொண்டு பெய்தால் சிஷ்யன் ஓடிக் கொண்டு பெய்வான்.
குரு பார்வையால் கோடிப் பாவம் விலகும்.
குரு மொழிக்கு இரண்டு உண்டா?
குரு மொழிக்குச் குறுக்கே போகலாமா?
குரு மொழி கேளாதவனும் தாய் வார்த்தை கேளாதவனும் சண்டி. 8970

குரு மொழி மறந்தோன் திரு அழிந்து அழிவான்.
குரு வாய் மொழியே திருவாய் மொழி.
குருவி உட்காரப் பனம் பழம் விழ.
குருவிக்கு ஏற்ற ராகசுரம்.
(யாழ்ப்பாண வழக்கு. குருவி வாய்க்குள் வைக்கும் நாகசுரத்தின் உறுப்பு சக்கை என்பர்.)
குருவிக்குத் தகுந்த ராம சரம். 8975
(ராமேசுவரம்.)

குருவிக்குத் தகுந்த பாரம்.
குருவிக்குப் பல நாளைய வேலை; குரங்குக்கு ஒரு நாழிகை வேலை.
குருவிக் கூட்டைக் குலையக் கலைக்காதே.
குருவிக் கூட்டைக் கோலாலே கலைக்காதே.
(கலைக்கிறது.)
குருவி கழுத்தில் பனங்காயைக் கட்டித் தொங்கவிட்டது போல. 8980
(கட்டித் தூக்கலாமா?)

குருவி சிறுகச் சிறுகத் தனக்குக் கூட்டைக் கட்டுகிறது.
குருவி சொல்லும் மருவிக் கேள்.
குருவி தலையில் பனங்காயை வைத்தாற் போல.
(தேங்காயை.)
குருவி போலக் கூடு கட்டிக் குரங்கு போலப் பிய்த்தெறிவான்.
குருவி போல மூக்காலே சேர்த்தானாம். 8985

குருவுக்கு ஏற்ற சீடன்.
குருவுக்குத் துரோகம் செய்தாலும் குடலுக்குத் துரோகம் செய்யக் கூடாது.
குருவுக்கும் நாமம் குழைத்துப் போடுவான்.
குருவுக்கு நாமம் போட்டுக் கோபாலப் பெட்டியில் கைபோட்டது போல.
குருவுக்கு மிஞ்சின சிஷ்யன். 8990

குருவும் தாரமும் கொண்டவன் தவம்.
குரு வேஷம் கொண்டவன் எல்லாம் குரு ஆவானா?
குரைக்காத நாய் குதிகாலைக் கடிக்கும்.
குரைக்காத நாயையும் அசையாத நீரையும் நம்பாதே.
குரைக்கிற நாய் ஆனாலும் பட்டியைக் காக்கட்டும். 8995

குரைக்கிற நாய்க்கு எல்லாம் கொழுக்கட்டை போட முடியுமா?
குரைக்கிற நாய்க்கு எலும்பைப் போட்டாற் போல.
(எலும்புத் துண்டைப் போடு.)
குரைக்கிற நாய்க்கு ஒரு துண்டுக் கருப்பட்டி.
குரைக்கிற நாய்க்குக் குத்துச் சோறும், சிலைக்கிற புண்ணுக்குப் பொட்டு எண்ணெயும் தேவை.
குரைக்கிற நாய்க்குக் கொழுக்கட்டை போட்டாற் போல. 9000

குரைக்கிற நாய்க்குப் பிண்டம் போடு; தானே ஓடிப் போகும்.
குரைக்கிற நாய் கடிக்காது.
(கடிக்கிறது அரிது.)
குரைக்கிற நாய் கடிக்காது; இடிக்கிற மேகம் பெய்யாது.
குரைக்கிற நாய் குதி காலைக் கடிக்கும்.
குரைக்கிற நாய் வேட்டைக்கு உதவாது. 9005
(ஆகாது, வேட்டை பிடிக்குமா?)

குரைக்கிற நாயின் வாயிலே கோலைக் கொடுத்தால் ஊர் எங்கும் கொண்டோடிக் குரைக்கும்.
குரைக்கிற நாயை அடித்தால் இன்னம் கொஞ்சம்கூடக் குரைக்கும்.
குரைக்கிற நாயைக் கண்டு பயப்படாதே.
குரை குரை என்றால் குரைக்காதாம் கொல்லக்குடி நாய்; தானாகக் குரைக்குமாம் தச்சக்குடி நாய்.
குரைத்தால் நாய்; இல்லாவிட்டால் பேய். 9010

குல்லாய்க்கார நவாபு, செல்லாது உன் ஜவாபு.
குல்லாய்க்குத் தலையா? தலைக்குக் குல்லாயா?
குல்லாய் போடப் பார்க்கிறான்.
குல்லாயை எடு என்றால் முல்லாவை அழைத்த கதை.
குலத்தளவே ஆகும் குணம். 9015

குலத்திலே குரங்கைக் கொள்.
குலத்திலே முளைத்த கொடி என்ன கொடி? கற்பிலே மலர்ந்த பெண் கொடி.
குலத்துக்கு ஈனம் கோடாரிக் காம்பு.
குலத்துக்கு ஏற்ற குணம்.
குலத்துக்கு ஏற்ற பெண்; நிலத்துக்கு ஏற்ற நெல். 9020

குலத்துக்கு ஏற்ற பேச்சு.
குலத்தைக் கெடுக்கவந்த கோடாரி.
குலத்தைக் கெடுக்குமாம் குரங்கு.
குலம் எப்படியோ, குணமும் அப்படியே.
குலம் குப்பையிலே; பணம் பந்தியிலே. 9025

குலம் குலத்தோடு; வெள்ளம் ஆற்றோடு.
குலம் குலத்தோடே; வெள்ளாடு தன்னோடே.
குலம் புகுந்தும் குறை தீரவில்லை.
(குறையா?)
குலமகட்கு அழகு கொழுநனைப் பேணுதல்.
குலமகன் குலத்துக்கு அழுவான்; மூக்கறையன் மூக்குக்கு அழுவான். 9030

குலமும் ஒன்று; குறியும் ஒன்று.
குல விச்சை கல்லாமற் பாகம் படும்.
(பழமொழி நானூறு.)
குல வித்தை கற்றுப் பாதி; கல்லாமற் பாதி.
குலஸ்திரீ தன் பர்த்தாவையும் பரஸ்திரீ தன் மேனியையும் பேணுவாள்.
(தன் கணவனையும்.)
குலாசாரத்தைக் குழிக்கறி ஆக்கி மதாசாரத்தின் வாயில் மண் அடிக்க வேண்டும். 9035
(மண் அடிக்கிறது.)

குலாம் காதருக்கும் கோகுலாஷ்டமிக்கும் என்ன சம்பந்தம்?
குலை நடுங்கப் பேசினால் அலமலந்து போகும்.
குழக்கட்டைக்குத் தலை பார்த்துக் கடிப்பதுண்டா?
குழக்கட்டைக்குத் தலையும் இல்லை; குறவனுக்குக் குறையும் இல்லை.
(கூத்தாடிக்கு.)
குழக்கட்டை தின்ற நாய்க்குக் குறுணி மோர் குருதட்சிணையா? 9040

குழக்கட்டை தின்ற பூனைக்குக் குடுவை மோர் வரதட்சிணை.
குழந்தாய் குழியில் அமிழ்ந்தாதே.
குழந்தை இல்லாத வீடு சுடுகாடு.
குழந்தை உள்ள வீடு கோவில்.
குழந்தைக் காய்ச்சலும் குண்டன் காய்ச்சலும் பொல்லா. 9045

குழந்தைக்காரன் குழந்தைக்கு அழுதால் பணிச்சவன் காசுக்கு அழுதானாம்.
குழந்தைக்கும் நாய்க்கும் குடிபோகச் சந்தோஷம்.
குழந்தை காய்ச்சலும் குள்ளன் காய்ச்சலும் பொல்லாதவை.
(குண்டன் காய்ச்சலும்.)
குழந்தை தூங்குகிறது எல்லாம் அம்மையாருக்கு லாபம்.
குழந்தை நோய்க்கு வஞ்சகம் இல்லை. 9050

குழந்தைப் பசி கொள்ளித் தேள்.
(கொள்ளி போலே.)
குழந்தைப் பசியோ? கோவில் பசியோ?
குழந்தைப் பட்டினியும் கோயில் பட்டினியும் இல்லை.
குழந்தைப் பாலை வெடிப்பிலே வார்க்கிறதா?
குழந்தைப் பிடியோ? குரங்குப் பிடியோ? 9055

குழந்தை பிறக்குமுன் பேர் இடுகிறதா?
குழந்தை மலத்துக்குக் குட்டி நாய் வந்தது போல.
குழந்தையின் காதிலே திருமந்திரம் உபதேசித்தாற் போல்.
குழந்தையின் தேகம் போல.
குழந்தையின் முகமும் வாடக் கூடாது; குலுக்கையின் நெல்லும் குறையக் கூடாது. 9060

குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்தில்.
(இடத்திலேதான் மகிழ்ச்சி.)
குழந்தையும் தெய்வமும் கொண்டு அணைக்கிற பக்கம்.
குழந்தையைப் பறிகொடுத்துத் தவிக்கிற போது, கிடக்கிறது கிடக்கட்டும், கிழவனை மணையில் வை என்றது போல.
குழந்தையையும் கிள்ளி விட்டுத் தொட்டிலையும் ஆட்டுதல்.
குழந்தை வளர்ப்பது ஒரு கோயில் கட்டுவதற்குச் சமம். 9065

குழந்தை வாக்குத் தெய்வ வாக்கு.
குழந்தை வாயை முத்தம் இட்டது போல
குழம்புப் பால் குடிக்கவும் குமர கண்ட வலிப்பா?
குழவணப்பிள்ளை போல் பெருத்திருக்கிறான்.
குழறிக் குழறிக் குமரனைப் பாடு. 9070

குழிக் கண்ணும் கோடுவாய் வழிச்சலும்,
குழிப்பிள்ளை மடிப்பிள்ளை.
குழிப்பிள்ளையை எடுத்து இழவு கொண்டாடுகிறது போல.
(கொண்டாடாதே.)
குழிப் பிள்ளையைத் தோண்டி ஒப்பாரி வைப்பது போல.
குழிப் பிள்ளையை நரி சுற்றுவது போல. 9075

குழியிற் பயிரைக் கூரைமேல் ஏற விடுகிறது.
(ஏற்றினாற் போல.)
குள்ளக் குளிர நீராடினால் குளிர் போகும்.
குள்ள நரி தின்ற கோழி. கூவப் போகிறதோ?
(கூப்பிடப் போகிறதோ?)
குள்ளப் பார்ப்பான் பள்ளத்தில் விழுந்தான்; தண்டு எடு, தடி எடு.
குள்ளன் குடி கெடுப்பான்; குள்ளன் பெண்சாதி ஊரைக் கெடுப்பாள். 9080

குள்ளன் குழியில் விழுந்தால், தண்டெடு தடி எடு.
குள்ளனைக் கொண்டு கடலாழம் பார்க்கலாமா?
(பார்க்கிறான்.)
குளத்தில் போட்டுக் கிணற்றில் தேடலாமா?
(நதியில் தேடுவதா?)
குளத்திலே கால் கழுவா விட்டால் குளத்துக்கு என்ன குறை?
குளத்தின் மேலே கோபம் வந்தால் தண்ணீர் குடிக்காமல் போகிறதா? 9085

குளத்தினிடம் கோபித்துக் கொண்டு கால் கழுவாமல் போனானாம்.
குளத்துக்கு மழை குந்தாணி போற் பெய்யுமோ?
(கோவிந்த சதகம்.)
குளத்தைக் கலக்கிப் பருந்துக்கு இரை இட்டது போல.
(இரை கொடுக்கவோ?)
குளத்தை வெட்டி விட்டுத் தவளையைக் கூப்பிட வேண்டுமா?
குளப்படி கண்டு கடல் ஏங்குமா? 9090

குளப்படி தண்ணீர் சமுத்திரம் ஆனால், குடம் தண்ணீர் எவ்வளவு ஆக வேண்டும்?
குளப்படி தண்ணீரைச் சமுத்திரத்தில் இறைப்பானேன்?
குளப்படி நீரை இறைத்தால் கடற்பள்ளம் நிரம்புமா?
குளம் இருக்கிறது; நான் இருக்கிறேன்.
குளம் எத்தனை குண்டியைக் கண்டதோ? குண்டி எத்தனை குளத்தைக் கண்டதோ? 9095

குளம் காக்கிறவன் தண்ணீரைக் குடியானோ?
குளம் தோண்டித் தவளையைக் கூப்பிட வேண்டுமா?
குளம் பெருத்தது அடைச்சாணி; கோயில் பெருத்தது சேரமா தேவி.
குளம் வற்றினால் முறை வீதம் உண்டா?
(வற்றியும், குளம் உடையும் போது.)
குளம் வெட்டப் பூதம் புறப்பட்டது போல. 9100

குளம் வெட்டு முன்னே முதலை குடி இருக்குமா?
குளவி ஊதி ஊதிப் புழுவைத் தன் நிறம் ஆக்கியது போல.
குளவிக்குப் பச்சைப் புழு பிள்ளை.
குளவிக் கூட்டிலே கல்லை விட்டு எறியாதே.
(எறிகிறதா?)
குளவிக் கூட்டைக் கோலால் கலைக்காதே. 9105
(கலைத்தாற் போல.)

குளவி கூடு கட்டினால் பிறப்பு; நாய் பள்ளம் தோண்டினால் இறப்பு.
குளவி புழுவைத் தன் நிறம் ஆக்குவது போல.
குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக் கொண்டது போல.
குளிசம் கட்டிக் குட்டி இரட்டித்தது.
(கட்டியும்).
குளித்தால் குளிர் போகும்; நசித்தால் நாணம் போகும். 9110

குளித்துப் பேணினவனுக்கு இரு வேலை.

குளித்து முப்பது நாள் ஆகவில்லை; குனிந்து உப்பு எடுக்க முடியவில்லை.

குளிர்ந்த கொள்ளியாய் இருந்து குடியைக் கெடுக்கலாமா?

குளிர்ந்த நிழலும் கூத்தியார் வீடும் உள்ளபோது மயிரான உத்தியோகம் இருந்தால் என்ன? போனால் என்ன?

(இந்த வருமானம் வந்தால் என்ன? போனால் என்ன?)

குளிர் விட்டுப் போயிற்று. 9115

குளிராத உள்ளும் கூத்தியாரும் உண்டானால் மயிரான சம்பளம் வந்தால் என்ன? போனால் என்ன?

குளிராத வீடும் கூத்தியாரும் உண்டானால் மயிரான வேளாண்மை விளைந்தால் என்ன? விளையாமற் போனால் என்ன?

குளுகுளு என்பார் தீப் பாய்வார்களா?

(குலுகுலு என்பார்.)

குற்றத் தண்டனையிலும் சுற்றத் தண்டனை நல்லது.

குற்றத்தைத் தள்ளிக் குணத்தைப் பாராட்டு. 9120

(எடுத்துக் கொள்.)

குற்றம் அடைந்த கீர்த்தி குணம் கொள்வது அரிது.

(கொள்ளல் ஆகாது.)

குற்றம் உள்ள நெஞ்சு குறுகுறு என்னும்; குறும்பி உள்ள காது தினவு கொள்ளும்.

(குறுகுறுக்கும். தினவு எடுக்கும்.)

குற்றம் பார்க்கிற் சுற்றம் இல்லை.

(சுற்றம் ஏது?)

குற்றம் போலச் செய்து குணம் செய்கிறது.

குற்றம் மறைப்பதில் மற்றொரு குற்றம் நேரும். 9125

குற்ற மனச்சாட்சி கூடி வாழச் சத்துரு.

(வாழும் சத்துரு.)

குற்றவாளி பலவீனன்.

குற்றாலத்தில் குளித்தவனும் குடை வரையில் தூங்கினவனும்.

குற்றாலத்துக் குரங்கே, மரத்தை விட்டு இறங்கே.

குற்றால நாதருக்கு நித்தம் தலைவலி. 9130

குற்றால நாதருக்கு வற்றாக் குடி நீரும் மாறாத் தலையிடியும்.

(குறுமுனி அழுக்கியதால் தலைவலி, அதற்குத் தலைமுழுக்கு.)

குறட்டுக் கழுதி ஆண் பிள்ளையை விடாது; கொழுந்துக்கூடை
 பெண் பிள்ளையை விடாது.
குறத்தி பிள்ளை பெறக் குறவன் பத்தியம் தின்ன.
 (மருந்து. காயம்.)
குறத்தி பிள்ளை பெறக் குறவன் பெருங்காயம் தின்பான்.
 (காயம்.)
குறத்தி பிள்ளை பெறக் குறவன் மருத்துவம் பண்ண. 9135

குற வழக்குக்குச் சக்கிலி வழக்கு இலேசு.
 (வழக்கும்.)
குற வழக்கும் இடை வழக்கும் கொஞ்சத்தில் தீரா.
குறவன் குச்சுக் கட்டினாற் போல.
குறவன் விழிப்பது போல விழிக்கிறான்.
குறிக்குத் தகுந்த ராமசரம். 9140

குறிஞ்சி அழிந்து நெருஞ்சி ஆயிற்று.
குறிப்பு அறிந்து கொடுக்கும் கொடையே கொடை.
குறுக்குச் சால் ஓட்டுகிறான்.
குறுக்கே வந்து குட்டை குழப்பாதே.
 (பேசி.)
குறுகு குறுகு குற்றாலம். 9145
 (அகத்தியர் கூற்று.)

குறுகுறு நாதா குற்றால நாதா.
குறுங்கைக்கும் கயிலைக்கும் கூப்பிடு தூரம்.
 (குறுங்கை-திருக்குறுங்குடி.)
குறுணிக்காரனுக்கு வாழ்க்கைப் பட்டுப் பதக்குப் பதக்கு என்று
 அடித்துக் கொண்டால் வருமா?
குறுணி கொடுத்து நாழி வாங்குகிறதா?
குறுணிப் பால் கறந்த போதிலும் கூரை பிடுங்கப்
 பார்த்திருக்கலாமா? 9150

குறுணி போட்டால் பதக்கு வருமா?
குறுணி மைதான் இட்டாலும் குருட்டுக் கண் தெரியுமா?
 (குருடு குருடே.)
குறுணி மைதான் இட்டாலும் குறிவடிவம் கண் ஆகாது.
குறும்பாடு போல.
குறும்பைத் தவிர்க்கும் குடி தாங்கு. 9155

குறும்பை பூத்தாலும் குணம் போமா நெருப்புக்கு?
(குறுமை.)
குறை அறக் கற்றவன் கோடியில் ஒருவன்.
குறை உள்ளார்க்கு உண்டு குறுகுதல்; கறை உள்ளார்க்கு உண்டு கரவு.
குறைக் கேழ்வரகு அரைக்கவா?
குறை குடம் கூத்தாடும். 9160

குறை குடம் தளும்பும்; நிறை குடம் தளும்பாது.
குறைந்த கருமான், நீண்ட தச்சன்.
குறைந்த வயிற்றுக்குக் கொள்ளும் பலாக் காயும்; நிறைந்த வயிற்றுக்கு நீர்மோரும் பானகமும்.
(ததியோதனமும்.)
குறையச் சொல்லி நிறைய அள.
(நிறையக்கொடு.)
குறையை நினைத்துக் கோயிலுக்குப் போகக் குறை வந்து கொண்டையிலே ஏறிற்றாம். 9165

குறை வித்தையைக் குருவுக்குக் காட்டுகிறதா?
குறைவு அறக் கற்றவன் கோடியில் ஒருவன்.
குறை வேலையை அம்பலத்தில் கொண்டு வரலாமா?
குறை வேலையைக் குருக்களுக்குக் காட்டாதே.
(குருக்களுக்கும் காட்டலாகாது.)
குறை வேலையை முடியாமல் அம்பலத்துக்கு வரலாமா? 9170

குன்றக்குடித் தேவடியாளுக்கு நின்றாற் போலப் பயணம் வரும்.
குன்றி மணி இல்லாத் தட்டான் குசுவுக்குச் சமானம்.
(குசுக் கூடப் பெறமாட்டான்.)
குன்றி மணிக்குக் குறுக்கே கறுப்பு.
குன்றி மணிக்கும் பின்புறத்தில் கறுப்பு.
குன்றி மணித் தங்கம் இல்லாவிட்டால் கொஞ்சங்கூடத் தட்டான் பிழைக்கமாட்டான். 9175

குன்றி மணி குப்பையில் கிடந்தாலும் குன்றுமா நிறம்?
குன்றி மணிப் பொன் பூட்டிக் கொள்ளக் கோடி தவம் செய்ய வேணும்.
(பொன் கிடைக்க.)

குன்றில் ஏறி ஆனைப்போர் பார்த்தாற் போல.
குன்றின்மேல் இட்ட விளக்குப் போல.
குன்றினால் பாலா? குழைந்தால் சாதமா? 918

குன்று முட்டிய குருவி போல.
குனிந்தவனுக்குக் கூட ஒரு குட்டு.
குனிந்து ஒரு துரும்பு கிள்ளிப் போடச் சீவன் இல்லாமல் போனாலும் பெயர் என்னவோ பனைபிடுங்கி.
குஷ்டம் பிடித்த நாய் மாதிரி.

கூ என்றவன் பேரில் கொல்லச் சினம். 9185

கூகைக்குப் பகலில் கண் தெரியாது.
கூகை விழித்தாற்போல் விழிக்கிறான்.
கூச் கூச் என்றால் நாய் மூஞ்சியை நக்குமாம்.
கூட்டத்தில் கட்டுச் சோறு அவிழ்த்தாற் போல.
கூட்டம் பெருத்தால் குசுப் பெருக்கும். 9190

கூட்டு வியாபாரம் குடுமிப் பிடி.
கூட்டோடு கயிலாயம் சேர்ந்தாள் காரைக்கால் அம்மை.
கூட்டோடு போச்சுது குளிரும் காய்ச்சலும்.
கூட இருந்து கொண்டு கொள்ளியைச் செருகலாமா?
கூட இருந்து பார்; கூட்டுப் பயிர் இட்டுப் பார். 9195

கூடக் குடியிருந்து கொண்டு கொள்ளி சொருகலாமா?
கூடத்தைக் கொடுத்தாலும் மாடத்தைக் கொடுத்தல் ஆகாது.
(கெடுத்தல்.)
கூடப் பிறந்தவனைக் கோள் சொல்லிக் கொல்லுகிறதா?
கூடம் ஒன்று போடும் முன்னே சுத்தி இரண்டு போடும்.
கூடம் இடிந்தால் மாடம். 9200

கூடி இருந்து குலாவுவார் வீட்டில் ஒடி உண்ணும் கூழும் இனிது.
கூடி இருந்து பார்; கூட்டுப் பயிர் இட்டுப் பார்.
கூடி எல்லோரும் தூக்கி விடுங்கள்; பிணக்காடாய் வெட்டிக் குவித்துப் போடுகிறேன் என்றான்.
கூடி வருகிற காலத்தில் குடுமி நட்டமா நிற்குமாம்.
கூடி வாழ்ந்தால் கோடி நன்மை. 9205
(வாழ்வது.)

கூடு இருக்கக் குருவி போன மாயம் என்ன?
கூடு புருவம் குடியைக் கெடுக்கும்.
கூடும் காலம் வந்தால் தேடும் பொருள் நடு மடியிலே.
கூடு முடி குடியைக் கெடுக்கும்.
கூடைக் கல்லும் பிள்ளையாரானால் எந்தக் கல்லைக் கும்பிடுகிறது? 9210

கூடை கூடையாகக் கொடுத்தாலும் குறை நீங்காது.
கூடை நகையும் குச்சிலிப் பொட்டும்.
கூடையைச் சுட்டுக் கரியாகுமா? கூந்தலைச் சுட்டுக் கரியாகுமா? (மயிரை.)
கூண்டில் அகப்பட்ட புலிபோல்.
கூண்டிலே குறுணி நெல் இருந்தால் மூலையிலே முக்குறுணித் தெய்வம் கூத்தாடும். 9215

கூண்டோடு கைலாசம்.
கூண்டோடு போயின குளிரும் காய்ச்சலும்.
கூத்தரிசி குத்துகிற வீட்டில் வாய்க்கரிசிக்காரிக்கு வழி இல்லை. (கூத்தரிசிக்காரி. வழி ஏது? வழி இல்லை.)
கூத்தன் என்றும் கோழி என்றும் சொல்கிறார்களா?
கூத்தாட்டுச் சிலம்பம் படை வெட்டுக்கு ஆகுமா? 9220 (கூத்தாடி சிலம்பம்.)

கூத்தாடிக் கணவன் வயிற்றைக் கெடுத்தான்; வாய்ப்பட்டி மாமியார் வாயைக் கெடுத்தாள்.
கூத்தாடிக்கு ஒரு குரங்கு கிடைத்தாற் போல.
கூத்தாடிக்குக் கீழே கண்; கூலிக்காரனுக்கு மேலே கண்.
கூத்தாடிக்கு மீசை எதற்கு?
கூத்தாடிக்கு முறை இல்லை; கொழுக் கட்டைக்குத் தலை இல்லை. 9225

கூத்தாடிக் குரங்கு ஆகாமலும் சூதாடித் தோற்காமலும்.
கூத்தாடிகளில் பெரியவர்; கூட்டத்தில் சிறியவர்.
கூத்தாடி கிழக்கே பார்த்தான்; கூலிக்காரன் மேற்கே பார்த்தான்.
கூத்தாடி குண்டாகரணம் போட்டாலும் பிண்டச் சோற்றுக்கு மன்றாட்டம்.
கூத்தாடி சிநேகம் குடியைக் கெடுக்கும். 9230

கூத்தாடி சிலம்பப்படை வெட்டுமா?
கூத்தாடிப் பெண்ணுக்குச் சூதாடிக் கணவன்.
கூத்தாடுவதும் குண்டி நெளிவதும் ஆற்றாதவன் செயல்.
(யாழ்ப்பாண வழக்கு.)
கூத்திக் கள்ளன் பெண்டாட்டியை நம்பமாட்டான்.
கூத்திக் கள்ளனுக்குக் குணம் ஏது? 9235

கூத்திக்கு இட்டுக் குரங்கானான்; வேசிக்கு இட்டு விறகானான்.
(கொடுத்து.)
கூத்திக்குத் தக்க பந்தம்; காற்றுக்குத் தக்க படல்.
கூத்தியார் ஆத்தாள் செத்தால் கொட்டும் முழக்கும்; கூத்தியார் செத்தால் ஒன்றும் இல்லை.
கூத்தியார் செத்தால் குறுங்கட்டில் வெறுங்கட்டில் ஆகுமா?
கூத்தியார் செத்தால் பிணம்: அவள் ஆத்தாள் செத்தால் மணம். 9240
(தாய்.)

கூத்தியார் பிள்ளைக்குத் தகப்பன் யார்?
கூத்தியார் போனால் குறுங்கட்டில் வெறுங்கட்டில்.
கூத்தியார் வீட்டுக்கு நாய் போல் அலைகிறான்.
கூத்தியாருக்கு வழி அற்றவன்.
கூத்திலே கோணங்கி வந்தாற் போல. 9245

கூத்துக்கு ஏற்ற கொட்டுக் கொட்டுகிறது.
கூத்துக்கு ஏற்ற கோமாளி போல.
கூத்துக்குத் தக்க பந்தம்; காற்றுக்குத் தக்க படல்.
கூத்துக்குப் பந்தம் பிடித்தாற் போல.
கூத்துக்குப் பீத்துக் கட்டினாற் போல. 9250

கூத்துக்குப் புகுந்தவன் கொட்டுக்கு அஞ்சித் தீருமா?
கூத்துக்கு மீசை சிரைக்கவா?
கூத்து நெல்லுக் குத்துகிற வீட்டில் வாய்க்கரிசிக்கு வழி இல்லை.
கூத்துக்குப் போனஇடத்தில் தேள் கொட்டினது போல.
கூத்துக்குப் போன இடத்தில் பேய் பிடித்தது போல. 9255

கூந்தல் அழகி, கூப்பிட்டாள் பந்தலிலே.
கூந்தலும் குடலும் கொண்டது கொள்கை.

கூப்பாடு போட்டால் சாப்பாடு வருமா?
(கூப்பிட்டால் சாப்பாடு ஆகுமா?)
கூப்பிடப் போன தாதி மாப்பிள்ளையைக் கைக்கொண்டாள்.
(மாப்பிள்ளை கூடப் போன கதை.)
கூர்ச்சம் போல நிற்கிறான். 9260

கூர்ந்து கவனித்தால் குதிரையும் கழுதையாகத் தெரியும்.
கூர்மத்தை நம்பிக் குடிகெட்டுப் போனேன்.
(கூர்மம்-கூர்மபுராணம்.)
கூர்மையாளனே நேர்மையாளன்.
கூரிய சொல்லான் ஆரினும் வல்லான்.
கூரியன் ஆயினும் வீரியம் பேசேல். 9265

கூருக்கு எதிர் உதைத்தால் ஆர் எழ வருத்தும்?
(சூர் எழ.)
கூரை இட்ட நாள் முதல் தாள் முதல் தாரையிட்டு அழுதாள்.
(கூறை.)
கூரை இல்லா வீடு வீடு ஆகுமா?
கூரை ஏறிக் கோழி பிடிக்காதவனா வானம் ஏறி வைகுந்தம் காட்டுவான்?
(கோபுரம் ஏறி வைகுந்தம் போகப் போகிறான். கோழி பிடிக்காத குருக்களா?)
கூரைக் காய் வைத்தியம் குணத்துக்கு ஏற்குமா? 9270

கூரை மீது ஓடும் குரங்கைப் பார்த்துக் கூட்டில் இருந்த குரங்கு விசாரித்ததாம்.
கூரைமேல் ஏறிக் குருவி பிடிக்காத குரு கைலாசத்துக்கு வழிகாட்டப் போனானாம்.
(வைகுந்தத்துக்கு. வானத்தைக் கீறி வழிகாட்டிப் போகிறாரோ?)
கூரைமேல் ஏறிக் கோணல் சுரைக்காய் அறுக்கத் தெரியாதவன் வானத்தைக் கிழித்து வைகுண்டம் காட்டப் போகிறானாம்.
கூரை மேலே சோறு போட்டால் ஆயிரம் காகம் வரும்.
கூரையைப் பிரிக்கக் குரங்குக்குப் பிடி கடலை. 9275

கூலிக்காரன் பெண் சாதி குளி குளிக்கப் போகிறாளா? குப்பையிலே ஆமணக்கு முளைக்கப் போகிறதா?
(முளைக்காமல்.)
கூலிகு அறுத்தாலும் குறுணிக்கு அறுக்கலாம்; வீணனுக்கு

அறுத்து வெளியிலே நிற்கிறேன்.
(வீணுக்கு.)
கூலிக்கு உழைக்கிறவனுக்கு ஆனைத் தாலியா?
கூலிக்குக் கழு ஏறுவார்களா?
(ஏற்பார்களா?)
கூலிக்குக் குத்துகிறவளைக் கேளிக்கை ஆடச் சொல்வது போல். 9280

கூலிக்குக் குத்துவாள் பிள்ளைக் குத்தவிடு பஞ்சமா?
கூலிக்கு தாலி அறுப்பாரும் இல்லை; மேலைக்கு இருப்பாரும் இல்லை.
கூலிக்கு நாற்று நட வந்தவனுக்கு எல்லைக்கு வழக்கோ?
கூலிக்கு நெல் குத்தலாமாம்; கைமூலம் தெரியக் கூடாதாம்.
கூலிக்குப் பாவம் குறுக்கே. 9285
(வந்தது. பாவி குறுக்கே வந்தான்.)

கூலிக்குப் போனாலும் குறுணி நெல் கிடைக்கும்.
கூலிக்கு மார் அடிப்பது.
கூலிக்கே குத்துவதானாலும் கமுக்கட்டு மயிர் தெரியாமல் இருக்குமா?
கூலி குறைத்தாயோ? குறை மரக்கால் இட்டாயோ?
கூலி குறைத்தால் வேலை கெடும். 9290

கூலிப் படை குத்துமா? கூவத்தைக் கண்டு கடல் ஒத்துமா?
கூலிப் படைவெட்டுமா?
கூலியும் கொடுத்து எதிர் மூச்சும் போட்டாளாம்.
(போடுகிறது.)
கூலியைக் குறைக்காதே; வேலையைக் கெடுக்காதே.
கூவுகிற கோழிக்கும் குந்திக் கொண்டு இருக்கிற அம்மையாருக்கும் என்ன வேலை? 9295

கூழ் ஆனாலும் குப்பை ஆனாலும் குடித்துக் கொண்டவன் பிழைப்பான்.
கூழ் ஆனாலும் குளித்துக் குடி; கந்தை ஆனாலும் கசக்கிக் கட்டு.
கூழ் என்றாலும் குடிக்கிறவன் பிழைப்பான்.
கூழ் என்றாலும் வாழ்வுக்குத் தக்கதாகக் குடிக்கத்தான் வேண்டும்.
(வாழ்வுக்குத் தக்கதென்றால்.)
கூழ் குடிக்காத பொட்டை, கேழ்வரகு ஏண்டா நட்டாய்? 9300

கூழ் குடிக்கிறாயா அப்பா? குறுணி குடிப்பேன் குப்பா.
கூழ் குடித்த குழந்தை குந்தாணி.
கூழ் குடித்தவன் ஆனான்; குந்தித் தின்றவன் குடியால் மடிந்தான்.
கூழ் குடித்தால் குந்தாணி; கஞ்சி குடித்தால் கழுக்காணி.
கூழ் குடித்தாலும் குட்டாய்க் குடிக்க வேண்டும். 9305
(குட்டு-இரகசியம்.)

கூழ் குடித்தாலும் கூட்டு ஆகாது.
கூழ் சுடுகிறது, கீரைக்குக் கேடு.
கூழ் சுடுகிறதென்று ஊதிக் குடிக்கிற வேளை.
கூழ்ப் பதனிப் பானையில் கைவிட்டவன் விரலைச் சப்பாமல் வேட்டியிலா துடைப்பான்?
கூழ் புளித்தது, பால் கூடப் புளித்ததென்று விட்டு விடாதே. 9310

கூழ் புளித்ததென்றும் மாங்காய் புளித்ததென்றும் உணராமல் சொல்லலாமா?
கூழாய் இருந்தாலும் மூடிக் குடி.
கூழிலே விழுந்த ஈ குழம்புகிறது போல.
கூழுக்கு உப்பு இல்லை என்பார்க்கும் பாலுக்குச் சர்க்கரை இல்லை என்பார்க்கும் ஒரே அழுகை.
(விதனம் ஒன்றே.)
கூழுக்குக் குட்டிச் சுவரோடு போனவனே! 9315

கூழுக்குக் குறடு மாங்காய்.
(மிளகாய்.)
கூழுக்குப் பாடிக் குடியைக் கெடுத்தான்.
கூழுக்கும் ஆசை; மாவுக்கும் ஆசை.
கூழுக்கும் ஆசை; மீசைக்கும் ஆசை.
கூழுக்கும் கொழுக்கட்டைக்கும் ஒன்றே குறி. 9320

கூழுக்கு மாங்காய் கொண்டாட்டம்; குரங்குக்குத் தேங்காய் கொண்டாட்டம்.
கூழுக்கு மாங்காய் தோற்குமா?
கூழும் பஞ்சமோடி? கொடுமை மாமியாரே!
கூழைக் குடிக்கிறாயா அப்பா? குறுணி குடிப் அப்பா!
கூழைக் குடித்தாலும் குப்பையைச் சுமந்தாலும் குப்பைக் காட்டுப் பெண் ருக்குமிணி; பாலைக் குடித்தாலும் பட்டுக்

கட்டினாலும் பட்டணத்துப் பெண் பறக்கை. 9325

(பட்டணத்துப் பெண் தட்டுவாணி.)

கூழைக் கும்பிடு.

கூழை குடியைக் கெடுக்கும்; குட்டைக் கலப்பை காட்டைக் கெடுக்கும்.

கூறி விற்காதே; தேடி வாங்காதே.

கூறு கெட்ட மாட்டுக்கு ஆறு கட்டுப் புல்லா?

கூறையும் தாலியும்.

கூனனைக் கொண்டு குழப்படி மகளே, காணிக்குப் பேரப்பிள்ளை. 9330

(குழப்படி மாமி காணிக்குப் பிள்ளை பெற.)

கூனி ஆனாலும் கூடை சுமந்துதான் கூலி பெற வேண்டும்.

கூனியூர் சென்றால் இங்கிருந்தே கூனிக் கொண்டா போக வேண்டும்?

கூனி வாயால் கெட்டது போல.

கெஞ்சினால் மிஞ்சுவது, மிஞ்சினால் கெஞ்சுவது.
கெஞ்சும் புத்தி கேவலம் கொடுக்கும். 9335

கெஞ்சு மணியம் பண்ணுகிறது.
(கெஞ்சி பண்ணுகிறதா?)
கெட்ட இடையனுக்கு எட்டு ஆடு போதும்.
கெட்ட ஊருக்கு எட்டு வார்த்தை.
கெட்ட கழுதைக்குத் துஷ்ட புத்தி.
கெட்ட கழுதைக்குப் பட்டது கண்டது. 9340

கெட்ட காலத்துக்கு நாரை கெளிற்று மீனை எடுத்து விழுங்கினது போல.
கெட்ட காலத்துக்கு விபரீத புத்தி.
(விநோத புத்தி.)
கெட்ட குடிக்கு ஒரு கேட்டை பிறந்தது.
கெட்ட குடிக்கு ஒரு துஷ்டப் பிள்ளை.
கெட்ட குடி கட்டி வருமா? 9345

கெட்ட குடி கெட்டது; பூராவாய்க் குடி அப்பா!
கெட்ட குடி கெட்டாலும் வட்டி நஷ்டம் இல்லாமல் வாங்கிவிடு.
(கெட்ட குடி கெட்டது.)
கெட்ட குடியே கெடும்; பட்ட காலிலே படும்.
கெட்ட கேட்டுக்குக் கொட்டு ஒன்று, முழக்கு ஒன்றா?
கெட்ட கேட்டுக்குக் கெண்டை போட்ட முண்டாசு குறைச்சலா? 9350
(கொண்டை போட்ட.)

கெட்ட கேட்டுக்கு நெட்டை ஆள் கூலியா?
(இரட்டையாள்.)
கெட்ட கேட்டுக்குப் பட்டுப் பீதாம்பரம்!
கெட்ட கேட்டுக்குப் பிச்சைக் குடுவை இரண்டாம்.

கெட்ட கேட்டுக்கு வட்டம் காற்பணம்.
கெட்டது கிழவன் குடித்தனம். 9355

கெட்டது கெட்டாய் மகளே, கிட்ட வந்து படுத்துக் கொள்.
கெட்டது பட்டது கிருஷ்ணாங்குளம்; அதிலும் கெட்டது அத்திப்பட்டான் குளம்.
(கிருஷ்ணாம்பேட்டை, ஆனைக்குளம்.)
கெட்டதும் கிழிந்ததும் பெற்றான் கோனான் நாட்டிலே.
கெட்டதும் பட்டதும் கீரைக்கு இறைத்ததும் போதும்.
கெட்டதைக் கேனத்தில் தேடு. 9360
(கேனம்-கேனோப நிஷத்.)

கெட்ட நாய்க்குப் பட்டது அரிது.
(பட்டது உறுதி.)
கெட்ட நாய்க்குப் பட்டது பிரீதி.
(பட்டது லாபம்.)
கெட்ட நாய்க்குப் பட்டதே சரி.
கெட்ட பயலுக்கு ஏற்ற துஷ்டச் சிறுக்கி.
கெட்ட பால் நல்ல பால் ஆகுமா? 9365

கெட்ட பெயர் ஒரு போதும் மறையாது.
கெட்ட பேருக்கு எட்டு வார்த்தை.
கெட்ட மாடு தேடுவாரும் இல்லை; மேய்த்த கூலி கொடுப்பாரும் இல்லை.
(தேடுகிறதும், கொடுக்கிறதும்.)
கெட்ட மாட்டைத் தேடும் முன்னம் எட்டு மாடு கட்டலாம்.
(தேடலாம்; சம்பாதிக்கலாம்.)
கெட்ட மார்க்கத்தில் இருக்கும் ஒருவன் மற்றவர்களையும் இழுத்துக் கொள்வான். 9370

கெட்டவள் கெட்டாள் மகளே, கிட்ட வா.
கெட்டவள் கங்கை ஆடினால் பாவம் தீருமா?
(போகுமா?)
கெட்டவள் பட்டணம் சேர்வாள்.
கெட்டவன் வாழ்ந்தால் கிளை கிளையாய்த் தளிர்ப்பான்; வாழ்ந்தவன் கெட்டால் வறையோட்டுக்கும் ஆகான்.
கெட்டவனுக்கு எத்தனை படிப்பித்தாலும் துஷ்டத்தனம் விடான். 9375

கெட்டவனுக்குக் கெட்டதுதான் கிடைக்கும்; நல்லவனுக்கு நன்மையே கிடைக்கும்.
கெட்டவனைக் கண்டால் கிளையிலும் சேரார்.
கெட்டாயே கீரைத் தண்டே, தலையை விரித்துக் கொண்டோடக் கண்டேன்.
கெட்டார்க்கு உற்றார் கிளையினும் இல்லை.
கெட்டார்க்கு நட்டார் இல்லை. 9380
(குறள், 1293.)

கெட்டார் வாழ்ந்தால் களப்பொறை தாமரை; வாழ்ந்தார் கெட்டால் வறையோட்டுக்கும் உதவார்.
(கிளம்புகிற தாமரை.)
கெட்டார் வாழ்ந்தால் கிளைப்புரை தலைமுறை.
கெட்டார்க்கு உற்றார்க்குக் கிளையிலும் இல்லை.
(வாழ்ந்தாருக்கு உறவு வழியிலும் உண்டு.)
கெட்டால் தெரியும் கோமுட்டிக்கு.
கெட்டால் பெரிய வெட்டரிவாள். 9385

கெட்டாலும் குலாசார முறையோடு கெட்டான்.
கெட்டாலும் கெடுகிறது, கிட்ட வந்து படுத்துக் கொள்.
கெட்டாலும் செட்டி; கிழிந்தாலும் பட்டு.
(கெட்டாலும் வேட்டியே. கெட்டாலும் செட்டியே.)
கெட்டாலும் பட்டணம் சேர்.
கெட்டான் பயல் பொட்டலிலே; விழுந்தான் பயல் சறுக்கலிலே. 9390

கெட்டான் வாழ்ந்தால் கிளை கிளையாய்த் தளிர்ப்பான்; வாழ்ந்தான் கெட்டால் வறையோட்டுக்கும் ஆகான்.
கெட்டிக்கார முட்டாள்.
கெட்டிக்காரன் கொல்லையிலே கழுதை மேய்கிறது.
கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளிலே தெரியும்.
(+ அசடன் புளுகு அப்போதே தெரியும்.)
கெட்டிக்காரன் பொட்டு எட்டு நாள் அளவும். 9395

கெட்டிக்காரனுக்குப் பயம் இல்லை; மட்டித்தனத்துக்கு நயம் இல்லை.
கெட்டித் தங்கம் ஆனால் கலீர் என்று ஒலிக்குமா?
கெட்டு ஓடினாலும் நட்டு ஓடு.
கெட்டு கிழக்கே போ.
(வடஆர்காடு வழக்கு.)

கெட்டுக் கெட்டுக் குடி ஆகிறதா? 9400

கெட்டுப் போகிற காலம் வந்தால் சொட்டுப் புத்தி தேடுவானாம்.
(நாள் வந்தால். சொட்டுப் புத்தி தோன்றும். தேறாது.)
கெட்டுப் போன பார்ப்பானுக்குச் செத்துப் பீயான பசுவைத் தானம் செய்தானாம்.
கெட்டும் பட்டணம் சேர்.
கெடுக்க நினைக்கின் அடுக்கக் கேடுறும்.
கெடுக்கினும் கல்வி கேடு படாது. 9405
(கொடுக்கினும்.)

கெடுங் காலத்துக்குக் கெட்டார் புத்தியைக் கேட்டார்.
கெடுங்குடி சொற் கேளாது.
கெடுத்தவருக்கும் கேடு நினையாதே.
கெடுப்பதும் வாய்; படிப்பதும் வாய்.
(வாயால்.)
கெடுப்பாரைத் தெய்வம் கெடுக்கும். 9410

கெடுமதிக்குப் படுகுழியை வெட்டு.
கெடுமதி கண்ணுக்குத் தோன்றாது.
கெடுவது செய்தால் படுவது கருமம்.
கெடுவாய், கேடு நினையாதே.
கெடுவார்க்குக் கெடுமதி பிடரியில். 9415
(கெடுப்பார்க்கு.)

கெடுவான் கேடு நினைப்பான்.
கெண்டை பட்டாலும் பட்டது; கிடாரம் பட்டாலும் பட்டது.
கெண்டையைப் போட்டு வராலை இழுக்கிறதா?
(இழுக்கிறது.)
கெதம் போனது கிருஷ்ணப்ரீதி.
கெருடி கற்றவன் இடறி விழுந்தால் அதுவும் ஒரு வித்தை என்பான். 9420
(பல்டி என்பான்.)

கெலிப்பும் தோற்பும் ஒருவர் பங்கு அல்ல.
கெலியன் பாற்சோறு கண்டது போல.
(கலியன்.)

கேசம் உள்ள பெண் எப்படியும் கொண்டை கட்டுவாள்.
கேட்காமல் கொடுப்பது உத்தமம்; கேட்டுக் கொடுப்பது மத்திமம்; கேட்டும் கொடாமல் இருப்பது அதமம்.
கேட்டதை எல்லாம் நம்பாதே; நம்பினதை எல்லாம் சொல்லாதே. 9425

கேட்ட நாயைச் செருப்பால் அடி; சொன்ன நாயைச் சோட்டால் அடி.
கேட்டில் உறுதி கூட்டும் உடைமை.
கேட்டு ஊற்றுகிற கஞ்சியும் எடுத்து வைக்கிற பேனும் உரைக்கு வராது.
கேட்டுக்கு மூட்டை; கேடு காலத்துக்குச் சீலைப் பேன்.
கேட்டை நட்சத்திரம் ஏட்டனுக்கு ஆகாது. 9430
(ஏட்டன்-மூத்தவன்.)

கேட்டை நாலும் ஈட்டி போல.
கேட்டை, மூட்டை, செவ்வாய்க் கிழமை.
கேட்டையிலே பிறந்தால் கோட்டை கட்டி ஆள்வான்.
கேட்பார் சொல்லைக் கேட்டுக் கெடாதே.
கேட்பார் பேச்சைக் கேட்டு நாட்டான் வாய்க்கால் சாலையோடு போனானாம். 9435
(-கும்பகோணத்துக்கும் காரைக்காலுக்கும் இடையில் உள்ள வாய்க்கால் வளைந்து வளைந்து செல்கிறது.)

கேட்பாரும் இல்லை; மேய்ப்பாரும் இல்லை.
கேடகத்தையும் பெருமாளையும் கீழாறு கொண்டு போகச்சே கூட வந்த அநுமாருக்குத் தெப்பத் திருநாளாம்.
கேடது இல்லான் பாடது இல்லான்.
(கேடு, பாடு.)
கேடு காலத்தில் ஓடு கப்பரை.
கேடு கெட்ட நாயே, வீடு விட்டுப் போயேன். 9440

கேடு வரும் பின்னே; மதி கெட்டு வரும் முன்னே.
கேடு வரும்போது மதி கெட்டு வரும்.
கேதம் கேட்க வந்தவள் தாலி அறுப்பாளா?
(செட்டி நாட்டு வழக்கு.)
கேதுவைப் போல் கெடுத்தவனும் இல்லை; ராகுவைப் போல் கொடுத்தவனும் இல்லை.
கேரளம் வானராசாரம்; கூகூ சப்தம் நிரந்தரம். 9445

கேழ்வரகில் நெய் ஒழுகுகிறது என்றால் கேட்போருக்கு மதி எங்கே போச்சு?
(நெய் ஒடுகிறது என்றால்.)
கேழ்வரகு மாவில் நெய் ஒழுகுகிறது என்று சொல்கிறவர் சொன்னாலும் கேட்கிறவர்களுக்கு மதி இல்லையா?
கேள் அற்றவருக்கு வேள்.
கேள்வி உடைமை, கீர்த்தியே கல்வி.
கேள்வி கேளாமல் தலையை வெட்டுகிறதா? 9450

கேள்விச் செவியன் ஊரைக் கெடுப்பான்.
கேள்விப் பேச்சில் பாதிதான் நிற்கும்.
கேள்விப் பேச்சு ஊரைச் சுடும்.
கேள்வி முயல்.
கேளாச் செவிக்கு மூளா நெருப்பு. 9455

கேளாத கடன் பாழ்.
கேளாமல் கெட்டது கடன்; நடவாமல் கெட்டது உறவு.
கேளும் கிளையும் கெட்டோர்க்கு இல்லை.

கை அழுத்தமானவன் கரையேற மாட்டான்.
(காசைச் செலவிடான்.)
கை இல்லாதவன் கரணம் போடலாமா? கால் இல்லாதவன் ஓடலாமா? 9460

கை ஈரம் காயாமல் காட்ட வருகிறது.
கை உண்டாவது கற்றவர்க்கு ஆமே.
கை ஊன்றி அல்லவோ கரணம் போட வேண்டும்?
கைக் காசு இல்லாமல் கடைப் பக்கம் போகாதே.
கைக்கு எட்டியது வாய்க்கு எட்ட வில்லை. 9465

கைக்குக் கண்ணாடியா?
(கண்ணாடி போல.)
கைக் காடையைக் காட்டிக் காட்டுக் காடையைப் பிடிக்க வேண்டும்.
(காடையை விட்டு.)
கைக்கு அடங்காத விளக்குமாறும் வாய்க்கு அடங்காத மருமகளும்.
கைக்குக் கை நெய் வார்த்தாலும் கணக்குத் தப்பாது.
கைக் குருவியைக் கொண்டுதான் காட்டுக் குருவியைப் பிடிக்க வேணும். 9470

கைக்கு வாய் உபசாரமா?
கைக் கொள்ளாத சத்தியத்தைக் கற்காதிருத்தல் நலம்.
கைக்கோளறுக்குக் கால் புண்ணும் நாய்க்குத் தலைப் புண்ணும் ஆறா.
கை கண்ட பலன்.
கை கண்ட மாத்திரை, வைகுண்ட யாத்திரை. 9475

கை கண்ட வேசிக்குக் கண்ணீர் குறைச்சலா?
கை கண்ணைக் குத்தினால் கையை வெட்டி விடுகிறதா?
கை கருணைக் கிழங்கு; வாய் வேப்பங்காய்.

கை காய்த்தால் கமுகு காய்க்கும்.
(பாக்கு மரம்.)
கை கைக்குமா நெய் வார்க்க வரும்? 9480

கை கொடுத்துக் கொண்டே கடையாணி பிடுங்குகிறான்.
கைத்தது மானானாலும் கை ஏல்வை.
கைத் தாலி கழுத்தில் ஏறட்டும்.
கை தப்பிக் கண்ணில் பட்டால் கையைக் கண்டிப்பது உண்டா?
கைத் துப்பைக் கொண்டு காரியம் இல்லை; வாய்த் துப்பைக் கொண்டு வாழ வந்தேன் மாமியாரே. 9485

கை நிறைந்த பணத்தை விடக் கண் நிறைந்த புருஷன்தான் வேண்டும்.
(பொன்னிலும் விட. கணவன்தான். புருஷன்தான் மேல்.)
கைப்பண்டம் கருணைக் கிழங்கு.
கைப் பழத்தைக் கொடுத்துத் துறட்டுப் பழத்துக்கு அண்ணாந்து நிற்பானேன்?
(பழத்தை விட்டு விட்டு, துறட்டுப் பழத்துக்கு ஆசைப்பட்டானாம்.)
கைப் பழத்தை நம்பி வாய்ப் பழத்தை வழியில் விட்டான்.
கைப் பறவையைப் பறக்க விட்டுக் காட்டுப் பறவைக்குக் கண்ணி வைக்கலாமா? 9490

கைப் பிள்ளைக்கு முன் கயிற்றுப் பிள்ளை.
(வயிற்றுப் பிள்ளை.)
கைப் புண்ணுக்குக் கண்ணாடியா?
கைப் பூணுக்குக் கண்ணாடி வேண்டுமா?
கைப் பொருள் அற்றவனைக் கட்டின பெண்டாட்டியும் எட்டிப் பாரான்.
(கட்டின பெண்ணும்.)
கைப் பொருள் அற்றால் கட்டுக் கழுத்தியும் பாரான்.
(கட்டினவளும்.)
9495

கைப் பொருள் இல்லாதவனைக் கள்வன் என்ன செய்வான்?
கைப் பொருள் இல்லா வழிப்போக்கனுக்குக் கள்வர் முன் படலாம்.
கைப் பொருள்தன்னிலும் மெய்ப் பொருள் கல்வி.
கைப் பொருள் போனால் கால் காசுக்கும் மதிக்கமாட்டார்கள்.
கைப் பொருள் போனாலும் கல்விப் பொருள் போகாது. 9500

கைப் பொன்னுக்குக் கண்ணாடியா?
கை பட்டால் கண்ணாடி.

கைபிடித்து இழுத்தும் அறியாதவன் சைகை அறிவானா?
கை போடாத புருஷன் இல்லை; விரல் போடாத பெண் இல்லை.
கைம்பெண்டாட்டி எருமையிலே கறவை பழகினாற் போல. 9505

கைம்பெண்டாட்டிக்கு ஒருத்தன் ஆனால் கட்டுக் கழுத்திக்கு எட்டுப் பேர்.
கைம்பெண்டாடிக்கும் காளவாய்க்கும் எங்கே என்று காத்திருக்கும்.
கைம்பெண்டாட்டி தாலியைக் கூழைக் கையன் அறுத்தானாம்.
கைம்பெண்டாட்டி பெற்ற பிள்ளை ஆனாலும் செய்யும் சடங்கு சீராய்ச் செய்ய வேண்டும்.
(பெண் ஆனாலும்.)
கைம்பெண்டாட்டி வளர்த்த கழுக்காணி. 9510

கைம்பெண் பிள்ளை ஆனாலும் செய்கிற சடங்கு செய்.
கைம்பெண் வளர்த்த கழிசடை.
(கழி சிறை.)
கைம் மேல் கண்ட பலன்.
கையது சிந்தினால் அள்ளலாம்; வாயது சிந்தினால் அள்ளமுடியாது.
கையால் ஆகாத சுப்பி, திருவாரூர்த் திப்பி. 9515

கையால் ஆகாத சிறுக்கி வர்ணப் புடைவைக்கு ஆசைப்பட்டாளாம்.
கையால் ஆகாததற்கு வாய் பெரிது.
கையால் ஆகாதவனுக்குக் கரம்பிலே பங்கு; உழாதவனுக்கு ஊரிலே பங்கு.
கையால் கிழிக்கும் பனங் கிழங்குக்கு ஆப்பும் வல்லீட்டுக் குற்றியும் ஏன்?
கையால் கிள்ளி எறியும் வேலைக்குக் கனத்த கோடரி வேண்டுமோ? 9520

கையால் பிடிக்கப் பொய்யாய்ப் போச்சுது.
கையாலே தொட்டது கரி.
கையாளாத ஆயுதம் துருப் பிடிக்கும்.
கையாளுகிற இரும்பு பளபளக்கும்.
கையானைக் கொண்டு காட்டானையை பிடிக்க வேண்டும். 9525

கையில் அகப்பட்ட துட்டுக் கணக்குப் பேசுகிறது.
(பேசும்.)
கையில் அகப்பட்ட பொருளுக்கும் கணக்கு.
கையில் அரிசியும் கமண்டலத்தில் தண்ணீரும்.

கையில் அரைக் காசுக்கும் வழி இல்லாத அஷ்ட தரித்திரம்.
கையில் இருக்க நெய்யிலே கைவிடுவானேன்? 9530

கையில் இருக்கிற கனியை எறிந்து மரத்தில் இருக்கிற கனியைத் தாவுகிறது போல.
(கனியை விட்டு விட்டு.)

கையில் இருக்கிற குருவியை விட்டு விட்டுப் பறக்கிறதற்கு ஆசைப்பட்டாற் போல்.

கையில் இருக்கிற சோற்றைப் போட்டு விட்டு எச்சிற் சோற்றுக்குக் கை ஏந்தினது போல.

கையில் இருக்கிற பறவையை விட்டு விட்டுக் காட்டுப் பறவைக்குக் கண்ணி வைக்கலாமா?

கையில் இருந்தால் கடை கொள்ளலாம். 9535
(செல்லலாம்.)

கையில் இருந்தால் கர்ணன்.
கையில் இருந்தால் பாக்கு; கையை விட்டால் தோப்பு.
கையில் இருப்பது செபமாலை; கட்கத்தில் இருப்பது கன்னக் கோல்.

கையில் இல்லாதவன் கள்ளன்.
(இல்லா விட்டால்.)
கையில் இல்லா விட்டால் கண்டாரும் பேச மாட்டார்; கேட்டாரும் மதிக்க மாட்டார். 9540
(கண்டாரும் மதிக்க மாட்டார்கள்.)

கையில் உண்டானால் காத்திருப்பார் ஆயிரம் பேர்.
கையில் உள்ள களாப்பழம் மரத்தில் உள்ள பலாப்பழத்துக்கு மேல்.
கையில் எடுக்குமுன் கோழி மோசம் என்று அறியாது.
கையில் எடுப்பது ஜபமாலை; கட்கத்தில் வைப்பது கன்னக் கோல்.

கையில் ஒரு காசும் இல்லை; கடன் கொடுப்பார் ஆரும் இல்லை. 9545
(+ தேவடியாள் வீட்டைக் கண்டால் துக்கம் துக்கமாய் வருகிறது.)

கையில் காசு இருக்கக் கறிக்கு அலைவானேன்?
கையில் காசு இருந்தால் அசப்பில் ஒரு வார்த்தை வரும்.

கையில் காசும் இல்லை; முகத்தில் பொலிவும் இல்லை.
கையில் காசு, வாயில் தோசை.
கையில் கிடைத்த அமுதைச் சமரில் ஊற்றலாமா? 9550

கையில் குடையும் காலில் சோடும் வேண்டும்.
கையில் கெளுத்தி மீனை வைத்துக்கொண்டு ஆணத்திற்குக் கத்தரிக்காயைத் தேடி அலைந்தாளாம்.
கையில் சாவு, வாயில் கோல்.
கையில் தாழ்வடம், மனசிலே கரவடம்.
கையில் பணம் இருக்கிறதா என்றால், பணம் இருந்த கை இருக்கிறது என்றானாம். 9555

கையில் பறவையை விட்டுக் காட்டுப் பறவைக்குக் கண்ணி வைக்கலாமா?
கையில் பிடிப்பது துளசி மாலை; கட்கத்தில் இடுக்குவது கன்னக்கோல்.
(ஜபமாலை.)
கையில் பிள்ளையோடு கடலில் விழுந்தாள்.
கையில் மஞ்சள் ஆனால் காரியம் மஞ்சூர்தான்.
கையில் வெண்ணெய் இருக்க நெய்க்கு அழுவானேன்? 9560

கையில் ஜபமணி கொண்டு மிரட்ட வருகிறாயே!
கையில் ஜபமாலை; கட்கத்தில் கன்னக் கோல்.
கையிலே காசு; வாயிலே தோசை.
கையும் இல்லை; காலும் இல்லை; திம் தடாக்கா.
கையும் கணக்கும் சரி. 9565

கையும் களவுமாய்க் கண்டு பிடிக்கிறது.
கையெழுத்துப் போடத் தெரிந்தால் கடனுக்குத்தான் வழி.
கையை அறுத்து விட்டாலும் அகப்பையைக் கட்டிக் கொண்டு திருடுவான்.
கையை உடைத்து விட்டவன் தலையை உடைத்தாலும் உடைப்பான்.
கையை ஊன்றித்தான் கரணம் போட வேண்டும். 9570

கையைக் காட்டி அவலட்சணமா?
கையைச் செட்டியார் குறைத்தால் காலைக் கைக்கோளன் குறைப்பான்.
(குறைத்தான்.)
கையைப் பார்த்து முகத்தைப் பார்.
கையைப் பார், முகத்தைப் பார் என்று இருந்தால் காரியம் ஆகுமா?
(நடக்குமா?)
கையைப் பிடித்தால் காலபலன். 9575

கையைப் பிடித்து இழுத்து வராதவள் கண்ணைக் காட்டி அழைத்தால் வருவாளா?
கையைப் பிடித்துக் கண்ணைப் பார்த்து மயிரைப் பிடித்துக் காசு வாங்குவதா?
கையைப் பிடித்துக் கள்ளை வார்த்து மயிரைப் பிடித்துக் காசு வாங்குகிறது.
கையைப் பிடித்துத் தூக்கிவிடு; பிணக் காடாயக் குவிக்கிறேன் என்றானாம்.
கையை மூடிக் கொண்டிருந்தால் கமுக்கம்; விரலைத் திறந்தால் வெட்டவெளி. 9580
(விரலைத் திறந்து விட்டால் ஒன்றும் இல்லை.)

கையை விட்டுத் தப்பினால் காடை காட்டிலே.
கைவரிசை இருந்தாலும் மெய்வரிசை வேண்டும்.
கை விதைப்பை விடக் கலந்த நடவை நல்லது.
கைவிரல் கண்ணிலே பட்டால் கையை என்ன பண்ணலாம்?
கை வைத்தால் கை இற்றுப் போம். 9585

கொக்கரித்த பேர் எல்லாம் கூடத் தீப் பாய்வார்களா?
கொக்கரிப்பார்க்குச் சொர்க்கமோ? நெருப்பில் குதிப்பார்க்குச் சொர்க்கமோ?
(தீயில்.)
கொக்கின் தலையில் வெண்ணெய் வைத்து அது உருகிக் கண்ணில் வழியும் போது பிடித்துக் கொள்வேன் என்றானாம்.
கொக்கின் தலையில் வெண்ணெயை வைத்துப் பிடிப்பது போல.
(பிடித்தல்.)
கொக்கு இளங்குஞ்சும் கோணாத தெங்கும் கண்டது இல்லை. 9590

கொக்கு என்கிறது அத்தை, குத்த வருகிறது அத்தை, அத்தைத் துரத்திப் பார்த்தேன் அத்தை; பறந்து போச்சு அத்தை.
கொக்கு என்று நினைத்தாயோ கொங்கணவா?
(இருந்தீரோ? எண்ணினையோ? கொங்கணரே.)
கொக்குக்கு உண்டா வீரசைவம்?
கொக்குக்கு ஒன்றே மதி.
கொக்குக்கு ஒன்றே மதி; கொழுக்கட்டைக்கு ஒன்றே குறி. 9595

கொக்குக்குத் தெரியுமா கோழிக் குஞ்சைக் கொண்டு போக?
கொக்குக் கூட்டத்தில் ராஜாளி விழுந்தாற் போல.
கொக்கு குருவிபோலக் கொத்திக் கொத்திச் சேர்க்கிறது.
கொக்குத் தின்னப் பெருச்சாளி பாய்ந்தாற் போல்.
கொக்குப் பிக்கலாட்டம். 9600

கொக்கு மேடை ஏறினால் மழை பெய்யும்.
கொக்கோகம் பார்த்தவன் அக்காளை ஏறுவான்.
கொக்கோடு இளங்குஞ்சு தெரிந்தார் இல்லை.
கொங்கனுக்குக் குலம் இல்லை; கொழுக்கட்டைக்குத் தலை இல்லை.
கொங்கிலே குறுணி விற்கிறது; இங்கு என்ன லாபம்? 9605

கொங்கு மலிந்தால் எங்கும் மலியும்.
கொங்கு வெறுத்தால் எங்கும் வெறுக்கும்.
கொச்சிக்குப் போனவன் செய்தியைப் பார், தன் குருவை விற்றவன் செய்தியைப் பார்.
கொச்சி மஞ்சளும் கூறை நாட்டுப் புடைவையும்.
கொச்சியிலே குறுணி மிளகு என்றால் இங்கு என்ன? 9610

கொசு இழந்த இறக்கைக்கும் ஆனை இழந்த காலுக்கும் சமம்.
கொசுக் கண்ணியைக் கூடக் குமரியிலே பார்க்க வேண்டும்.
கொசு கருடன் கூடப் பறந்தாற் போல்.
கொசு முதுகிலே பிளவை வந்தது போல.
கொசு மூத்திரம் குறுணி. 9615

கொசு மொய்த்த கண்ணியைக் குமரியில் பார்.
(கண்ணை.)
கொசு வனத்தில் கொள்ளி வைத்துக் கொண்டது போல்.
கொசுவிலே குறுணிப் பால் கறக்கலாமா?
கொசுவிலே பிளவை; அதிலே நீரிழிவு; அறுக்கிறது எங்கே?
(அண்டை விடுகிறது எங்கே?)
கொசுவின் முதுகிலே பிளவை வந்தாற் போல. 9620

கொசுவின் மேல் கருடன் நிற்குமா?
கொசுவுக்கு அஞ்சிக் குடிபெயர்ந்து போகிறதா?
(பயந்து போகிறானாம்.)
கொசுவுக்குப் பயந்து கோட்டையை விட்டு ஓடியது போல.
கொசுவுக்குப் பிளவை; அதிலே நீரிழிவு; அட்டை விடுவது எங்கே? அறுப்பது எங்கே?
கொசுவுக்குப் பிளவை புறப்பட்டால் அறுப்பது எங்கே? தீய்ப்பது எங்கே? 9625

கொசுவே, கொசுவே தலை முழுகு; நான் மாட்டேன், சனிக்கிழமை.
கொசுவை அடிக்கக் குண்டாந்தடியா?
கொசுவை அடித்தால் கொசுவும் கிடையாது.
கொசுவைப் பொருட்டாய் எண்ணிக் கருடன் எதிர்த்தாற் போல்.
கொசுவை வடிகட்டி ஒட்டகத்தை விழுங்குகிறதா? 9630

கொசுவை வடிப்பார் அசிகைப் படுவார்.
கொஞ்சத்தில் இருக்கிறதா, குரங்கு மிளகு நீர் குடிக்கிறது?

கொஞ்சத்தில் உண்மை இல்லாதவன் கோடியிலும் இருக்க மாட்டான்.

கொஞ்ச நஞ்சம் இருந்தது குருக்களை அடைந்தது; கோவிலை வௌவால் அடைந்தது.

கொஞ்சப் பொருளை மந்திரம் பண்ணுகிறது போல் கை காட்டுகிறான். 9635

கொஞ்சம் இடம் கொடுத்தால் மிஞ்ச இடம் தேடிக் கொள்வான்.

கொஞ்சம் கொஞ்சமாய்த் தின்றால் பனையையும் தின்று விடலாம்.

கொஞ்சம் தழை போட்டுச் சேடை உழுதால் கெட்டிச் சம்பா நெல் விளையும்.

கொஞ்சம் பட்டால் துக்கம்; அதிகம் பட்டால் புன்சிரிப்பு.

கொஞ்சிக் கூத்தாடி நடந்தாலும் குதிரை ஆகுமா கழுதை? 9640

கொட்டகை சுருட்டும் நாய்க்குப் பட்டா மணியம் ஏன்?

கொட்டை பெருக்குகிற கட்டைத் துடைப்பத்துக்குப் பட்டா மணியம் பகலிலே வந்தாற் போல.

கொட்டடா, கொட்டடா என்றால், பறையன் கொட்ட மாட்டானாம்; கொட்டாதே, கொட்டாதே என்றால் டிவிண் டிவிண் என்று கொட்டுவானாம்.

கொட்டாங்கச்சித் தண்ணீரிலே குபுக்கென்று பாய்ந்தாற் போல.

கொட்டினால் விதைக்கும் கம்பு கடகத்தில் வாரிக் கொட்டுகிறது. 9645

(கொட்டானால்.)

கொட்டிக் கிழங்கு பறிக்கப் போனால் கோபித்துக் கொள்வார் பண்டாரம்; அவித்து அவித்து முன்னே வைத்தால் அமுது கொள்வார் பண்டாரம்.

(அவித்து உரித்து.)

கொட்டிக் கிழங்கும் ஒரு முட்டுக்கு உதவும்.

கொட்டிக் கிழங்கும் வெட்டைக்கு உதவும்.

கொட்டிக் கிழங்கு வெட்டுகிறவளுக்குக் கோவிலிலே வந்து ஆடத் தெரியுமா?

கொட்டிக் கொட்டி அளந்தாலும் குறுணி பதக்காகுமா? 9650

கொட்டிக் கொட்டிக் குளவி புழுவைத் தன் நிறத்துக்கு ஆக்கி விடும்.

கொட்டிய பாலின் முன் கூவி அழுது ஆவதுண்டா?

கொட்டினால் தேள்; கொட்டா விட்டால் பிள்ளைப்பூச்சி.

கொட்டும் பறை தட்டம் அறியாது.

கொட்டை நூற்கிற அம்மாளுக்குப் பட்டணம் விசாரிப்பது ஏன்? 9655

(பட்டணத்து விசாரணை.)

கொட்டை நூற்கும் கூனற் கிழவி.

கொட்டை நூற்றுச் சம்பாதித்துக் கெட்டுப் போயிற்றா?

கொட்டோடே முழக்கோடே வந்தவள் எட்டோடே இழவோடே அல்லவா போவாள்?

(எட்டாம் நாள் படைக்கும் நாள். சோழநாட்டு வேளாளரிடையே வழங்குவது.)

*கொடாக் கண்டன், விடாக் கண்டன்.*

கொடாக் கண்டனும் விடா கண்டனும் கூடினாற் போலே. 9660

கொடாத இடையன் சினை ஆட்டைக் காட்டினது போல.

கொடாதவன் எருமைப் பாலும் கொடான்.

கொடாதவனுக்குக் கூத்துப் பறி; இடமாட்டாதவனுக்கு எச்சில்.

கொடிக் கம்பத்தைப் பயற்றங்காயாய்த் தின்பவருக்குக் கோபுரம் கொழுக்கட்டை.

*கொடிக் காலில் மின்னினால் விடிகாலை மழை.* 9665

கொடிக்குக் காய் கனமா?

(பாரமா?)

*கொடிக்குக் கும்மட்டிக் காய் கனத்திருக்குமா?*

கொடிக்குச் சுரைக்காய் கனமா?

(கனக்காது.)

கொடிகள் அருகான மரத்திலே படரும்.

(அருகிலுள்ள மரத்திலே தாவும்.)

கொடி சுற்றிப் பிறந்த பிள்ளை குலத்திற்கு ஆகாது. 9670

(பெண் பிறந்தால்.)

கொடிசுற்றிப் பிறந்தால் கோத்திரத்துக்கு ஆகாது.

கொடியும் பெண்டிரும் கொண்டதை விடார்.

கொடிறும் பேதையும் கொண்டது விடா.

கொடுக்க மாட்டாத இடையன் சினையாட்டைக் காண்பித்தாற் போல.

கொடுக்க மாட்டாதவன் கூத்தைப் பழித்தான்; இட மாட்டாதவன், எச்சில் என்று சொன்னான். 9675

கொடுக்கிற கைக்கு என்றும் குறைவு இருக்காது.

கொடுக்கிற சாமி என்றால் குண்டியைக் கிழித்துக்கொண்டு கொடுக்கும்.

கொடுக்கிறது உழக்குப் பால்; உதைக்கிறது பல்லுப் போக.

கொடுக்கிறதும் கொடுத்துக் குஷ்ட ரோகி காலில் விழுகிறதா?

கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிரித்துக் கொண்டு வந்து கொடுக்கும், 9680

(பிய்த்துக் கொண்டு. கிளப்பிக் கொடுக்கும்.)

கொடுக்கிற தெய்வம் மூஞ்சியிலே அடித்துக் கொடுக்கும்.
(முகத்திலே அறைந்து.)

கொடுக்கிற தெய்வம் ஆனால் கூரையைப் பிரித்துப் போட்டுக் கொடுக்காதோ?

கொடுக்கிறவன் எப்போதும் கொடுப்பான்.

கொடுக்கிறவன் கை என்றும் மேல்தான்; வாங்குகிறவன் கை என்றும் கீழ்தான்.

கொடுக்கிறவன் வாழைத் தாறாகிலும் கொடுப்பான். 9685

கொடுக்கிறதைக் கொடுத்தால் குடம் கொண்டு தண்ணீருக்குப் போவாள்.

கொடுக்கிறதையும் கொடுத்துக் குருட்டுத் தேவடியாளிடம் போனானாம்.

கொடுக்கிறதையும் கொடுத்துக் குஷ்டரோகியின் காலில் விழுவானேன்?

கொடுக்கிறவன் கன்னத்தில் அடித்துக் கொடுப்பான்.

கொடுக்கிறவன் கை என்றும் மேலேதான்; வாங்குகிறவன் கை என்றும் கீழேதான். 9690

கொடுக்கிறவனைக் கண்டால் பேய் குளைத்துக் குளைத்து ஆடும்.
(குழைந்து குழைந்து.)

கொடுக்கிறான் பழனியாண்டி; தின்கிறான் சுப்பனாண்டி.

கொடுக்கிறேன் என்றால் ஆசை; அடிக்கிறேன் என்றால் பயம்.
கொடுக்கினும் கல்வி கேடு படாது.
கொடுங்கோல் அரசு நெடுநாள் நில்லாது. 9695

கொடுங்கோல் கீழ்க் குடியிருத்தல் ஆகாது.
கொடுங்கோல் மன்னன் நாட்டிலும் கடும்புலி வாழும் காடு நன்று.
கொடுத்த கடன் கேட்டால் குமரகண்ட வலிப்பு வலிக்கிறதாம்.
கொடுத்தது கேட்டால் அடுத்தது பகை.
கொடுத்ததுபோல வாங்கிக் கொள்ளும். 9700

கொடுத்ததைக் கொடுக்கும் குறளிப் பிசாசு.
(குட்டிச்சாத்தான்.)
கொடுத்த பணம் செல்லா விட்டால் கூத்தரிசிக்காரி என்ன செய்வாள்?
கொடுத்தவருக்கு எல்லாம் உண்டு; கொடாதவருக்கு ஒன்றும் இல்லை.
கொடுத்தவரைப் புகழ்வார்; கொடாதவரை இகழ்வார்.
கொடுத்தவன் அப்பன்; கொடாதவன் சுப்பன். 9705

கொடுத்தவன் கைக்கு இளைத்தவன் துரும்பு.
கொடுத்தால் ஒரு பேச்சு; கொடாமற் போனால் ஒரு பேச்சு.
கொடுத்தால் ஒன்று; கொடுக்கா விட்டால் ஒன்று.
கொடுத்தால் குறை வராது.
(வருமா?)
கொடுத்தால்தான் சாமி; கொண்டு வந்தால்தான் மாமி. 9710

கொடுத்தாலும் ஒன்று; கொடா விட்டாலும் ஒன்று.
கொடுத்தாற் போல் கொடுத்து வாங்கிக் கொள்ளுகிறது.
கொடுத்து உறவு கொள்; கோளன் என்று இரேல்.
கொடுத்து ஏழை ஆயினார் இல்லை.
(பழமொழி நானூறு.)
கொடுத்துக் கெட்டார் ஆரும் இல்லை. 9715

கொடுத்துக் கொடுத்து இரு கையும் கூழையாய்ப் போயின.
(கூழாய்.)
கொடுத்துக் கொடுத்துக் கையும் காய்ப்பு ஏறிப் போயிற்று.
கொடுத்து நிஷ்டூரப் படுவதைவிடக் கொடுக்காமல் நிஷ்டூரப் படுவதே மேல்.

கொடுத்துப் பொல்லாப்பு ஆகிறதை விடக் கொடுக்காமல் இருக்கிறது நலம்.

கொடுத்தும் அறியான்; கொடுப்பவர்களைக் கண்டும் அறியான். 9720

கொடுத்தும் கொல்லை வழியாய்ப் போகிறதா?

கொடுத்து வாங்கினாயோ? கொன்று வாங்கினாயோ?

கொடுத்து வைத்தது போலக் கிடைக்கும்.

கொடுப்பது உழக்குப் பால்; உதைப்பது பல்லுப் போக.

கொடுப்பதைக் கெடுப்பாரைத் தெய்வமே கெடுக்கும். 9725

கொடுப்பதைத் தடுப்பவன் உடுப்பதும் இழப்பான்.

கொடுப்பதையும் கொடுத்துக் குஷ்டரோகி காலில் விழுந்தானாம்.

கொடுப்பார் பிச்சையைக் கெடுப்பார் கெடுக்கிறது. (கெடுவார் கெடுப்பார்.)

கொடுப்பாரைத் தடுக்காதே.

கொடும்பாவி ஆனாலும் கொண்ட மாமியார் வேண்டும். 9730

கொடும்பாவி சாகாளா? கோடை மழை பெய்யாதா?

கொடுமை அற்றவன் கடுமை அற்றவன்.

கொடுமை, கொடுமை என்று கோயிலுக்குப் போனேன்; அங்கே இரண்டு கொடுமை ஆடிக்கொண்டு வந்தது.

கொடுமை சுடப்பட்ட செல்வம் பசுங்கலத்தில் பால் கவிழ்ந்தது. (கலந்தது.)

கொடுமையான அரசன்கீழ் இருப்பதைக் காட்டிலும் கடுமையான புலியின் கீழ் இருப்பது நன்று. 9735

கொடைக்குக் கர்ணன்; படைக்குத் துரியோதனன்.

கொடைக்குக் குமணன்; சத்தியத்துக்கு அரிச்சந்திரன்.

கொடையிலும் ஒருத்தன்; படையிலும் ஒருத்தன். (கொடைக்கும், படைக்கும்.)

கொண்ட இடத்திலே கொடுத்தாலும் கண்ட இடத்திலே கொடுக்காதே.

கொண்ட கடையிலா விற்கிறது? 9740

கொண்ட கணவனிடத்திலே இரண்டகமா?

கொண்ட கொண்ட கோலம் எல்லாம் குந்தி பெற்ற மக்களுக்கு.

கொண்டதா, கொடுத்ததா, கோமுட்டி வீட்டுப் பெருச்சாளி?
கொண்டதுக்கு இரட்டி கண்டது வாணிகம்.
கொண்டது கொள்முதல் ஆனால் கோணி விலையும்
காணாது. 9745

கொண்டதைக் கொண்டபடி விற்றால் கோணி லாபம்.
கொண்டபடி விற்றால் கோடி லாபம்.
கொண்ட பிறகு குலம் பேசுவது போல.
கொண்ட பெண்சாதியே கூரரிவாளாய் இருந்தாள்.
கொண்ட பெண்சாதியை விட்டாலும் கொள்ளுக் கடகாலை
விடாதே. 9750
(கொள்ளுக் கடலையை.)

கொண்டவள் குறிப்பு அறிவாள்; குதிரை இருப்பு அறியும்.
கொண்டவன் அடிக்கக் கொழுந்தன்மேல் விழுந்தாளாம்.
கொண்டவன் இருக்கக் கண்டவனோடு போவதா?
கொண்டவன் உறவு உண்டானால் மண்டலம் எல்லாம் ஆளலாம்.
கொண்டவன் உறுதியாக இருந்தால் கோபுரம் ஏறிச் சண்டை
போடலாம். 9755

கொண்டவன் காய்ந்தால் கூரை ஓலையும் காயும்.
கொண்டவன் குட்டிச்சாத்தான் என்பது போல.
கொண்டவன் குரங்கு; கண்டவன் கரும்பு.
கொண்டவன் கோபி ஆனால் கண்டவனுக்கு இளக்காரம்.
கொண்டவன் சீறினால் கண்டவனுக்கு எல்லாம் இளக்காரம். 9760

கொண்டவன் செத்த பிறகா கொண்டையும் வெண்டயமும்?
கொண்டவன் தூற்றினால் கூரையும் தூற்றும்.
கொண்டவன் நாயே என்றால் கண்டவனும் கழுதை என்பான்.
கொண்டவன் பலம் இருந்தால் கூரை ஏறிச் சண்டை போடுவாள்.
(அறிந்தால்.)
கொண்டவன் பலம் இருந்தால் குப்பைமேடு ஏறிச் சண்டை
செய்யலாம். 9765

கொண்டவன் வலுவாளி; கொடுத்தவன் ஏழை.
கொண்டவனுக்கு இல்லாத வெட்கம் கண்டவனுக்கு உண்டா?
கொண்டவனுக்கு இல்லை; கண்டவனுக்கு என்ன கேடு?

கொண்டவனும் கொடுத்தவனும் ஒன்றாய்ப் போய்விடுவார்கள்; கொட்டு மேளக்காரனுக்குத்தான் கோணக் கோணா இழுக்கும்.

கொண்டவனும் கொடுத்தவனும் ஒன்று; கொட்ட வந்த பறையன் தூரத் தூர. 9770

கொண்டவனே தொண்டையைப் பிடித்தால் பெண்டு என்ன செய்வாள்?

கொண்டவனை அடித்துக் கோமுட்டிக்குக் கொடுப்பாய்.

கொண்டவனை விட்டுக் கண்டவனிடம் போய்க் கொண்டவனும் இல்லை; கண்டவனும் இல்லை.

கொண்டவனை விட்டுக் கண்டவனிடம் போனால் கண்டவன் பெண்டாட்டிக்குக் கால்பிடிக்க வேண்டும்.

கொண்டா குட்டிச்சாத்தா என்பது போல். 9775

கொண்டாட்டம் போய்த் திண்டாட்டம் ஆச்சுது.

கொண்டாடுவார் இல்லாவிட்டால் திண்டாடி நிற்கும்.

கொண்டார் முனியில் கண்டார் கடிவர்.

(கொண்டார் கடிந்தால் கண்டார் முனிவர்.)

கொண்டாலும் பெண்; கொடுத்தாலும் பெண்.

கொண்டான் காயின் கண்டான் காயும். 9780

(குறள், 1196, மணக்குடவர் உரை.)

கொண்டான் குறிப்பு அறிவாள் பெண்டாட்டி.

கொண்டானும் கொடுத்தானும் ஒன்று; கல்யாணம் கட்டி வைத்தோன் வாயில் மண்.

கொண்டானும் கொடுத்தானும் கூடக் கூட; பெற்றாரும் பிறந்தாரும் வேறு வேறு.

(யாழ்ப்பாண வழக்கு. கொண்டாரும்.)

கொண்டானும் கொண்டானும் ஒன்றாய்ப் போனால் கொட்ட வந்த பறையன் ஒத்திப் போக வேணுமாம்.

கொண்டானும் கொண்டானும் சம்பந்தி; கொட்ட வந்தவன் அம்பலம். 9785

கொண்டிருந்து குலம் பேசி, மொண்டிருந்து முகம் கழுவி.

கொண்டு குலம் பேசுறதா?

(பேசாதே.)

கொண்டு கொடுத்துக் குலம் பேசுவது போல,

கொண்டும் கொடுத்தும் உண்டு வாழ்.
கொண்டு வந்த அகமுடையான் குளித்து வருவதற்குள்ளே
நடுக்கிழித்து மூட்டினாளாம் முழுச்சமர்த்தி. 9790

கொண்டு வந்த அகமுடையான் குனிந்து வருவதற்கு முன்
கண்டு வந்த மாப்பிள்ளை கொண்டோடிப் போனான்.
கொண்டு வாரம் கொடுத்தவனும் உழுது வாரம் கொடுத்தவனும்
கடைத்தேற மாட்டார்கள்.
கொண்டை அழகி போனால் பின்னல் அழகி வருவாள்.
கொண்ட அழகே அன்றிக் குடித்தனத்துக்கு லாயக்கு அல்ல.
கொண்டைக்காரி ஒழிந்தாள்; பின்னற்காரி வரப்போகிறாள்.
(போனால் வருவாள்.)
கொண்டைக்குத் தக்க பூ. 9795

கொண்டைக்குப் பூச் சூடிச் சண்டைக்கு நிற்கிறது.
கொண்டைக்குப் பூச் சூடுகிறதா? தாடிக்குப் பூச்சூடுகிறதா?
கொண்டை கட்டி மச்சானுக்குக் கொண்டாடி பூமாலை என்றாளாம்.
கொண்டையம் பேட்டை, குரங்குப் பேட்டை.
கொண்டையிலே காற்று அடித்தாற் போல. 9800

கொண்டோர் எல்லாம் பெண்டிர் அல்ல.
கொத்தடிமைக்குக் குடியடிமையா?
கொத்தன் ஆனாலும் பெற்றவள் பிள்ளை.
கொத்திக் கண்ட கோழியும் நக்கிக் கண்ட நாயும் நில்லா.
கொத்தித் தின்கிற கோழியை மூக்கு அறுந்தது போல. 9805

கொத்துதடி கோழி; வித்தையடி மாமி.
கொத்துமல்லிச் சட்டினியும் கத்தரிக்காய்க் கொத்ஸூம் இட்டலி
தோசைக்கு உபசாதகம்.
கொத்து வாழ்வுக்கு ஒரு பலகை பிடிக்கிறது.
கொதிக்கிற எண்ணெயில் தண்ணீர் தெறித்தது போல்.
(தெளித்தது.)
கொதிக்கிற கூழுக்கு இருக்கிற சிற்றப்பா. 9810

கொப்பத்தில் வீழ்ந்த ஆனையும் வலையிற் சிக்கிய மானும்
போல.
கொம்பனோ?
(கொம்பு முளைத்தவனோ?)

கொம்பால் உழுது கொண்டியால் பரம்படி.
கொம்பில் ஒரு நெல் விளைந்தாலும் சம்பாவுக்கு இணை ஆகாது.
(ஈடு.)
கொம்பு முளைக்காத ஆனைக்குத் தும்புக் கயிறு தொண்ணூறு. 9815

கொய்யா வனத்துக்குக் குரங்கைக் காவல் வைத்தானாம்.
கொய்யாது குவியாது பசியாது.
கொல்லத்தில் குறுணி விற்றாலும் இல்லத்துக்குச் சுகம் வருமோ?
கொல்லத்துக்காரன் மேற்கே பார்ப்பான்; கூத்துக்காரன் கிழக்கே பார்ப்பான்.
கொல்லத் தெருவில் ஊசி விற்றாற் போல. 9820
(விற்பதா?)

கொல்ல வரும் ஆனை முன்னே கல்லை விட்டெறியாதே.
(யானையை.)
கொல்லன் உலையில் கொசுவுக்கு என்ன வேலை?
(அலுவல்.)
கொல்லன் எளிமை கண்டு குரங்கு தன் காலுக்குப் பூண் கட்டச் சொன்னதாம்.
கொல்லன் களத்திலே ஈக்கு என்ன வேலை?
கொல்லன் கைக் குறடுபோல. 9825

கொல்லன் பிணம் விறைத்தாற் போல.
கொல்லனைக் கண்ட குரங்கும் பணி செய்யும்.
கொல்லனைக் கண்டால் குரங்கும் மல்லுக் கட்டச் சொல்லும்.
கொல்லுக் கொலைக்கு அஞ்சாத கொடும்பாவி.
(அஞ்சாத நெஞ்சு.)
கொல்லுவதும் சோறு; பிழைப்பிக்கிறதும் சோறு. 9830

கொல்லைக் காட்டில் நரியைக் குடிவைத்துக் கொண்டது போல.
கொல்லைக் காட்டு நரி சலசலப்புக்கு அஞ்சுமா?
கொல்லைக் காட்டு நரி பல்லைக் காட்டினது போல.
கொல்லைக் கீரை மருந்துக்கு ஆகாது.
கொல்லைக்குப் பல்லி; குடிக்குச் சனி. 9835

கொல்லை காய்ந்தாலும் குருவிக்கு மேய்ச்சல் உண்டு.
கொல்லை குறுணியாகிலும் சொன்ன குறுணி போமா?
கொல்லைத் தலைமாட்டில் இருப்பது போல.
கொல்லைப் பச்சிலை மருந்துக்கு உதவுமா?
கொல்லை பாழாய்ப் போனாலும் குருவிக்கு மேய்ச்சல் போச்சா? 9840
(இரை பஞ்சமா? பாழானாலும்.)

கொல்லையில் குற்றியை அடைந்த புல் உழவன் உழுபடைக்குக் கெடுமா?
கொல்லொணாப் படை எவர்க்கும் வெல்லொணாது.
(திருவாலவாய்ப் புராணம், 36:20)
கொலைக்கு அஞ்சாதவன் பழிக்கு அஞ்சுவானா?
கொலையாளியை நம்பினாலும் மலையாளியை நம்பாதே.
(மலேயா வழக்கு.)
கொழுக்கட்டைக்குத் தலை பார்த்துக் கடிப்பார்களா? 9845

கொழுக்கட்டைக்குத் தலையும் இல்லை; குடியனுக்கு முறையும் இல்லை.
(குறவனுக்கு.)
கொழுக்கட்டை தின்ற நாய்க்குக் குருதட்சிணை வேறா?
கொழுக்கட்டை தின்ற நாய்க்குக் குறுணி மோர் குருதட்சிணை.
(தின்ற பிள்ளையாருக்கு.)
கொழுக்கட்டை தின்ற பூனைக்குக் குடுவை மோர் வரதட்சிணை.
கொழுக் கட்டையை எடுத்து நாயை எறிந்தது போல. 9850

கொழுக் குத்தக் கூட இடம் கொடுக்க மாட்டான்.
கொழு கொம்பு இல்லாத கொடிபோல.
( + ஆனேன்.)
கொழுத்த ஆடு குட்டி போட்டாலும் உழுக்கட்டை வழுக்கட்டைதான்.
கொழுத்த ஆடு பார்த்துப் பிடிக்கிறதா?
(கொழுத்தாடை.)
கொழுத்த பிணத்தை இழுத்து எறி. 9855

கொழுத்த மீன் தின்கிறவன் குருவிக் கறிக்கு அசிங்கப்படுவானா?
கொழுத்தவன் கைக்கு இளைத்தவன் துரும்பு.
கொழுத்தவனுக்குக் கொள்ளும் இளைத்தவனுக்கு எள்ளும்.

கொழுத்துச் செத்தால் இழுத்து எறி.
கொழுநன் நட்பு இல்லாத பெண்ணும் உழவு நட்பு இல்லாத பயிரும் பிரயோசனம் இல்லை. 9860

கொழுமீதிற் குடிகொண்ட குடிச் செல்வம் செல்வம்.
கொள் என்றால் வாயைத் திறக்கும்; கடிவாளம் என்றால் வாயை மூடும்.
(குதிரை.)
கொள்வார் அற்ற குயக்கலம் போல.
கொள்வாரும் இல்லை; கொடுப்பாரும் இல்லை.
கொள்ளப் போய்க் குருடியைக் கொண்டானாம். 9865

கொள்ளி இல்லாத சொத்து, பிள்ளை இல்லாத சம்பாத்தியம்.
(கொள்ள.)
கொள்ளிக் கட்டையால் சுட்டால் கொப்பளிக்குமென்று வாழைப்பழம் கொண்டு வடுவடுவாய்ச் சுடுகிறான்.
(வைக்கிறான்.)
கொள்ளிக் கட்டையால் தலையைச் சொறிந்தது போல.
(கொள்ளிக் கட்டை கொண்டு சொறிவதா?)
கொள்ளிக்கு எதிர் போனாலும் வெள்ளிக்கு எதிர் போகலாகாது.
கொள்ளித் தேளுக்கு மணியம் கொடுத்தது போல. 9870

கொள்ளித் தேளை மடியில் வைத்துக் கட்டிக் கொண்டது போல.
கொள்ளி பட்ட குதிரை லாயம் பாழ்.
கொள்ளியால் தலை சொறிகிறதா?
கொள்ளியும் தீயும் உனக்கு; பிள்ளையும் தள்ளையும் எனக்கு.
(நாஞ்சில் நாட்டில் கண்ணேறு கழித்தல். தள்ளை-தாய்.)
கொள்ளியை ஆனைக்குத் தானம் செய்த மாதிரி. 9875

கொள்ளியை எடுத்துப் போட்டால் கொதிக்கிறது அடங்கி விடும்.
(கொள்ளியை வாங்கினால், இழுத்து விட்டால்.)
கொள்ளி வைத்த இடத்தில் அள்ளி எடுக்கிறதா?
கொள்ளுக் குத்தின உலக்கை போல.
கொள்ளுக்கு வாயைத் திறந்து கடிவாளத்துக்கு வாயை மூடுவது.
கொள்ளுக் கொடி பந்தல் ஏறாது. 9880

கொள்ளுத் தின்று கொள்ளையிலே போவான்.
கொள்ளும் வரையில் கொண்டாட்டம்; கொண்ட பிறகு திண்டாட்டம்.

கொள்ளு வாசனை கண்ட குதிரை போல.
கொள்ளு வெள்ளாமை கொள்ளை வெள்ளாமை.
கொள்ளை அடித்துத் தின்கிறவனுக்குக் கொண்டு தின்னத் தாங்குமா? 9885

கொள்ளை இடப் போகிறவனுக்குக் குருடன் துணை ஆகுமா?
கொள்ளைக்குப் போனாலும் கூட்டு ஆகாது.
கொள்ளைக்கும் ஊழிக்கும் தப்பு.
கொள்ளைக்கு முந்து; கோபத்துக்குப் பிந்து.
கொள்ளைக் கூட்டத்துக்குத் தலை இல்லை; கூத்தாடிக்கு முறை இல்லை. 9890

கொள்ளைப் பறிக்கிறது; கொடுக்கப் பறக்கிறது; கொண்டவனைக் கண்டால் குடலைப் புரட்டுகிறது.
கொளிஞ்சி மிதித்தால் களஞ்சியம் நிறையும்.
கொற்றவன் அறிதல் உற்றிடத்து உதவி.
(அறியான்.)
கொற்றவன் தன்னிலும் கற்றவன் மிக்கோன்.
(சிறந்தவன்.)
கொன்றவனை விடக் கற்றவன் பெரியவன். 9895

கொன்ற பாவம் தின்றதில் போச்சு.
கொன்றாரைக் கொல்லும் அல்லால் கொலை விடாது.
கொன்றால் பாவம் தின்றால் போச்சு.
(தீரும்.)

கோகுலாஷ்டமிக்கும் குலாம் காதருக்கும் என்ன சம்பந்தம்?
கோட்டாறு சேவியர் கேட்டவரம் தருவார். 9900
கோட்டானை மடியிற் கட்டிக் கொண்டது போல.
(கட்டிக் கொண்டு சகுனம் பார்த்தது போல.)

கோட்டி என்றால் கோபம் சண்டாளம்.
கோட்டுச் சம்பா ஆக்கிவைத்தால் போட்டுச் சாப்பிட வருவார்கள்.
கோட்டைக்குள் எலியை வைத்துக் கட்டியது போல.
கோட்டைக்குள்ளே குத்தும் வெட்டுமா? 9905

கோட்டைக்குள்ளே படை வெட்டிக் கொள்கிறதா?
கோட்டையில் குண்டு போடுவான், கோயிலில் குண்டு போடுவானா?
கோட்டையில் பெண் பிறந்தாலும் போட்ட எழுத்துப் போகுமா?
(போட்ட சுழி;போட்ட புள்ளி.)
கோடாலிக் காம்பினால் குலத்திற்குக் கேடு வரும்.
கோடாலிக் காம்பு குடித்தனத்துக்கு ஆகாது. 9910
(குலத்துக்கு ஈனம்.)

கோடாலிக்காரனுக்குப் பிளவை புறப்பட்டது போல.
கோடானுகோடி வினை வரினும் மனம் கோணாமல் இருப்பதே கோடி பெறும்.
கோடி ஒரு வெள்ளை; குமரி ஒரு பிள்ளை.
கோடிக்கும் வேதைக்கும் காதம்; வேதைக்கும் கள்ளிக்கும் காதம்; கள்ளிக்கும் பூண்டிக்கும் காதம்; பூண்டிக்கும் நாகைக்கும் காதம்; நாகைக்கும் காரைக்கும் காதம்.
(கோடி- கோடிக்கரை; வேதை- வேதாரண்யம்; கள்ளி-கள்ளி மேடு. பூண்டி-திருப்பூண்டி. இப்படியே காசிவரைக்கும் உண்டு என்பர்.)
கோடி கப்பல் நஷ்டம் கொட்டை நூற்றா விடியும்? 9915
(கப்பல் ஓடிய வீடு.)

கோடி கொடுத்தாலும் குழந்தை கிடைக்குமா?
கோடி கொடுத்தாலும் கோபுரம் தாழாது.
கோடிச் சீமான் துணிய வேண்டும்; அல்லது கோவணாண்டி துணிய வேண்டும்.
கோடிச் சீமானும் கோவணாண்டியும் சரியா?
கோடித் துக்கம் குழந்தை முகத்தில் மறையும். 9920
(ஆறும்.)

கோடி தனம் இருந்தாலும் குணமில்லா மங்கையை மணம் முடித்தல் ஆகாது.
(மங்கையுடன் கூடாதே.)
கோடி நேசம் கேடு படுத்தும்.
கோடிப் புடைவையைக் கட்டிக் கொண்ட தைரியத்தில் குச்சைக் கொளுத்திக் கொண்டாளாம்.
(குடிசையை.)
கோடி போனாலும் ஐயோ! கோவணம் போனாலும் ஐயோ!
கோடி முண்டர் ஏறி மிதித்தாலும் கூழாங்கல் சாந்துக்கு வருமா? 9925

கோடி வித்தையும் கூழுக்குத்தான்.
கோடீசுவரன் ஆக வேண்டுமா? லட்சாதிபதி ஆக வேண்டுமா?
கோடீசுவரனைக் கெடுக்க ஒரு கோவணாண்டி போதும்.
கோடு அடுத்தவன் ஏடு எடுப்பான்.
(எடுத்தவன். கோடு-Court போனவன்.)
கோடு ஏறினார் மேடு ஏறினார். 9930
(கோடு-Court.)

கோடு கண்டாயோ? ஓடு கண்டாயோ.
(ஷ)
கோடை இடி இடித்துக் கொட்டும் மழைபோல.
கோடை இடி இடித்துப் பெய்யும்; மாரி மின்னிப் பெய்யும்.
கோடை இடி குமுறி இடித்தாற் போல.
கோடை இடித்துப் பெய்யும்; மாரி மின்னிப் பெய்யும். 9935
கோடை இடி விழுந்தாற் போல்.

கோடையால் காய்கிற பயிர் வாடையால் தளிர்க்கும்.
(கோடையில் பயிர்) வாடையில் பயிர்.)
கோடையிலே தண்ணீர் ஓடை கண்டமான் போல்.
கோணக் கோணக் கோவித்தா!

கோணல் கொம்பு ஏறி என்ன? குதிரை மீது ஏறி என்ன? வீணர்க்கும் கீர்த்திக்கும் வெகு தூரம். 9940

கோணல் வாயன் கொட்டாவி விட்டாற்போல.
கோணா மாணாப் பெண்டாட்டி மாணிக்கம் போலப் பிள்ளை பெற்றாள்.
கோணிக் கோணிக் கோடி கொடுப்பதினும் கோணாமல் காணி கொடுப்பது மேல்.
(நல்லது.)
கோணி கொண்டது; எருது சுமந்தது.
கோத்திர ஈனன் சாத்திரம் பார்ப்பான். 9945

கோத்திரத்திலே குரங்கு ஆனாலும் கொள்.
(கோத்திரத்திலே கிடைத்தால்.)
கோத்திரம் அறிந்து பெண்ணைக் கொடு; பாத்திரம் அறிந்து பிச்சை இடு.
கோப்பாயில் நாய் குட்டிச் சுவரில் ஏறியது போல.
(கோப்பாய்-இலங்கையில் ஓர் ஊர்.)
கோப்புத் தப்பினால் குப்பையும் பயிராகாது.
கோபத்தில் அறுத்த மூக்குச் சந்தோஷத்தில் வருமா? 9950

கோபம் ஆறினால் குரோதம் ஆறும்.
கோபம் இல்லாத துரைக்குச் சம்பளம் இல்லாத சேவகன்.
கோபம் இல்லாத துரையும் சம்பளம் இல்லாத சேவகனும்.
கோபம் இல்லாத புருஷனும் புருஷன் அல்ல; கொதித்து வராத சோறும் சோறு அல்ல.
கோபம் இல்லாத ராசாவும், சம்பளம் இல்லாத மந்திரியும். 9955

கோபம் இல்லாதவனைக் குரு காப்பார்.
கோபம் உள்ள இடத்தில் குணம் உண்டு.
(இருக்கும்.)
கோபம் உள்ள இடத்தில்தான் சந்தோஷம் இருக்கும்.
கோபம் எல்லாம் கொடுமைக்கு லட்சணம்.
கோபம் குடிகெடுக்கும். 9960
(எடுக்கும்.)

கோபம் சண்டாளம்.
(கோபம் பாபம் சண்டாளம்.)
கோபம் பாபம்; நித்திரை சத்துரு.

கோபம் பெரும் பாவம்.
கோபம் வந்து கிணற்றில் விழுந்தால் சந்தோஷம் வந்தால் எழுந்திருக்கலாமா?
கோபமும் தாபமும் கூடிக் கெடுக்கும். 9965

கோபமும் நெருப்பும் உடனே கெடு.
கோபிக்காத புருஷன் புருஷன் அல்ல; கொதிக்காத சோறு சோறு அல்ல.
கோபி குதிரைமேல் கடிவாளம் இல்லான்.
கோபுரத்தில் ஏறிப் பொன்தகடு திருடு என்ற கதை.
கோபுரத்தில் ஏறி விழுந்தவனுக்கு எங்கே கண்டு இழை இடுகிறது? 9970
கோபுரத்தில் கட்டிய கொடி போல.

கோபுரத்தில் விளக்கை வைத்துக் கொட்டுக் கூடையால் மூடுவானேன்.
(பொட்டுக் கூடையால்.)
கோபுரத்தின் மேல் ஏறிக் கும்பத்தைக் கழற்றுகிறவன் அகத்திக் கீரைக் கொல்லையைப் பார்த்துக் கொள்ளை கொள்ளை என்றானாம்.
கோபுரத்தின்மேல் குரங்கு உட்கார்ந்தாற் போல.
கோபுரத்தைப் பொம்மையா தாங்குகிறது? 9975

கோபுர தரிசனம் பாப விமோசனம்.
கோபுரம் ஏறிக் குதித்தாற் போல.
கோபுரம் தாங்கிபோல நடக்கிறான்.
கோபுரம் தாங்கிய பூதம் போல் சுமக்கிறான்.
கோபுரம் தாங்கிய பொம்மை போல். 9980

கோபுரம் தாண்டுகிற குரங்குக்குக் குட்டிச்சுவர் என்ன பிரமாதம்?
கோபுரமும் எட்டும்; குபேரனுக்கும் கை சளைக்கும்.
கோபுர வஸ்து.
கோபுர விளக்கைக் கூடையால் மூடுவானேன்?
கோம்பை நாயைப் போல் கோபிக்காதே. 9985

கோமாளி இல்லாத கூத்துச் சிறக்குமா?
கோமாளிக் கூத்து.
கோமுக வியாக்கிரம் போல.
(வியாக்கிரம் - புலி.)

கோமுட்டி சாட்சி.
கோமுட்டிப் பிசாசு பிடித்தால் விடாது. 9991

கோமுட்டிப் பிள்ளை வீணுக்கா நெய்ப்பல்லாயைப் போட்டு உடைக்கும்?
கோமுட்டி புத்திக்கு மோசம் இல்லை.
கோமுட்டி புத்திக்கு மோசம் லேது; மோசம் வந்தால் செப்ப லேது.
(லேது - இல்லை; தெலுங்கு.)
கோமுட்டியைச் சாட்சிக்குக் கூப்பிட்டது போல.
கோமுட்டி வீட்டுப் பெருச்சாளிக்குக் கொண்டதென்ன? கொடுத்ததென்ன? 9995
(கொண்டது கொடுத்தது தெரியாது.)

கோயில் அருகே குடி இருந்தும் கெட்டேன்.
கோயில் இல்லா ஊரில் குடி இருக்க வேண்டாம்.
கோயில் ஐந்து வேலி, குளம் ஐந்து வேலி, செங்கழுநீர் ஓடை ஐந்து வேலி.
(திருவாரூரில்.)
கோயில் சாந்து ஒன்பது குளிக்கு மாறாது.
(சீரங்கத்தில்.)
கோயில் பூனைக்குப் பயம் ஏது? 10000

கோயில் மணியம் என்று கூப்பிட்டால் போதும்.
கோயிலையும் குளத்தையும் அடுத்திருக்க வேண்டும்.
கோர்ட்டுக்கு முன்னால் போகாதே; கழுதைக்குப் பின்னால் போகாதே.
கோரக்கல் வைத்தியம் குணத்துக்கு ஏற்குமா?
கோரைக் கொல்லை பிடித்தவனும் மலடி ஸ்திரீயை மணந்தவனும் பயன் அடைய மாட்டார்கள். 10005

கோரை குடியைக் கெடுக்கும்.
கோரை முடி குடியைக் கெடுக்கும்.
கோல் ஆடக் குரங்கு ஆடும்; அதுபோல மனம் ஆடும்.
கோல் இழந்த குருடன் போல.
கோல் உயரக் கோன் உயர்வான். 10010

கோல் எடுக்கக் குரங்கு ஆடும்.
(கோல் ஆட.)
கோல் எடுத்த பிள்ளை குருட்டுப் பிள்ளை.
(கொடுத்த பிள்ளை. பிள்ளை தன் கண்ணைத் தானே குத்திக்கொள்ளும்.)

கோல் பிடித்த பிள்ளை குரங்கு.
கோல் பிடித்தவன் கோமான்; தண்டம் பிடித்தவன் தண்டல்காரன்.
கோலச் சமத்தி, கோலச் சமத்தி என்றாளாம்; அவசரக் கோலம் அள்ளித் தெளித்தாளாம். 10015

கோவணத்தில் இடி விழுந்தது என்றாளாம்.
கோவணத்தில் ஒரு பணம் இருந்தால் கோழி கூப்பிடும் வேளையில் ஒரு பாட்டு வரும்:
(ஒரு காசு கோழி கூப்பிடும் போதே.)
கோவணத்தில் மூக்கால் துட்டு இருந்தால் கோழி கூப்பிடப் பாட்டு வரும்.
(காசு இருந்தால்.)
கோவணத்துக்கு மிஞ்சின தரித்திரம் இல்லை.
கோவணத்தை அவிழ்த்து மேற்கட்டுக் கட்டுகிறது. 10020

கோவணம் கட்டாத ஊரில் கோவணம் கட்டியவன் பைத்தியக்காரன்.
கோவணம் பீயைத் தாங்குமா?
கோவணாண்டிக்குக் குடித்தனம் பெருத்ததுபோல.
(யாழ்ப்பாண வழக்கு.)
கோவணாண்டி துணிவிலும் கோடிச் சீமான் துணிவா.
(துணிவு.)
கோவிந்தா என்றால் கோடி ஸ்நானம் என்று குளிக்காமல் முழுகாமல் இருக்கலாமா? 10025

கோவில் ஆனை கல் ஆனை.
கோவில் இடிக்கத் துணிந்தவனா குளம் வெட்டப் போகிறான்?
(குளம் கட்ட.)
கோவில் உண்டைச் சோறு குமட்டின தேவடியாள் குத்துமித் தவிட்டுக்குக் கூத்தாடுகிறாள்,
கோவில் கட்டி அல்லவா விளக்குப் போடவேண்டும்?
கோவில் கட்டிக் குச்சு நாயைக் காவல்; மாடி வீட்டைக் கட்டி மரநாயைக் காவல். 10030

கோவில் கல்லைப் பிடுங்கப் போகிறான்.
கோவில் காளை போலத் திரிகிறான்.
கோவில் குளம் போகாத கோபி சாஸ்திரி; கன்னி குளம் போகாத கன்யா சாஸ்திரி.

கோவில் கொள்ளைக்காரன் குருக்களுக்குத் தட்சிணை
கொடுப்பானா?
கோவில் சோற்றுக்குக் குமட்டின தேவடியாள் காடிச் சோற்றுக்குக்
கரணம் போடுகின்றாள். 10035

கோவில் தாசிக்குச் சதிர் ஆடக் கற்றுக் கொடுத்தது போல.
கோவில் பட்டியை விட்ட குதிரை கோபால சமுத்திரம்
போனவுடன் துள்ளிக் குதித்ததாம்.
கோவில் பூனைக்குப் பயம் ஏன்?
கோவில் பூனை தேவர்க்கு அஞ்சாது.
கோவில் மணி போனால் நம்பியானுக்கு என்ன? 10040

கோவில் மணியம் என்று கூப்பிட்டால் போதும்.
கோவில் மணியம் என்று பேர் இருந்தால் போதும்.
கோவில் மணியம் போனால் நம்பியான் சுழலும் போச்சுதா?
கோவில் மதில்மேலே தேள் கொட்டிற்றாம்; குருக்களகத்து
ஞானாம்பாளுக்கு நெறி கட்டிற்றாம்.
கோவில் விளக்குக் கோடி புண்ணியம். 10045

கோவில் விளங்கக் குடி விளங்கும்.
கோவிலில் கொட்டு முழக்கு; கடையில் பாக்கு வெற்றிலை.
கோவிலில் வைத்துக் கும்பிட வேண்டும்.
கோவிலிலே பூஜித்துக் குளத்திலே கை அலம்பிக் கோபுர
வாசலிலே உறங்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களைப் போலே.
கோவிலுக்கும் முட்டும்; குபேரனுக்கும் கை சளைக்கும். 10050

கோவிலை அடைத்துக் கொள்ளை அடிப்பவனா குருக்களுக்குத்
தட்சிணை கொடுப்பான்?
கோவிலைக் கட்டி நாயைக் காவல் வைத்தாற் போல.
கோவிலை நம்பிக் குயவன் பிழைக்கிறது போல.
கோவிலைப் பார்த்துக் கும்பிடுகிறதா? கொட்டைப் பார்த்துக்
கும்பிடுகிறதா?
கோவிலையும் குளத்தையும் அடுத்து இருக்க வேண்டும். 10055

கோவுக்கு அழகு செங்கோல் முறைமை.
கோவூரான் அவிசாரி போகக் குன்றத்தூரான் தண்டம் கொடுக்க.
(ஊர்மேல் போக.)
கோவூருக்கு வழி எது என்றால் கன்று என்னுடையது என்றானாம்.
கோழி அடிக்கிறதற்குக் குறுந்தடி வேண்டுமா?
(அடிக்க.)
கோழி அடை வைக்குமுன்னே குஞ்சுகளை எண்ணலாமா? 10060

கோழி ஓட்டத் தெரியாதவன் கொக்கு வாரியா?
கோழி ஓட்டினாலும் கும்பினிக்கு ஓட்டு.
(கும்பினி-East India Company.)
கோழிக் கறி என்றதும் கொண்டாடிக் கொண்டதும் கீரைத் தண்டாணம் அடாசப்பா; கீரைத் தண்டாணம் அடாசு.
(அடா.)
கோழிக் கறி கொடுத்துக் குயில் கறி வாங்கினாற் போல.
கோழிக் காய்ச்சல், வேசைக் காய்ச்சல். 10065

கோழிக் காய்ச்சலும் குண்டன் காய்ச்சலும் விடா.
கோழிக்குக் கொண்டை அழகு; குருவிக்கு மூக்கு அழகு.
கோழிக் குஞ்சுக்குப் பால் கொடுத்ததுபோல.
கோழி களவு போனால் ஆடு வெட்டிப் பலி இடுகிறதா?
(பொங்கல் இடுகிறதா?)
கோழி கவிழ்க்கும் போதே கூடக் கவிழ்த்து கொள்ளுகிறாயே. 10070

கோழி கறுப்பு ஆனால் அதன் முட்டையும் கறுப்பா?
கோழி குஞ்சிலும், அவரைக்காய் பிஞ்சிலும்.
கோழி குஞ்சுக்குப் பால் கொடுக்குமா?
கோழி குருடு ஆனாலும் சாறு மணக்காது போகுமா?
கோழி கூப்பிட்டு விடிகிறதா? நாய் குரைத்து விடிகிறதா? 10075
(விடியுமா?)

கோழி கூவாவிட்டால் விடியாதா?
கோழி கூவிப் பொழுது புலர்ந்தது.
(பொழுது விடியுமா?)
கோழி கூவுகிறதற்கு நாழிகை தெரிகிறது போல.
கோழி கொடுத்துக் குரலும் அழுகிறதா?
(அழிகிறது.)
கோழி கொடுத்துக் குரலும் பறிகொடுத்தது போல. 10080

கோழி கொரிப்பது போல் சாப்பிடுகின்றான்.
கோழி கொழுத்தால் முட்டை இடாது.
கோழி சிறகால் குஞ்சுகளைக் காப்பது போல.
கோழித் திருடியும் கூடி அழுகிறாள்.
கோழி தட்டிக் கூவுமா? 10085

கோழி திருடிக் கூடக் குலாவுகிறான்.
கோழி திருடிய கள்ளனும் கூட நின்று குலாவுகிறான்.

கோழி திருடியவன் தலையில் கொண்டை மயிர்.
கோழி தின்ற கள்ளனும் கூட நின்று குலாவுகிறான்.
கோழி போனது அல்லாமல் குரலும் போயிற்று. 10090

கோழி மிதித்துக் குஞ்சு சாவது இல்லை.
கோழி மிதித்துக் குஞ்சு முடம் ஆகுமா?
(குஞ்சுக்குக் கேடு ஆகுமா?)
கோழி முட்டைக்குச் சுருக்கு வைத்து, வாத்து முட்டைக்கு வரிச்சல் போடுவான்.
கோழி முட்டைக்குத் தலையும் இல்லை; கோவில் ஆண்டிக்கு முறையும் இல்லை.
கோழி முட்டைக்கு மயிர் பிடுங்குகிறான். 10095

கோழி முடத்துக்குக் கடாவெட்டிக் காவு கொடுக்கிறதா?
(கடா வெட்டிப் பலி இட்டது போல.)
கோழி மேய்த்தாலும் கும்பினியான் கோழி மேய்க்க வேணும்.
(கோறண்மேந்திலே. Government.)
கோழியின் காலில் கச்சையைக் கட்டினாலும் குப்பையைத்தான் சீக்கும்
(கிளறும்.)
கோழியும் கொடுத்துக் குலையும் இழந்தாளாம்.
(கூக்குரலும் படுகிறதா?)
கோழியும் யாருடையதோ? புழுங்கலும் யாருடையதோ? 10100
(யாழ்ப்பாண வழக்கு.)

கோழியை அடிப்பதற்குக் குறுந்தடி ஏன்?
கோழியைக் கேட்டா ஆணம் காய்ச்சுகிறது?
கோழியைக் கேட்டுத்தான் மிளகாய் அரைப்பார்களா?
கோழியைப் பருந்து அடிக்கும்; பருந்தைப் பைரி அடிக்கும்.
(பைரி-ராஜாளி.)
கோழியையும் கொடுத்துக் குரலையும் இழந்தாளாம். 10105

கோழியை வளர்க்கப் பிடித்தாலும் கேர் கேர் என்னும்; கழுத்தை அறுக்கப் பிடித்தாலும் கேர் கேர் என்னும்.
கோழை நாய்க்குப் பட்டது அரிது.
கோழையில் மொய்த்துக் குழம்பும் ஈயைப் போல்.
கோழையும் ஏழையும் கூடின காரியம் பாழிலே பாழ்.
கோள் சொல்பவனைக் கொடுந்தேள் என்று நினை. 10110

கோள் சொல்லிக் குடும்பத்தைக் கெடுத்தாலும் குடிவரி உயர்த்திக் கொள்ளை அடிக்காதே.
கோள் சொல்லிக் குண்டுணி.
(குண்டுப் பெருமாள்.)
கோள் சொல்லும் வாய் காற்றுடன் நெருப்பு.
கோளாற்றக் கொள்ளாக் கொள்ளாக் குளத்தின் கீழ்ப் பைங்கூழ்.
கோளாறு இல்லாத செட்டி கோவணத்தை அவிழ்ப்பானா? 10115

கோளுக்கு முந்தேன்; கூழுக்குப் பிந்தேன்.
(உணவுக்கு.)
கோளும் குறளையும் குலத்துக்கு ஈனம்.
கோளும் சொல்லிக் கும்பிடுவானேன்?
கோனான் கோல் எடுக்க நூறு ஆடும் ஆறு ஆடு ஆயின.
கோஷ்டியூர் காணாதவர் குரங்காய்ப் பிறப்பார். 10120

# கௌ

கௌசிகத்துக்கு ஒளியில் எவர்க்கும் ஒளியும்.
(ஒளிரும்.)
கௌபீனத்துக்கு இச்சைப்பட்ட சாமியார் கல்யாணத்துக்குப் பெண் தேடிக் கொண்டாராம்.
கௌபீன ஸம்ரக்ஷணார்த்தம் அயம் படாடோப:
கௌவை உடையார் காலைத் தொடு.
கௌவை கருதேல். 10125

கௌவை சொல்லின் எவ்வருக்கும் பகை.
கௌவைப் பட்டால் காயத்தில் ஒருமுழம் நீளுமா?
கௌவையது இல்லான் திவ்விய சொல்வான்.
கௌளி ஊருக்கெல்லாம் பலன் சொல்லும்; தான் மாத்திரம் கழு நீர்ப் பானையில் விழும்.

# ங

ஙப்பன் பிறந்தது வெள்ளிமலை; ஙாய்பிறந்தது பொன்மலை.
ஙப்போல் வளை. 10130
(ஆத்திசூடி.)

சக்களத்தி அறுத்தால் தானும் அறுப்பாள்.
சக்களத்திக்கு ஆண்பிள்ளை பெற்றால் பொறாமை, மலடிக்கு எவள் பிள்ளை பெற்றாலும் பொறாமை.
சக்களத்தி பிள்ளை தலைமாட்டுக் கொள்ளி.
சக்களத்தி மாமியார்.
சக்கிலித் தெரு நாய் சமயத்துக்கு உதவாது. 10135

சக்கிலிப் பெண் நெற்றியிலே குஜ்ஜிலிப் பொட்டைப் பார்.
சக்கிலிப் பெண்ணும் சாமைக் கதிரும் பக்குவத்திலே பார்த்தால் அழகு.
சக்கிலியன் சாமிக்குச் செருப்படிதான் பூஜை.
சக்கிலியன் சாமியைச் செருப்பால் அடித்துக் கும்பிடுவானா?
சக்கு சக்கு என்று பாக்குத் தின்பான், சபை மெச்ச வீட்டிலே வந்து கடைவாய் நக்குவான். 10140
(பெண்டுகள் மெச்ச.)

சக்கை போடு போடுகிறான்.
சக்தி இருந்தால் செய்; சக்தி இல்லாவிட்டால் சிவனே என்று இரு.
சக்தி இல்லா விட்டால் சிவனே என்று கிட.
சத்தியம் பயந்து சங்கீதம்.
சகசண்டி மாட்டுக்கு இரண்டொரு சூடு: நம் சைவப் பிள்ளைக்கு மேலெல்லாம் சூடு. 10145

சகத்தைக் கெடுத்துச் சுகத்தை வாங்குகிறார்.
சகத்தைக் கொடுத்தும் சுகம் வாங்கிக் கொள்.
(தேடிக் கொள்.)
சகதியில் கல்லை விட்டு எறிந்தால் தன் துணி என்றும் பிறர் துணி என்றும் பாராது.
சகதியில் கல்லை விட்டு எறிந்தால் மேலே தெறிக்கும்.
(சேறு முகத்தில் தெறிக்கும்.)
சகல தீர்த்தங்களுக்கும் சமுத்திரமே ஆதரவு. 10150
(நதிகளுக்கும் காரணம்.)

சகல நட்சத்திரமும் ஒன்றாய்க் கூடினாலும் சந்திரனுக்கு இணை ஆகுமா?
சகலமும் கற்றவன்தன்னைச் சார்ந்து இரு.
சகலன் உறவில் சாண் கொடி பஞ்சமா?
(சாண் கயிறு.)
சகுனம் சொன்ன பல்லி கழுநீர்ப் பானையில் விழும்.
சகுனம் நன்றாக இருக்கிறது என்று பொழுது விடிகிற வரைக்கும் கன்னம் வைக்கலாமா? 10155

சகுனம் பார்க்கப் போகும்போது மடியில் பூனையைக் கட்டிக் கொண்ட மாதிரி.
சகுனம் பார்க்காதவன் காத வழியில் மாண்டான்.
சகோதரன் உள்ளவன் படைக்கு அஞ்சான்.
சங்கஞ் செடி ஓணானைக் கண்டு சாகிற கிழவியைக் குத்தின கதை.
சங்கட சனியனே, சடுதியில் விட்டுத் தொலை. 10160
(சகதியில்.)

சங்கடமான பிள்ளையைப் பெற்று வேங்கடராமன் எனப் பெயர் வைப்பார்.
சங்கட வேதனைக்கெல்லாம் தலையிட்டுக் கொள்கிறதா?
சங்கடப் பாட்டா, தங்கப் பாட்டா?
சங்கரா சங்கரா என்றால் சாதம் வாயில் விழுமா?
சங்கனும் புங்கனும் சந்நியாசிக்கு உதவியா? 10165

சங்கிலே வார்த்தால் தீர்த்தம்; செம்பிலே வார்த்தால் தண்ணீர்.
(சட்டியிலே வார்த்தால்.)
சங்கீதம் தெரியாவிட்டாலும் இங்கிதம் தெரியும்.
சங்கு ஆயிரத்தோடு காசி போனாலும் தன் பாவம் தன்னோடே.
(ஆயிரம் கொண்டு.)
சங்கு ஆயிரம் கொண்டு வங்காளம் போனால் பொன்பாளம் வந்தாலும் வந்தது; மண் பாளம் வந்தாலும் வந்தது.
சங்கு உடைந்தது; மண் கரைந்தது. 10170

சங்கு ஊதாமல் தாலி கட்டுவது உண்டா?
சங்கு ஊதிப் பொழுது விடியுமா?
சங்கு சுட்டாலும் தன் வெண்மை குன்றாது.
சங்கு சுட்டாலும் வெண்மை தரும்.
சங்கு கூத்து ஆகிறது; ஆண்டி வாய் ஆகிறது. 10175
(சங்கு கூத்தும் ஆண்டி வாயும்.)

சங்கூதிப் பண்டாரம், அங்கு ஊதி இங்கு வராதே; இங்கு ஊதி அங்கே போ,
(பூஜை பண்ணும் பண்டாரத்தைப் பார்த்துச் சிவலிங்கம் சொன்னது.)
சங்கைச் சுட்டாலும் மங்குமா நிறம்?
சங்கோசம் விட்டால் சங்கையும் இல்லை.
(சங்கோசம் இல்லையென்றால்.)
சட்டி ஓட்டை ஆனாலும் கொழுக் கட்டை வெந்தால் சரி.
(வேக வேண்டும்.)
சட்டி சுட்டது; கை விட்டது. 10180

சட்டி திருடும் நாய்க்குப் பெட்டி பணம் எதற்கு?
சட்டி பாலுக்கு ஒரு சொட்டு மோர் பிரை.
சட்டி புழைக்கடையிலே; அகப்பை வாசலிலே.
சட்டியில் இருந்தால் அல்லவா அகப்பையில் வரும்?
சட்டியோடு அகப்பை தட்டாமல் போகுமா? 10185

சட்டியோடு தின்று பானையோடு கை அலம்புகிறது.
சட்டுவம் கறிச் சுவையை அறியுமா?
சட்டைக்காரன் நாயை எட்ட நின்று பார்.
சட்டைநாதபுரம் உழவு; சீகாழி இழவு; செம்மங்குடி வறட்டி.
(எப்போதும் இருக்கும். சீகாழிக்கு $1\frac{1}{2}$ மைலில் உள்ளது செம்மங்குடி.)
சடை கொண்ட இலுப்பையைத் தடிகொண்டு அடித்தாற் போல. 10190

சடை கொண்டு வெருட்டல் வேண்டா.
(திருவால. 16:26.)
சடைத் தம்பிரான் சோற்றுக்கு அழுகிறானாம்; லிங்கம் பஞ்சாமிர்தத் துக்கு அழுகிறதாம்.
(சாற்றுக்கு.)
சடைத் தம்பிரான் தவிட்டுக்கு அழுகிறான்; லிங்கம் பரமான்னத் துக்கு அழுகிறதாம்.
சடைத் தம்பிரானுக்குச் சாதம் இல்லாதபோது மொட்டைத் தம்பி ரானுக்கு மோர் எங்கே கிடைக்கும்?
சடையைப் பிடித்தால் சந்நியாசி தன்னாலே வருவான். 10195
(பிடித்து இழுத்தால். கிட்டே வருவான். தம்பிரான் கூட வருவார்.)

சண்ட மாருதத்துக்குமுன் எதிர்ப்பட்ட சருகுபோல்.
சண்டிக்கு ஏற்ற மிண்டன்.
(முண்டன்.)
சண்டிக் குதிரைக்கு ஏற்ற மொண்டிச் சாரதி.
(நொண்டிச் சாரதி.)

சண்டி முறைத்தால் காடு கொள்ளாது.
(புரண்டால்; பிரண்டால்; வெறிச்சால்.)
சண்டியிலும் சண்டி சகசண்டி. 10200
(சண்டிக்கும் முண்டி படுசண்டி.)

சண்டைக்குச் சிங்காரம் இல்லை.
சண்டை செய்யும் இரண்டு கடாக்களில் நடுவில் நரி நின்று நசுங்கினது போல.
சண்டை நடந்ததற்குச் சாட்சி என் மகன் இருக்கிறான்.
சண்டை பிடிக்கிறவனுக்குக் கூடச் சனிக்கிழமை ஆகாது.
சண்டை முகத்திலே உறவா? 10205
(உறவு ஏது?)

சண்டை வந்தது பிராமணா, சோற்று மூட்டையை இறக்கு.
(சாத மூட்டையை.)
சண்டை வருகிறது மாமியாரே, சாதத்தை எடுத்து உள்ளே வையும்.
(பானையை எடுத்து.)
சண்ணி அண்ணாமலை என்று பெயர் இடுவான்.
சணப்பன் கையில் அகப்பட்ட சீலைப் பேனைக் கொல்லவும் மாட்டான்; விடவும் மாட்டான்.
(சணப்பன்-சமணன்.)
சணப்பன் வீட்டுக் கோழி தானாக வந்து மாட்டிக்கொள்ளும். 10210
(தானே விலங்கு பூட்டிக் கொண்டது போல.)

சணப்பன் வீட்டு நாய் சணல் கட்டிலின் மேல் ஏறினாற் போல்.
சத்தத்துக்கு அளப்பதற்குமுன் பொதிக்கு அள.
சத்தம் பிறந்த இடத்தே சகல கலையும் பிறக்கும்.
சத்த மேகங்களும் கூடி நெருப்பு மழை பெய்தாற் போல.
சத்தாவரணம் சேவித்தால் செத்தவுடனே வைகுண்டம். 10215
(ஸ்ரீவில்லிபுத்தூரில்.)

சத்தியத்தில் சிறந்தவன் அரிச்சந்திரன்.
சத்தியத்திலே சாமி சாட்சி என்கிற சத்தியம் பெரிது.
சத்தியத்துக்கு அரிச்சந்திரன்; சாந்தத்துக்குத் தருமராஜன்.
சத்தியத்துக்கு இல்லாத பிள்ளை துக்கப்பட்டு அழப்போகிறானா?
சத்திய நெறியே சன்மார்க்க நெறி. 10220

சத்தியம் இல்லாத வாய் போலே.
சத்தியம் சத்தி; தத்துவம் சுத்தி.
(சத்தியமே, சத்துவமே சித்தி.)
சத்தியம், தர்மம் நித்தியம்.
(சத்திய தர்மம்.)

சத்தியம் தலை காக்கும்.
சத்தியம் நண்ணலை, சாவைத் தினம் நினை. 10225

சத்தியம் வெல்லும், அசத்தியம் கொல்லும்.
சத்தியமே கொல்லும்; சத்தியமே வெல்லும்.
சத்தியமே ஜயம்.
சத்திய வாசகனீ சமஸ்த சற்குணன்.
(நற்குணன்.)
சத்திரத்தில் இன்னும் நுழைய விடவில்லை; இலை கிழிசல் என்றானாம். 10230

சத்திரத்தில் சந்நியாசிக்குப் போஜனம்; மடத்தில் நித்திரை.
சத்திரத்தில் சாப்பாடு; சாவடியில் நித்திரை.
(மண்டபத்தில் படுக்கை.)
சத்திரத்தில் சாப்பாடு; மடத்தில் நித்திரை.
சத்திரத்தில் சோறு இல்லை என்றால் இலை பீற்றல் என்றானாம்.
சத்திரத்துக் கூழுக்கு நாயக்கர் அப்பணையோ? 10235
(அப்பணை - ஆணை.)

சத்திரத்துச் சாப்பாட்டுக்கு அப்பணையங்கார் சிபாரிசா?
சத்திரத்துச் சாப்பாட்டுக்குச் தாத்தையங்கார் அப்பணையா?
(உத்தரவா?)
சத்திரத்துச் சாப்பாட்டுக்கு நாயின் சிபாரிசா?
சத்திரத்துச் சோற்றுக்குத் தாத்தையங்கார் அப்பணையா?
(கூழுக்கு.)
சத்திரத்து நாயை அடித்தால் கேட்பார் யார்? 10240

சத்திரத்துப் பாட்டுக்குத் தெருப்பாட்டு மேலா?
(திருப்பாட்டு.)
சத்திரத்தைக் கட்டி நாயைக் காவல் வைத்தது போல.
சத்திரா போஜனம்; மடத்தில் நித்திரை.
சத்துக்களோடு சத்துக்கள் சேர்வர்;சந்தனத்தோடு கர்ப்பூரம் சேரும்.
சத்துருக்களையும் சித்தமாய் நேசி. 10245

சத்துரு பகை; மித்துரு வதை.
சத்துரு பொறுமை தனக்கே தண்டனை.
(சத்துரு பெருமை.)
சத்துருவைச் சார்ந்து கொல்ல வேண்டும்.
சத்ரா போஜனம், மடா நித்ரா.
சதகோடி சங்கத்திலே மொட்டைத் தாதனைக் கண்டாயோ என்கிறது போல. 10250

சத சுவோகீ ஏக பண்டித.
சதி செய்கிறவர்களுக்குச் சமர்த்தர் என்று பெயர்.
சதுரக் கள்ளியில் அகில் உண்டாகும்.
சதை இல்லாமல் கத்தி நாடுமா?
சதை உள்ள இடத்திலே கத்தி நாடும். 102

சதை கண்டு கத்தி நாட வேண்டும்.
சந்தடி சாக்கிலே கந்தப் பொடி காற்பணம்.
(சந்தடியோ சந்தடி.)
சந்தம் இல்லாக் கவிக்கு அந்தம் இல்லை.
(அந்தம்-அழகு.)
சந்தனக் கட்டை தேய்ந்தது; சாதமும் வடித்தாச்சு.
சந்தனக் கட்டை தேய்ந்தால் கந்தம் குறையுமா? 1026
(குறைபடுமா?)

சந்தனக் கருடன் வந்த வழி போனால் கங்கையில் போட்டதும் தன் கைக் கூடும்.
சந்தனக் குறடு தேய்ந்தாலும் மணம் குறையாது.
சந்தனக் கோல் குறுகினாலும் பிரப்பங் கோல் ஆகாது.
சந்தனம் கொடுத்த சரஸ்வதி.
சந்தனம் தெளித்த கையாலே சாணி தெளிக்கலாச்சுது. 1026

சந்தனம் தேய்ப்பவன் அலைவது போலே.
சந்தனம் மிகுந்தால் பிட்டத்தில் பூசிக் கொள்கிறதா?
சந்தன மரம் போல் பிள்ளை; சம்பங்கிப்பூப் போல் பெண்.
சந்தன வாள் போல.
சந்தன விருட்சக் காட்டிலே சர்ப்பம் இருக்கிறது போல. 1027

சந்திக்குச் சந்தி நாய் அடிபடுவது போல,
சந்திக்கும் பொறையாற்றுக்குமாக அலையாதே.
(இருக்கிறான்.)
சந்தி சிரிக்கிறது.
சந்தியில் அடித்தால் சாட்சிக்கு ஆர் வருவார்.
சந்தியில் நிற்கிறது. 1027

சந்தியிலே அடித்ததற்குச் சாட்சியா?
சந்திர சூரியர் உள்ள வரைக்கும்.
சந்திர சூரியர் உள்ள வரைக்கும் வார்த்தை பிசகான்.
சந்திரன் இல்லாத வானம் போல.
சந்திரன் இல்லா வானமும் மந்திரி இல்லா அரசும் பாழ். 10280

சந்திரன் குளிர்ச்சியாய்க் காய்ந்தாலும் சூரியனையே உலகத்தார் நாடுவார்கள்.
சந்திரன் கோயிலிலும் விளக்கு எரிகிறது.
சந்திரன் சண்டாளன் வீட்டிலும் பிரகாசிக்கிறான்.
சந்திரன் மறைந்த பின் நிலா நிற்குமா?
சந்திரனுக்கு உண்டோ சண்டாளன் வீடு? 10285

சந்திரனுக்குச் சரியாக முட்டை தட்டினாளாம்.
சந்திரனுக்கும் களங்கம் உண்டு.
சந்திரனைப் பார்த்த கண்ணுக்குச் சனியனைப் பார்த்தாற் போல.
சந்திரனைப் பார்த்து நாய் குரைத்தாற் போல.
(குரைத்து ஆவதென்ன?)
சந்தில் சிந்து பாடுகிறான். 10290

சந்திலே சமாராதனை செய்ய முடியுமா?
சந்துக்குச் சந்து சதிராட்டம்.
சந்து விட்டால் வந்து விட்டேன்.
சந்தை இரைச்சலில் குடியிருந்து கெட்டேனே!
(சந்தைக் கடையிலே.)
சந்தைக்குப் போகிறவன் வழித்துணை வாரான். 10295

சந்தைக்குப் போய் வந்த நாய் போல.
சந்தைக்கு வந்தவர்கள் வழிக்குத் துணையா?
(வழித்துணை ஆவாரா?)
சந்தைக் கூட்டம், பொம்மலாட்டம்.
(பொம்மை ஆட்டம்.)
சந்தைக் கோபாலம்; தந்தப் பல்லக்கா?
(கோபாலம்-பிச்சை.)
சந்தையில் அடித்ததற்குச் சாட்சி ஏன்? 10300

சந்தையில் அடிபட்டவனுக்குச் சாட்சி ஆர்?
சந்தையில் கும்பிட்டால் வாழ்த்துவாரும் இல்லை; வைவாரும் இல்லை.
சந்தோஷம் சாண் பலம்.
(சகல பலம்.)
சந்தோஷ வார்த்தை சமயத்தில் வந்தது.
சந்நியாசம் சகல நாசம். 10305

சந்நியாசிக்கு என்ன சம்சாரக் கவலை?
சந்நியாசிக்குச் சாப்பாட்டுக் கவலையா?
சந்நியாசிக்கும் பழைய குணம் போகாது.
சந்நியாசிக்கும் போகாது ஜாதி அபிமானம்.
சந்நியாசி கோவணத்துக்கு இச்சித்துச் சம்சாரம் மேலிட்டது போல. 10310

சந்நியாசி கோவணம் கட்டினது போல.
சந்நியாசி செய்த சத்திக்குள் அகப்பட்ட சடை.
(சடை.)
சந்நியாசி பயணம் திண்ணை விட்டுக் குதிப்பதுதான்.
சந்நியாசி பிரயாணம் திண்ணை விட்டு இறங்கினால் ஆச்சு,
சந்நியாசி பூனை வளர்த்தது போல. 10315

சந்நியாசியார் சந்தையிலே கண்டவனே என்று ஆட்டினார்; தவசிப் பிள்ளை சந்நியாசியால் கண்டவனே என்று ஆட்டினான்.
சந்நியாசியைக் கடித்த நாய்க்குப் பின்னாலே நரகமாம்; சந்நியாசிக்கு முன்னே மரணமாம்,
சந்நியாசியை நிந்தித்தவனுக்குப் பின்னாலே நரகமாம்.
சந்நியாசி வீடு திண்ணையிலே.
சப்தப் பிரம்மத்தில் அசப்தப் பிரம்மம் பிரகாசிக்கிறது. 10320

சப்தப் பிரம்மம் பரப்பிரம்மம், இரண்டையும் அறிய வேண்டியது.
சப்தம் பிறந்த இடத்திலே சகல கலைகளும் பிறக்கும்.
சப்த மேகங்களும் ஒன்று கூடி நெருப்பு மழை பெய்தாற்போல.
சப்பரத்துக்கு முன்னே வந்தாயா? பின்னே வந்தாயா?
சப்பாணிக்கு நொண்டி குடுகுடுப்பை. 10325

சப்பாணிக்கு நொண்டி சண்டப் பிரசண்டன்.
சப்பாணிக்கு விட்ட இடத்திலே கோபம்.
சப்பாணி மாப்பிள்ளைக்கு சந்து ஒடிந்த பெண்டாட்டி.
(பெண்சாதி.)
சப்பாணி வந்தால் நகர வேணும்; பல்லக்கு வந்தால் ஏறவேணும்.
சப்பை கட்டுகிறான். 10330

சபைக் கோழை ஆகாது.
சபையிலே நக்கீரன்; அரசிலே விற்சேரன்,
சம்சாரக் குட்டு, வியாதி ரெட்டு.
(ரெட்டிப்பு.)

சம்சாரக் குட்டு வெளியிட்டால் நஷ்டம்.
சம்சாரம் சாகரம் துக்கம். 10335
சம்சாரம் பெருத்துப்போச்சு என்று சாலுக்குக் குறுணி விதைத்தானாம்.
சம்சாரமோ சாகரமோ?
சம்சாரி அகத்திலே சாதத்துக்கு என்ன குறைவு?
சம்பத்தும் விபத்தும் கூடவே இருக்கின்றன.
சம்பந்தன் தன்னைப் பாடுவான்; அப்பன் என்னைப் பாடுவான்; சுந்தரன் பொன்னைப் பாடுவான். 10340
சம்பந்தி கிருகஸ்தன் வந்தான்; தவலையை எடுத்து உள்ளே வை.
சம்பந்தியும் சம்பந்தியும் ஒன்று; கொட்டு மேளக்காரன் தனி.
சம்பந்தியும் சம்பந்தியும் ஒன்று; கொட்டு மேளக்காரனுக்குக் கோணக் கோண இழுக்கும்.
சம்பந்தியும் சம்பந்தியும் சத்திரத்துக்குப் போனால் ஏச்சும் இல்லை; பேச்சும் இல்லை.
(சத்திரத்தில் உண்டால்.)
சம்பந்தி வாய்க்கும் மாப்பிள்ளை குணத்துக்கும் இன்னும் ஒரு பெண்ணை இழுத்து விட்டாளாம். 10345
சம்பளம் அரைப்பணம் ஆனாலும் சலுகை இருக்க வேண்டும்.
(சலுகை.)
சம்பளம் இல்லாத சேவகனும் கோபம் இல்லாத எசமானும்.
சம்பளம் இல்லாத மந்திரி; கோபம் இல்லாத ராஜா.
சம்பளம் இல்லாமல் ஆஜர்.
சம்பளம் குறைந்தாலும் சலுகை இருக்க வேண்டும். 10350
சம்பளம் சனிக்கிழமை; பெண்டாட்டி பேர் புதன் கிழமை.
சம்பள வீதத்திலேயா குண்டு படுகிறது?
சம்பா விளைந்து காய்ந்து கிடக்கிறது; உண்பார் இல்லாமல் ஊர்க் குருவி மேய்கிறது.
(அழிக்கிறது.)
சம்மன் இல்லாமல் ஆஜர்.
சமண சந்நியாசிக்கும் வண்ணானுக்கும் சம்பந்தம் என்ன? 10355
சமண சந்நியாசி கையில் அகப்பட்ட சீலைப்பேன் போல.
(சமணன் கைச் சிலைப்பேன் போல.)
சமய சஞ்சீவி.
சமயத்திலே காலைப்பிடி, தீர்ந்து போனதும் தலையைப் பிடி.

சமயம் வாய்த்தால் களவு செய்வான்.
சமயம் வாய்த்தால் நமனையும் பலகாரம் செய்வான். 10360

சமயம் வாய்த்தால் நமனையும் வெல்லலாம்.
சமர்த்தன் சந்தைக்குப் போனால் கொள்ளவும் மாட்டான், கொடுக்கவும் மாட்டான்.
(வாங்கவும் மாட்டான்.)
சமர்த்தன் பெண்சாதியும் சோரம் போவாள்.
சமர்த்தனுக்கு ஏதும் பெரிது அல்ல.
சமர்த்தி என்ன பெற்றாள்? சட்டிச் சோறு தின்னப் பெற்றாள். 10365

சமர்த்தி என்ன பெற்றாள்? தலைச்சன் பெண் பெற்றாள்.
சமர்த்தில் குண்டு பாயுமா?
சமர்த்தில் வாழ்ந்தவர்களும் இல்லை; அசட்டில் கெட்டவரும் இல்லை.
சமர்த்து உள்ள சேவகனுக்குப் புல்லும் ஆயுதம்.
சமர்த்துக்கிட்டே பேசி ஜயிக்கலாம்; அசட்டுக்கிட்டே சண்டை போட்டாலும் முடியாது. 10370

சமர்த்துச் சனியன்.
(சமர்த்துக்குச் சனியன்.)
சமர்த்து சந்தியில் நிற்கிறது.
சமாசாரம் தெரியாமல் அமாவாசைக்குப் போகிறான்.
சமிக்ஞை அறியாதவன் சதுரன் அல்ல.
சமிக்ஞை காட்டிச் சண்டைக்கு அழைக்கிறான் 10375

சமுத்திர அலைகள் ஓயப் போகிறதும் இல்லை; தம்பி தலை முழுகித் தர்ப்பணம் பண்ணப் போகிறதும் இல்லை.
சமுத்திரத்தில் ஏற்றம் போட்டது போல் இருக்கிறது.
சமுத்திரத்தில் ஏற்றம் போட்டுத் தண்ணீர் இறைத்தாற்போல.
சமுத்திரத்திலே பாய்கிற நதி வயலிலே பாயட்டுமே என்றாற் போல.
சமுத்திரத்திலே பெருங்காயம் கரைத்தது போல. 10380

சமுத்திரத்துக்கும் சாண் துண்டுக்கும் எம்மாத்திரம்?
(குண்டுக்கும்.)
சமுத்திரத்து ஜலத்தை முட்டை கொண்டு அளந்தாளாம்.
சமுத்திரம் பொங்கினால் கிணறு கொள்ளுமா?
சமுத்திரமும் சாக்கடையும் சரியா?
சமுத்திர வன்கணன் சண்டாளன். 10385

சமுத்திர ஜலம் தாகத்துக்கு உதவாது.
சமைக்கப் படைக்கத் தெரியாமல் போனாலும் உடைக்கக் கவிழ்க்கத் தெரியும்.
சமையல் தெரிந்தவனுக்கு உமையவள் உள்ளங்கையில்.
சமையல் பாகம் தெரிந்தவனுக்கு உமையவள் பாகன் உள்ளங் கையில்.
சமையல் வீட்டிலே நாய் நுழைந்தாற் போல. 10390

சமையல் வீட்டிலே முயல் தானே வந்தது போல.
சர்க்கரை என்றால் தித்திக்குமா?
சர்க்கரை என்று எழுதி நக்கினால் தித்திக்குமா ?
(என்று எழுதினால் நாக்கு ருசிக்குமா?)
சர்க்கரை தின்று பித்தம் போனால் கசப்பு மருந்து ஏன் தின்ன வேண்டும்?
சர்க்கரை தின்னக் கூலியா? 10395

சர்க்கரை தொண்டை மட்டும்; சவ்வாது கண்ட மட்டும்.
சர்க்கரைப் பந்தலில் தேன் மாரி பெய்தது போல.
சர்க்கரைப் பாகுத் தோண்டியிலே தாழ மொண்டாலும் தித்திப்பு; மேலே மொண்டாலும் தித்திப்பு.
சர்க்கரைப் பொங்கலுக்கு ஒரு சத்தியமா?
சர்க்கரைப் பொங்கனுக்குப் பத்தியம் இல்லை; சாண்வயிறு நிரம்பி விட்டால் வைத்தியம் இல்லை. 10400

சர்க்கரைப் பொம்மையில் எந்தப் பக்கம் தித்திப்பு?
சர்க்கரை முத்துக்குட்டி சாதம் குழைந்து போச்சு; எடுடா பல்லக்கை; பிறந்தகத்துக்குப் போகிறேன்.
(தூக்கடா பல்லக்கை.)
சர்க்கரையும் தேனும் சிற்றப்பா, ஏட்டில் எழுதி நக்கப்பா.
சர்க்கரையும் நெய்யும் சேர்ந்தால் கர்பளத்தையும் தின்னலாம்.
சர்க்கரையும் மணலும் சரி ஆகுமா? 10405

சர்க்காரான் பணத்தை வெட்டியான் சுமந்தானாம்.
(சுமந்த மாதிரி.)
சர்த்திக்கும் பிள்ளை வர்த்திக்கும்.
(சர்த்திக்கும்-வாந்தி எடுக்கும். வர்த்திக்கும்-வளரும்.)
சர்ப்பத்தின் வாய்த் தவளை போல.
(தேரை போல.)
சர்வ வில்லங்க சித்தி.

சரக்குக் கண்ட இடத்தில் பிள்ளைக்கு அமிழ்தம் கொடுக்க நினைகிறது போல. 1041
(மருந்து கொடுக்கிறது போல.)

சரக்குக் கண்ட இடத்திலே பிள்ளை பெறுகிறது போல.
சரக்கு மலிந்தால் கடைக்கு வரும்.
(சந்தைக்கு வரும்.)
சரத்தைப் பார்த்து பரத்தைப் பார்.
சரசம் மிஞ்சி ரவிக்கையில் கை போடக் கூடாது.
(ரவிக்கை மேலே.)
சரடு ஏறுகிறது கந்தைக்கு லாபம். 1041

சரப்பளி சந்திரஹாரம் தாங்க முடியவில்லை.
சரம் பார்த்தவனைச் சருகாதே; பட்சி பார்த்தவனைப் பகைக்காதே
சரம் பார்ப்பான், பரம் பார்ப்பான்.
சரமாரியாய்ப் பொழிகிறான்.
சரி விற்கக் குழி மாறுகிறதா? 1042

சரீரப் பிரயாசை எதற்கு? சாண் வயிற்றுக்குத்தான்.
சருகு அரிக்க நேரம் இருந்ததன்றிக் குளிர் காய நேரம் இல்லை.
(தீக்காய.)
சருகு உதிர்ந்த மரம் போல.
சருகைக் கண்டு தழல் அஞ்சுமா?
சல்லடைக் கண் போலச் சில்லுச் சில்லாய்த் துளைக்கிறது. 1042

சல்லி கட்டின மாட்டுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டுமா?
சல்லி மோதக் கல்லி பறிக்கிறது.
சல்லிய சார்த்தியம்.
சல்லிவேர் அறக் கல்லி பறக்கிறது.
சலித்துக் கொடுத்த காரியம் சந்தோஷம் வந்தால் தீருமா? 1043

சலிப்போடு சம்பந்தி இழுத்தால் இலைப் பருக்கை.
(ஏழு இலை.)
சலுகை உள்ள மாடு படுகை எல்லாம் மேய்ந்ததாம்.
சவ்வாதில் மயிர் வாங்கினது போல.
சவத்துக்கு அழுவாரும் தம் துக்கம்.
சவலைப் பிள்ளை முலைக் குத்து அறியுமா? 10435

சவுடால் பொடி மட்டை; தட்டிப் பார்த்தால் வெறு மட்டை.
சவுண்டிக்குச் சாப்பிட்டவன் இருக்கச் செத்தது பொய்யா.
சளி பிடிக்காத மூக்கு இல்லை; சாராயம் குடிக்காத நாக்கு இல்லை.
சளி பிடித்ததோ, சனி பிடித்ததோ?
சளுக்கன் தனக்குச் சத்துரு; சவுரிக்காரனுக்கு மித்துரு. 10440

சற்குருவைப் பழித்தோர் சாய்ந்தே போவார்.
சற்சனர் உறவு சர்க்கரைப் பாகு.
சற்புத்திரன் இருக்கிற இடத்திலே தறிதலையும் இருக்கிறது.
சன்னதம் குலைந்தால் கும்பிடு எங்கே?
(எங்கே வரும்?)
சன்னம் சன்னம் பர்வதம். 10445

சனத்தோடு சனம் சேரும்; சந்தனத்தோடு கர்ப்பூரம் சேரும்.
சனப்பலம் இருந்தால் மனப் பலம் வரும்.
சனமருளோ, சாஸ்திர மருளோ?
சனி ஒழிந்தது; சங்கடம் தீர்ந்தது.
சனிக்கிழமையும் புதன் கிழமையும் தவறாமல் எண்ணெய்
தேய்த்துக் குளிப்பான். 10450
(செட்டிநாட்டு வழக்கு; வேறு ஒன்றும் செய்வதில்லை என்பது கருத்து.)

சனி நீராடு.
சனிப்பயிர் சாத்திரத்துக்கு உதவும்.
சனிப் பிணம் தனிப் போகாது.
சனிப் பிணம் துணை தேடும்.
(துணை கூட்டும்.)
சனிப் பெருக்கு. 10455
(வேளாண்மைக்கு நல்லது.)

சனி பிடித்த நாரை கெளிற்றைப் பிடித்து விழுங்கினாற் போல.
சனியன் தொலைந்தது.
சனியன் பிடித்தவள் சந்தைக்குப் போனாலும் புருஷன்
அகப்படமாட்டான்.
சனியன் பிடித்தவனுக்குச் சந்தையிலும் கந்தை அகப்படாது.
(பிடித்தவளுக்கு.)
சனியனை அடிமடியில் கட்டியது போல. 10460

சனியனை விலைக்கு வாங்கினது போல.
சனியும் புதனும் தங்கும் வழி போகக் கூடாது.
சனியும் புதனும் தன்னை விட்டுப் போகாது.
சனியைப் போலக் கொடுப்பவனும் இல்லை: சனியைப் போலக்
கெடுப்பவனும் இல்லை.
சஜ்ஜனர் உறவு சர்க்கரைப் பாகுபோல. 10465

சாக்கடைக்குப் போக்கிடம் எங்கே?
சாக்கடைக் கும்பிக்குப் போக்கிடம் எங்கே?
சாக்கடைக்குப் போக்கிடம் இல்லை.
சாக்கடைச் சேறு என்றாலும், சக்களத்தி என்றாலும் சரி.
சாக்கடைப் புழு என்றாலும் சக்களத்தி என்றாலும் போதும். 10470

சாக்கடைப் புழு என்றாலும் சக்களத்தியை வெல்லப் போகாது.
சாக்கடைப் புழுவிற்குப் போக்கிடம் எங்கே?
சாக்கிரி செய்யப் போனாலும் போக்கிரித் தனம் குறையாது.
சாக்குப் போக்குச் சொல்லுதல்.
சாக்கும் போக்கும் ஏற்கா ஐயன்முன். 10475

சாக்கோ, நாக்கோ, அம்மையார் வாக்கோ?
சாகக் காசிக்குப் போ; சாப்பிடச் சூரத்துக்குப் போ.
சாகத் திரிகிறான் சண்டாளன்; சாப்பிட்டுத் திரிகிறான் பெண்டாளன்.
சாகத் துணிந்தவனுக்குச் சமுத்திரம் முழங்கால் ஆழம். (சமுத்திரம் நீச்சு மட்டும்.)
சாக நேரம் ஒழிய, வேக நேரம் இல்லை. 10480

சாகப் பயந்தவள் சுடுகாட்டை முறைக்க முறைக்கப் பார்த்தாளாம்.
சாகப் பிறந்தாயோ? பேசப் பிறந்தாயோ?
சாகப் போகிற நாய் கூரைமேல் ஏறின மாதிரி.
சாகப் போகிற நாளில் நாய் வீட்டின்மேல் ஏறினாற் போல.
சாகப் போது இருந்தாலும் வேகப் போது இல்லை. 10485

சாக மாட்டாத மாடு கொம்பைக் கொம்பை அலைத்தாற் போல.
சாக மாட்டாமல் சங்கடப்படுகிறது.
சாக வேண்டும் என்கிற சதுரையை விட்டு விட்டு வா; வாழ வேண்டும் என்கிற வந்தியை அழைத்து வா.

சாகாத் தலை, வேகாக் கால்.
சாகாப் பேருக்கு ஆகாரம் ஏன்? 10490

சாகாமல் கற்பதே கல்வி; பிறரிடத்தில் ஏகாமல் உண்பதே ஊண்.
சாகாய வாஸ்யாத், லவணாய வாஸ்யாத்.
சாகிற காலத்தில் சங்கரா, சங்கரா என்கிறது போல.
சாகிறது போல் இருந்து வியாதி தீருகிறதும் உண்டு.
சாகிற நாய் வீரத்தைக் காட்டினாற் போல. 10495
(வீட்டின் மேல் ஏறினாற் போல.)

சாகிற நாளைக்கு வாதம் பலித்ததாம்.
(சாகிற வயதில். வாதம்-ரஸவாதம்.)
சாகிற பேருக்குச் சமுத்திரம் கால்வாய்.
சாகிற வரைக்கும் சங்கடம் ஆனால் வாழ்கிறது எக்காலம்?
சாகிறவரைக்கும் சங்கடம் என்றால் சந்தோஷம் எக்காலம்?
சாகிற வரைக்கும் சஞ்சலம் போனால் போகிறது எக்காலம்? 10500

சாகிற வரைக்கும் பட்டினி இரு என்றால் ஒரு நாளாவது பட்டினி இருக்கும் நிலை வரும்.
சாகிற வரையில் கஷ்டம் ஆனால் சுகம் எப்போது?
சாகிற வரையில் மருந்து கொடுக்க வேண்டும்.
சாகிற வரையில் வைத்தியன் விடான்; செத்தாலும் விடான் பஞ்சாங்கக்காரன்.
சாகிற வரையில் துன்பம் ஆனால் சுகம் எப்போது? 10505

சாகிறவன் சனியனுக்குப் பயப்படுவானா?
(அஞ்சுவானா?)
சாகிறவனுக்குச் சமுத்திரம் முழங்கால் மட்டும்.
சாகிறவனைப்போல் இருப்பான் பிழைப்பான்; பிழைப்பானைப் போல் இருப்பான் சாவான்.
சாகிறேன், சாகிறேன் என்ற பெண்ணும், போகிறேன், போகிறேன் என்ற புருஷனும் போல் மிரட்டாதே.
சாகுந்தனையும் சங்கடம் ஆனால் வாழ்கிறது எப்போது? 10510

சாகும்போது வாணியனிடம் அகப்பட்டுக் கொண்டது போல.
சாகையிலே வந்தால் பாடையிலே பார்க்கலாம்,

சாட்சிக்காரன் காலில் விழுகிறதிலும் சண்டைக்காரன் காலில் விழலாம்.
(கட்சிக்காரன் காலில் விழலாம்.)
சாட்டு இல்லாமல் சாவு இல்லை.
(சாக்கு.)
சாட்டை அடியும் சவுக்கடியும் பொறுக்கலாம்; மூட்டைப் பூச்சிக் கடியும் முணுமுணுப்பும் ஆகா. 10515

சாட்டை இல்லாப் பம்பரத்தை ஆட்ட வல்லார் உண்டோ?
சாட்டை இல்லாப் பம்பரம் ஆட்டி வைக்க வல்லவன்.
சாட்டை இல்லாமல் பம்பரம் ஆடுமா?
சாடிக்கு ஏற்ற மூடி.
சாடிக்கு மூடி வாய்த்தது போல. 10520

சாடி சட்டி சூளையிலே கோடை இடி விழுந்தாற் போலே.
சாடை தெரியாதவன் சண்டாளன்.
சாண்அடி இண்டியோ மூணடி கட்டடா.
(கட்றா.)
சாண் உழவு முழ எருவுக்குச் சமம்.
சாண் ஏற முழம் சறுக்குகிறது. 10525

சாண் கல் அலம்பினால் முழம் சோறு.
(கழுவினால்.-கோயிற் குருக்களுக்கு.)
சாண் காட்டிலே முழத்தடி வெட்டலாமா?
சாண் குருவிக்கு முழம் வாலாம்.
சாண் சடைக்கு முழக் கயிறா?
(முழத் துணியா?)
சாண் சடை; முழம் சோறு. 10530

சாண் செடியிலே முழத்தடி வெட்டலாமா?
சாண் தண்ணீரிலே முழப்பேய்.
சாண் தள்ளிப்படுத்தால் இந்த வினை இல்லை.
சாண் பண்டாரத்துக்கு முழத் தாடி.
(முழ விபூதி.)
சாண் பண்டாரத்துக்கு முழம் இலிங்கம். 10535

சாண் பறையனுக்கு முழத் தடி.
சாண் பாம்பு ஆனாலும் முழத் தடி வேண்டும்.

சாண் பிள்ளை ஆனாலும் ஆண்பிள்ளை.
(+ இருக்க வேண்டும்.)
சாண் போனால் என்ன? கழுத்துமட்டும் போனால் என்ன?
சாண் முறியும் முழம் புரியும் பொத்தல் ஒன்று. 10540

சாண் வீட்டுக்கு முழத்தடி.
சாணான் உறவு சாக்கடை வரையில்.
சாணான் எச்சில் கருப்புக் கட்டி; சர்க்கரை வெல்லம் உழவன் எச்சில்.
(கருப்பட்டி.)
சாணான் புத்தி தட்டிக்குள்ளே, பெட்டிக்குள்ளே.
சாணான் புத்தி சாணுக்குள்ளே. 10545

சாணான் வந்தால் என்ன? சவரி முத்து வந்தால் என்ன?
சடகோபத்தை ஒழுங்காகச் சாதி.
சாணானுக்கு ஏறும்போது ஒரு புத்தி; இறங்கும்போது ஒரு புத்தி.
சாணானுக்குக் கிணை சட்டிக்குள்ளும் பெட்டிக்குள்ளும்.
சாணி ஒரு கூடை; சவ்வாது ஒரு பண எடை.
சாணிக் குழியையும் சமுத்திரத்தையும் சரியாய்
நினைக்கலாமா? 10550

சாணிச் சட்டியும் சருவச் சட்டியும் ஒன்றா?
(சரியாமா?)
சாணிச் சட்டி வைக்கிற இடத்தில் சாணிச் சட்டி வைக்க வேண்டும்;
சருவச் சட்டி வைக்கிற இடத்தில் சருவச் சட்டி வைக்க
வேண்டும்.
சாணி சுமக்கிற சிறுமிக்குச் சந்தனப் பூச்சு எதற்கு?
சாணிப் புழு.
சாணியும் சவ்வாதும் சரி ஆகுமா? 10555

சாணியைக் கொடுத்து மெழுகு என்றாளாம்.
சாணுக்கு ஒரு பாம்பு; முழத்துக்கு ஒரு பேய்.
சாணோ வயிறு? சரீரம் எல்லாம் வயிறோ?
சாத்தாணி குடுமிக்கும் சந்நியாசி பூணூலுக்கும்
முடி போடுகிறாற் போல.
சாத்திரத்துக்குத் திருமந்திரம்; தோத்திரத்துக்குத்
திருவாசகம். 10560

சாத்திரத்தைச் சுட்டுச் சதுர் மறையைப் பொய்யாக்கிச்
சூத்திரத்தைக் கண்டு சுகம் பெறுவது எக்காலம்?

சாத்திரம் கற்றவன் தானே காசு?
சாத்திரம் படித்தாலும் ஆத்திரம் போகாது.
சாத்திரம் பார்த்தால் மூத்திரம் பெய்ய இடம் இல்லை.
சாத்திரம் பார்த்துப் பெண்ணைக் கொள்; கோத்திரம் பார்த்துப் பெண்ணைக் கொடு. 10565

சாத்திரம் பாராத வீடு சமுத்திரம்; பார்த்த வீடு தரித்திரம்.
சாதத்துக்கு இல்லாத வாழைக்காய் பந்தலிலே தொங்குகிறதா?
சாதத்துக்குப் புனுகும் சந்தனத்துக்குப் பெருங்காயமும் போடலாமா?
சாதி அந்த புத்தி; குலம் அந்த ஆசாரம்.
சாதிக்கு அடுத்த புத்தி; தீனிக்கு அடுத்த லத்தி. 10570

சாதி அபிமானமும் சமய அபிமானமும் சந்நியாசிக்கும் உண்டு. (போகா.)
சாதி ஒளிக்குமா? சதகுப்பை நாற்றம் போகுமா?
சாதிக் குணத்தைச் செருப்பால் அடித்தாலும் போகாது.
சாதிக்குத் தக்க புத்தி; குலத்துக்குத் தக்க ஆசாரம்.
சாதிக்குத் தகுந்த புத்தி; சாப்பாட்டுத் தகுந்த லத்தி. (தீனிக்கு.)
சாதி குணம் காட்டும்; சந்தனம் மணம் காட்டும். 10575

சாதி சாதியைக் கொள்ளும்; சதகுப்பை நாற்றத்தைக் கொள்ளும். (சாதி சனத்தைக் கொள்ளும், வழக்கத்தைக் கொள்ளும்.)
சாதித் தொழில் விடுமா? சர்க்கரை கசக்குமா?
சாதிப் பழக்கமும் சதகுப்பை நாற்றமும் போகா.
சாதி பேதம் சண்டாளர் வேதம்.
சாதியபிமானமும் சமயாபிமானமும் சந்நியாசிக்கும் உண்டு. 10580

சாதியில் கெட்டது கிள்ளை; சாமியில் கெட்டது மாரியம்மன்; காயில் கெட்டது கத்தரிக்காய்.
சாதி வாக்கு ஜங்கிட வாக்கு; இலுப்பைப்பூத் தொளை வாக்கு.
சாது சாது என்கிற சந்நியாசிக்குத் தடிபோல ஐந்து குழந்தைகளாம்.
(சாமியாருக்கு நாலு பிள்ளைக் குழந்தைகளாம். நாலு பிள்ளை.)
சாதுப் பசுவையும ஏழைப் பிராமணனையும் நம்பாதே.
சாதுப் பாம்பு சாகக் கடித்தது. 10585

சாதுப் பெண்ணுக்கு ஒரு சூதுப்பிள்ளை வந்தது போல.
சாது மிரண்டால் காடு கொள்ளாது.
(இடம் கொள்ளாது.)
சாதுரியப் பூனை தயிர் இருக்கச் சட்டியை நக்கியதாம்.
சாதுரியப் பூனை மீனை விட்டுப் புளியங்காயைத் தின்றதாம்.
சாந்துப் பெட்டி பாம்பு ஆயிற்று. 10590

சாப்பாட்டுக்கு நான்; மோதிரப் பணத்துக்கு முத்தண்ணா.
சாப்பிட்ட சோற்றுக்கு ஊறுகாய் தேடுவார்களா?
சாப்பிடுகிற அழகைப் பார், நாய் போல.
சாப்பிடும் கலம் பொன் ஆனாலும் ஊறுகாய் இல்லாமல் முடியுமா?
(ஊறுகாய் கேளாமல்.)
சாப்பிணி மருந்து ஏற்காது. 10595

சாப்பிள்ளை பெற்றவளுக்குச் சந்தோஷம் வருமா?
சாப்பிள்ளை பெற்றாலும் மருத்துவச்சி கூலி தப்பாது.
சாப்பிள்ளை பெற்றுத் தாலாட்டவா?
சாப்பிள்ளை பெறுவதிலும் தான் சாவது நலம்.
சாபம் இட்டார் உண்டோ? தலையின் திருவெழுத்தோ?
வேகவிட்டார் உண்டோ? எழுத்தின்படிதானோ? 10600

சாம் அளவும் இருந்தால் கல்யாணம் செய்து வைக்கிறேன்.
சாம்பல் மேட்டு நாய்க்குத் தன் பூர்வஜன்ம ஞாபகம்.
சாம்பலில் பண்ணின ஆருதி போலே.
சாம்பலில் புரளும்போது நாய்க்குப் பூர்வஞானம் உதயமாகும்.
சாம்பலைக் கிளறிக் கோழி தானே விலங்கிட்டுக் கொண்டது போல். 10605
(சாம்பலைக் கிண்டி.)

சாம்பலைத் தின்று வெண்ணெயைப் பூசினது போல.
சாமத்து நாய் ஊளை தெருவுக்குக் கேடு.
சாமர்த்தியர் கோழி சாமம் போலக் கூவிற்றாம்.
சாமி இல்லை என்றால் சாணியைப் பார்; மருந்து இல்லை என்றால் பாணத்தைப் பார்; பேதி இல்லை என்றால் நேர்வாளத்தைப் பார்.
சாமி கை காட்டும்; எடுத்து ஊட்டுமா? 10610

சாமி சக்தி பூசாரிக்குத் தெரியாதா?
சாமி மலையேறிப் போச்சு.
சாமியார் நாய் சிஷ்யனுக்குப் பயப்படுமா?
சாமியாருக்குச் சாமியார் வேண்டும்.
சாமி வரம் கொடுத்தாலும் பூசாரி வரம் கொடான். 10615
(இடம் கொடுக்கமாட்டான்.)

சாமி வரம் கொடுத்தாலும் பூசாரி குறுக்கே நிற்பது போல.
சாமைப் பயிரும் விளைந்தால் தெரியும்; சக்கிலியப் பெண்ணும்
சமைந்தால் தெரியும்.
சாமைப் பயிரைக் கதிரில் பார்.
சாய்ந்த பக்கம் சாய்வது.
சாய்ந்த மரத்தில் ஓடி ஏறலாம். 10620

சாய்ந்தாள் சமயபுரம்; சாதித்தாள் கண்ணபுரம்.
சாயந்தரத்தில் கல்யாணம்; பிடி தாம்பூலம்.
சார்வு இல்லாதவனுக்கு நிலை இல்லை.
சாரத்தை உட்கொண்டு சக்கையை உமிழ்ந்து விடுவது போல.
சாராயத்தைத் தினம் குடித்தால் காராளனும் கடைமகன்
ஆவான். 10625

சாராயத்தை வார்த்துப் பூராயத்தைக் கேள்.
(கேட்பான்.)
சாராயம் குடித்த நாய்போல.
சாரை கொழுத்தால் மாட்டுக்காரனிடம் போகும்.
சாரை தின்னும் காட்டுக்குப் போனால் நடுத்துண்டம் நமக்கு.
(ஊருக்குப் போனால் நடுக்கண்டம் நடுமுறி.)
சாரையும் சர்ப்பமும் இழைவது போல. 10630

சால்போல் வயிறும் சப்பரக் கட்டைக் காலும்.
சால்போல வயிறு; ஊசி போலத் தொண்டை.
சால் வயிறு நிறைந்தாலும் சவலை வயிறு நிறையாது.
சாலாய் வளைந்தால் என்ன? சட்டியாய் வளைந்தால் என்ன?
சாலாய் வைத்தாலும் சரி; சட்டியாய் வைத்தாலும் சரி. 10635

சாலை வழியே போகிற சனியனைச் சாயங்காலம் வீட்டுக்கு வா
என்றானாம்.
சாலோடு அகப்பை தட்டாமல் போகுமா?
சாலோடு தண்ணீர் சாய்த்துக் குடித்தாலும் தாய் வார்க்கும்
தண்ணீர் தாகம் தீர்க்கும்.
(தண்ணீரால் தாகம் தெளியும்.)

சாலோடு முழவைத் தட்டு.
சாவாமற் கற்பதே கல்வி; பிறர் ஏவாமல் உண்டதே ஊண். 10640
(பிறரிடத்தில் ஏகாமல் உண்பதே ஊண்.)

சாவாரைப் போலே வாழ்வார்; வாழ்வாரைப் போலே சாவார்.
சாவுக்குப் பிடித்தால் லங்கணத்துக்கு வரும்,
(சாவுக்குப் போட்டால்.)
சாவுக்கு வாடா என்றால் பாலுக்கு வருவான்.
(வந்தது போல.)
சாவுப் பானை விடியாது; சங்கடப் பானை விடியும்.
சாவேரியே ராகம்; காவேரியே தீரம். 10645

சாளக்கிராமம் சாமியாருக்குச் சோறு போடுமா?
சாற்றிலே பீ; இறுத்தாற் போல வாரு.
சாற்றிலே வேண்டாம்; தெளிவிலே வாரு.
(கீற்றிலே போடு.)
சாற்றுக்குப் புளியங்காய் நறுக்கினாற் போல.
சாறு மிஞ்சினால் பாறை; சாந்து மிஞ்சினால் குப்பை. 10650

சான்றோர் அவைப்படிற் சாவாதாம் பாம்பு.
(சாவாதாம்.)
சான்றோர் இல்லாத சபை குறவர் சேரி.
சான்றோர் கயவர்க்கு உரையார் மறை.
(மறை-இரகசியம். பழமொழி நானூறு.)
சாஸ்திர உறுதிக்குக் கிரகணம்; மந்திர உறுதிக்குப் பாம்பு.
சாஸ்திரத்துக்குச் சாஸ்திரம்; சுகத்துக்குச் சுகம். 10655

சாஸ்திரம் பார்த்துப் பெண்ணைக் கொள்; கோத்திரம் பார்த்துப் பெண்ணைக் கொடு.
சாஸ்திரம் பொய் என்றால் கிரகணத்தைப் பார்.
சாஸ்திராயச சுகாயச.

சிக்கலில் வேல் வாங்கிச் செந்தூரில் சங்காரம். 1066
சிங்க சொப்பனம் கண்ட ஆனைபோல.
சிங்கத்தின் கூட்டைச் சிறு நரி வளைத்தாற் போல்.
சிங்கத்தின் செவியில் ஈப் புகுந்தது போல.
(ஒட்டிய ஈ.)
சிங்கத்துக்குத் தன் காடு பிறன் காடு இல்லை.
சிங்கத்துக்கு நாயா சிங்கார முடி சூட்டுகிறது? 1066

சிங்கத்துக்குப் பங்கம் இல்லை.
(பங்கமா?)
சிங்கத்துக்குப் பிறந்தது சிற்றெறும்பு ஆகுமா?
சிங்கத்தைச் சொப்பனத்தில் கண்ட ஆனை போல.
சிங்கத்தை நரி வளைத்த கதை.
சிங்கம் அரசு செய்யும் காட்டிலே நரி அம்பலம் செய்வது போல. 1067

சிங்கம் இருக்கக் குட்டி வசம் ஆமா?
சிங்கம் தன் பசிக்கு ஆனையையே தேடிக் கொல்லும்.
(கொள்ளும்.)
சிங்கம் பசித்தால் தேரையைப் பிடிக்குமா?
சிங்கார வல்லி அங்கயற் கண்ணிக்குத் தீட்டு மாறிய பின் திரட்டி சடங்கு.
(இருட்டுச் சடங்கு.)
சிங்காரித்து மூக்கு அறுத்தது போல. 1067

சிட்டாள் எட்டாளுக்குச் சமானம்; முட்டாள் எதற்கு ஆவான்?
சிட்டாளுக்கு ஒரு முட்டாள்; செருப்புத் தூக்கிக்கு ஓர் அடைப்பைக் காரனா?
சிட்டுக் குருவிக்குப் பட்டம் கட்டினால் சட்டி பானை எல்லாம் லொட லொட என்று தத்தும்.
சிட்டுக் குருவிக்குப் பிரம்மாஸ்திரமா?
சிட்டுக் குருவிக்கு மத்தியஸ்தம் போனாற் போல. 1068

சிட்டுக் குருவிக்கு ராமபாணமா?
(குருவிக்கு மேலே.)
சிட்டுக் குருவியா திருவணை அடைக்கப் போகிறது.
சிட்டுக்குருவியின்மேல் பிரம்மாஸ்திரம் தொடுக்கலாமா?
சிட்டுக் குருவியின் தலையில் பனங்காயைக் கட்டினது போல.
சிட்டுக் குருவியின் மேல் ராம பாணம் தொடுக்கிறதா? 10685
(நாராயணாஸ்திரம்.)

சிட்டுக் குருவியைத் தூக்குவானேன்? அது கொண்டையை ஆட்டிக் கொத்த வருவானேன்?
சிடுக்குத் தலையும் சொடுக்குப் பேனும்.
சிடுக்குப் பெருத்தால் கொண்டை பெருக்கும்; தாயார் செத்தால் வயிறு பெருக்கும்.
சிண்டு முடிந்து விடுகிறான்.
சிணுக்கு எல்லாம் பிணக்குக்கு இடம். 10690

சிணுங்குகிறது எல்லாம் பூசைக்கு அடையாளம்.
சித்தன் போக்குச் சிவன் போக்கு; ஆண்டி போக்கு அதே போக்கு.
சித்தன் போக்குச் சிவன் போக்கு; பித்தன் போக்குப் பெரும் போக்கு.
(சித்தம் போக்கு.)
சித்தி பெறாத மருந்தும் மருந்தோ? பெற்றுப் படையாத பிள்ளையும் பிள்ளையோ?
சித்திரச் செந்தாமரையை ஒத்திட முகம் மலர்ந்தது. 10695

சித்திரத்தில் எழுதிய செந்தாமரைப்பூப் போல.
சித்திரத்தில் வைத்து எழுதாத சோழியனைத் தொப்பூர்ச் சத்திரத்தில் ஏன் வைத்தாய், சண்டாளா?
சித்திரத்திலும் சோழியன் ஆகாது.
சித்திரத்துக் கொக்கே, ரத்தினத்தைக் கக்கே.
சித்திரத்தைக் குத்தி அப்புறத்தே வைப்பான். 10700
(சித்திரத்தைத் தோண்டி.)

சித்திரப் பதுமைபோல் பிரமிக்க.
சித்திரபுத்திரனுக்குத் தெரியாமல் சீட்டுக் கிழியுமா?
(சித்திரகுப்தனுக்கு.)
சித்திரமும் கைப்பழக்கம்; செந்தமிழும் நாப்பழக்கம்.
சித்திர வேலைக்காரனுக்குக் கை உணர்த்தி; தெய்வப் புலவனுக்கு நா உணர்த்தி.
சித்திராங்கி பொம்மா, சின்ன வேங்கடம்மா. 10705

சித்திரை அப்பன் தெருவிலே.
சித்திரை எள்ளைச் சிதறி விதை.
சித்திரை என்று சிறுக்கிறதும் இல்லை; பங்குனி என்று பருக்கிறதும் இல்லை.
சித்திரை என்று சிறுக்கிறதும் இல்லை; வைகாசி என்று வளர்வதும் இல்லை.
(வாழ்வதும் இல்லை.)
சித்திரை ஐப்பசி சீர் ஒக்கும். 10710
(பகல் இரவு சமம்.)

சித்திரைக்குச் சிற்றப்பா, பெரியப்பா; வைகாசிக்கு வாங்காணும் போங்காணும்.
சித்திரைக் குழப்பம்.
சித்திரைக் கோடையில் உத்தரவு சாடை.
சித்திரைச் செந்தாமரையை ஒத்திட முகம் மலர்ந்தது.
(சித்திர.)
சித்திரைத தேர் போல். 10715
(ஆகிருதி.)

சித்திரைப் புழுதி பத்தரை மாற்றுத் தங்கம்.
சிததிரை பத்தில சிறந்த பெருங்காற்று. ஐப்பசி பத்தில் அறையில் அடைபடும்.
சித்திரை பத்தில் சிரித்தெழுந்தார் சோழகனார்.
(சோழகனார் - சோழகக் காற்று. யாழ்ப்பாண வழக்கு.)
சித்திரை பத்தில் சிலம்பன் பிறந்தால் அக்குடி நாசம்.
(புத்திரன் பிறந்தால். யாழ்ப்பாண வழக்கு.)
சித்திரை பத்துக்குமேல் சிறந்த பெருங்காற்று. 10720
(தென்காசிப் பக்க வழக்கு. சித்திரை பின் ஏழு; வைகாசி முன் ஏழு சிக்கலான அக்கினி நட்சத்திரம்.)

சித்திரை மழை சின்னப்படுத்தும்.
சித்திரை மழை சினை அழிக்கும்.
சித்திரை மழை செல்வ மழை.
சிததிரை மழை பெய்தால் பொன் ஏர் கட்டலாம்.
சித்திரை மாதத்தில் சிறந்துழுத புழுதியிலே கத்தரி நடாமல் கரும்பு நட்டு வீணானேன். 10725

சித்திரை மாதத்தில் சீராய் விதை விழுந்தால் பத்தரை மாற்றுப் பொன் விளையும்.

சித்திரை மாதத்தில் செல்வன் பிறந்தால் சீரும் சிறப்பும் கெடும்.
(ஆன குடிக்கு அனர்த்தம்.)
சித்திரை மாதத்தில் பிறந்த சீர்கேடனும் இல்லை; ஐப்பசி மாதத்தில் பிறந்த அதிர்ஷ்டவானும் இல்லை.
சித்திரை மாதத்து உழவு பத்தரை மாற்றுத் தங்கம்.
சித்திரை மாதப்புழுதி பத்தரை மாற்றுத் தங்கம். 10730

சித்திரை மாதம் கத்திரி வெயில்.
(கத்திரி-அக்கினி நட்சத்திரம்.)
சித்திரை மாதம் சிறந்த மழை பெய்யாமல் போனால் வில்லாததை விற்று வெள்ளாடு கொள்ளு.
சித்திரை மாதம் சீருடையோர் கல்யாணம்: வைகாசி மாதம் வரிசையுள்ள கல்யாணம்; ஆனி மாதம் அரைப் பொறுக்கி கல்யாணம்.
சித்திரை மாதம் செய்வது கல்யாணம்,
(செல்வது.)
சித்திரை மாதம் செல்வன் பிறந்தால் ஆன குடி அழியும்; 10735

சித்திரை மாதம் பிறந்த சீர்கேடனும் இல்லை; ஐப்பசி மாதம் பிறந்த அதிர்ஷ்டவானும் இல்லை.
சித்திரை மின்னல் ஆகாது;கடைக்கால மார்கழி இழக்கவும் ஆகாது.
சித்திரையில் சிறு மாரி.
(யாழ்ப்பாண வழக்கு.)
சித்திரையில் பெற்றாள்; மார்கழியில் மகிழ்ந்தாள்.
(-எட்டு மாதத்தில் குழந்தை நடக்கும்.)
சித்தூரிலே செல்லக் கூத்து. 10740

சிதம்பர சக்கரத்தைப் பேய் பார்ப்பது போல.
சிதம்பரத்திலே பிறந்த பிள்ளைக்குத் திருவெம்பாவை கற்றுக் கொடுக்க வேண்டுமா?
சிதம்பரம் தீட்சிதர்; திருவகீந்திரபுரம் ராட்சதர்.
சிதம்பர ரகசியம்.
சிந்தச்சே போகிற மூக்கா? 10745

சிந்தாது இருந்தால் மங்காது இருக்கலாம்.
சிந்தி அறுந்து போகிற மூக்கு எந்த மட்டில் இருக்கும்?
சிந்திப்போன பாலைப் பற்றி அழுவதில் பயன் இல்லை.
சிந்திப் போன வீட்டிலே சேராது; மங்கின வீட்டிலே வாராது.
(சிந்தின.)
சிந்தின இடத்திலே சேரேன், மங்கின இடத்திலே வாரேன். 10750

சிந்தின பண்டம் திரட்டுப்பால்.
சிந்துக்குக் குந்தி பேசுகிறது.
சித்தை நொந்தவருக்குக் கந்தனே துணை.
சிநேகிதம் செய்தபின் சோதி; தெளிந்தபின் நம்பு.
சிநேகிதம் செய்யுமுன் ஆராய்ந்து செய்; செய்தபின் ஐயப்படாதே. 10755

சிப்பாய் நாய் துப்பாக்கிக்குப் பயப்படுமா?
சிப்பியிலே விழுந்த மழைத்துளி முத்தாகும்; அதுபோல நல்லார்க்குச் செய்த உதவி நிலை நிற்கும்.
சிம்பிலே விளையாதது கம்பிலே விளையப் போகிறதா?
சிரங்கு முற்றிப் பவித்திரம் ஆனாற் போல.
சிரசுக்கு மேலே ஆக்கினையும் உண்டோ? 10760
(ஆக்கினை இல்லை.)

சிரஞ்சீவி பெற்றவருக்கு யமபயம் ஏது?
சிரட்டைத் தண்ணீர் எறும்புக்குச் சமுத்திரம்.
சிரிக்கத் தெரியாதவன் பிழைக்கத் தெரியாதவன்.
சிரித்தாயோ? சீரைக் குலைத்தாயோ?
சிரித்தாயோ? சீலையை அவிழ்த்தாயோ? 10765

சிரித்தாளாம், சிரித்தாளாம் சீழ் வடிந்த கண்ணி; அவள்மேல் ஆசை வைத்தானாம் தண்ணீர் வடிந்த உதடன்.
சிரித்துக் கழுத்தை அறுக்கிறது.
சிரித்துச் சிரித்துத் தின்ற தோசைக்குக் காசு இல்லையா?
சிரிப்பாணிக் கூத்து, சிரிப்பாய்ச் சிரித்துச் சீலைப்பேன் குத்துகிறது.
சிரிப்பாய்ச் சிரித்துத் தெருவிலே நிற்கிறது. 10770
(சிரிப்பார் சிரிக்க.)

சிரிப்பார் முன்னே இடறி விழுந்தாளாம்.
சிரிப்புக் குடியைக் கெடுக்கும்; சீதளம் உடம்பைக் கெடுக்கும்.
சிரைக்க வந்தால் அடைப்பமும் கிண்ணியும் சரியாயிருக்க வேணும்.
சிரைத்ததைச் சிரைக்கிறது போல.
சிரைத்தால் கூலி; சேவித்தால் சம்பளம். 10775

சிரைத்தால் மொட்டை; வைத்தால் குடுமி.
சில்லறைக் கடன் சீர் அழிக்கும்.

சில்லறைப் பேர்வழி.
சில்லறை வைத்தியம்.
சில்வாழ்நாள் பல்பிணிச் சிற்றறிவினோர். 10780

சில்வானக் கள்ளி செலவு அறிவாளா?
சிலு உண்டானால் சேவகம் உண்டு.
சிலுக்கச் சிலுக்கக் குத்துகிறது எல்லாம் சித்திரத்துக்கு அழகு.
சிலேட்டுமத்தில் அகப்பட்ட ஈயைப் போல.
சிவக்க முற்றின வாழைக்காய் புளியில்லாமல் இனிக்கிறது. 10785

சிவசிவா, திருப்பிப் போட்டு அடித்தால் சாகும் என்றான் சந்நியாசி.
சிவப்பு ஓர் அழகு; சூடு ஒரு மணம்.
(ருசி.)
சிவப்புப் பறையனையும் கறுப்புப் பிராமணனையும் நம்பல் ஆகாது.
சிவப்பே அழகு; சுடுகையே ருசி.
சிவபூஜை வேளையில் கரடியை விட்டாற் போல. 10790
(கரடியிருந்தது போல. கெருடி.)

சிவராத்திரியோடு பனி சிவா சிவா என்று போகும்.
சிவலிங்கத்தின்மேல் எலி போல.
சிவன் என்றால் சிவனுக்குக் கோபம்; ஹரி என்றால் ஹரிக்குக் கோபம்.
சிவன் சொத்துக் குலநாசம்.
சிவனுக்கு மிஞ்சின தெய்வம் இல்லை; சித்தியாருக்கு மிஞ்சின சாஸ்திரம் இல்லை. 10795

சிவனே என்று இருந்தாலும் தீவினை விடவில்லை.
சிவனை நினைந்து ஆர் கெட்டார்?
சிவாய நம என்பவருக்கு அபாயம் ஒருநாளும் இல்லை.
சிவியான் ராஜவட்டம் போனது போல.
சிவியானுக்கு அடிமைப்பட்டால் காவவும் வேண்டும்; சுமக்கவும் வேண்டும். 10800

சிற்றப்பன் வீட்டுக்குப் போய்ச் சிற்றாடை வாங்கி வரலாம் என்று போனாளாம்; சிற்றப்பன் பெண்சாதி ஈச்சம் பாயை இடுப்பில் கட்டிக் கொண்டு எதிரே வந்தாளாம்.
சிற்றப்பா சீராட்டிக் கண்ணிலே சுட்டானாம்.
சிற்றம்மை சீராட்டிக் கண்ணைக் சொருகினாளாம்.

சிற்றாத்தை பிள்ளையும் பிள்ளையோ? செத்தையிற் பல்லியும் பல்லியோ?

(செத்தபின்.)

சிற்றாள் எட்டாளுக்குச் சமானம். 10805

(சரி.)

சிற்றாற்றங்கரையிலே நான் சிறு பந்தடிக்கையிலே வாரி எடுத்தாரே, மடிமேல வச்சாரே, குப்பச்சி கையாலே குட்டுப்பட வைத்தாரே, நான் வரமாட்டேன்.

சிற்றாளைக் குட்டிக்குச் சிற்றெறும்பு சளைக்காது.

சிற்றாளைக் குட்டிக்குப் பட்டை நாமம் சாத்தியது போல்.

சிற்றின்பம் எண்ணார், மற்றின்பம் கண்டார்.

சிற்றுணர்வோர் என்றும் சிலுசிலுப்பார். 10810

சிற்றுளியால் கல்லும் தகரும்.

சிற்றூண் இனிது.

சிற்றூரிலே செல்லக் கூத்துக் கட்டின கதை.

சிற்றூரிலே பாரிக் கூத்தா?

(பாரக் கூத்தா?)

சிற்றெறும்புக்குக் கொட்டங்கச்சி நீர் சமுத்திரம். 10815

சிற்றெறும்பைச் சிற்றெறும்பும் கட்டெறும்பைக் கட்டெறும்பும் தேடும்.

சிறகிலும் மெல்லிசாய்ப் பொன் அடிப்பான்.

சிறகு இல்லாத பறவைபோல்.

(சிறகை இழந்து.)

சிறகு பறிகொடுத்த பறவை போல.

சிறகு முளைத்தார், பறத்தலும் கற்றார். 10820

சிறப்போடு பூனை இறப்பில் இருந்தால் புறப்படமாட்டாது எலி.

சிறிசுக்கு இடம் கொடேன்; சேம்புக்குப் புளி இடேன்.

சிறய கண்ணாடி பெரிய உருக்களைக் காட்டுமாப்போலே.

சிறிய பாம்பு ஆனாலும் பெரிய தடி கொண்டு அடி.

சிறியா நங்கை இல்லையேல் சிறிய பாம்பு பிடிப்பார் இல்லை. 10825

சிறியாநங்கை செல்வம் போல.

சிறியார் இட்ட வேளாண்மை அறுவடை ஆகாது; அறுத்தாலும் களம் சேராது.

சிறியர் எல்லாம் சிறியார் அல்லர்.
சிறியார் கைச் செம் பொன் போல.
(சிறியார் அங்கை.)
சிறியார் செய்த சிறு பிழை எல்லாம் பெரியார் ஆயின் பொறுப்பது கடமை. 10830

சிறியாருக்கு இனியதைக் காட்டாதே; சேம்புக்குப் புளியிட்டு மசியாதே.
(புளி விட்டு ஆக்காதே.)
சிறியாரோடு இணங்காதே; சேர்புக்குப் புளியிட்டுக் கடையாதே.
சிறுக்கி சின்னப் பணம்; சிறுக்கி கொண்டை மூன்று பணம்.
சிறுக்கி சேதி தெரியாமல் செடியைச் செடியைச் சுற்றுகிறது.
(அறியாமல்.)
சிறுக்கி மனம் தெரியாமல் செடி தூக்கி அலைந்தானாம். 10835
(மயல் தெரியாமல்.)

சிறுக்கி ஜிம் என்றாளாம்; பாவாடை பர்க் கென்றதாம்.
சிறுகக் கட்டிப் பெருக வாழ்.
சிறுகச் சிறுகத் தின்றால் மலையையும் தின்னலாம்.
சிறுகச் சிறுக வெட்டினால் பெரிய மரமும் வீழ்ந்துவிடும்.
சிறுக விதைத்தவன் சிறுக அறுப்பான். 10840
(பழமொழி நானூறு.)

சிறு குரங்கின் கையால் துழா.
சிறு குழந்தை இல்லாத வீடும் வீடு அல்ல; சீரகம் விட்டு ஆக்காத கறியும் கறி அல்ல.
சிறு குழிகள் கொஞ்சம் தண்ணீரால் நிரம்பும்.
சிறுத்து இருக்கையில் வளையாதது பருத்திருக்கையில் வளையுமா?
சிறு தீ பெரு நெருப்பு. 10845

சிறு துரும்பும் பல்லுக் குத்த உதவும்.
சிறு துளி பெரு வெள்ளம்.
சிறு பாம்பையும் பெரிய தடியால் அடிக்க வேண்டும்.
சிறு பிள்ளை ஆனாலும் ஆடுவான் மூப்பு.
சிறு பிள்ளை இல்லாத வீடும், சீரகம் இட்டு ஆக்காத கறியும். 10850
(கறி அல்ல.)

சிறு பிள்ளை செய்த வேளாண்மை விளைந்தாலும் வீடு வந்து
சேராது.
(இட்ட.)
சிறு பிள்ளை பயம் அறியாது.
சிறு பிள்ளை யோசனை.
சிறு பிள்ளை விளையாட்டு, அழிந்தது மாங்காடு.
சிறு பிள்ளை விளையாட்டு, சுண்டெலிக்கும் நாசம். 10855

சிறு பிள்ளை வீடு வீடு அல்ல.
சிறு பிள்ளை வேளாண்மை விளைந்தும் வீடு வந்து சேராது.
சிறு பெண் கட்டிய சிற்றாடையா?
சிறு பொறியே பெருந் தீ.
சிறு போது படியாத கல்வி அழுக்குச் சேலையில சாயம் ஏற்றி
னது போல. 10860

சிறு மீன் எல்லாம் பெரு மீனுக்கு இரை.
(ஆகாரம்.)
சிறு முள்ளுக் குத்திப் பெருமலை நோகுமா?
சிறுமைப் படுகிறதை விடச் செத்தால் உத்தமம்.
(சாவது நலம்.)
சிறுமையில் கல்வி சிலைமேல் எழுத்து.
சிறுமையும் பெருமையும் தான் தர வரும். 10865

சிறு ரூபத்தை உடையவரும் அரும் பொருளைச் செய்வார்.
(அறம் பொருளை.)
சிறு வயதில் கற்ற கல்வி சிலையில் எழுதிய எழுத்துப் போலாம்.
சிறு விதை ஆகிய ஆலமரம் பெரு நிழலைக் கொடுக்கும்.
சிறைக்குக் கீழ்ச் சிறை; அதன் கீழ் அம்பட்டன.
சிறைச்சாலைக்கும் அழகு இல்லை; தேவடியாளுக்கும்
முறை இல்லை. 10870

சிறைப்பட்டாயோ? குறைப்பட்டாயோ?
சின்ன ஆத்தாள் வீட்டுக்குச் சீலை வாங்கிக் கட்டலாம் என்று
போகச் சின்னாத்தா ஈச்சம்பாயைக் கட்டிக் கொண்டு
எதிரே வந்தாளாம்.
சின்னக் கண்ணி அகமுடையான் செவ்வாய்க்கிழமை செத்தானாம்;
வீடு வாசல் மெழுகி வைத்து வெள்ளிக்கிழமை அழுதாளாம்.
சின்னக் காசை அலட்சியம் செய்தால் பெரிய காசு சேராது.
சின்னக் குட்டி அகமுடையான் சித்திரை மாதம் அடித்தானாம்;
அவள் அடி பொறுக்காமல் ஆடி மாதம் அழுதாளாம். 10875

சின்னச் சின்னப் பேச்சு, சிங்காரப் பேச்சு, வன்ன வன்னப் பேச்சு
மெத்த வழக்கமான பேச்சு.
சின்னச் சின்னப் பேச்சும் சிரித்தாற் போல வார்த்தையும்.
சின்னச் சின்ன வார்த்தை, சிங்கார வார்த்தை.
சின்னச் சொல்லும் சிங்காரச் சொல்லும்,
சின்னதாகப் பண்ணினாலும் பண்ணுவான்; பெரிதாகப்
பண்ணினாலும் பண்ணுவான். 10880

சின்னப் பாம்பு ஆனாலும் பெரிய தடி கொண்டு அடி.
(பெரிய கொம்பால்.)
சின்னப் பிணம் ஆனாலும் பெரிய பிணம் ஆனாலும் சங்கு ஊதிக்குக்
கால் பணம்.
(முக்கால் பணம்.)
சின்னப் பிள்ளைக்கு வாழைப் பழத்தைக் கொடுத்து
ஏமாற்றினாற்போல.
சின்ன மீன் பெரிய மீனுக்கு இரை.
சின்னவனுங்கு இனியது காட்டாதே; செம்பில் புளியிட்டு
ஆக்காதே. 10885

சின்ன வீட்டில் நடந்த சமாசாரம் சீமந்தத்தில் தெரியும்.
(வீட்டில் செய்தது தெரிந்து போயிற்று.)
சின்ன வீட்டுச் சேதி அம்பலத்திலே வரும்.
சின்ன வீடாம், சிறு கதவாம், அரக்கு முத்திரையாம்,
வையாபுரியான் கலகம் இட வைத்தது வைத்தாற் போல.
சின்னாரண்ணன் கோவிலிலே சிலை பண்ணி வைத்தாற்போல்.
சினத்தால் அறுத்த மூக்குச் சிரித்தால் வருமா? 10890
(சினந்த போது; சிரித்தபோது.)

சினத்தாலும் இனத்தோடே.
சினத்தைப் பேணில் தவத்துக்கு அழகு.
(அழிவு.)
சினந்தவரை இனம் தழுவாது.
சினந்தாலும் சீர் அழியப் பேசாதே. 10895
சினந்திருந்தார் வாசல் வழி சேரவேண்டாம்.

சினம் மீறினால் இனம் தெரியாது.
சிறுக்குச் சின்னம்மா, சிங்காரப் பொன்னம்மா,

சீ என்கிற வீட்டில் நாயும் நுழையாது.
(பேயும்.)
சீ என்ற காட்டிலே செந்நாய் சேருமா?
சீ என்றால் நாயும் திரும்பிப் பாராது. 10900

சீக்கிர புத்தி பலஹீனம்.
சீக்கிரம் பழுப்பது சீக்கிரம் உளுக்கும்.
சீக்கிரான் கறிவேப்பிலை; இழுத்துக்கொண்டு திரி பிள்ளை.
(கறிப்பிலை.)
சீ சீ, இந்தப் பழம் புளிக்கும் என்றதாம் நரி.
சீ சீ என்கிறதும் இந்த வாய்தான்; சிவ சிவா என்கிறதும் இந்த வாய்தான். 10905

சீ சீ நாயே என்றால் பிள்ளை பிள்ளைதானே?
சீ சீ நாயே வாலைச் சுருட்டு.
சீட்டாளுக்கு ஒரு மோட்டாள்; செருப்புத் தூக்கிக்கு ஓர் அடைப்பைக்காரனா?
சீதனக் கள்ளி விருந்து அறியாள்.
சீதனம் வேதனை. 10910

சீதேவி தன்னுடனே செல்வத் திருப்பாற் கடலில் மூதேவி ஏன் பிறந்தாள் முன்?
சீதேவியுடன் கூட மூதேவி பிறந்தாற் போல.
(பிறந்தாள்.)
சீதை அழகால் கெட்டாள்; திரௌபதை சிரிப்பால் கெட்டாள்.
(திரௌபதை வாயால்.)
சீதை பிறந்தது லங்கை அழிய.
(பிறக்கவும். அழியவும்.)
சீதை முகத்திலே சிரிப்பைக் கண்டேன். 10915

சீந்தி நகைத்துத் தெருவில் அலைய விட்டுப் பாந்தி நின்று வேடிக்கை பார்ப்பது போல.

சீப்பை ஒளித்து வைத்தால் கல்யாணம் நின்று விடுமா?
சீபுரத்துப் பள்ளி செத்தும் கெடுத்தான்; இருந்தும் கெடுத்தான்.
(சீவரத்து. சீயபுரத்து.)
சீமந்தத்தோடு சிடுக்கு விட்டது
(அறுந்தது.)
சீமந்தப் பந்தலில் புடைவையை நடுக்கிழித்து மூட்டினாளாம். 10920

சீமான் வயிற்றில் பிறந்தது உண்டு; தறித் துணிக்குத் தரித்திரப் பட்டது இல்லை.
(திரித்துணிக்கு.)
சீமான் வயிற்றிலே பிறந்தேன்; திரித்துணிக்குச் சங்கடப்பட்டது இல்லை; பாவி வீட்டுக்கு வந்தேன்; பட்டேன் திரித்துணிச் சங்கடத்தை.
(ஏழைப் பெண் செல்வர் வீட்டில் புகுந்து சொன்னது. கந்தையில்லா வீடு.)
சீமையிலே பாதி ஸ்ரீவத்ஸ கோத்திரம்.
சீர் அற்ற பானைக்குச் செம்பொன் ஏது?
சீர் அற்றார் கையில் செம்பொன் விலை பெறாது. 10925

சீர் உண்டானால் சிறப்பு உண்டு.
சீர்கேடனுக்கு வாழ்க்கைப்பட்டுத் திரைச்சீலைத் துணிக்கு வாதைப் படாமல் இருந்தேன்; சீராளனைப் பெற்ற பிறகு திரிசீலைத் துணிக்கு வருத்தம் ஆச்சுது.
சீர் கொண்டு வந்தால் சகோதரி
சீர்மை உண்டானால் நேர்மையும் உண்டு.
சீரக ரசத்துக்குச் சிற்றாட்கள் எட்டுப் பேர். 10930

சீரங்கத்தில் உண்டா சிவ தருமம்?
சீரங்கத்தில் உலக்கை பிடித்த மாதிரி.
(கொடுத்த.)
சீரங்கத்தில் பிறந்த பிள்ளைக்குத் திருவாய் மொழி கற்பிக்க வேண்டுமா?
சீரங்கத்துக் காகம் கோவிந்தம் போடுமா?
(காகமானாலும் பாடுமா?)
சீரங்கத்துக்குப் போகிறவன் ஓரியை மாராப்புப் போட்டது போல. 10935

சீரங்கத்துக்குப் போகிறவன் வழியிலே பாரியைப் பறி கொடுத்தது போல.
சீரங்கத்துக்குப் போயும் சொறிக்நாதன் காலில் விழுகிறதா?

சீரங்கத்து நடை அழகு; காஞ்சீபுரம் குடை அழகு.
சீரங்கம் நடை; பெருமாள் குடை; திருப்பதி வடை; திரு
நாராயணபுரம் முடி.
சீரணி கெட்டால் கோரணி. 10940

சீராளன் கல்யாணத்தில் மாரோடே மார் தள்ளுது.
(மூன்று பேர் பெண்கள்; மாரோடே மார் தள்ளுது.)
சீராளனைப் பெற்ற பிறகு திரிச்சீலைத் துணிக்கு வருத்தம் ஆச்சுது.
சீரிய தனம் உடையார் சேமித்து வாழுமாப் போலே.
சீரியர்க்கு அன்பு செய்.
சீரியர் கெட்டாலும் சீரியரே. 10945

சீரைத் தேடின் ஏரைத் தேடு.
(கொன்றை வேந்தன்.)
சீலம் குரு ஆகும்.
சீலை இல்லை என்று சிற்றாத்தாள் வீட்டுக்கு ஓடி வந்தாளாம்;
அவள் ஓலைப்பாயைக் கட்டிக் கொண்டு ஓடி வந்தாளாம்.
(ஈச்சம் பாயைக் கட்டிக் கொண்டு வந்தாளாம்- சின்னாயி.)
சீலைப் பாய் ஈழம் போய்ச் சீனிச் சர்க்கரை கட்டுமா?
(ஈயும் போம்.)
சீலைப் பேன் குத்துகிறான். 10950

சீலை மேல் சீலை கட்டித் தேவரம்பை ஆடினாலும் ஓலை மேல்
எழுத்தாணி ஊன்றும் பெண் ஆகாது.
சீலையை விற்றும் சீலாவைக் கொள்; ஓலையை விற்றும்
ஓராவைக் கொள்.
(யாழ்ப்பாணத்து வழக்கு.)
சீவரத்துக் கிராமணி இருந்தும் கெடுத்தான்; செத்தும் கெடுத்தான்.
(சீவரத்துப் பள்ளி. செங்கற்பட்டு மாவட்ட வழக்கு.)
சீவன் போனால் கீர்த்தியும் போகுமா?
(சீவனம், கீர்த்தியும்.)
சீவனம் செய்ய நாவினை விற்கேல். 10955

சீவனும் கெட்டது, வியாதியும் பொட்டென்று நின்றது.
(வியாதியும் கெட்டது.)
சீ விடு என்றாளாம் சிறு பருப்பில் நெய்யை.
சீறிய பாம்புக்குச் சிறியா நங்கை வேர்.
சீறி வரும் வடவாக்கினியைச் சிறு குட்டைத் தண்ணீர் அவிக்குமா?
சீறும் படையைக் கண்டு செடிக்குள் நுழைகிறது. 10960

சீனி இட்டுக் காய்ச்சிய பால் தித்திப்பு இல்லை என்பது போல்.
சீனி என்று எழுதி நக்கினால் இனிக்குமா?

சீனிக் கிழங்கு தின்ற பன்றி செல் அறுத்தால் நிற்காது.
(செவி அறுத்தாலும் போகாது.)
சீனி போட்டால் ஆனை தின்னுமா?
(இலங்கை வழக்கு.)
சீனி வெல்லம் போட்டு நாழிப்பால் வார்த்தாலும் நடுவே சொல்வார் அறிவுள்ளார். 10965
சீஸம்.
(பைத்தியம்.)

சுக்கான் செட்டி சோறு போடுவானா?

சுக்கிர தசை பிட்டத்திலே அடிக்கிறது.

சுக்கிர தசை வந்தால் சுமந்து வந்து கொடுக்கும்.

சுக்கிர பகவான் புறப்பட்ட கண்ணீரிலே இண்ட முள் குத்தினது போல. 10970

சுக்கிரன் அக்கிரமி.

சுக்கிரன் முளைக்கத் தாலி கட்டின கதை.

சுக்கிரன் முளைப்பு ஒருவருக்கும் தெரியாது.

சுக்கிரனைப் போலக் கொடுக்கிறவன் இல்லை; கேதுவைப் போலக் கெடுக்கிறவன் இல்லை.

சுக்கிரீவ ஆக்ஞை. 10975

சுக்கிரீவ ஆக்ஞை எங்கும் இல்லை.

சுக்கிரோதயத்தில் தாலி கட்டிச் சூரியோதயத்தில் தாலி அறுத்தாள்.
(சுக்கிரோதயத்திற்குள். சூரியோதயத்திற்குள்.)

சுக்கு அறியாத கஷாயம் உண்டா?
(இல்லாத.)

சுக்குக் கண்ட இடத்தில் பிள்ளை பெற்றாளாம்; செக்குக் கண்ட இடத்தில் தலை விரித்தாளாம்.

சுக்குக் கண்ட இடத்தில் பிள்ளை பெற்றுச் சூரிய நாராயணன் என்று பெயர் இடுவாள். 10980

சுக்குக் கண்ட இடத்தில் பிள்ளை பெற்றுத் தொட்டில் கண்ட இடத்தில் தாலாட்டலாமா?

சுக்குக கண்ட இடத்தில் முக்கிப் பிள்ளை பெறுவாளா?

சுக்குக்குக்கு மிஞ்சின மருந்து இல்லை; சுப்பிரமணிய சுவாமிக்கு மிஞ்சின கடவுள் இல்லை.

சுக்குக்கு மிஞ்சின மருந்தும் இல்லை; சூரியனுக்கு மிஞ்சின தெய்வமும் இல்லை.

சுக்குக்கு மிஞ்சின மருந்தும் இல்லை; தாய்க்கு மிஞ்சின உறவும் இல்லை. 10985

சுக்குச் செத்தாலும் சுரணை போகாது.

சுக்குத் தின்று முக்கிப் பெற்ற பிள்ளையைப்போல் காப்பாற்றுகிறாள்.

சுக்குத் தின்று முக்கிப் பெற்றால் தெரியும் பிள்ளை அருமை.

சுக்கும் பாக்கும் வெட்டித் தருகிறேன்; சுள் சுள் என்று வெயில் எறி. (தலையில் ஏறு.)

சுக்லாம் பரதாம் குட்டிக் கொள்ளும் போதே கண்ணில் குட்டிக் கொண்டது போல. 10990

சுக சரீரம் கழுதைப் பிறப்பு.

சுகத்துக்குப் பின் துக்கம்; துக்கத்துக்குப் பின் சுகம்.

சுகத்தைத் தள்ளினாலும் துக்கத்தைத் தள்ளலாகாது.

சுகத்தைப் பெற்றதும் அல்ல; தவத்தைப் பெற்றதும் அல்ல. (அல்லி.)

சுகத்தையாவது பெறவேண்டும்; தவத்தையாவது பெற வேண்டும். 10995

சுகதுக்கம் சுழல் சக்கரம். (சுழல் காற்று.)

சுகந்தம் இல்லா மலர் போலே.

சுகம் கெட்டால் விரதம் தக்க வேண்டும்; விரதம் கெட்டால் சுகம் தக்க வேண்டும்.

சுகம் கெட்டால் விரதம் லாபம்; விரதம் கெட்டால் சுகம் லாபம்; இரண்டும் கெட்டால் என்ன லாபம்?

சுகம் தக்குகிறதும் இல்லை; விரதம் தக்குகிறதும் இல்லை. 11000

சுகம் மெத்தை அறியுமா?

சுகம் வந்தால் சந்தோஷப் பட்டுத் துன்பம் வந்தால் பின் வாங்குவானேன்?

சுகமும் கூழும் இறுகத் தடிக்கும்.

சுகமும் துக்கமும ஒருவர் பங்கு அல்ல.

சுகவாசி உடம்பு கழுதைப் பிறப்பு. 11005

சுகுண சுந்தரி இல்லாத வீடு சுடுகாடு.

சுங்கக்காரனிடம் சுக்துக்கம் சொல்லிக் கொள்வது போல

சுங்கம் மாறினால் சுண்ணாம்பு கிடையாது (சுண்ணாம்புக் கொடார்.)

சுங்கமும் கூழும் இறுகத் தடிக்கும்.
(இருக்க.)
சுங்கா, முஞ்சி காட்டாதே; வந்த விருந்தாளியை ஓட்டாதே. 11010

சுட்ட களியை நாய் புரட்டுகிறது போல.
(சுடுகிற.)
சுட்ட சட்டி அறியுமா ஆப்பத்தின் சுவையை?
(அப்பத்தின், கறிச்சுவையை)
சுட்ட சட்டி சட்டுவம் கறிச் சுவை அறியுமா?
சுட்ட சட்டி சுவை அறியுமா?
சுட்ட சட்டி தொடாதவளா உடன்கட்டை ஏறப் போகிறாள்? 11015

சுட்ட நண்டுக்கு வேலி கட்டின சுடுக்காட்டுப் பள்ளி.
சுட்ட நரியை நாய் புரட்டுகிறது போல.
சுட்ட மண்ணும் பச்சை மண்ணும் ஒட்டுமா?
(ஒட்டா.)
சுட்டவன் இருக்கக் குண்டை நோகிறதா?
சுட்டால் தெரியும் குயவனுக்கு. 11020

சுட்டால் தெரியும் சூத்திரனுக்கு.
சுட்டால் தெரியும் நண்டுக்கு.
சுட்டாலும் தெரியாது; தொட்டாலும் தெரியாது.
சுட்டிக் காட்டாத வித்தை சுட்டுப் போட்டாலும் ஒரெழுத்து வராது.
சுடர் விளக்கு ஆனாலும் தூண்டு கோல் ஒன்று வேண்டும். 1125

சுடலை ஞானம் திரும்பி வரும் மட்டும்.
சுடு கஞ்சி குடித்த நாய் போல.
சுடுகாட்டில் வில்வமரம் முளைத்தது போல.
சுடுகாட்டுக்குப் போன பிணம் திரும்பி வருமா?
சுடுகாட்டுத் தத்துவம் வீடு வரை வராது. 11030

சுடுகாட்டுப் புகையைப் பார்க்கும் கொம்பேறி மூக்கன்.
சுடுகாட்டு வழி போனாலும் இடுகாட்டு வழி போகலாகாது.
சுடுகாடு போன பிணம் திரும்பாது.
சுடுகாடு போன பிணம் நடுவீடு வந்து சேருமா?
சுடுகிற தழலை மடியில் கட்டலாமா? 11035

சுடுகிறது, மடியில் பிடி.
சுடு கெணடைக்காக ஏரியை உடைக்கலாமா?
(உடைக்கிறதா?)

சுடு தண்ணீரிலே விழுந்த பூனை பச்சைத் தண்ணீரைக்
கண்டாலும் பயப்படுமாம்.
சுடு நெருப்பை மடியிலே முடியலாமா?
சுண்டன் வண்டி இழுக்குமா? 11040

சுண்டினால் சுண்டைப் பழமோ?
சுண்டினாலும் பாற் சுவை குறையுமா?
சுண்டெலிக்குப் பயந்தது மத்த கஜம்; சுக்குக்குப் பயந்தது
வாத ரோகம்.
சுண்டெலி சிலம்பம் படித்து ஆனையை ஜயிக்க முடியுமா?
சுண்டைக்காய் அளவு சாப்பிடுகிறதில் சாப்பிடுகிறது 11045
பாதியா? வைக்கிறது பாதியா?

சுண்டைக்காய் இல்லாமல் சோற்று இறக்கம் இல்லை.
சுண்டைக்காய் காற்பணம்; சுமை கூலி முக்காற்பணம்.
சுண்டைக்காயனும் மண்டைக்காரனும் சண்டை போட்டால்
அண்டைக்காரனுக்கு என்ன?
சுண்டைக்காயில் இரண்டு கடியா?
சுண்டைக்காயில் கடிக்கிறது பாதி; வைக்கிறது பாதியா? 11050

சுண்டைக்காயே, சுண்டைக்காயே எனக்கு முந்தி வந்திருக்காயே.
சுண்ணாம்பில் இருக்கிறது சூக்ஷமம்; சூஷ்மத்தில் இருக்கிறது
மோக்ஷம்.
சுண்ணாம்புக் கலயத்தைத் நாய் தூக்காது.
சுண்ணாம்பு கொடுத்துச் சுங்கம் தெரிந்து கொள்வார்களாம்.
சுண்ணாம்பு தந்த சூர்ப்பணகை. 11055

சுத்த சைவம்; மரக்கறி எல்லாம் தன்னுபடி.
சுத்தம் உள்ள இடத்திலே சுகம் உண்டு.
சுத்தம் சோறு இடும்; சுகம் தரும்.
(சோறு போடும்.)
சுத்தம் சோறு போடும்; எச்சில் இரக்க வைக்கும்.
(இரக்கச் செய்யும்.)
சுத்த விலங்கோடு சுத்த விலங்குதான் சேரும். 11060

சுத்த வீரனுக்கு உயிர் துரும்பு.
சுத்திக்காரனுக்கு மூன்று இடத்திலே மலம்.
சுதேசம் விட்டுப் பரதேசம் போகாதே.

சுந்தரன் பொன்னைப் பாடுவான்.
சுந்தரியும் வாழ்க்கைப்பட்டாள்; பந்தலிலே தீப்பட்டது. 11065
சுப்பனுக்கு வீரப்பன் திடம்.

சுப்பா சாஸ்திரிக்குப் பெண்ணாய்ப் பிறந்து குப்பா சாஸ்திரிக்கு வாழ்க்கைப்பட்டு லவணம் என்றால் எருமைச் சாணி என்று தெரியாதா என்றாளாம்.
சுப்பா சுப்பா பிட்டத்தைக் கடி; அப்பா அப்பா, நான் மாட்டேன்.
சுப்பாளு பெண்ணுக்கு அப்பளம் பிடிக்கும்.
சுப்பிரமணிய சுவாமி மயில்மேல் இருப்பது போல. 11070

சுபஸ்ய சீக்ரம்.
சும்மா அறுக்கிறாய் என்ன, சொத்தைக் களாக்காய்?
சும்மா அறுப்பாளா சொத்தைக் களாக்காயை?
சும்மா ஆடுகிற சாமி கொட்டைக் கேட்டால் சும்மா இருக்குமா?
சும்மா ஆடுகிற பேய்க்குச் சாம்பிராணிப் புகை போட்டால் சொல்லவா வேண்டும்? 11075
(ஈழநாட்டு வழக்கு.)

சும்மா ஆடுமா, சோழியன் குடுமி?
சும்மா இரு என்றால் அம்மானை போலக் குதிக்கிறாயே!
சும்மா இருக்கிற சிட்டுக் குருவிக்குச் சோற்றை வைப்பானேன்? அது கொண்டையைக் கொண்டையை ஆட்டிக்கிட்டுக் கொத்த வருவானேன்?
சும்மா இருக்கிற தம்பிரானுக்கு இரண்டு பட்டை.
(சாமியாருக்கு.)
சும்மா இருககிற தாரையை ஊதிக் கெடுத்தான் தாதன். 11080

சும்மா இருக்கிற பெண்ணைத் தகப்பன் வந்து கெடுத்தானாம்.
சும்மா இருக்கிறபோது சோறு கொடுத்தவன் கேட்டால் குதிரையும் கொடுப்பான்.
சும்மா இருக்கிற மணியாரனைத் தூண்டி விடுவானேன்? போன வருஷ வாயிதாவைப் போட்டுக் கொள்வானேன்?
சும்மா இருக்கிறவன் பிட்டத்திலே சுப்பல் எடுத்துக் குத்துவானேன்?
சும்மா இருக்கிறவனைப் பிடிப்பானேன்? இராவெல்லாம் கிடந்து பிதற்றுவானேன்? 11085

சும்மா இருக்கிறாயா? சொரூபத்தைக் காட்டட்டுமா?
சும்மா இருந்த அம்மையாருக்கு அரைப் பணத்துத் தாலி போதாதா?
(பெண்ணுக்கு.)

சும்மா இருந்த உடம்பிலே சுண்ணாம்பைத் தடவிப் புண்ணாக்கு வானேன்?
சும்மா இருந்த நாய் சுருக்கில் போய்த் தொங்கியதாம்.
சும்மா இருந்தால் ஏதும் சாதிக்கலாம். 11090

சும்மா இருந்தால் சோறு ஆமா? வாடா, சித்தா கால் ஆட்ட.
சும்மாக லம்சுமக்க மாட்டாதவன்,நனைந்தால் முக்கலம் சுமப்பானா?
சும்மா கிடக்கிறதாம் சீவல்கட்டை; தூக்கிப் போட்டதாம் வெறும் கட்டை.
(கல அரிசி.)
சும்மா கிடக்கிற சங்கை ஊதிக் கெடுத்தான் ஆண்டி.
சும்மா கிடக்கிற தரையை ஊதிக் கெடுத்தான் தாதன். 11095
(அம்மான்.)

சும்மா கிடந்தால் ஆர் அறிவார்? வாடர் திம்மா, தாலாட்ட,
சும்மா கிடைக்குமா சோணாசலன் பாதம்?
(சொர்க்கலோகம்.)
சும்மா கிடைத்த மாட்டைப் பல்லைப் பிடித்துப் பார்க்கிறதா?
சும்மா கிடைத்தால் எனக்கு ஒருத்தி; எங்கள் அப்பனுக்கு ஒருத்தி.
(எனக்கு ஒன்று; எங்கள் அண்ணனுக்கு ஒன்று.)
சும்மா கிடைத்தால் எனக்கு ஒரு வைப்பாட்டி;எங்கள் சிற்றப்பாவுக்கு ஒரு வைப்பாட்டி என்றானாம். 11100

சும்மாட்டுக்கும் சும்மா இருப்பவனுக்கும் என்ன தெரியும்?
சும்மா போகிறவனைப் பிடிப்பானேன்? ராத்திரி எல்லாம் கிடந்து பிதற்றுவானேன்?
சும்மா வந்த மாட்டைப் பல்லைப் பிடித்துப் பாராதே.
(சும்மா விற்ற. பார்ப்பதா?)
சும்மா வந்தால் சிற்றப்பனுக்கு ஒன்று.
சுமந்த தலையும் சும்மாடுமாய்த் திரிகிறது. 11105
(திண்டாடுகிறது.)

சுமந்தவன் தலையிலே சும்மாடு.
சுமந்தவன் தலையிலே பத்துச் சுமை.
சுமப்பவன் அல்லவோ அறிவான் காவடிப் பாரம்?
சுமை இழந்தாருக்குச் சுங்கம் இல்லை.
சுமை கனத்தால் முன்னது பின்னதாகப் பேசுகிறதா? 11110

சுமை தாங்கி ஆயம் தீர்க்குமா?
சுமை தாங்கி சுங்கம் இறுப்பது இல்லை.
(ஆயம் தீர்க்காது.)
சுமை போட்டால் பந்தலிலே காரியம் என்ன?
(பந்தாலே.)
சுயகாரிய துரந்தரன், சுவாமி காரியம் வழவழ.
சுயகாரிய துரந்தரன், பரகாரிய பராமுகன். 11115

சுயகாரியப் புலி.
சுரை ஆழ அம்மி மிதக்க.
சுரைக்காய் ஆனால் கறிக்குப் பாதி விதைக்குப் பாதியா?
சுரைக் காய்க்கு உப்பு இல்லை என்று சொன்னானாம்.
சுரைக் காய்க்கு உப்பு இல்லை; பாகற் காய்க்குப் பருப்பு
இல்லை. 11120

சுரைக் காய்க்கு உப்பு இல்லை; பீர்க்கங்காய்க்குப் புளிப்பு இல்லை;
சுரைக்காய் மிதக்கிறது; கல் அமிழ்கிறது.
(அம்மிக் கல்.)
சுரைப்பூ பறைப்பாட்டு.
சுரைப்பூவுக்கும் பறைப்பாட்டுக்கும் மணம் இல்லை.
சுலுமுச்கு ராம ராம. 11125

சுவர்க் கீரையை வழித்துப் போடடி, சுரணை கெட்ட வெள்ளாட்டி.
சுவரின் மறைவில் யாரடா? சுரக்காரன் பத்தியம் சாப்பிடுகிறேன்.
சுவரின்மேல் இருக்கும் பூனை இந்தப் பக்கம் குதித்தாலும்
குதிக்கும்; அந்தப் பக்கம் குதித்தாலும் குதிக்கும்.
சுவருக்கும் காது உண்டு.
(காதுகள் இரண்டு.)
சுவருக்கு மண் இட்டுப் பார்; பெண்ணுக்குப் பொன் இட்டுப்
பார். 11130

சுவரை வைத்துக் கொண்டல்லவோ சித்திரம் எழுத வேண்டும்?
சுவரோடாவது சொல்லி அழு.
(ஆறு.)
சுவாசம் போனாலும் பிராசம் போகாது.
சுவாதியில் வில் போட்டால் சொன்னபடி மழை.
சுவான வைராக்கியம். 11135
(சுவானம் - நாய்.)

சுளாப்பு எல்லாம் பொல்லாப்பு.
சுள்ளைச் சுட்டுக் கொண்டு கள்ளைக் குடிக்கிறது.
(தொட்டுக் கொண்டு.)
சுற்றச் சுற்றத் தூசும் கிடைக்காது.
சுற்றத்தவரைப் பற்றி இரு.
சுற்றத்துக்கு அழகு சூழ இருத்தல். 11140

சுற்றத் துணியும் இல்லை; நக்கத் தவிடும் இல்லை.
சுற்றம் பார்க்கின் குற்றம் இல்லை.
சுற்றிச் சுற்றிச் சுங்கச் சாவடிக்கே வந்தது போல.
சுற்றிச் சுற்றி வந்தாலும் சுங்கக்காரனிடந்தான் வரவேண்டும்.

சூட்சத்திலே இருக்கிறது மோட்சம். 11145
(சூக்ஷ்மத்திலே.)
சூட்சாதி, சூட்சத் துல்லியன்.
சூட்சுமம் அறியாதவனுக்கு மோட்சம் இல்லை.
சூட்டோடு சூடு; நூற்றோடு நூறு.
சூடியும் உணர்ச்சி வராது சுரணை கெட்ட மாட்டுக்கு.
சூடு அடிக்கிற மாட்டை வாயைக் கட்டலாமா? 11150

சூடு அடித்த மாடு வைக்கோல் தின்னாமல் இருக்குமா?
சூடு ஒரு ருசி, சிவப்பு ஓர் அழகு.
சூடு கண்ட நாய் சாம்பல் குளிக்காது.
சூடு சுட்டுப் பொரி பொறுக்கினது போல.
சூடு சுரணை அற்றவனுக்கு நாடு நகரம் பெரிதா? 11155
(ஏது)?

சூடுண்ட பூனை அடுப்படியில் செல்லாது.
(அடுப்பங்கரையை நாடாது.)
சூடு பட்ட பூனை பால் குடிக்குமா?
சூத்திரப் பாவை போல் நடிக்கிறான்.
சூத்திரம் இல்லாமல் பொம்மை ஆடாது.
சூத்திர வேதன் சாத்திரம் பார்ப்பான். 11160

சூத்து இல்லாக் குடுவை சுழன்று சுழன்று ஆடுகிறது.
சூத்து ஒட்டினால் குதிரை வரகு வைக்கோலைத் தின்னும்.
சூத பலத்தைச் சக முகத்தினால் அறி.
சூதன் கொல்லையில் மாடு மேயும்.
சூதனுக்கு நீதி இல்லை. 11165

சூதாடி கெட்டான்; சுற்றி இருந்தவன் வாழ்ந்தான்.
சூதாடி கையும் கோள்காரன் வாயும் சும்மா இரா.
(சூதுக்காரன்.)

சூதானத்துக்கு அழிவு இல்லை.
சூதினால் வெல்வது எளிது.
(சூதில்.)
சூது ஆடித் தோற்றவனுக்குச் சுகம் கிட்டாது. 11170

சூது ஆடினவன் கெட்டான்; சுற்றியிருந்தவன் பிழைத்தான்.
சூதுக்காரன் கையை வெட்டிப் போட்டாலும் துடுப்பைக் கட்டிக் கொண்டு சூது ஆடுவான்.
சூதுக்காரன் பணம் சுற்றியிருக்கிற பேரைச் சாரும்.
சூதும் வாதும் வேதனை செய்யும்.
சூது விரும்பேல். 11175

சூரன் இல்லா விட்டால் சுப்பிரமணியன் வருவதற்கு இல்லை; வள்ளி இல்லா விட்டால் வடிவேலன் வருவதற்கு இல்லை.
சூரனுக்குத் துரை மக்கள் துரும்பு.
சூரிய விளக்கு இருக்கச் சுடர் விளக்கு எதற்கு?
சூரியன் எழுமுன் காரியம் ஆடு.
சூரியன் கீழ்த் தோன்றியது எல்லாம் மாயை. 11180

சூரியன் தந்த அக்கினியைக் கொண்டு சூரியனைப் பணிவது போல.
சூரியன் முன் சூழ்ந்த கருமேகம்.
சூரியன் முன்னே சந்திரன் தோன்றும்.
சூரியன் முன்னே சூழ்ந்த இருள் போல.
சூரியன் முன்னே தோன்றின சந்திரன் போல. 11185

சூரியன் முன்னே பனி நிற்காது.
சூரியன் வெளிச்சத்தில் சுடர் விளக்கு எதற்கு?
சூரியனுக்குக் குடை பிடிக்கலாமா?
சூரியனுக்கு முன் பனி போல.
சூரியனுக்கு முன் மின்னாம் பூச்சி போல. 11190
(மின்மினி.)

சூரியனைக் கண்ட இருள் போல.
சூரியனைக் கண்ட தாமரை போல.
சூரியனைக் கண்ட பனி போல.
சூரியனைக் கண்டு உலகம் விளங்கும்.
சூரியனைக் கண்டு பட்டி குரைத்தால் சூரியனுக்கு என்ன? 11195
(பட்டி-நாய்; நாஞ்சில் நாட்டு வழக்கு.)

சூரியனைக் கல்லால் அடித்தது போல.
சூரியனைக் கிரகணம் பிடித்தது போல் என்னைச் சனி பிடித்தது.
சூரியனைக் கையால் மறைத்தாற் போல.
(மறைக்க முடியுமா?)
சூரியனைப் பார்த்து நாய் குரைத்தது போல.
சூல் ஆடும் மீன்கள் ஒன்றை ஒன்று மோந்து கொள்ளும். 11200

சூல் வித்தை காட்டுகிறேன்; பராக்கு இல்லாமல் பார்.
சூலிக்குச் சுக்குமேல் ஆசை.
சூலி சூலி என்று சோற்றைத் தின்று மலடி வாயில் மண்ணைப் போடுகிறதா?
சூலி மயக்கமும் சுடுகாட்டு ஞானமும் பாதி வழி மறையும் மட்டும்.
சூழ ஓடியும் வாசலாலே. 11205
(வெட்டியும்.)

சூறைக் காற்றில் அகப்பட்ட பூனைப் போல.
சூக்ஷ்மத்தில் இருக்கிறது மோட்சம்.



## கி.வா.ஜ.

இவர் 11.4.1906–ம் ஆ
பிறந்தார். தந்தை வாசுதேவ
தாயார் பார்வதி அம்மாள்.
பள்ளியில் படிக்கும்போதே '
சிந்தாமணி' பாடல்
மனப்பாடம் செய்து, அ
அர்த்தம் சொல்லுவார்.
பருவத்திலேயே இவர் மேலு
தமிழ்ப் புத்தகங்களை
மனப்பாடம் செய்து விட்டு,
அதேபோல பாடல்களை
விடுவாராம். இந்த ஆற்
ரெயிலில் போய்வரும் போது
ரெயில் ஓட்டத்தின் குதியோ
ஏற்ப ஏதாவது பாடிக் கொ
இருப்பாராம். இவரது
முயற்சியில் உருவானது. 'பே
பந்து' என்னும் பதிகம்.
துரைசாமி ஐயங்கார் நடத்தி
'ஒற்றுமை' பத்திரிகையில்
வெளியானது. 1927–ல்
மகாவித்துவான் உ.வே. சுவா
ஐயரிடம் மாணாக்க
சேர்ந்தார். 1933–ல்
'வித்துவான்' பட்டம் பெ
1949–ல் காஞ்சி மஹா சுவா
இவருக்கு 'திருமுருகாற்று
அரசு' என்ற பட்டத்தையும், 1
'வாகீச கலாநிதி'
பட்டத்தையும் கொ
கௌரவித்தார். 1982–ம் ஆ
ராஜா சர் அண்ணாம
செட்டியார் நினைவுப்
இவருக்கு வழங்கப்ப
இலக்கியம் சமயம் ஆகிய
துறைகளிலும் உரையாற்று
வல்லவர். நூற்றுக் கண
தமிழ் நூல்களை எழுதிய
4.11.1988–ம் ஆண்டு தம் வ
நிறைவு செய்து கொண்டார்.

# தமிழ்ப் பழமொழிகள்

## தொகுதி 3

தொகுத்தவர்
கி. வா. ஜகந்நாதன்



ஜெனரல் பப்ளிஷர்ஸ்

# முகவுரை

இந்தப் புத்தகத்தில் ஏறத்தாழ25,000 பழமொழிகள் உள்ளன. இவை கடந்த நாற்பது ஆண்டுகளாக நான் சேகரித்தவை. சொற்பொழிவு செய்யும் பொருட்டு வெளியூர்களுக்குச் சென்ற காலங்களில் அங்கே உள்ள ஆடவர்களிடமும் பெண்மணிகளிடமும் கேட்டுப் பழமொழிகளை எழுதி வந்தேன், பெரும்பாலும் முதிய பெண்மணிகளே பல பழமொழிகளைச் சொன்னார்கள். பழமொழியை முதுமொழி என்றும் வசனம் என்றும் கூறுவர். பழமொழிகள் அடங்கிய பாடல்களைப் பெற்ற நூல்கள் பழமொழி நானூறு, கோவிந்தசதகம், தண்டலையார் சதகம், இரத்தின சபாபதி மாலை, அருணாசல கவி இராம நாடகக் கீர்த்தனை முதலியவை.

இந்தப் பழமொழிகளில் பல்வேறு சாதியினரைக் குறை கூறி உள்ளவை பல உண்டு. அவற்றைக் கண்டு அந்தச் சாதியைச் சேர்ந்த அன்பர்கள் சினம் கொள்ள மாட்டார்கள் என்று நம்பு கிறேன். இழித்துக் கூறுவதில் எந்தச் சாதியினரையும் விட்டு வைக்கவில்லை. பார்ப்பனர்களை இழித்துக் கூறும் பழமொழிகள் பல. அத்தகையவற்றை அப்படி அப்படியே காட்டியுள்ளேன். தமிழ் மக்களுடைய எண்ணம் எவ்வாறு படர்ந்தது என்பதை இவை காட்டுகின்றன.

நாடோடி இலக்கியத்தைச் சார்ந்தவை பழமொழிகள். அறிவு தெரிந்த சிறுவர் முதல் முதுமை உடையவர்கள் வரை யாவரும் தாம் பேசும் பொழுது பழமொழிகளை ஆளுவார்கள். அவரவர் களுடைய அனுபவத்துக்கு ஏற்ற வகையில் அவை இருக்கும். உபநிடதம், இலக்கிய இலக்கணங்கள் ஆகியவற்றைப் பற்றிய பழமொழிகளும் உண்டு. விலங்கினங்கள், பறவைகள், நீர்வாழ் பிராணிகள், ஊர்வன, புழுபூச்சிகள் முதலியவற்றைப் பற்றிய பழமொழிகள் பல. இவற்றை ஆராய்ந்து கட்டுரைகளை எழுதலாம். பல பெரியோர்களுடைய வரலாறுகள் சம்பந்தமான பழமொழிகளும்

உண்டு. கம்பன், ஒட்டக்கூத்தர் முதலிய புலவர்களைப் பற்றிய பழமொழிகள் சில உள்ளன.

சில சில ஊர்களைப் பற்றிய பழமொழிகளும் பல உண்டு. அந்த ஊர்களில் எழுந்தருளியிருக்கும் தெய்வங்களைப் பற்றிய பழமொழிகளும் உள்ளன.

இவ்வாறு பல பல துறைகளில் அமைந்த இந்தப் பழமொழிகள் அறிவைத் தூண்டுகின்றவை.

தமிழ் மக்கள் இந்தப் புத்தகத்தில் உள்ள பழமொழிகளைப் படித்து இன்புறுவார்கள் என்று நம்புகிறேன்.

**கி. வா. ஜகந்நாதன்**

'காந்தமலை'
சென்னை—28
4—5—88

# தொகுதி 3

## செ

செக்கானிடம் சிக்கின மாடும் பார்ப்பானிடம் சிக்கிய ஆளும்
உருப்படமாட்டார்கள்.
(உருப்படவே முடியாது.)
செக்கில் அரைபட்ட எள்ளுப் போல.
செக்கில் அரைபட்ட எள் திரும்ப முழுசு ஆகுமா? 11210

செக்கில் அரைபட்ட தேங்காய் பிண்ணாக்கு ஆவது போல.
(பிண்ணாக்கைப் போல.)
செக்கு அடிக்கும் தம்பூருக்கும் ஒத்து வருமா?
செக்கு அடி முண்டம் போல உட்கார்ந்திருக்கிறான்.
செக்கு அடி முத்தி, எனக்கு என்ன புத்தி?
செக்கு அளவு பொன் இருந்தாலும் செதுக்கி உண்டால் எத்தனை
நாளுக்குக் காணும்? 11215
(செதுக்குத் தின்னக் குறையும். செக்குப் போல.)

செக்கு உலக்கைபோல் நிற்கிறான்.
செக்கு உலக்கையை விழுங்கினவனுக்குச் சுக்குக் கஷாயம்
மருந்து ஆமா?
(தின்றவனுக்கு. சுக்குக் கஷாயம் குடித்தாற் போல)
செக்கு என்றும் சிவலிங்கம் என்றும் தெரியாதா?
செக்குக் கண்ட இடத்தில் எண்ணெய் தேய்த்துச் சுக்குக் கடை
இடத்தில் பிள்ளை பெறுவது.
(தலை முழுகிப் பிள்ளை பெறலாமா?)
செக்குக்கு ஏற்ற சிவலிங்கம். 11220

செக்குக்கும் சிவலிங்கத்துக்கும் வித்தியாசம் தெரியாதவன்.
செக்குக்கு மாடு கொடுத்தாலும் கொடுக்கலாம்; சீவலப்பேரியில்
பெண் கொடுக்கக் கூடாது.
செக்கு நக்குகிற தம்பிரானே, உன் திருவடிக்குத் தண்டம்;
அந்தண்டை நக்குடா பிள்ளாய்; ஐசுவரியம் பெருகி இருப்பாய்.
செக்கு நக்குகிற தம்பிரானே, தண்டம்; நீ தென்புறம் நக்கு; நான்
வடபுறம் நக்குகிறேன்.
செக்கும் சிவலிங்கமும் தெரியாதா? 11225

செக்குமாட்டைக் கவலையிலே கட்டினாற் போல.
செக்குமாடு போல் உழைக்கிறான்.
செக்கை நக்குகிற தம்பிரானே, தண்டம், நீ தென்புறம் நக்கு; நான் உட்புறம் நக்குகிறேன்.
செக்கை வளைய வரும் எருதுகளைப் போல்.
செக்கை விழுங்கிவிட்டுச் சுக்குத் தண்ணீர் குடித்தாற் போல. 11230

செங்கதிர் முன்னே வெண்கதிர் அடங்கினது போல.
செங்கோல் அரசனே தெய்வம் ஆவான்.
செங்கோல் ஓங்குபவன் திரித்துவத் தேவன்.
செங்கோல் கோணினால் எங்கும் கோணும்.
செங்கோலுக்கு முன் சங்கீதமா? 11235

செஞ்சி அழிந்தது; சென்னை வளர்ந்தது.
(சென்னப் பட்டணம் தோன்றியது.)
செட்டிக்கு இறுத்துப் பைக்கும் இறுத்தேன்.
(+ துலுக்கச்சிக்கு எதற்கு உருக்கு மணி?)
செட்டிக்கு உறக்கம் உண்டு; வட்டிக்கு உறக்கம் இல்லை.
செட்டிக்கு எதற்குச் செம்புச் சனியன்?
செட்டிக்கு ஏன் சென்மச் சனியன்? 11240

செட்டிக்கு ஒரு சந்தை; திருடனுக்கு ஓர் அமாவாசை.
செட்டிக்கு ஒரு தட்டு; சேவகனுக்கு ஒரு வெட்டு.
செட்டிக்குத் தெற்குச் செம்புச் சனியன்.
செட்டிக்கும் பயிருக்கும் சென்மப் பகை.
செட்டிக்கும் மட்டிக்கும் சென்மப் பகை. 11245

செட்டிக்கு வேளாண்மை சென்மப் பகை.
செட்டி கப்பலுக்குச் செந்தூரான் துணை.
(காப்பு.)
செட்டிகள் மாடு மலை ஏறி மேயுமா?
செட்டி கூடிக் கெட்டான்; சேணியன் பிரிந்து கெட்டான்.
செட்டி கெட்டால் பட்டு உடுத்துவான். 11250
(கெட்டும், உடுப்பான்.)

செட்டி கொடுத்துக் கெட்டான்.
செட்டி சிதம்பரம்.
செட்டி சுற்றாமல் கெட்டான்; தட்டான் தட்டாமல் கெட்டான்.
செட்டி நீட்டம் குடி தலையிலே-
செட்டி நட்டம் தட்டானில்; தட்டான் நட்டம் ஊர்மேலே. 11255
(யாழ்ப்பாண வழக்கு.)

செட்டிப் பிள்ளையோ? கெட்டிப் பிள்ளையோ!
செட்டி பட்டினி; கால்பணம் சொட்டினான்.
செட்டி படை வெட்டாது; செத்த பாம்பு கொத்தாது.
செட்டி படை வெல்லுமா? சேற்றுத் தவளை கடிக்குமா?
செட்டி பணத்தைக் குறைத்தான்; சேணியன் நூலைக் குறைத்தான். 11260
(காலை.)

செட்டி பிள்ளை கெட்டி.
செட்டி புறப்படப் பட்டணம் முடியும்.
செட்டி போன இடம் எல்லாம் வட்டம் காற்பணம்.
செட்டி மகன் கப்பலுக்குச் செந்தூரான் துணை.
செட்டி முறை எட்டு முறை; எட்டு முறையும் கெட்ட முறை. 11265
(நாஞ்சில் நாட்டு வழக்கு.)

செட்டியார் கப்பலுக்குத் தெய்வமே துணை.
(செந்தூரான்.)
செட்டியார் பிணம் சீத்தென்று போயிற்று.
செட்டியார் பிள்ளை செல்லப் பிள்ளை ஆனால் படைக்குப் போகிற நாயக்கரைப் பயமுறுத்தலாமா?
செட்டியார் மிடுக்கா? சரக்கு மிடுக்கா?
(முடுக்கா? + அம்மி முடுக்கா, அரைப்பு முடுக்கா?)
செட்டியார் வாழ்வு செத்தால் தெரியும். 11270
(செத்தால்தான்.)

செட்டியாருக்கு ஒரு காலம்; சேவகனுக்கு ஒரு காலம்.
செட்டியாரே, செட்டியாரே என்றால் சீரகம் பண எடை முக்காற் பணம் என்கிறான்.
செட்டியாரே, செட்டியாரே என்றால் சீரகம் மணக்கிறது என்பான்.
செட்டியாரே, வாரும்; சந்தையை ஒப்புக் கொள்ளும்.
செட்டியும் தட்டானும் ஒன்று; கட்டிப் புரண்டாலும் தனி. 11275

செட்டியை நீலி தொடர்ந்தது போல.
(நீலி கதை.)
செட்டி வீட்டில் பணம் இருக்கிறது; ஆல மரத்தில் பேய் இருக்கிறது.
செட்டி வீட்டு நாய் சேர் காத்திருந்தது போல.
செட்டி வீட்டு நாயும் கணக்குப் பார்த்துக் கடிக்கும்.
செட்டி வெள்ளரிக்காய் என்றால் நரி நொட்டை விட்டுத் தின்னுமாம். 11280
(சொட்டாங்கு விட்டு.)

செட்டுக்கு ஒரு தட்டு; தேவடியாளுக்கு ஒரு மெட்டு.
செட்டும் கட்டுமாக வாழ்ந்தான்.
செடி இல்லாத குடி போல.
செடி கண்டு பேளாதான் வாழ்க்கை தடி கொண்ட நாயோடு ஒக்கும்.
செடியில் இருக்கிற ஓணானை மடியில் கட்டிக் கொண்டு
குடைகிறது குடைகிறது என்றாள். 11285

செடியில் வணங்காதது மரத்தில் வணங்குமா?
செடியை வைத்துக் கொண்டு விலை கூறலாமா?
சென்னூருக்குப் போகிறேன்; செம்மை உண்டா என்ற கதை.
செத்த அன்று வா என்றால் பத்தன்று வருவான்.
(என்று சொன்னால் பத்தாம் நாள் வருவான்.)
செத்த ஆட்டுக்குக் கண் பெரிது; தாய் இல்லாப் பிள்ளைக்கு 12390
வயிறு பெரிது.

செத்த ஆடு காற் பணம்; சுமை கூலி முக்காற் பணம்.
செத்த இடத்தில் புல் முளைத்துப் போகும்.
செத்தது செத்தாயே, செட்டி குளத்தில் விழுந்து சாகலாமா?
செத்த நாய் ஊதினாற் போல.
செத்த நாய் செருப்பைக் கடித்தது போல. 11295

செத்த நாய் திரும்பக் கடிக்காது.
(திருப்பி.)
செத்த நாயில் உண்ணி கழன்றது போல.
செத்த நாயை இழுத்து எறிவது போல.
செத்த பாம்பு வருகிறதே அத்தை, நான் மாட்டேன்
என்றதைப் போல.
செத்த பாம்பை அடிப்பது எளிது. 11300

செத்த பாம்பை ஆட்டுகிறான்.
செத்த பாம்பை ஆட்டுவாளாம் வித்தைக்காரப் பெண் பிள்ளை.
(வித்தைக்காரன் மனைவி.)
செத்த பாம்பை எட்ட நின்று அடிப்பான், சீனத்து அதிகாரி.
செத்த பாம்பை எட்டித் தள்ளி நின்று அடிக்கும் தீரன்.
செத்த பிணத்திற் கடை, உற்றார்க்கு உதவாதவன். 11305

செத்த பிணத்துக்கு அருகே நாளைச் சாகும் பிணம் அழுகிறது.
(இனிச் சாகும்).
செத்த பிணதத்துக்கு இனிச் சாகும் பிணம் அழுகிறது.
செத்த பிணத்துக் கண் ஏன்? சிவசிவ ஆண்டிக்குப் பெண் ஏன்?

செத்த பிணத்தைச் சுற்றித் திரிந்தாற் போல.
செத்த பிறகே செய்தவனுக்குச் செய்கிறது? 11310
(செத்தவனுக்கு.)

செத்த பிறகா செல்வம் அநுபவிக்கிறது?
செத்தபின் எப்படிப் போனால் என்ன?
செத்தபின் வீட்டில் கெட்டவன் யார்?
செத்த மாட்டை அறுக்காத கத்தி சொத்தைக் கத்தரிக்காயை அறுக்கும்.
செத்த மாடு புல் தின்னுமா? 11315

செத்தவன் இருக்கச் சவுண்டி சாப்பிட்டது நிஜம் என்பது போல்.
செத்தவன் உடலம் சுமந்தவன் கண்மேலே.
செத்தவன் உடைமை இருந்தவனுக்குக் கிடைக்கும்.
(இருந்தவன் சொத்து.)
செத்தவன் கண் கடாக்கண்; இருந்தவன் கண் இல்லிக்கண்.
செத்தவன் கண் செந்தாமரைக் கண்; இருக்கிறவன் கண் நொள்ளைக் கண். 11320

செத்தவன் கண் பெரிய கண்.
செத்தவன் காதில் சுக்கு வைத்து ஊதினாற் போல.
செத்தவன் கையில் வெற்றிலை பாக்குக் கொடுத்த சம்பந்தம்.
(வெறும் பாக்குக் கொடுத்தது போல.)
செத்தவன் சாட்சிக்கு வருவது இல்லை.
செத்தவன் செந்தாமரைக் கண்ணன். 11325

செத்தவன் தலை கிழக்கே இருந்தால் என்ன? மேற்கே இருந்தால் என்ன?
செத்தவன் தலையில் எத்தனை வண்டி ஏறினால் என்ன?
செத்தவன் நான் இருக்கச் சவுண்டி சாப்பிட்டவன் நான் என்றானாம்.
செத்தவன் பாரம் சுமந்தவன் தலையில்.
செத்தவன் பிழைத்தால் வெற்றி கொள்கிறது ஆர்? 11330

செத்தவன் பிட்டத்தில் நெய் எடுத்துத் திருவண்ணாமலைக்கு விளக்கு ஏற்று.
செத்தவன் பிட்டம் தெற்கே கிடந்தால் என்ன? வடக்கே கிடந்தால் என்ன?
(கிழக்கே இருந்தால் என்ன? மேற்கே இருந்தால் என்ன?)
செத்தவன் பிள்ளை இருக்கிறவனுக்கு அடைக்கலம்.

செத்தவன் பெண்டாட்டியை இருந்தவன் கொண்டது போல.
(பெண்சாதியை.)
செத்தவன் பெண்டினைக் கட்டினாலும் விட்டவன் பெண்டினைக்
கட்டக் கூடாது. 11335
(யாழ்ப்பாண வழக்கு.)

செத்தவன் வாயிலே மண்; இருந்தவன் வாயிலே சோறு.
செத்தவன் வீட்டில் கெட்டவன் யார்?
செத்தவன் வீட்டில் பாடுபட்டவர் ஆரோ?
செத்தன்று வா என்றால் பத்தன்று வருவான்.
செத்தாருக்கு உவமானம் வையகத்தில் இல்லையா? 11340

செத்தாரைச் சாவார் சுமப்பார்கள்.
செத்தால் செடியைக் கா; பிழைத்தால் வீட்டைக் கா.
செத்தால் தெரியும் செட்டியார் வாழ்வு.
செத்தால் பிழைக்க மாட்டான்.
செத்துக் கிடக்கிற பிணத்தைக் கண்டால் சிறுக்கச் சிறுக்க
வெட்டுவேன் என்ற கதை. 11345
(சிறுக்கிறவரை.)

செத்துச் சுண்ணாம்பாய்ப் போகிறேன்.
செத்துத் தெய்வமாய் நிற்கிறாள்.
செத்துப் போகும் போது தலையில் கட்டிக் கொண்டு போகிறானோ?
செத்துப் போன தாதன் மொட்டுப் போல முளைத்தான்.
செத்துப் போன பசுவைக் கெட்டுப் போன பாப்பானுக்குத்
தாரை வார்த்த கதை. 11350

செத்துப் போன பாட்டன் இருந்தால் தாடியைப் பிடித்துக்
கொண்டு தொங்கலாம்.
(தெரிவிக்கலாம்.)
செத்துப் போன பாட்டி இருந்தால் கூட இரண்டு சிற்றப்
பனைப் பெற்றிருப்பாள்.
செத்துப் போன பார்ப்பானுக்குச் செட்டிப் பெண்ணைக்
கொடுத்தாளாம்.
செத்துப் போன பிறகு நித்திய சிராத்தம் செய்கிறது.
செத்துப் போன மாடு உயிரோடு இருந்தால் உடைந்து போன
கலயத்தால் ஒன்பது கலயம் கறப்பேன் என்றாளாம். 1.355

செத்தும் கொடுத்தான் சீதக்காதி.
(சீதக்காதி-செய்து அப்துல் காதர்.)
செத்தும் கொடுத்தான் சீவரத்துக் கிராமணி.
(சீயபுரத்து.)
செத்தும் சாகாதவன் தியாகம் கொடுப்போன்.
செத்தைக்குள் கிடந்ததைத் தூக்கி மெத்தை மேலே வைத்தால் அது செத்தையைச் செத்தையைத்தான் நாடும்.
(யாழ்ப்பாணத்து வழக்கு.)
செத்தைக் கூலி கால் பணம்; சுமை கூலி முக்கால் பணம். 11360

செந்தழலை முன்றானையில் முடியலாமா?
செந்நாய்க் கூட்டத்துக்குச் சிறுத்தையும் அஞ்சும்.
செந்நாயைச் செருப்பால் அடி; கருநாயைக் கழியால் அடி.
செப்படி வித்தை எப்படிச் செய்கிறான்?
(செப்பிடு வித்தை.)
செப்படி வித்தை எப்படிப் போவேன்? 11365

செப்பு இல்லாக் குடிக்கு அப்பாப் பட்டமா?
(பாடமா?)
செப்புக் கொட்டப்பா, செப்புக் கொட்டு, அப்பம் தின்னலாம் செப்புக் கொட்டு, அவல் இடிக்கலாம் செப்புக் கொட்டு.
(நாஞ்சில் நாட்டு வழக்கு.)
செப்பும் பந்தும் போல.
செம்பால் அடித்த காசும் கொடாத லோபி.
(காசு தர மாட்டேன்.)
செம்பிலும் இல்லை; கல்லிலும் இல்லை. 11370

செம்பரம்பாக்கத்தான் பெயர் பெற்றான்; மாங்காட்டான் நீர் பெற்றான்.
செம்பாடு அடித்தால் என் பாடு தீர்ந்தது.
செம்பு, கம்பளி, எம்பெருமான், பாதேயம், பாதரக்ஷணம்.
(பாதேயம்-கட்டுச்சோறு. பாதரக்ஷணம்-செருப்பு.)
செம்பு நடமாடினால் குயவன் குடி போவான்.
(நடமாடக் குயவன் தன்னால் ஒதுங்குவான்.)
செம்பொற் சோதி, தம்பிரான சடையைச் சோதி. 11375
(ஒரு கதை. செம்பொனி சோதி. திருவையாற்றில் உள்ள ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்.)

செம்போத்து உண்டானால் சம்பத்து உண்டாகும்.
செம்மறி ஆடு வெளியே ஓடத் திருட்டு ஓநாய் உள்ளே.
செம்மறிக் குளத்தான் சுரைக் கொடிக்குப் பாத்தி வெட்டியதுபோல

செய்கிறது எல்லாம் செய்து விட்டுக் கழுநீர்ப்பானையில் கை அலம்பினாளாம்.
செய்கிறது சிரைக்கிற வேலை; நினைக்கிறது சிரஸ்தார் வேலை. 11380

செய்கிறதை விட்டு விட்டுச் சினையாட்டுக்கு மயிர் பிடுங்குகிறான்.
(மயிர் தானே கொட்டிவிடும்.)
செய்கிறவர்களுக்குச் சொல்லத் தெரியாது; சொல்கிறவர்களுக்குச் செய்யத் தெரியாது.
செய்த தீவினை செய்பவர்க்கே.
செய்த நன்றியைச் செத்தாலும் மறக்கலாமா?
செய்த பாவத்தைச் சொல்லிக் கழி. 11385

செய்தவம் மறந்தால் கைதவம் ஆகும்.
செய்தவர் பாவம் சொன்னவர் வாயோடே.
செய்தவனுக்குச் செய்ய வேணும்; செத்தவனுக்கு அழ வேணும்.
செய்த வினை செய்தவர்க்கே எய்திடும்.
செய்த வினை செய்தவனையே சாரும். 11390

செய்தார்க்குச் செய்வது செத்த பிறகோ?
செய்தானை ஒவ்வாத பாவையோ இல்.
(பழமொழி நானூறு.)
செய்தும் சிரிப்பாணி.
செய்யாத வித்தை எல்லாம் செய்தாலும் தேங்காய்க் குடுக்கையிலே மூத்திரம் பெய்வாளா?
செய்யாப் பிள்ளை வரப்பிலே செய்வாய், செய்வாய் என்றேனே; நீ செய்யேன்; செய்யேன் என்றாயே; நீ பார்த்துக் கொள்; நீ கேட்டுக் கொள். 11395

செய்யும் தொழில் எல்லாம் சீர்தூக்கிப் பார்க்கின் நெய்யும் தொழிலுக்கு நிகர் இல்லை.
செய்வன திருந்தச் செய்.
(செய்வினை.)
செயற்கை வாசனையோ? இயற்கை வாசனையோ?
செருப்பாக உழைத்தான்.
செருப்பால் அடித்தாலும் திருட்டுக்கை நில்லாது. 11400

செருப்பால் அடித்துக் கருப்பட்டி கொடுப்பது போல.
செருப்பால் அடித்துக் குதிரைக் கொடை கொடுத்தாற் போல.

செருப்பால் அடித்துக் குதிரையோடு தீவட்டி பிடித்தாற்போல.
(தீவட்டி கொடுத்தாற் போல.)
செருப்பால் அடித்துப் பட்டுப் புடைவை கொடுத்தாற்போல.
செருப்பால் அடித்துப் பருப்புச் சோறு போட்டது போல. 11405

செருப்பின் அருமை வெயிலில் தெரியும்; நெருப்பின் அருமை குளிரில் தெரியும்.
செருப்புக் கடித்தால் திருப்பிக் கடிப்பதா?
செருப்புக்காகக் காலைக் குறைக்க முடியுமா?
(குதியைத் தறிக்கிறதா?)
செருப்புக் காலைக் கடித்தால் நாம் செருப்பைக் கடிப்பதா?
செருப்புக்கு அச்சாரம் துரும்பு. 11410

செருப்புக்குத் தகுந்தாற்போல் காலை வெட்டுவதா?
செருப்புப் போட்டவன் கூடவும் சந்நியாசி கூடவும் துணை போகாதே.
செருப்பு வைத்துச் சேவடி தொழுமாப் போலே.
செல் அரித்த காதுக்கு வெள்ளைக் கம்மல் ஏன்?
செல்லக் குடுக்கைத் தேங்காயே, பல் இடுக்கிலே புகுந்தாயே! 11415

செல்லச் சக்கிலிப் பிள்ளை செருப்புச் செருப்பாய்த் தின்று கழிகிறது.
செல்லச் சிறுக்கி அகமுடையான் செவ்வாய்க்கிழமை செத்தானாம்; வீடு வெறிச்சாய் போகுமென்று வெள்ளிக்கிழமை எடுத்தாளாம்.
செல்வத்தில் ஒரு பெண் பிறந்தது; செட்டித் தெரு எல்லாம் திரிந்து விட்டு வந்தது.
(அலைந்து விட்டு, நொட்டிவிட்டு.)
செல்லப் பிள்ளை; ஒன்றும் சொல்லப் புள்ளை.
(சொல்ல முடியவில்லை.)
செல்லப் பிள்ளை சீலை உடாதாம், பிள்ளை பெறுமட்டும். 11420

செல்லப் பிள்ளை செத்தாலும் சொல்லப் பிள்ளை சாகாது.
செல்லம் சறுக்காதா? வாசற்படி வழுக்காதா?
(சறுக்குதா? வழுக்குதா?)
செல்லம சிரிப்பாணி, சீரங்கத்துத் குந்தாணி.
செல்லம் சீர் அழிக்கும்.
(அழியும்.)
செல்லம சொல்லுக்கு அஞ்சாள்; அழகி நடைக்கு அஞ்சாள். 11425

செல்லம் சொல்லுக்கு அஞ்சுமா?
செல்லம் பரமண்டலத்தில் செல்லாது; எல்லா மண்டலமும் செல்லும்

செல்லன் சொல்லுக்கு அஞ்சான்: அழகன் நடைக்கு அஞ்சான்.
செல்லாக் கோபம் பொறுமைக்கு அடையாளம்.
செல்லாத காசு என்றைக்கும் செல்லாது. 11430
(எங்கும். பணம்.)

செல்லாத பணம் என்று எண்ணாதே; செட்டியார் இருக்கிறார்; காட்டிக் கொள்.
செல்லிக்குச் சிரங்கு; சிறுக்கிக்கு அரையாப்பு; பார்க்க வந்த பரிகாரிக்குப் பக்கப் பிளவை.
(பரிகாரி-வைத்தியன்.)
செல்லுகளால் தினந்தோறும் வளர்க்கப் படாத புற்றுப் போல்.
(செல்-கறையான்.)
செல்லும் காசுக்கு வட்டம் உண்டா?
செல்லும் செல்லாததற்குச் செட்டியாரைக் கேள். 11435
(செட்டியார் இருக்கிறார். இது ஒரு கதை.)

செல்லும் பொழுது செலுத்துவாய் சிந்தையை.
செல்வச் செருக்கினால் திரட்டுப்பால் குமட்டுகிறது.
செல்வ நிலையில் சேட்டன் கீழ்க் குரு.
(சேட்டன்-தமையன்.)
செல்வப் பெண் சீரங்க நாயகிக்குச் சீதனம் வந்ததாம் வறையோடு.
செல்வப் பொருள் கொடுத்தால் குறையும்; கல்விப் பொருள் குறையுமோ? 11440

செல்வம் உண்டாகும் காலம் செய்கை உண்டு; வல்லமை உண்டு.
செல்வம் என்பது சிந்தையின் நிறைவே.
(குமர குருபரர் வாக்கு.)
செல்வம் சகடக்கால் போல வரும்.
செல்வம் சீர் அழியுமா?
செல்வம் சீரைக் கெடுக்கும். 11445

செல்வம் செருக்குகிறது; காசுக்கு வழி இல்லை.
செல்வம் செருக்குகிறது; வாசற்படி வழுக்குகிறது.
(சறுக்குகிறது.)
செல்வம் சொலலுக்கு அஞ்சாது.
செல்வம் தொகற்பால போழ்தே தொகும்.
(பழமொழி நானூறு)
செலவம் நிலைகல: சேட்டன் கீழ் இரு. 11450

செல்வம் பரமண்டலத்தில் செல்லாது; எல்லா மண்டபமும் செல்லும்.
செல்வமும் சீரும் வளர்த்தாரோடே போயின.

செல்வமே ஜீவாதாரம்.
செல்வர் எழுந்தருள்வது காலக்ஷேபத்துக்கு விரோதம்.
(சீரங்கத்தில்.)
செல்வர்க்கு அழகு செழுங்கிளை தாங்குதல். 11455

செல்வன் சொல்லுக்கு அஞ்சான்; வீரன் போருக்கு அஞ்சான்.
செலவில் குறைந்த வரவானால் சேமிப்பது எப்படி?
(சேமப்படுகிறது.)
செலவு அதிகம்; வரவு போதாது.
செலவு இல்லாச் செலவு வந்தால் களவு இல்லாக் களவு வரும்.
செலவு இல்லாத சிங்காரம் போல. 11460

செலவு இல்லாப் பணத்துக்குச் சில்லறைக் கடை வைத்துப் பார்த்தானாம்.
செலவு உண்டானால் சேவகம் உண்டு.
செலவோடு செலவு, கந்தப் பொடிக்குக் காற்பணம்.
செவ்வாய் நட்டுப் புதன் அறுக்கல் ஆகாது.
செவ்வாய் புதன் வடக்கே சூலம். 11465

செவ்வாய் வெள்ளி செலவிடாதே.
செவ்வாயோ? வெறுவாயோ?
செவிட்டில் அடித்தால் ராகம் போட்டு அழத் தெரியாது.
(செவிடு - கன்னம்.)
செவிட்டில் அறைந்தாலும் தேம்பி அழத் தெரியாது.
செவிட்டுக்குச் சூன்யம்; அசட்டுக்கு ஆங்காரம். 11470

செவிடன் காதிலே சங்கு ஊதின மாதிரி.
(செவிடன் முன்னே.)
செவிடன் பாட்டுக் கேட்கப் போனது போல்.
செவிடன் பாட்டுக் கேட்ட சம்பந்தம்.
செவிடனும் குருடனும் கூத்துப் பார்த்தாற் போல.
செவிடு இருந்தால் ஊமை இருக்கும். 11475

செழிப்புக்குத் தேன் குருவு.
சென்மக் குணத்தைச் செருப்பால் அடித்தாலும் போகாது.
சென்மக் குருடனுக்குக் கண் கிடைத்தது போல.

சென்மத்தில் பிறந்தது செருப்பால் அடித்தாலும் போகாது.
(சென்மத்தோடே வந்தது.)
சென்ற இடம் எல்லாம் சிறப்பே கல்வி. 11480

சென்ற இடம் சிறப்பும், கொண்ட இடம் காணியும்.
சென்ற காசுக்கு வட்டம் இல்லை.
சென்ற காரியத்தைப் பார்த்து, வரும் காரியத்தை அறி.
சென்றது எல்லாம் போகப் பிள்ளையாரே வாரும்.
சென்றும் செலவழித்தும் சீர் அழிந்த குடித்தனம். 11485

சென்னிமலை, சிவன்மலை, சேர்ந்ததொரு பழனிமலை.
சென்னைக்கு வந்து சிவம் ஆனேன்.

சே என்றதற்கு நாய் சேலை கட்டாமல் அலைகிறது.
சேடனுக்கு ஏன் குரங்கு?
(சேடன்-நெசவு வேலை செய்கிறவன்.)
சேடனுக்கு ஏன் குரங்குப் புத்தி? சேற்றில் கிடப்பவனுக்கு ஏன்
சோமக் கட்டு? 11490

சேணியன் குடுமி சும்மா ஆடுமா?
சேணியன் நூலை விற்பான்; சௌராஷ்டிரன் சேலையை விற்பான்.
சேணியனுக்கு ஏன் குரங்கு?
சேணியனைக் கெடுக்கச் சாண் குரங்கு பற்றாதா?
(போதும்.)
சேத நினைவுக்குப் பூதம் சிரிக்கும். 11495

சேப் பணத்துப் பட்ட ஈப் போல.
சேப்பு ஆத்தாள் வண்டவாளம் போய்ப் பார்த்தால் தெரியும்.
சேம்பு கொய்யச் சிற்றறிவாள் ஏன்?
(வேணுமா?)
சேம்பு சொறியும்; வேம்பு கசக்கும்.
சேயின் முகம் பார்க்கும் தாயின் முகம் போல. 11500

சேர் இடம் அறிந்து சேர்.
சேர்க்கைக்குத் தக்க பழக்கம்.
சேர்க்கை வாசனையோ? இயற்கை வாசனையோ?
சேர்த் துரைக்கு மணங்குச் சேவகன்.
சேர்த்து வைத்துப் பசுக் கறக்கலாமா? 11505
(பால் கறக்கலாமா?)

சேர்ந்தவர் என்பது கூர்ந்து அறிந்த பின்.
சேர்ந்து வாழ்வதே சிறந்த வலிமை.
சேர இருந்தால் செடியும் பகை; தூர இருந்தால் தோட்டியும் உறவு.
(சேடியும் பகை.)

சேரச் சேரச் செடியும் பகை.
(சேடியும் பகை,)
சேரச் சேரப் பண ஆசை; பெறப் பெறப் பிள்ளை ஆசை. 11510
சேரப் போனால் செடியும் பகை.
சேராத இடத்தில் சேர்ந்தால் வாராத துன்பம் வரும்.
சேராரோடு சேராதே; சேம்பைப் புளியிட்டுக் கடையாதே.
சேரியும் ஊரும் செல்வமும் கல்வியும்.
சேலத்துக்குப் போகிறவன் தடம் எது என்றால் செவலைக் காளை இருநூறு என்றானாம். 11515
சேலம் சர்க்கரை சிற்றப்பா; ஏட்டில் எழுதி நக்கப்பா.
சேவகம் செட்டியாரிடம்; சம்பளந்தான் லொட லொட்டை.
சேலைமேல் சேலை கட்டும் தேவரம்பை ஆனாலும் ஓலைமேல் எழுத்தாணி ஊன்றும் பெண் ஆகாது.
சேவல் கூவினால்தான் பொழுது விடியுமா?
சேற்றால் எடுத்த சுவர். 11520
(சோற்றால்.)
சேற்றில் கல்லைவிட்டு எறிந்தால் எறிந்தவன் மேலே தெறிக்கும்.
சேற்றில் சிக்கிய ஆனை போல.
சேற்றில் செங்கழுநீர் பூத்தது போல.
சேற்றில் தாமரை முளைத்தது போல.
சேற்றில் நட்ட கம்பம் எந்தச் சாரியும் திரும்பும். 11525
சேற்றில் நட்ட தூண் போல.
(கம்பம் போல).
சேற்றிலே கிடக்கிற எருமையைத் தூக்குவானேன்?
சேற்றிலே சிரிப்பு; நெல்லிலே நெருப்பு.
(சேற்று முகத்தில், நெல்லின் முகத்தில்)
சேற்றிலே புதைந்த ஆனையைக் காக்கையும் கொத்தும்.
(குத்தும்)
சேற்றிலே முளைத்த செந்தாமரை போல. 11530
சேற்றிலே மேயும் பிள்ளைப் பூச்சி போல.
சேற்று நீரில் தேற்றாம் வித்தை உரைத்தால், சேறு வேறு, நீர் வேறு பிரிந்திருப்பது போல.
சேறு கண்ட இடத்திலே மிதித்து ஜலம் கண்ட இடத்திலே கழுவியது.
சேறு போகச் சேற்றால் கழுவுகிறதா?
சேனைக்குப் பட்டமோ, சேனாபதிக்குப் பட்டமோ? 11535
சேனைத் துரையை வாரிக் கொடுத்துச் சீர் அழிந்தேன்.
சேஷ ஹோமம் செய்த வீடு மாதிரி.

சை எனத் திரியேல்.
சைகை அறியாதவன் சற்றும் சங்கதியா அறியான்.
(சங்காத்தியா அறிவான்)
சைவத்துக்கு ஆசைப்பட்டு மரக்கறியைத் தள்ளிவிட்டேன். 11540

சைவத்தைக் கெடுக்கப் பண்டாரம்; வைணவத்தைக் கெடுக்கத் தாதன்.
சைவப் பழம், வில்வக் கிளை.
சைவம் முற்றி எலும்பு எலும்பாய்க் கழிகிறது.
சைவ முத்தையா முதலியாருக்குச் சமைத்துப் போட வள்ளுவப் பண்டாரம்.
சைனன் கையில் அகப்பட்ட பேனைப் போல. 11545

சொக்கட்டான், சோழி, சதுரங்கம் இம் மூன்றும் துக்கம் அற்றார் ஆடும் தொழில்.

சொக்கட்டான் விளையாட்டு, பொல்லாத சூது.

(சொக்கட்டான் சூது).

சொக்கட்டானும் செட்டியும் தோற்றினாற் போல.

சொக்கநாதர் கோவிலுக்குப் புல்லுக்கட்டுக் கட்டினாற் போல.

சொக்கர் உடைமை அக்கரை ஏறாது. 11550

(சொக்கன் காசு அக்கரை சேராது.)

சொக்கனுக்குச் சட்டி அளவு; சொக்கன் பெண்டாட்டிக்கும் பானை அளவு.

சொக்கனும் செட்டியும் தொற்றினது போல.

சொக்கா, சொக்கா, சோறுண்டோ? சோழியன் வந்து கெடுத்தான்டா.

சொக்காயை அவிழ்த்தால் சோம்பேறி.

சொக்காரன் குடியைப் பிச்சை எடுத்துக் கெடுப்பான். 11555

(சொக்காய்க்காரன்.)

சொக்குப் பொடி போட்டு மயக்குகிறான்.

சொட்டையிலே உள்ள சீலம் சுடலை வரை.

(நாஞ்சில் நாட்டு வழக்கு.)

சொட்டை வாளைக் குட்டி போல் துள்ளி விழுகிறது.

சொத்தி கை நீளாது; நீளக் கை சுருங்காது.

சொத்துக் கால் பணம்; சுமை கூலி முக்கால் பணம். 11560

சொத்துக் குடலிலே சோறு புகுந்தால் தத்தக பித்தக என்ற கதை.

சொத்தைக் கொடுத்துப் புத்தி வர வேண்டும்; இல்லாவிட்டால் செருப்படி பட்டும் புத்தி வர வேண்டும்.

சொத்தைப் போல வித்தைப் பேணு.

சொந்தக்காராய் இருந்தாலும் பெட்ரோல் இருந்தால் தான் கார் நகரும்.

சொந்தக் கோழி தோல் முட்டை இடுகிறது. 11565

சொந்த மாப்பிள்ளையை வீட்டுக்கு அழைக்கப் பறை ஏன்?
சொப்பனத்தில் கண்ட அரிசி சோற்றுக்கு உதவுமா? கனவு கண்ட பணம் செலவுக்கு உதவுமா?
சொப்பனத்தில் கண்ட பணம் செலவுக்கு ஆகுமா?
சொப்பிலே சோறு ஆக்கினால் சுளுவுதான்; சும்மா இருந்து பிள்ளை பெற்றால் அழகுதான்.
சொர்க்கத்திலே தோட்டியும் சரி; தொண்டைமானும் சரி. 11570

சொர்க்கத்துக்கு நான் போனால் போகலாம்.
(நான் அகங்காரம்.)
சொர்க்கத்துக்குப் போகிற போதும் கட்கத்திலே மூட்டை ஆகுமா?
(ஏன்?)
சொர்க்கத்துக்குப் போகிற போதும் கட்கத்திலே கழுதைக் குட்டியா?
சொர்க்கத்துக்குப் போகிற போதும் கட்கத்திலே ராட்டினமா?
சொர்க்கத்துக்குப் போகிறபோதும் பக்கத்திலே கூத்தியாரா? 11575

சொர்க்கத்துக்குப் போயும் ராட்டினமா?
சொர்க்கத்துக்குப் போனாலும் கட்கத்திலே அக்ஷயபாத்திரமா?
சொர்க்கத்துக்குப் போனாலும் கட்கத்திலே ஒரு பிள்ளை ஏன்?
சொருக்கி போனாள், சிறுக்கி வந்தாள்
சொருக்குக் கொண்டைக்காரி, சொக்குப்பொடி போடுவாள். 11580

சொருகி இருந்த அகப்பை சொத்தென்று விழுந்ததாம்.
சொருகிக் கிடந்த அகப்பையும் சோறு அள்ளப் புறப்பட்டது.
சொருகி வைத்த அகப்பை.
சொல் அம்போ, வில் அம்போ?
சொல்கிறது ஒன்று; செய்கிறது ஒன்று. 11585

சொல்கிறவனுக்கு வாய்ச்சொல்; செய்கிறவனுக்குத் தலைச் சுமை.
சொல் கேளாப் பிள்ளையினால் குலத்துக்கு ஈனம்.
சொல்திறம் கூறல் கற்றவர்க்கு அழகு.
சொல்லச் சொல்லச் செவிடி புக்ககம் போனாளாம்.
சொல்லச் சொல்லப் பட்டிப் பெண்ணைப் பெற்றான். 11590

சொல்லச் சொல்ல மட்டி மண்ணைத் தின்றான்.
சொல்லப் போனால் பொல்லாப்பு;சொறியப் போனால் அரையாப்பு.
(நொள்ளாப்பு.)
சொல்லாததை மனையாளுக்குச் சொன்னவன் பட்ட பாடுபோல.

